# உள்ளுறை

# பதிப்புரை.

எட்டுத்தொகையுள் ஒன்றாகிய ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும் என்ற நூலின் இரண்டாம்தொகுதியில் ஆசிரியர் கபிலர் பாடிய குறிஞ்சிப்பாட்டுக்கள் நூறும் ஓதலாந்தையார் பாடிய பாலைப்பாட்டுக்கள் நூறும் அடங்கி யுள்ளன. நூலாசிரியர்களான கபிலர் ஓதலாந்தையார் என்ற இருவர் வரலாறும் அவ்வப் பகுதியின் முகப்பில் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு நூறும் பப்பத்தாக வகுத்துத் தனித்தனித் தலைப்பும் பண்டைச் சான்றோரான புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் என்பவரால் தரப்பட்டுள்ளன. இதனை இவ்வாறு தொகுத்தல் வேண்டுமென யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்ற சேரமன்னன் விரும்ப, அவன் தலைமையில் இவை தொகுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் பல பாட்டுக்களுக்குப் பண்டைச்சான்றோர் ஒருவரால் உள்ளுறைக்குறிப்புக்கள் எழுதப்பட்டுள்ளன. இந் நூலை அரும்பாடுபட்டுத் தேடிச் செம்மைசெய்து முதற் கண் அச்சிட்டுதவியருளிய பெருமை தமிழ்த்தந்தை யென்ற சிறப்புற்று விளங்கிய தமிழ்த்திரு. டாக்டர். உ. வே. சாமிநாத ஐயர் அவர்கட்கு உரியதாகும்.

இதனை அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தார் வெளியிட்டு உதவுகின்றனர். அவர்கட்குத் தமிழ்மக்களின் நன்றி என்றும் உரியதாகுக.

"ஔவை", கரந்திநகர்,
மதுரை,
9—9—57.

ஔவை. சு. துரைசாமி.

உ

திருச்சிற்றம்பலம்

மூன்றாவது

## ஆசிரியர் கபிலர் பாடிய

# குறிஞ்சி

**த**மிழகத்துப் பொருள் நூல் மரபு வகுத்த நிலப் பாகுபாட்டுள் குறிஞ்சி என்பது ஒன்று; இதன்கண் மலைகளும் அவற்றைச் சார்ந்த நிலப்பகுதிகளும் அடங்கும். "சேயோன் மேய மைவரை யுலகம்[1]" என ஆசிரியர் தொல்காப்பியனார் குறிப்பது இக்குறிஞ்சியே. முகில் தவழும் முடிகொண்டு விளங்கும் மலைநாடாகிய குறிஞ்சியை அவர் **மைவரை யுலகம்** என்று உரைக்கின்றார்.

இக்குறிஞ்சியில் வாழ்பவர் குறவர் எனப்படுவர். மலைமுகடுகளிலும் சரிவுகளிலும், மலையைச் சார்ந்த பகுதிகளிலும் விளையும் ஐவனநெல்லும் மூங்கிலரிசியும் இவர்கட்குப் பண்டைநாளில் சிறந்த உணவுப்பொருள்கள். வளவிய இடங்களில் நிற்கும் சந்தனம் தேக்கு முதலிய மரங்களை வெட்டி ஆங்குள்ள காடுகளை யழித்து நிலத்தை உழுது தினைவிதைத்தலும் வள்ளி முதலிய கிழங்குகளைப் பயிர் செய்தலும் அவர்களுடைய உழவுவினை; தேன் அழித்தலும் வேட்டையாடுதலும் அவர்கள் தொழிலாதல் பற்றி அவர்கள் வேட்டுவர் என்றும் கூறப்படுவர். மலைகளிற் காணப்படும் குறிஞ்சி, சந்தனம், தேக்கு, திமிசு, வேங்கை முதலிய மரங்கள் இவர்கள் வாழ்வில் பயன்படு

1. தொல். பொ. 5.

கின்றன. புலியும் யானையும் கரடியும் பன்றியும் பிறவும் இந்நிலப்பகுதியில் வாழும் விலங்குகள்; கிளிவகைகளும் மயில்களும் பிறவும் இங்கே தோன்றும் புள்ளினங்கள்; மலைச்சுனைகளும், அருவிகளும், ஆறுகளும் மலைவாழ் பவர்க்கு நீர்நிலைகள்; காந்தளும் வேங்கையும் சுனைக் குவளையும் பிறவும் இம்மக்கள் விரும்பும் பூக்கள். குறிஞ்சிநிலத்தவர் உறையும் இடங்களில் குறிஞ்சியாழின் இனிய இசை கேட்கப்படும்; தொண்டகம், முருகியம் முதலிய பறைகளின் முழக்கமும் உடன்நிலவுகின்றது. ஊர்கள் குன்றக்குடி, சிறுகுடி யெனவும், கல்லடைக் குறிச்சி[1], வேள்குறிச்சி[2] எனவும் பெயர் பெற்றுள்ளன. சுனைகுடைதலும் அருவியாடுதலும் இம்மக்களது நீர் விளையாட்டு; இவர்கட்குத் வழிபடுகடவுள் முருகன். அவன் இளஞாயிறு போலும் செந்நிறம் உடையனாகலின், அவனைச் **சேயோன்** என்றும், **சேய்** என்றும் கூறுவர்; **தொல்காப்பியரும்** அவ்வியல்பு தோன்றவே, "சேயோன் மேய மைவரை யுலகம்" என்று குறித்துள்ளார்.

அகப்பொருள்நெறிக்கண் புலனெறி வழக்கம் செய்த சான்றோர் இப்பகுதிக்குக் கூதிர்க்காலமாகிய பெரும்பொழுதையும், நள்ளிரவு கொண்ட இடையாம மாகிய சிறுபொழுதையும் வகுத்துள்ளனர். "**குறிஞ்சி கூதிர்யாமம்** என்மனார் புலவர்" என்பது **தொல்காப்பியம்.** கூதிர் என்றது ஐப்பதியும் கார்த்திகையுமாகிய இரு திங்களுமாகும். அன்பின் ஐந்திணை ஒழுக்கத்துள் புணர்தலும் புணர்தல்நிமித்தமும் ஆகிய காதலொழுக்கம் இக்குறிஞ்சிக்குரிய தென அமைத்துள்ளனர். தலைமைப் பண்புகளே உருவாக அமைந்த கட்டிளங் காளை யொரு வனும், அவ்வியல்பிற் குன்றாது கற்பும் பொற்புமே வடி வாய் அமைந்த இளநங்கை ஒருத்தியும் ஒருவரை ஒருவர் தனித்துக் கண்டு காதலுறவு கொள்வது இவ்

1. A. R. 90 of 1907. 2. A. R. 124 of 1907.

வொழுக்கத்தின் விழுப்பமாகும். இவ்வொழுக்கத்துக்குக் கூதிர்க்காலம் சிறந்தமையை விளக்கப் புகுந்த **நச்சினார்க்கினியர்,** "இருள் தூங்கித் துளிமிகுதலின் சேறல் அரிதாக லானும், பானாட் கங்குலில் பரந்துடன் வழங்காது மாவும் புள்ளும் துணையுடன் இன்புற்று வதிதலின் காமக்குறிப்புக் கழியப் பெருகுதலானும், காவல்மிகுதி நோக்காது வரும் தலைவனைக் குறிக்கண் எதிர்ப்பட்டுப் புணருங்கால் இன்பம் பெருகுதலின் இந்நிலத்துக்குக் கூதிர்க்காலம் சிறந்தது எனப்படும்" என்பர்.

இக்குறிஞ்சித்திணை பொருளாக இந்நூற்கண் காணப்படும் நூறுபாட்டுக்களையும் பாடியவர் **கபிலர்** என்னும் புலவர் பெருமகனுவர். இவையே யன்றி, அகம், புறம், பதிற்றுப்பத்து, கலித்தொகை, குறுந்தொகை, நற்றிணை ஆகிய நூல்களிலும், பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலும் இவர் பாடியன உண்டு.

கபிலர், பாண்டிநாட்டு மதுரைநகர்க்குக் கிழக்கில் உள்ள **வாதவூரில்** பிறந்தவர் என்று வழிவழியாக ஒரு செய்தி நிலவுகிறது. இவரைப் "புலனழுக் கற்ற அந்தணாளன்" எனச் சங்ககாலச் சான்றோர் பாராட்டிக் கூறுவர்; இவரே தம்மை, "யானே பரிசிலன் மன்னும் அந்தணன்" என்று தெரிவிக்கின்றார். வாதவூரை அவ் வூர்க் கல்வெட்டுக்கள், **தென்பறம்பு நாட்டு வாதவூர்** என்று குறிக்கின்றன. பறம்புநாடு அந்நாளில் வேள் பாரிக்கு உரியதாயிருந்தது. கபிலர் அவன்பால் நெருங்கிய நட்புற்று அவன் இறந்தபின் அவன் மக்களைத் திருக் கோவலூர்க்குக் கொண்டுசென்று, அவ்வூரிலிருந்து மலாடு என்ற பகுதியை ஆண்ட மலையமான் திருமுடிக் காரியின் மைந்தர்களுக்குத் திருமணம் செய்து கொடுத்தார். அதற்கிடையே சேரநாடு சென்று அங்கே இருந்து ஆட்சிசெய்த செல்வக்கடுங்கோவாழியாதனைச் செந் தமிழால் சிறக்கப் பாடினர்; அவன் அவரதுபுலமை நலம்

க்ண்டு வியந்து, "சிறுபுறம் என நூறாயிரம் காணம் பொன் கொடுத்து நன்றா என்னும் குன்றேறி நின்று தன் கண்ணிற் கண்ட நாடெல்லாம் காட்டிக் கொடுத்தான்." நன்றா என்பது பிற்காலத்தே நணா என மருவித் திருஞான சம்பந்தர் **திருநணா** என்று பாடும் சிறப்புற்றது; அதனைச் சூழ்ந்த பகுதி கபிலர்க்குக் கொடுக்கப்பட்ட தென்பதற்குச் சான்றாக, அங்கே **கபிலக்குறிச்சி** என்றோர் ஊரும் இன்றும் உளது. முடிவில், திருக்கோவலூரில் பாரி மகளிரை மணஞ்செய்துதந்து தமது நட்புக்கடனை ஆற்றி அவ்வூரருகில் ஓடும் பெண்ணையாற்றின் துருத்தியில் வடக்கிருந்து உயிர் நீத்தார்; அவ்விடத்தே இப்போது ஒரு பெரிய கற்பாறைதான் உளது. எஞ்சிய மரமும் செடிகளும் மண்ணும் பிறவும் ஆற்றில் கரைந்தொழிந்தன. திருக்கோவலூர்க் கல்வெட்டொன்று இச் செய்தியைச் சிறப்பித்து,

> **"மொய்வைத் தியலும் முத்தமிழ் நான்மைத்**
> **தெய்வக் கவிதைச் செஞ்சொற் கபிலன்**
> **மூரிவண் டடக்கைப் பாரிதன் அடைக்கலப்**
> **பெண்ணை மலையர்க் குதவிப் பெண்ணை**
> **அலைபுன லழுவத் தந்தரிட் சம்செல**
> **மினல்புகு விசும்பின் வீடுபே றெண்ணிக்**
> **கனல்புகும் கபிலக் கல்லது[1]"**

*என்று இசைக்கின்றது.*

கபிலர், வேள்பாரி இறந்தபின்னர், செல்வக் கடுங்கோ வாழியாதனைச் சென்று கண்டபோது, "மலர்ந்த மார்பின் மாவண் பாரி, முழவுமண் புலர இரவலர் இனைய, வாராச் சேட்புலம் படர்ந்தான் அளிக்கென, இரக்கு வாரேன்" என்றுகூறி, "ஈத்தொறும் மாவள்ளியன் என நுவலும் நின்நல்லிசை தர வந்தனன்" என்று உரைத்

4. S. I. I. Vol. vii. No 863.

துள்ளனர். பாரி பிரிந்தமை ஆற்றாது இவர் வருந்திப் பாடிய பாட்டுக்களும், அவன் பெண்மக்களை மணஞ் செய்து கொடுத்தற்காக அவர் செய்த முயற்சியும் புறநானூற்றின்கண் உள்ளன. தன் மனைவி கண்ணகியைப் பிரிந்து தனித்தொழுகிய வையாவிக்கோப்[5] பெரும் பேகனை அவன் இருந்த ஆய்க்குடிக்கண் சென்று கண்டு அவள் பொருட்டுத் தகுவன கூறி அவன் மனத்தை அவளொடு கூடி வாழும் வாழ்க்கைக்கண் ஒன்று படுவித்த இக்கபிலரது சிறப்பு நினைக்குந்தோறும் இன்பம் தருவதொன்று.

சேரநாட்டு வடபகுதியான ஆரியநாட்டின்கண் வாழ்ந்த பிரகத்தன் என்னும் ஆரியவரசன் செல்வக்கடுங் கோவின் சிறந்த துணையால் கபிலரைக் கண்டு, '**தமிழ்**' எனச் சிறப்பித்துக் கூறப்படும் அகப்பொருள் நலத்தை அறிய விழைந்தானாக, அவன்பொருட்டுக் கபிலர் குறிஞ்சிப் பாட்டு என்ற இனிய நெடும்பாட்டைப் பாடித் தமிழ் ஒழுக்கத்தின் தனிமாண்பினைப் புலப்படுத்தினார். இவருடைய வரலாறு புலமைநலம் ஆகிய இயல்புகளை விளக்கித் தனியே நூல்கள் பல எழுதப்பட்டுள்ளனவாக லின் ஈண்டு விரித்தல் வேண்டாததொன்று. ஒளவையார் திருவள்ளுவர் முதலியோர் பெயர்களோடு இணைத்து இவரைப்பற்றியும் பொய்க்கதைகள் பல கூறுவ துண்டு. இக்**கபிலர்** வேறு, பதினோராந் திருமுறையிற் கூறப்படும் **கபிலதேவர்** வேறு; இருவரையும் ஒருவராகக் கருது பவரும் உண்டு.

இவராற் சிறப்பிக்கப் பெற்ற தலைவர்கள் பலர்; மேலே கூறிய சிலர் போக நள்ளி முதலிய பலருடைய குறிப்புக்கள் இவருடைய பாட்டுக்களிற் காணப்படும்.

5. வையாவி என்பது ஆவியர் என்னும் குடிவகையின் ஒருகிளை. ஆவிநாடு, பழனித் தாலூகாவில் அமராவதி ஆற்றின் கீழ்க்கரையையும் திண்டுக்கல் தாலூக்குச் சிறிது மேற்கிலுள்ள குன்றையும் எல்லையாகக் கொண்டது; ஆவியர் வாழ்ந்த ஆவிகுடி ஆவிநன்குடி எனப்படும். ஆவிநன் குடி பிற்காலத்தே பழனி யாயிற்று; ஆவிகுடி ஆயக்குடி என மருவிவிட்டது. பழனியை **வையாபுரி** என்பது வையாவிபுரி என்பதன் சிதைவு. பழனியிலுள்ள சிற்றேரியை **வையாவி** என்று இன்றும் வழங்குகின்றனர்.

கபிலர் பாடிய பாட்டுக்கள் பலவற்றுள்ளும் குறிஞ்சித் திணைப் பாட்டுக்களே பெரும்பாலன. வேறு சிலவும் குறிஞ்சியைச் சார்ந்தனவாகவே இருத்தலால் இவரைக் **குறிஞ்சிப்புலவர்** என்பது தவறாகாது. குறிஞ்சிக் காட்சிகளில் இவர் பேரீடுபாடு உடையவ ராதலால், அவ்வப்போது கண்ட காட்சிகளைத் தாம் பாடும் பாட்டுக் களில் சொல்லோவியம் செய்து நம்மை இன்புறுத்து கின்றார். வாழையும் பலாவும் கனிந்து தேனொழுக நிற்கும் மலைச்சாரலில், தேன் நிறைந்த சுனையை அடைந்து, அது மயக்கந் தரும் என்பதை "அறியாது உண்ட கடுவன் அயலது, கறிவளர் சாந்தம் ஏறல் செல்லாது, நறுவீ அடுக்கத்து மகிழ்ந்து (கள்மயக்கமுற்று) கண்படுக்கும் [1]" என்பதும், மலைச்சாரலில் அருவி யொலிக்க, மலர்ந்த பூக் களிடத்தே வண்டினம் பாட, மந்தியினம் பார்த்திருக்க மயிலாடுவது கண்ட கபிலர், மயிலை ஒரு விறலியாகவும், அருவி முதலியவற்றை ஆடற் கேற்ப முழங்கும் இன்னிய மாகவும் தொடுத்து, "ஆடமைக் குயின்ற அவிர்துளை மருங்கின், கோடை யவ்வளி குழலிசை யாகப், பாடின் அருவிப் பனிநீர் இன்னிசை, தேர்ட்மை குழலின் துதைகுர லாகக், கணக்கலை இகுக்கும் கடுங்குரல் தூம்பொடு, மலைப்பூஞ் சாரல் வண்டுயாழாக, இன்பல் இமிழ்இசை கேட்டுக் கலிசிறந்து, மந்தி நல்லவை மருள்வன நோக்கக், கழைவளர் அடுக்கத்து இயலி ஆடுமயில், விழவுக்கள விறலியின் தோன்றும் [2]" என்பதும் படித்து இன்புறற்பாலனவாகும். இவரது குறிஞ்சிக்காட்சியில், யானையொன்று எதிரே தோன்றி புலியொடு பொருது அதனைக் கொன்று குருதி படிந்த கோட்டுடன் போந்து தன் பிடியொடு கூடி, வாழைகள் நிறைந்த மலைச்சாரலில் வண்டினம் பாடக் கேட்டு இனிது உறங்குகிறது[3]. பிறிதோ ரிடத்தே அருவி நீரிற் பாய்ந்த மந்தியொன்று ஆங்கு மிதந்த பலாப்பழத்தைப் புணையாகக் கொண்டு நீந்திச் சென்று துறையடைவது கண்டு மகிழ்கின்றோம். [4]

---

1. அகம். 2. 2. ஷை. 82. 3. ஷை. 332.
4. ஷை. 382.

இக்குறிஞ்சிநிலத்தில் வாழ்பவர் செயலையும் நம் கபிலர் ஆங்காங்கு நமக்குக் காட்டுவதில் தவறுவதிலர். தன் குட்டியொடு கூடி யிருந்த பெண்பன்றியை வேட்டு வரும் அவருடைய நாய்களும் அணுகாதவாறு பொருது வெருட்டி விட்டு, தனது அப்பெண்பன்றியும் குட்டியும் வேறிடம் பெயர்வித்த ஆண் பன்றி, சிதைந்தோடிய வேட்டுவர் மீளத் திரும்பிவரும் குறுவழியில் நின்று கொண்டிருக்கிறது; அதனைக் கானவன் காணுகின்றான். அதன்செயல், பகைவர் வருதற்குரிய குறுவழியில் விலங்கி நின்று மேல்வரும் படைமறவரோடு அஞ்சாது எதிர்நின்று போருடற்றும் தன் தலைவன் செயலை ஒத்திருப்பது கண்டு வியந்து அதனைக்கொல்லாமல் விடுத்துச் செல்கின்றான்[1]. ஒருகால் கபிலர் கானவனொருவன் எறிந்த கவண்கல் வழியே தமது கட்பார்வையைச் செலுத்துகின்றார். "வன்கைக் கானவன் கடுவிசைக் கவணின் எறிந்த சிறுகல் உடுவுறு கணையிற் போகிச், சாரல் வேங்கை விரியிணர் சிதறித் தேன்சிதையூஉப் பலவின் பழத்துள் தங்கும்[2]" காட்சி அவரை இன்புறுத்துகிறது. வேட்டுவர் தலைவன் தன் மார்பில் அணிந்த மாலை பூக்கள் உதிர்ந்து வெறிதே கிடந்தசைய வந்து நின்றான். அதனை நோக்கிய கபிலர், "பூச்சோர் மாலை, ஏற்றிமில் கயிற்றின் எழில்வந்து துயல்வர[3]" என அக் காட்சியை நம் மனக்கிழியில் எழுதி விடுகின்றார். இவ்வாறு சொல் நிகழு மிடமெல்லாம் இனிய குறிஞ்சிக்காட்சிகளைக் காட்டும் கபிலர், அவர்களின் நினைவும் சொல்லும் செயலும் எங்ஙனம் இயலுகின்றன என்பதை ஈடும் எடுப்பு மில்லாத இன்சொற்களால் காட்டுகின்றார். அவற்றை இனிவரும் பாட்டுக்களிற் காணலாம்.

. அகம். 248. 2. ௸. 292. 3. ௸. 248.

## 21. அன்னாய் வாழிப்பத்து.

இப்பகுதிக்கண் வரும் ஒவ்வொரு பாட்டும் "அன்னாய் வாழி" யென்ற தொடராலே தொடங்கும் சிறப்புப்பற்றி இஃது இப்பெயர் பெறுவதாயிற்று.

201. அன்னாய் வாழிவேண் டன்னை யென்னை
தானு மலைந்தா னெமக்குந் தழையாயின
பொன்வீ மணியரும் பினவே
என்ன மரங்கொலவர் சார லவ்வே.

நொதுமலர் வரைவின்கட் செவிலி கேட்கு
**மாற்றால் தலைமகள் தோழிக்கு அறத்தொடுநிலை குறித்துக்**

**உரை:** அன்னாய், இதனை விரும்பிக்கேள்: தலைமக னுடைய மலைச்சாரலி லுள்ளவை எத்தன்மைவாய்ந்த மரங் கள் கொல்லோ கூறுக; அவை அணிவதற் குரிய பூவை யுடைமையான், எம் தலைவனும் அணிந்துகொண்டான்; எமக்கும் அங்ஙன மாயினதோடு அமையாது தழையாகவும் உதவின; அவை பொன்போலும் பூக்களையும் நீலமணி போலும் அரும்புகளையு முடைய வாகும் எ று.

"அன்னை வாழி வேண்டு அன்னை [1]" என்றாற் போல, ஈண்டு **அன்னாய் வாழி வேண்டு** என வந்தது. "ஐ ஆயாகும் [2]" என்றதனால், அன்னை, **அன்னாய்** என வந்தது. இனிவருமிடங்களிலும் இதுவே கூறிக்கொள்க. "அன்னை என்னை என்றலும் உளவே [3]" என்பதனால், தலைவனை **என்னை** என்றாள்; இது சொல்லினும் எழுத்தினும் தோன்றா மரபிற்றாயினும், "தொன்னெறி முறைமை"

1. ஐங். 101. 2. தொல். பொ. 123. 3. ஷை. 246.

பற்றிக் கொள்ளப்படும். **என்ன மரங்கொல்** என்றது வேங்கை மரத்தைக் கருதிநின்றது. வேங்கை மரம், பொன்னிறமலரும் மணிபோன்ற அரும்பும் உடைத்தா தல், "மன்ற வேங்கை மணநாட் பூத்த, மணியே ரரும் பின் பொன்வீ தாஅய்[1]" என்பதனுல் அறிக.

**என்னை தானும் மலைந்தான் எமக்கும் தழையாயின** என்றதனுல் தலைவன் பூத்தரு புணர்ச்சி கொண்டதும், தழை யுதவியதும் பெற்றும். தலைமகள் வேங்கைப் பொழிலகத்தே தலைமகனைத் தலைக்கூடினமை வெளிப் படுப்பாள் போன்று **ஏத்தல்** என்னும் அறத்தொடுநிலை குறிக்கின்ரு ளாகலின், **பொன்வீ மணியரும்பின, என்ன மரங்கொல்** என்ருள். அறத்தொடுநிலைக்கண் தோற்று வாயாகத் தலைமகனை வேறுபட நிறுத்தித் **தானும் மலைந் தான்** என ஒருமைவாய்பாட்டாற் கூறியவள், தழையேற் பித்து உயிரொன்றிய கேள்வ னுயினமை உணர்த்தற்கு **அவர்** எனப் பன்மைவாய்பாட்டாற் கூறினுள்.

"நாற்றமும் தோற்றமும்[2]" என்ற சூத்திரத்து "முன்னிய அறனெனப் படுதல் என்று இருவகைப் புரைதீர் கிளவித் தாயிடைப் புகுப்பினும்" என்ற விடத்து நிகழும் அறத்தொடுநிலையில், இது தழையும் கண்ணியும் தந்தான் என்பதுபடக் கூறியது என **இளம்பூரணரும்,** "தோழி தழை தந்தான் என அறத்தொடு நின்றது[3]" என **நச்சினர்க்கினியரும்** கூறுவர். (க)

202. அன்னை வாழிவேண் டன்னை நம்மூர்ப்
பார்ப்பனக் குறுமகப் போலத் தாமும்
குடுமித் தலைய மன்ற
நெடுமலை நாட னூர்ந்த மாவே.

1. அகம். 232. 2. தொல். பொ. 112.
3. ஷை. ஷை. 207.

இது, தலைமகன் வரைதல்வேண்டித் தானே வருகின்றமை கண்ட தோழி உவந்த உள்ளத்தளாய்த் தலைமகட்குக் காட்டிச் சொல்லியது.

**உரை:** அன்னாய், இதனை விரும்பிக்கேள்: நம்மூர்க்கண் வாழும் பார்ப்பனச் சிறுவர்களைப் போல மலைநாடனாகிய தலைவன் ஊர்ந்து போந்த குதிரையும் குடுமி பொருந்திய தலையையுடையன, காண் எ. று.

"அன்னையென்னையென்றலும்உளவே[1]" என்பதனால் தோழி தலைவியை **அன்னாய்** என்றது அமைவதாயிற்று. **குடுமித் தலைய** என்புழிக் குடுமி, குதிரையின் தலையில் இரு காதுகட்கும் இடையே நெற்றியில் வீழும் உளை மயிர். "மானுளை யன்ன குடுமித், தோல்மிசைக் கிடந்த புல்லண வோனே[2]" என்று பிறரும் கூறுதல் காண்க.

வரைதல் வேண்டித் தலைமகன் தானே வருகின்றதனை தோழி நேரே கண்டமை தோன்ற, **நாடன் ஊர்ந்த மா** என்றாள். குதிரையினது நெற்றிமயிர் சிலவாய மயிர் பொருந்திய குடுமியை யொத்தலினாலும், முன் குடுமியை யுடையராதல் பார்ப்பனமாக்கட்கு **ஆசாரவிதி**யாகலினாலும், அதனை யுடைய பார்ப்பனக் குறுமகவை உவமித்துக் கூறினாள்.

திருக்குடந்தைச் சவையப்பநாயனை வைது பாடிய காளமேகப்புலவர், அவன் முன்குடுமி யுடையனாதலைச் சுட்டி, "சொருக்கவிழ்ந்த முன்குடுமிச் சோழியா[3]" என்று உரைப்பதனால், பிற்காலத்தும் இவ்வழக்காறு இருந்தமை தெளிவாம். (௨)

1. தொல். பொ. 246 2. புறம். 310.

3. த. நா. ச. 217. இன்றும் சில வைதிகப் பார்ப்பனரிடத்தே இஃது இருந்துவருவதைத் திருச்சிராப்பள்ளிமாவட்டத்திற் காவிரியின் வடகரை ஊர்களில் காணலாம்.

203. அன்னாய் வாழிவேண் டன்னை நம் படப்பைத்
தேன்மயங்கு பாலினு மினிய வவர்நாட்
டுவலைக் கூவற் கீழ
மானுண் டெஞ்சிய கலுழி நீரே.

இஃது, உடன்போய் மீண்ட தலைமகள் நீ சென்ற நாட்டு நீர் இனிய வல்ல; நீ எங்ஙனம் நுகர்ந்தாய் எனக் கேட்ட தோழிக்குச் சொல்லியது.

**ப. உரை** மானுண்டு கழித்த கலங்கற் சின்னீர் அருந்தக் கூடா வாயினும், அருந்தினேனுக்குத் தேன் மயங்கு பாலினும் இனியவாயின என்றது அவன் நாட்டு நீர்நலமும் அன்புடைமையும் உணர்த்தியவாறு. **உவலை**, தாழ்வு; இழிமையுமாம்.

**உரை:** அன்னாய்; இதனை விரும்பிக்கேள்: அவர் நாட்டிலுள்ள இலைகள் உதிர்ந்து மட்கிய பள்ளத்தின் அடியில் மாவினம் உண்டு கலக்கிக் கழித்த கலங்கற் சின்னீர், நம் பூந்துடைவைக்கண் பெறப்படும் தேன் கலந்த பாலினும் இனிமை யுடையவாகும், காண் எ. று.

தம் பொருளாகிய ஆனிரைகட்குரிய உணவுப் பொருள்களைத் தொகுத்துவைத்தற்கும், தம் உணவுக்கு வேண்டிய காய்கறிகளைப் படைத்துக் கோடற்கும் மனைப் புறத்தே அமைத்துள்ள தோட்டக்கால் **படப்பை** எனப் படும். இக்காலத்தும் **வைக்கோற் படப்பை** என வழங்குவர். **படப்பை**, படைப்பை என்பதன் மரூஉ. படப்பையிலுள்ள மரங்களில் கட்டப்பட்ட தேன், **படப்பைத் தேன்** எனப்பட்டது. **மயங்குதல்**, கலத்தல். பண்டையோர் பாலிற் கலந்துண்டது தேனேயன்றி இன்று வழங்கும் சருக்கரை யன்று; "பாலொடு தேன் கலந்தற்று[1]" என்பது காண்க. **உவலைக்கூவல்**, தாழ்வான பள்ளம். **மா**, எருமை முதலிய விலங்குகள்; இது "னகரம் ஒற்றும்

1. குறள். 1121.

ஆவும் மாவும் [1]" என்பதனுல் **மாான்** என வந்தது. உண்ண என்பது **உண்டு** எனத்திரிந்தது. "வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய [2]" என்பது காண்க. **கலுழி**, கலங்கல்.

ஈக்களை வாட்டியும் ஆன்களை மயக்கியும் ஈட்டிய தேனையும் பாலையும் கலந்துண்டலினும், தம்மிட்டத்து உள வாகிய பொருள் சிறிதெனினும், அறவோர்க்கு அளித்தல் முதலிய நல்லறத்திற் பகுத்தளித்து எஞ்சியது உண்டல் ஏற்றமுடைத் தாகலின், **தேன்மயங்கு பாலினும் இனிய** என்ருள்; "உற்ருர்க் குரியர் பொற்ருெடி மகளிர்" என்ப வாகலினுலும், கற்புடைய மகள் "கொண்ட கொழுநன் குடி வறன் உற்றெனக் கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள் [3]" என்பவாகலினுலும், நீ கொடுக்கும் தேன் மயங்குபால் உயர்ந்ததாயினும் எனக்கு இனிதாயிற்றன்று என்றும், அவர் நாட்டில் நீர் அரிதாயினும், அவ் வரிய நீர் தானும் **மானுண்டு எஞ்சிய கலுழி நீர்** எனினும் உண் டற்கு இனிதெனக் குறிப்பால் உயர்த்தியும் கூறினுள். **மானுண்டு எஞ்சிய கலுழி நீர்** எனவே, அஃது உண்டற் கேற்றது அன்மை பெறப்படும். "வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில், குளவி மொய்த்த அழுகற் சின்னீர், வளையுடைக் கையள் எம்மொடு உணீஇயர், வருகதில் அம்ம தானே [4]" எனத் தலைமகன் நினைந்துரைக்குமாறு காண்க.

"எஞ்சி யோர்க்கும் எஞ்சுதல் இலவே [5]" என்பதன் உரையில், இதனைக் காட்டி, "இஃது உடன்போய் மீண்ட தலைவி நீ சென்ற நாட்டு நீர் இனியவல்லவே, எங்ஙனம் நுகர்ந்தாய் என்ற தோழிக்குக் கூறியது" என்பர். (௩)

1. தொல். எழுத்து. 231 2. தொல். சொல். 457.
3. நற். 110. 4. 56. 5. தொல். பொ. 42.

204. அன்னாய் வாழிவேண் டன்னையஃ தேவன்கோல்
வரையர மகளிரி னிரையுடன் குழீஇப்
பெயர்வுழிப் பெயர்வுழித் தவிராது நோக்கி
நல்ல ணல்ல ளென்ப
தீயேன் றில்ல மலைகிழ வோற்கே.

வரையாது வந்தொழுகும் தலைமகன் சிறைப்புறத்த் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

ப. உரை: நல்லள்நல்லள் என்பது அவர் அறிவுறீஇயது.

உரை: அன்னாய், யான் கூறுகின்ற இதனை விரும்பிக் கேள்: வரையின்கண் வந்து ஆடும் சூரரமகளிரைப் போல் பிற மகளிரெல்லாம் தம்மிற் கூடிக்கொண்டு யாம் இயங்கு மிடமெல்லாம் ஒழியாது நோக்கி நல்லள் நல்லள் எனப் பலகாலும் என்னைக் கூறாநிற்பர். அப்பெற்றியேன், மலை நாடனாகிய தலைமகற்குமட்டில் 'தீயேனா அஃது என்னையோ, கூறுக எ. று.

அஃது என்னும் சுட்டு "மகளிரால் நல்லள் எனப் படும் யான் தலைமகற்குத் தீயேனாயினேன்" என்பது குறித்து நின்றது. "முற்படக் கிளத்தல் செய்யுளுள் உரித்தே[1]" என்பவாகலின், சுட்டு முன்னர்க் கூறப் பட்டது. **பெயர்வுழி பெயர்வுழி** என்றும், **நல்லள் நல்லள்** என்றும் நின்ற அடுக்கு ஒருசொல் பலகாலும் நிகழ்தலை உணர்த்தலின், "பொருளொடுபுணர்தல்." தன்னை நல்லள் என்போரும் மிக்க உருவும் திருவுமுடையரே என்றற்கு **வரையரமகளிரின்** என்றாள். மகளிர் குழீஇய விடத்துப் பெரும்பான்மையும் அலரெடுத் துரைத்தலும், புறங்கூறு தலும் நிகழு மாயினும், இவர் குழுவில் அது நிகழ்த லின்றித் தலைமகள் நலமே இயம்பப்பெற்றமை, **மகளிரின்**

1. தொல். சொல். இளம். 39.

**நிரையுடன் குழீஇ** என்றதனாற் பெற்றும். ஏதிலார்க்கு நல்லளாய்த் தோன்றும் யான் தலைமகற்கு அப்பெற்றிய ளல்லே னாயினேன் என்பது ஒழிய நின்றமையின், **தில்ல**, ஒழியிசைக்கண் வந்தது.

பெயரும் இடந்தோறும் என்பாற் கிடக்கும் பெண் மைக்குணமும் பெருங்கவினும் கண்ட மகளிர், அத் துணைச் சிறப்பினைத் தாம் பெற்றிலாமை குறித்துப் பொறாது புறங்கூறற்பால ராயினும், அது செய்யாது புகழ்ந்து பாராட்டுகின்றன ரென்பாள் **நல்லள் நல்லள் என்ப** என்றும், அவ்வாறே என் நலம்பாராட்டும் பான்மைய னாகிய தலைமகன், அது செய்தற்கு விரைய வந்து கூடானாயினன் என்பாள், **மலைகிழவோற்குத் தீயேன் தில்ல** என்றும் கூறினாள். ஏனைமகளிர்க்குப் புலனாகி, அவராற் சிறப்பிக்கப்படும் எனது நலம் அவற்குத் தீமை யாய்த் தோன்றி அவர் என்னை மறக்கச் செய்தது என்பாள் **தீயேன்** என்றும், அத்தீமைக்குக் காரணம் தனக்குப் புலனாகாமையின், **எவன்கொல்** என்றும் கூறுகின்றாள். (௪)

*205. அன்னாய் வாழிவேண் டன்னையென் றோழி*
*நனிநா ணுடைய ணின்னு மஞ்சும்*
*ஒலிவெள் ளருவி யோங்குமலை நாடன்*
*மலர்ந்த மார்பிற் பாயல்*
*துஞ்சிய வெய்யள் நோகோ யானே.*

இது, நொதுமலர் வரைவு வேண்டி விட்டுழித் தலை மகட்கு உளதாகிய வருத்தம் நோக்கி, "இவள் இவ்வாறு ஆதற்குக் காரணம் என்னை?" என்று வினவிய செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது.

**உரை;** அன்னாய், யான் கூறுகின்ற இதனை விரும்பிக் கேள்: என் தோழியாவாள் மிக்க நாணமுடையளாய்த் தாயாகிய நின்னையும் மிக அஞ்சும் நீர்மையளே யாயினும்,

மிக்குற்றெழுகும் வெண்மையான அருவிகள் நிறைந்த உயர்ந்த மலைநாடனுடைய அகன்ற மார்பின்கண் கிடந்து பெறும் இனிய உறக்கத்தைப் பெறுதற்கு விரும்பினளாகலான், யான் வருந்துத லல்லது பிறிதொன்றும் செய்ய கிலேன் எ. று.

மகளிர்க்கு இயற்கையாக அமைந்த நாணம் அச்சங்களின் அளவினும் இவள்பால் அவை மிக்குள்ளன என்பது கருத்தாதலின் **நனி** யென்றது பின்னும் கூட்டப்பட்டது. **ஒலிவெள்ளருவி** என்றவிடத்து ஒலித்தல் மிகுதிப் பொருட்டு; "ஒலிவெள் ளருவி ஒலியில் துஞ்சும்[1]" என்றாற்போல. **மலர்ந்த மார்பு** என்புழி மலர்தல் விரிதல். "மன்னுக பெருமநின் மலர்ந்த மார்பே[2]" எனப் பிறரும் கூறுதல் காண்க. **வெய்யள்**, வேண்டற் பொருட்டாய வெம்மை என்னும் உரிச்சொல் அடியாகப் பிறந்த வினைக் குறிப்பு முற்று. **நோகோ யானே** என்றது தன்பால் வேறு செயலின்மை தோன்ற நின்றது.

அவட்கு உளதாகிய வேறுபாட்டுக்குரிய காரணத்தை அவளறிய நீ என்னைக் கேட்பினும் பொறுது இறந்துபடும் அத்துணைப் பெருநாணமுடையள் என்பாள், **நனி நாணுடையள்** என்றும், தனக்குற்ற வேறுபாட்டை நீ அறிதற்குப் பெரிதும் அஞ்சுகின்றாள் என்பாள், **நின்னும் நனியஞ்சும்** என்றும் தோழி கூறினாள். நற்றாயினும் களவின்கண் அருமறை அறிதற்கண் செவிலி சிறந்த தாயாயினும் அவள்பாலும் அதனைப் புலப்படுத்தற்கு அஞ்சுகின்றாள் என்பதுபட நிற்றலின், **உம்மை** சிறப்பு; "ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின் தாயெனப் படுவோள் செவிலி யாகும்[3]" என **ஆசிரியர்** உரைப்பது காண்க.

1. நற். 77. 2. அகம். 314.
3. தொல். பொ. 124.

பஞ்சியும் மலரும் பரப்பிய மெல்லணையில் கிடப்பினும், மகளிர்க்குக் காதலன் மார்பிற் கிடந்து உறங்குதலில் வேட்கை மிக்கிருக்கு மென்பது பற்றி, **மலர்ந்த மார்பில் துஞ்சிய வெய்யள்** என்றாள். "இன்றுயில் மார்பிற் சென்ற வென் நெஞ்சே[1]" என்றும், "மகிழ்நன் மார்பே வெய்யையால் நீ[2]" என்றும் பிறரும் கூறுதல் காண்க. **ஒலிவெள்ளருவி ஓங்குமலை நாடன்** என்றது புனல்தரு புணர்ச்சி கூறியவாறு. **ஓங்குமலை நாடன்** என்பது ஏத்தல்; **ஒலிவெள்ளருவி** என்பது குறிப்பால் **ஏதீடும், துஞ்சிய வெய்யள்** என்றது **வேட்கையுரைத்தலுமாம்.**

நனிநாணுடைமையும் பேரச்சமுடைமையும் அவள் தான் உற்றது உரைக்க லாகாவகைத் தடுத்தலால், அவள் பொருது கலக்குற்று வேறுபடுவது கண்டு யான் ஆற்றேனுயினேன் என்பாள், **நோகோ யானே** என்று தோழி கூறினாள். நொதுமலர் வரைவு வேண்டி விட்டமையின் பெருநாணும், அதனால் உளதாகும் ஏதம்பற்றி அச்சமும் உடைமையால் மேனி வருந்திக் காட்டினாள் என்று செவிலிக்கு விடையிறுத்தவாறு. நாடன் மார்பில் துஞ்ச விரும்புதலை நாணாலும் அச்சத்தாலும் பிறர்க்கு உணர்த்தலாகாமை கூறி அறத்தொடு நின்ற வாறு; "நோயலைக் கலங்கிய மதனழி பொழுதின், காமஞ் செப்பல் ஆண்மகற் கமையும், யாமே பெண்மை தட்ப நுண்ணிதின் தாங்க, அவனே ........என்ன மகன்கொல் தோழி[3]" எனத் தலைவி கூறுமாற்றாலும் இக்கருத்து உணரப்படும்.

"முன்னிலை அறனெனப்படுதல் என்று இருவகைப் புரைதீர் கிளவித் தாயிடைப் புகுப்பினும்[4]" என்றவிடத்து நிகழும் அறத்தொடுநிலை வகையில் இது தோழி தலைவியது வேட்கை கூறியது என்பர் **இளம்பூரணர்.** (௫)

1. அகம். 40. 2. ௸. 73. 3. நற். 94.
4. தொல். பொ. 112.

206. அன்னாய் வாழிவேண் டன்னை யுவக்காண்
மாரிக் குளத்துக் காப்பா ளன்னன்
தூவலி னனைந்த தொடலை யொள்வாட்
பாசி சூழ்ந்த பெருங்கழல்
தண்பனி வைகிய வரிக்கச் சினனே.

இஃது இரவுக்குறிக்கண் தலைமகன் வந்து குறியிடத்து நின்றமை அறிந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.

**உரை ;** அன்னாய், யான் கூறுகின்ற இதனை விரும்பிக் கேள்: மழை பெய்ய நிறைந்த குளத்தின் கரைக்கண் நின்ற காவலாளனை ஒப்பான் ஒருவன், மழைநீரால் நனைந்த தூக்கிட்ட ஒள்ளிய வாளைத் தூக்கிப் பாசிகள் சூழ்ந்த பெரிய கழலணிந்து, தண்ணிய பனியால் இறுகிய வரிந்து கட்டப் பட்ட கச்சுடையனாய் வாராநின்றான் ; உங்கே அவனைக் காண்பாயாக எ. று.

**உவக்காண்,** என்பது ஒட்டிநின்ற சுட்டிடைச்சொல் என்பர் **பரிமேலழகர்**[1]. இடைவிடா மழையால் நீர் நிறைந்த குளம் என்றற்கு **மாரிக்குளம்** என்றார். கரை உடைந்து ஏதம் விளைவியாமைப்பொருட்டுப் பண்டை நாளில் குளங்கட்குக் காவலர்களை நிறுவுவது மரபு; "தொழின்மழை பொழிந்த பானாட் கங்குல், எறிதிரைத் திவலை தூஉஞ் சிறுகோட்டுப் பெருங்குளங் காவலன் போல[2]" என்று சான்றோர் குறித்தல் காண்க. **காப்பாள்,** காப்பு, காவல்; "வாய் காவாது பரந்து பட்ட, வியன் பாசறைக் காப்பாள[3]" எனப் பிறரும் கூறுப. **தூவல்,** மழைத்துளி. தூக்கிட்டுத் தோளிடைக் கோத்துப் பக்கத்தே தொங்கும் வாளைத் **தொடலை வாள்** என்றார். "கல்லும் மரனும் துணிக்கும் கூர்மைத் தொடலை வாளர்[4]" என்று சான்றோர் கூறுவதனால் தொடலைவாளின் இயல்பு உணரப்படும். குளங்காவல் புரியுமிடத்துக் கரை

1. குறள். 1185. 2. அகம். 252. 3. புறம். 22.
4. மதுரை. 635-6.

யிடை உடைப்புத்தோன்றின் கல்லும் மரமும் துணித்து உடனே அடைத்தற்கு ஏற்புடைமையின், **தொடலை வாள்** வேண்டப்பட்டது. உயிர் கொடுத்துப் புகழ்கொள்ளும் மறமாண்புடைய ஆடவர் கழல் அணிதல் மரபு.

காப்பாளன்னன், வாளைத் தூக்கி, கழல்யாத்துக் கச்சினனாய் வாரா நின்றான் என ஒருசொற் பெய்து முடிக்க.

இரவுக்குறிக்கண் வருவான் வழியில் உளவாகும் ஏதங் கருதி **வாளும்,** வினைசெய்யும் தொழிலராய ஆடவர்க் கியல்பாகலின் **கழலும்,** செலவு மேற்கொண்டமையின் **கச்சும்** உடையனாகலின், அவற்றை அணிந்து தோன்றும் காப்பாளோடு உவமித்துக் **காப்பாளன்னன்** என்றாள். வினையில்வழி வாளை உறையிற் பெய்து தூக்கிட்டிருத்தலினாலும், மழைக்கண் நனைந்துளா னாகலினாலும், **தூவலின் நனைந்த தொடலை ஒள்வாள்** என்றும், நெறியிடை நின்ற நீர்க்கண் படர்ந்த பாசி வருமவன் கழலிற் பிணைந்து அறுபட்டமையின், **பாசி சூழ்ந்த பெருங்கழல்** என்றும் கூறினாள். மழையால் நீர்நிறைந்து நிற்கும் குளத்தின் கரையைக் காத்தற்பொருட்டுச் செல்லும் காவலனை யொப்பான் என்றதனால், இவனும் தன்பால் காதல் சிறந்திருக்கும் காதலியின் உயிர்க்காவற் பொருட்டு மழையால் நனைந்து வருகின்றான் எனத் தலைவியின் பொருட்டு வந்தமையும், அவள் அவனை இன்றியமையாமையும் குறிப்பால் உணரக் கூறினாளாயிற்று.

இனி, **மாரிக் குன்றத்துக் காப்பாளன்னன்** என்றும், **பாசி தூர்ந்த** என்றும் பாடமுண்டு. மழையால் நனைந்த குன்றம் போலும் தோற்றத்தையுடைய காப்பாள் என்றும், பாசிகள் சூழ்ந்து அடையப்பட்ட அரும்புகளை யுடைய கழல் என்றும் முறையே பொருள் உரைத்துக்கொள்க. அதனால் சிறப்புடைய பொருட்பேறு இன்மை உணர்க. தோழி தலைவியை அன்னை என்றல் அமையும் என்றற்கு **நச்சினார்க்கினியர்** இதனைக் காட்டுவர்[1]. (௩)

1. தொல். பொ. 246.

207. அன்னாய் வாழிவேண் டன்னை நன்றும்
உணங்குவ கொல்லோநின் றினையே யுவக்காண்
நிணம்பொதி வழுக்கிற் றோன்றுமவர்
மணிநெடுங் குன்றம் மழைதலை வைத்தே.

'மழை யின்மையால் தினை யுணங்கும்; விளைய மாட்டா; புனங் காப்பச் சென்று அவரை எதிர்ப்படலாம்? என்று எண்ணியிருந்த இது கூடாதாயிற்று என வெறுத்திருந்த தலைமகட்குத் தோழி சொல்லியது.

உரை: அன்னாய், இதனை விரும்பிக்கேள்; அவர்தம் நீலமணி போலும் நெடிய குன்றம் மேகங்கள் தன் முடியிலே படியக் கொண்டு, நிணம் மிக்க ஊன்தடிமேல் பொதிந்து மூடிய வழுக்குப் போலத் தோன்றுதலைக் காண்பாயாக; அதனால், நின் தினை பெரிதும் உணங்கமாட்டா; 'உணங்கு மாகலின் அவரை எதிர்ப்பட லாகாது' என எண்ணி வருந்துதல் ஒழிக எ. று.

கொல், அசைநிலை. ஓகாரம் எதிர்மறை. நன்றும் உணங்குவ கொல்லோ என்றது, சிறுபான்மை உணங்கினும் மழை வந்தபின் அவை பெரிதும் தழைக்கும் என்பது உணர நின்றது. வழுக்கு, கொழுவிய ஊன்றடிமேல் வெண்ணெய் போலப் படிந்து தோன்றுவது. இதனை ஊன் என்றும் கூறுவர். மணியுடைமையே யன்றி மணியின் நிறமும் உடைமைபற்றி மணிநெடுங்குன்றம் என்றார். மணிநிற மால்வரை எனப் பிறண்டும்[1] கூறுப. ஏனை வருமிடங்களினும் கூறிக் கொள்க.

யான் காக்கும் இத்தினை மழையின்மையால் உணங்கா நின்றன வாகலின், தினைக் காவலொழிந்து மீள மனைக்குச் சென்று செறிப்புண்டு தலைமகனை எதிர்ப்படும் திறத்தை

1. ஐங். 208.

இழப்பேமாயினேம் எனத் தலைமகள் வருந்திக் கூறிய தனைக் கொண்டெடுத்து மொழிதலின், தோழி, **நின் தினை உணங்குவ அல்ல** என்றாள். உணங்கின போலத் தோன்றினும், அங்கே மலைமுடியில் மழைமுகில் படிதலின், இனி வரும் மழையால் பெரிதும் தழைத்தல் ஒருதலை என்றற்கு **நன்றும்** என்று சிறப்பித்தாள். அணிமையில் தோன்றுதல் பற்றி **மணிநெடுங் குன்று** என்றவள், அதன் முடியில் படிந்து தோன்றும் வெண்மையும் கருமையுங் கலந்த கார் முகிலைக் காட்டி, **மழைதலை வைத்துத் தோன்றும்** என்று உரைத்தாள். வெயிற்படாமல் நிழலிடைப் பொதிந்து வைத்த நிணமிக்க ஊன் வெள்ளிய வழுக்குப் படிந்து நாற்றம் கமழ்ந்து தோன்றுமாறு போல, மணிக்குன்று கார்முகில் படிந்து மழைக்காற்று வீசநின்றது என்றும், எனவே இனி மழைவருதல் ஒருதலை என்றும் வற்புறுத்திய வாறாயிற்று. வழுக்கினைக் கூறியது, கூதிர்க்காலத்து மழை முகில் என்றற்கு.

மழைமுகிலை முடியில் தாங்கித் தோன்றும் நெடுங் குன்றம் வழுக்குத் தோன்றிய நிணம்போலத் தோன்றிற் றாக, உணங்கித் தோன்றிய தினை, தலைமகளை எதிர்ப் படல் அருமைபோல நினக்குக் காட்டிற்று என்றும், அவர் நெடுங்குன்றம் மழைமுகிலை முடிமேற்கொண்டு மழை வரவினை வற்புறுத்துவதனால், நின் காதலர் நின்பால் நிறைந்த காதல்கொண்டு ஒழுகுவராதலின், எவ்வழியும் நீ அவரைத் தலைப்பட்டு இன்புறுதல் ஒருதலை என்றும் உள்ளுறுத் துரைத்தவாறு.

**உணங்கல கொல்லோ** என்றும், **மழை தலைவைத் தவர் மணிநெடுங்குன்றே** என்றும் பாடமுண்டு. **உணங்கல கொல்லோ** என்பதற்குக் கொல்லும் ஓவும் அசைநிலை எனக் கொள்க. (எ)

208. அன்னாய் வாழிவேண் டன்னை கானவர்
கிழங்ககழ் நெடுங்குழி மல்க வேங்கைப்
பொன்மலி புதுவீத் தாஅமவர் நாட்டு
மணிநிற மால்வரை மறைதொ
றணிமலர் நெடுங்க ணார்ந்தன பனியே.

இது, சேவிலிக்கு அறத்தொடு நின்ற தோழி அவளால் வரைவு மாட்சிமைப்பட்ட பின்பு இவள் இவ்வாறு பட்ட வருத்தமெல்லாம் நின்னின் தீர்ந்தன என்பது குறிப்பாய்த் தோன்ற அவட்குச் சொல்லியது.

ப. உரை: கிழங்கு அகழ்குழி நிறைய வேங்கைமலர் பரக்கும் என்றது கொள்வார்க்குப் பயன்பட்டுத் தமக்கு வந்த குறையைத் தம் புகழ் நிறைக்கும் பெருமையுடையள் என்பதாம்.

உரை; அன்னாய், குறவர் கிழங்கு எடுத்தற்பொருட்டுக் கல்லிய நெடிய குழிகள் நிறைய வேங்கையின் பொன் போலும் புதிய பூக்கள் சென்று படியும் அவருடைய நாட்டின்கண் நிற்கும் நீலமணியின் நிறங்கொண்ட பெரிய மலை மறையுந்தொறும் அழகிய பூக்கள் போலும் நீண்ட கண்கள் நீர்சொரிந்தன எ. று.

குறிஞ்சிநில மக்களைக் கானவர் என்பதும் வழக்கு. மலைநாட்டவர் வள்ளிக்கிழங்கு பயிர்செய்பவ ராதலின், அதற்கென்று வகுத்த குழியைக் **கிழங்கு அகழ் நெடுங்குழி** என்றார். வேங்கையின் பூ பொன்னிறத்தது. "வேங்கைச் சேணெடும் பொங்கர்ப் பொன்னேர் புதுமலர் வேண்டிய குறமகள்[1]" என்று சான்றோர் குறிப்பது காண்க. மலை நாடுகளில் பகற் போதில் மழைமுகில் படிந்து மலைமுகடு தோன்றாதவாறு மறைப்பது இயல்பு. காதலர்க்குரிய இடமும் பொருளும் காணின். அவை அவரைக் கண்டாற்

1. அகம். 52.

போலும் இன்பம் செய்வதுபற்றி, மறைந்தவழித் துன்பம் உண்டாவதாயிற்று என உணர்க. "உள்ளா ராயினும் உளனே அவர் நாட்டு, ....நெடும்பெருங் குன்றத்துப் பாடின் னருவி சூடி, வான்றோய் சிமையம் தோன்ற லானே[1]" என்று பிறரும் உரைப்பது காண்க.

மணிநிற மால்வரையைக் காணுந்தோறும், அதனை உடைய தன் காதலனைக் கண்டாற்போலத் தேறி இன் புற்றுள் என்றற்கு **மால்வரை மறைதோறு அணிமலர் நெடுங்கண் ஆர்ந்தன பனியே** என்று கூறினாள். "அவர் நாட்டுக் குன்றம் நோக்கினென் தோழி; பண்டை யற்றோ கண்டிசின் நுதலே[2]" என்று தலைவி கூறுதல் காண்க. துன்பத்தின் நீங்கியோர், மகிழுங்கால், அத் துன்பநிலை கூறி மகிழ்வ ராகலின், ஈண்டும் வரைவு மாட்சிமைப் பட்டமையால் மகிழ்ச்சியுறும் தோழி, அது நிகழ்வதன் முன் தலைவி வருந்திய செயலினை, **மால்வரை மறைதோறு, அணிமலர் நெடுங்கண் ஆர்ந்தன பனியே** என்றாள். "விரவும் பொருளும் விரவும் என்ப[3]" என்பதனால் நிகழ்ந்தது கூறி இன்புறுதல் கொள்க.

கானவர் கிழங்கு அகழ்தற்பொருட்டு எடுத்த குழி நிறைய வேங்கையின் மலர்கள் பரக்கும் என்றது, தலை மகனது நட்பின்பொருட்டு இவள் எய்திய வருத்த மெல்லாம் நின் முயற்சியால் வரைவு மாட்சிமைப்படு தலின் இன்பமாய் நிறைவதாயிற்று என உள்ளுறை கொள்க (அ)

209. *அன்னாய் வாழிவேண் டன்னை நீமற்*
*றியானவர் மறத்தல் வேண்டுதி யாயின்*
*கொண்ட லவரைப் பூவி னன்ன*
*வெண்டலை மாமழை சூடித்*
5 *தோன்றலா னாதவர் மணிநெடுங் குன்றே.*

1. அகம். 378. 2. குறுந். 249 3. தொல். பொ. 45.

**இது வரைவிடை வைத்துப் பிரிவின்கண் அவனை நினைவுவிடாது ஆற்றுளாகிய வழி, 'சிறிது மறந்து ஆற்ற வேண்டும்' என்ற தோழிக்குத் தலைமகள் கூறியது.**

ப. உரை: **வெண்டலை மாமழை சூடித் தோன்றல் ஆனாது** என்றது, மழை பெய்தற்குக் கால்வீழ்ந்த இருட்சியால் மறையப்பெறாது விளங்கித் தோன்றுதலை நோக்கி எனக் கொள்க.

**உரை;** அன்னாய், யான் கூறுகின்ற இதனை விரும்பிக் கேள்: யான் அவரைச் சிறிது மறந்து அமைதல் வேண்டும் என்று கூறுகின்றனை யாயினும், கீழ்க்காற்று வீசுதலால் மலரும் அவரைப் பூவைப் போல வெண்மையான உச்சி யினையுடைய பெரிய முகில் தவழும் முடியையுடையதாய் மணிநிறங் கொண்ட குன்றம் தோன்றுதல் அமையாது; ஆகலின், யான் அவரை மறக்குமாறு யாது? கூறுக எ. று.

என்றது, நீ கூறினும் யான் மறக்கவொண்ணாதவாறு மணி நெடுங்குன்றம் தோன்றி அவர் வரவு நினைப்பித் தலின், யான் மறக்ககில்லேன் என்றவாறும்.

**கொண்டல்,** கீழ்க்காற்று. அது வீசும் பனிக்காலத்தில் அவரை பூக்குமாகலின், **கொண்டல் அவரை** என்றார். "பெரும்புனக் குறவன் சிறுதினை மறுகால், கொழுங்கொடி அவரை பூக்கும், அரும்பனி அற்சிரம் வாரா தோரே[1]" என்றும், "அவரைப் பைம்பூப் பயில அகல்வயல், கதிர் வார் காய்நெல் கட்கினிது இறைஞ்சச், சிதர்சினை தூங்கும் அற்சிரம்[2]" என்றும் வருதல் காண்க. **அற்சிரம்,** பனிக் காலம்.

செய்தற்குக் கூடாத ஒன்றினைச் செய்தல் வேண்டும் எனப் பணிக்கின்றாய் என மறுக்கும் குறிப்புத் தோன்ற, **அன்னாய் வாழி வேண்டு அன்னை** எனத் தலைவி தோழிக்குக் கூறுகின்றாள். யான் அவரை மறத்தல் வேண்டும் என்று

1. குறுந். 82. அகம். 294.

நீ கூறுவதனை உடன்படுகின்றேன் என்பாள், **நீமற்று யான் அவர் மறத்தல் வேண்டுதி** என்று அவள் கூறியதனையே கொண்டெடுத்து மொழிந்தாள். கூற்றவண் இன்மையின் கொண்டெடுத்து மொழியும் கூற்றன்மையின் குறிப்பு வேறு என்பதுபட **ஆயின்** என்றும், அவ்வாறு மறத்தல் கைகூடுவது அவர் மணிநெடுங்குன்று தோன்றாது மறையினன்றோ? மற்று, அது மறையாது தோன்றாநிற்கின்றது, காண் என்பாள், **தோன்றல் ஆனாது** என்றும், வெண்டலை மாமழை கூடி அதனை மறைத்தற்கு முயன்றும், அவர் குன்றம் தனது நெடுமையால் மறையாது என்பாள், **நெடுங்குன்று** என்றும் கூறினாள்; என்றது, மறத்தல் வேண்டும் என நீ எனக்கு உரைப்பது, மணிநெடுங்குன்றத்தைத் தோன்றாதவாறு மறைக்க முயல்வது போலும் என்றாளாம்.

**மறுத்தல் வேண்டும்** என்ற பாடத்துக்கு யான் அவர் வரின், கொள்ளாது மறுத்தல் வேண்டும் என்பா யாயின் என்று கூறிக் கொள்க. (௯)

210. அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைப்
புலவுச்சேர் துறுக லேறி யவர்நாட்டுப்
பூக்கெழு குன்ற நோக்கி நின்று
மணிபுரை வயங்கிழை நிலைபெறத்
தணிதற்கு முரித்தவ ளுற்ற நோயே.

**இது, காப்புமிகுதிக்கண் தலைமகள் மெலிவுகண்டு தெய்வத்தினானாயிற் றென்று வெறியெடுப்புழித் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.**

ப. உரை: **புலவுச்சேர் துறுகல்** என்றது, யாவும் தெய்வத்தினான் ஆயின என்று மறி முதலாயின கொன்று புலவு நாறும் நம் குன்று என்பதாம்.

**உரை:** அன்னாய், இதனை விரும்பிக் கேள்: நம் படப்பைக்கண் மறி முதலியவற்றைக் கோறலால் புலால் கமழும் துறுகல்லின்மேல் ஏறி, அவர் நாட்டின்கண் உள்ள பூக்கள் பொருந்திய குன்றத்தை நோக்கி, நீலமணிபோல விளங்கும் இழையை யணிந்த இவள் நிற்கும் நிலை பெறின் இவளுற்ற நோய் தணிதற்கும் உரியதாகும் எ. று.

என்றது, குன்றம் நோக்குந்தோறும் அது தனக்குரிய தலைவனை நினைப்பித்து அவனைக் கண்டாற் போல்வதோர் மகிழ்ச்சி எய்துவித்தலின், காப்புமிகுதியால் அது பெறாது வருந்துகின்றாள்; அவள் அக்குன்றம் நோக்குமாறு காப்பு நெகிழ்விப்பின், மெலிவு நீங்கி நோய் தணிவள் என்பதாம். எனவே, குன்றின் சாரலில் அதன் தலைவனோடு இவள் தலைப்பெய்தி யுடைமை கூறி அறத்தொடு நின்றாளாம்.

**படப்பை**, தோட்டத்தின் ஒரு கூறு. படப்பைக்கண் துறுகல் உண்மை, "துறுகல் நண்ணிய கறியிவர் படப்பைக் குறியிறைக் குரம்பை நம்மனை[1]" என்பதனால் அறிக. படப்பைக்கண் குன்றவர் கூடி வேலை நட்டு நெடுவேளைப் பரவுங்கால், மறி முதலாயினவற்றைத் துறுகன்மேல் நிறுத்திக் கொல்பவாதலின், **புலவுச்சேர் துறுகல்** என்றார். நிற்ப என்றபாலது **நின்று** எனத் திரிந்தது; "வானின் றுலகம் வழங்கி வருதலால்[2]" என்றாற்போல. தலைமகட்கு உண்டாகிய மெலிவைப் புலப்படுத்திய சிறப்புத் தோன்ற **வயங்கிழை** என்றார். மறி முதலியவற்றின் உயிர் காக்கப் படுதலே யன்றி இவளது நோய் தணிதற்கும் என நிற்றலின், உம்மை எச்சப்பொருட்டு; "மறியுயிர் வழங்கா அளவைச் சென்று யாம் செலவரத் துணிந்து[3]" எனப் பிறண்டும் தோழி கூறுமாறு காண்க.

1. அகம். 272. 2. குறள். 11. 3. அகம். 242.

நீ நினைக்குமாறே வெறியெடுத்தலால் இவள் உற்ற நோய் ஒருகால் தணிதலேயன்றி அவர் நாட்டுக் குன்றம் நோக்கி நிற்பினும் தணியும் என்பதுபட நின்றது எனினு மாம். இழை மணி போல் வயங்குதல், "மணியுரு விழந்த அணியழி தோற்றம் கண்டே கடிந்தனம் செலவே [1]" என்று பிறர் கூறுமாற்றானும் உணர்க.

தலைமகள் இற்செறிப்புண்டு காப்புமிகுதியால் தலைமகனை எதிர்ப்பட இயலாது வருந்துதலை உட்கொண்டு செவிலி அயிராமைப் பொருட்டு **நம் படப்பை** என்றும், வழிபாட்டுக்கு ஆகாது யாம் ஏறி விளையாடுதற்குரிய துறுகல் என்பாள், **புலவுச்சேர் துறுகல்** என்றும், ஏறி நின்று நோக்குவ தொன்றே வேண்டுவது, அது நீ எடுக்கும் வெறிக்கு இடையூறன்று என்பாள், **நோக்கி நிற்ப** என்றும், மணி யுரு விழந்து கையினும் தோளினும் நில்லாது இழைகள் கழன்று ஓடுமாறு மெலிவுற்ற தலைமகட்கு அது நோய்தணி மருந்தாம் என்பாள், **வயங்கிழை நிலைபெறத் தணிதற்கும் உரித்து அவள் உற்ற நோய்** என்றும் கூறினள். **அவர்நாட்டுப் பூக்கெழு குன்றம்** என்றது, தலைமகட்குத் தலைவனொடு உளதாகிய பூத்தரு புணர்ச்சி புலப்படுத்தவாறு. இஃது **ஏதீடு.**

குன்றம் நோக்கி நிற்பவே, அது நோய்தணிதற்கு உரித்து என்றதனால், செவிலி தலைமக்களிடை நட்புண்மை யுணர்ந்து நற்றாய் முதலியோர்க்கு அறத்தொடு நிற்பா ளாவது பயன். இது **வேட்கையுரைத்தல்.** (ம)

---

1. அகம். 5.

## 22. அன்னாய்ப்பத்து.

இப்பகுதிக்கண் வரும் பாட்டுக்கள் இறுதியில் அன்னாய் என்னும் சொற்கொண்டு முடிதலின், இஃது இப்பெயர்த் தாயிற்று.

முன்னது பாட்டின் முதற்கண் நின்ற தொடர்பற்றிப் பெயர்கொண்டாற்போல, இது பாட்டின் இறுதிக்கண் நின்ற சொற்பற்றிப் பெயர்கொண்டது.

**அன்னை** என்பது, "ஐ ஆயாகும்" என்றதனால் **அன்னாய்** என நின்றது.

211. நெய்யொடு மயக்கிய வுழுந்துநூற் றன்ன
வயலையஞ் சிலம்பின் றலையது
செயலையம் பகைத்தழை வாடு மன்னாய்.

**இது, தலைமகன் ஆற்றாமை கண்டு கையுறை ஏற்ற தோழி தலைமகள் தழை ஏற்க வேண்டிக் கூறியது.**

**உரை:** அன்னாய், நெய்பெய்து துவைக்கப்பட்ட உழுந்தின் மணிபோன்ற வயலைக்கொடி படர்ந்த மலைமுடியின்கண் தழைத்த அசோகின் தளிரால் தொடுக்கப்பட்ட பகைத்தழை இனி வாடுமாகலின்; ஏற்றருள்க எ. று.

**உழுந்துநூறு** என்றது, உழுந்தின் காயை உலர்த்தித் துவைத்து எடுத்து நூறப்பட்டது. நூறப்பட்டது **நூறு.** மணியினை நெய் பெய்து மயக்கியவழி நிறமும் ஒளியும் பெறுதலின், **நெய்யொடு மயக்கிய உழுந்து நூறு** என்றும், வயலை படர்ந்த நிலம் நெய்யொடு மயக்கிய உழுந்தினைப்

பரப்பியது போறலின், **நெய்யொடு மயக்கிய உழுந்துநூற்றன்ன** என்றும் கூறினர். வயலைக்கொடி செந்நிறத்த தாகலின், செறிந்து விளங்கும் அதன் கரிய இலைகளும் வெள்ளிய பூக்களும் கொள்ளப்படும். இவை தம்மில் விரவிப் படர்ந்து தோன்றும் காட்சிக்கு நெய் பெய்து பரப்பிய உழுந்தின் நூறு உவமமாயிற்று.

வயலைக்கொடி படர்ந்த சிலம்பின் உச்சியின் கண்ணதாய செயலைத்தழை நாம் பெறற் கரிதாயினும், பெற்ற வழி அணியாதுவிடின், அது வாடிப் பயனின்றும் ஆதலால் ஏற்றருள்க என்பாள், **செயலையம் பகைத்தழை வாடும்** என்ருள். **பகைத்தழை** என்றற்கு மேலே கூறினும்[1]. சிலம்பின் தலையிடத்ததாய்ப் பெறுதற்கு அரிதுமாய தழையை எளிதிற் பெறத் தந்தமையால், இஃது ஏற்கற்பால தென்ருளுமாம். அரிதிற் பெறற்பாற்ருய தழையை யாம் தேடி வருந்தாவகையில் தானே எளிதில் தந்தான் என்றதனுல், வரைவு வேண்டியவழித் தமர் மறுத்தல் முதலிய அருமைசெய்து அலைப்பினும், வென்றி பெற முயன்று வரைந்துகொள்ளும் தாளாண்மையன் என்று தலைவனது உரனுடைமை சுட்டியவாறு. அன்றியும் வயலைச் சிலம்பின் தலையதாகிய செயலைத்தழை என்றதனுல், நாம் பேணி வளர்க்கும் வயலை, தன் அடிக்கண் வளர நின்ற மையின் செயலையின் தழையை வாடவிடுதல் நமக்கு அறமன்று எனத் தோழி கூறினளாயிற்று.

"மறைந்தவ ள கத் ]ம் அவளொடும் முன்னமுன் தளைஇப் பின்னிலை நிகழும், பல்வேறு மருங்கின்[2]" என்பதற்கு இதனை எடுத்துக்காட்டுவர் **இளம்பூரணர்.**

**உழுந்து தூற்றன்ன** என்ற பாடத்துக்கு உழுந்தினது தூறு போன்ற வயலைக்கொடியின் தூறுகள் நிறைந்த சிலம்பு என்றுரைப்பினும், நெய்யொடு மயக்கிய என்பது இயையாமை காண்க. (க)

1. இந்நூல் பக்கம். 58. 2. தொல். பொ. 112.

212. சாத்த மரத்த பூழி லெழுபுகை
கூட்டுவிரை கமழு நாடன்
அறவற் கெவனோ நாமகல் வன்னாய்.

இது, வரைவு எதிர்கோள்ளார் தமர் அவண் மறுத்த வழித் தோழி சேவிலிக்கு அறத்தோடு நின்றது.

ப. உரை: சாந்தமரத்தின் இடைநிலத்து உளவாகிய அகில் சுடுபுகை அச் சந்தனப்பூ நாற்றத்தோடு கமழும் நாடன் என்றது, தனக்கு வந்த வருத்தம் பாராது தனகுத் துணையாயினார் நலத் தொடுங் கூடி எல்லார்க்கும் பயன்பட ஒழுகும் ஒழுக்கத்தை உடையான் என்பதாம்.

உரை: அன்னாய், சந்தனமரத்தின் இடைநிலத் துள வாகிய அகிலைச் சுடுதலால் எழும் புகை அச் சந்தனப் பூவின் நாற்றத்தோடு கூடி மணம் கமழும் நாடன் அறவோனாகலின், நாம் அவன் பொருட்டு மகட்கொடை மறுத்தல் என்னையோ? கூறுக எ. று.

ூல், அகில். "சாந்தம் பூழிலொடு பொங்குநிரை சுமந்து[1]" என வருதல் காண்க. அறவன், வாய்மை ஆகிய நல்லற முடையன்; "ஒண்செங் காந்தள் அவிழும் நாடன் அறவனாயினும்[2]" என்றார் பிறரும். அகல்வு, ஈண்டு மறுத்தற்கண் வந்தது.

நாடன் தங்கட்கு உண்டாய இடையூறுகளைக் களைந்து தனது நட்பினைத் தந்தனன் எனக் குறிப்பால் எதிரேடு கூறி அறத்தொடு நிற்கின்றாளாகலின், தோழி தலைவனை அறவன் என்றும், அறவோர்க்கு அளித்தல் முறைமையாக மறுத்தல் முறையன்று என்பாள் நாம் அகல்வு எவனோ என்றும் கூறினாள்.

1. பதிற். 87. 2. குறுந். 284.

சந்தனச் சோலையிடையே எரிக்கப்பட்ட அகிற்புகை சந்தனத்தின் மணம் கலந்து கமழும் நாடன் என்றது, மலைச்சாரலில் மதகளிறு வென்று வந்தவன் அது கண்டு வெருவிய எம்மைத் தலையளித்த உரவோனுவன் என உள்ளுறையால் ஏதீடு கூறினுள் என்றவாறு. (உ)

213. நறுவடி மாஅத்து மூக்கிறு புதிர்ந்த
ஈர்ந்தண் பெருவடுப் பாலையிற் குறவர்
உறைவீ ழாலியிற் றொகுக்குஞ் சாரல்
மீமிசை நன்னாட் டவர்வரின்
யானுயிர் வாழ்தல் கூடு மன்னுய்.

**இது, வரைவோடு வருதலைத் துணிந்தான் என்பது தோழி கூறக்கேட்ட தலைமகள் சொல்லியது.**

**ப. உரை:** மாவின் மூக்கிற்று உதிர்ந்த வடுக்களை ஆலி போலத் தொகுக்கும் நாட்டையுடையார் என்றது, விரும்புவன வற்றுக்குத் தாமாக முயலாது பெற்றுழிப் பேணும் இயல்புடையார் எ. று.

**உரை:** அன்னுய், நறிய வடுக்கள் நிறைந்த மாமரத்தின் காம்பு அற்று உதிர்ந்த, மிகக் குளிர்ந்த, பெரிய வடுக்களைப் பாலைநிலத்து இயங்கும் குறவர் மழையொடு வீழும் ஆலி போலத் தொகுக்கும் சாரலையுடைய மிக உயர்ந்த நல்ல நாட்டினையுடையவர் வரைவொடு வருதல் துணிந்தாலன்றி யான் உயிர்வாழ்தல் கூடாது எ று.

**மாவின் வடு**, மாவின் முற்றாத காய். இது **வடி**யென்றும் வழங்கும். "நறுவடி மாஅத்து விளைந்துகு தீம்பழம்[1]" என்பது காண்க. **மூக்கு**, காம்பு; "பெண்ணைத் தேனுடை யழிபழம் .... மூக்கிறுபு, அள்ளல் இருஞ்சேற் றாழப் பட்டென[2]" எனப் பிறரும் கூறுதல் காண்க. **மீமிசை.** "ஒருபொரு ளிருசொற் பிரிவில வரையார்[3]" என்பதனுல்

1. ஐங். 61. 2. நற். 372. 3. தொல். சொல். 460.

அமைந்தது. பாலையாவது முல்லையும் குறிஞ்சியும் காலத்தால் இயல்பழிந்து வேறுபட்ட நிலம்; "முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து, நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப், பாலை யென்பதோர் படிவம் கொள்ளும்[1]" என்பது காண்க. **நன்னாட்டவர் வரின், யான் உயிர்வாழ்தல் கூடும்** என்றது, தலைமகன் வரைவொடு வருதல் அறிந்தமை உணர நின்றது.

உள்ளுறையால் தலைவனது காதல் மாண்பினைக் கூறுகின்றாளாதலின், அவன் வரைவு துணிந்தமை கேட்டு **யான் உயிர்வாழ்தல் கூடும்** என்றாள்.

மாவினின்றும் தாமாக உதிர்ந்த மாவடுக்களைக் குறவர் ஆலிபோலத் தொகுத்துக்கொள்ளும் நாட்டவராதலின், என்னின் நீங்கித் தூதாகச் சென்று வீழ்ந்த நெஞ்சினைப் பெரும்பேறாக ஏற்றுக்கொள்வர் என்பது உள்ளுறை. (௬)

*214.* *சாரற் பலவின் கொழுந்துணர் நறும்பழம்*
*இருங்கல் விடரளை வீழ்ந்தெனக் வெற்பிற்*
*பெருந்தே னிறாஅல் கீறு நாடன்*
*பேரமர் மழைக்கண் கலிழத்தன்*
*சீருடை நன்னாட்டுச் செல்லு மன்னாய்.*

**மகன் ழித் தணைப்பல் என்று கூறியவதனை அவன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.**

**ப. உரை :** பலவின்பழம் பிறர்க்குப் பயன்படாது கல்லளையில் வீழ்கின்றுழி அவ்விடத்து உளதாகிய தேனிறாலினையும் சிதைக்கும் என்றது, தன்னாற் பெற்ற நலம் எங்கள் இயற்கைநலத்தினையும் சிதைக்கின்றது என்பதாம். இது கேட்டுக் கடிதின் வரைவானாவது பயன்.

1. சிலப். 11:64-6.

**உரை:** அன்னாய், மலைச்சாரலில் நின்ற பலாமரத்தினது கொழுவிய துணர்களின் இடையே பழுத்த நறிய பழம் பெரிய கற்களின் பிளப்பிடை உளதாகிய அளையின் கண் வீழ்ந்ததாகப் பாறையிற் கட்டப்பட்ட தேனடை சிதைந்து தேன் சொரியும் நாடன், பெரியவாய் மதர்த்துக் குளிர்ந்த நின்னுடைய கண்கள் நீர் சொரியத் தன் விழுப்பம் அமைந்த நல்ல நாட்டுக்குச் செல்லுவா னயினன் எ. று.

சாரலிடத்தே கொழுவிய துணரிடையே விளைந்த நறுவிய பழம் யார்க்கும் பயன்படாவகையில் ஒழிந்தமை உணர்த்தற்கு **இருங்கல் விடரளை வீழ்ந்தென** என்றார். "மாச்சினைச் சிறந்த கோண்முதிர் நறும்பழம், விடரளை வீழ்ந்துக் காங்குச் சேணும் சென்றுக் கன்றே[1]" எனப் பிறரும் கூறுதல் காண்க. ஏனை மரங்களிற் காணப்படும் தேனடையினும் மலைத்தேனடையில் தேன் மிக்கிருந்தல் பற்றிப் **பெருந்தேன்** எனப்பட்டது. பேரமர்க்கண், மழைக் கண் என இயையும். மதர்த்துக் காதிற் குழையொடு பொரும் கண் என்பதுபற்றிப் **பேரமர்க்கண்** என்றார் என்றலும் ஒன்று. **சீர்,** செல்வத்தால் உளதாகும் விழுப்பம்.

தலைமகன் சிறைப்புறத்தான் ஆயினமை அறிந்து அவன் கேட்குமாறு கூறுதலின்; கவவிய கை சிறிது நெகிழினும் ஆற்றாத பெருமென்மையள் ளாகிய நீ, கண்கள் நீர்சொரியப் பிரிவது நன்றன்று என்பாள், **பேரமர் மழைக்கண் கலிழ** என்றும், தான் உள்வழித் தன் உயிர் போல் உடனிருத்தற்குரிய நின்னைப் பிரிந்து தன்னூர்க்குச் செல்கின்றான் என்றற்குத் **தன் சீருடை நன்னாட்டுக்குச்** ...யும் என்றும் கூறினாள். தலைவன் செல்லும் ஊரைச் **...டை நன்னாடு** என்று சிறப்பித்தாள், அவன் பிரிவால் தலைவி பசப்பும் மெலிவும் எய்திச் சீரும் நன்மையும்

---

1. நற். 116.

இழந்து வருந்துவள் என்பதை உள்ளுறைக்கண் கூறுதலின். பலவின் நறும்பழம் விடரளையில் வீழ்வது தேன் இறாலைச் சிதைக்கும் என்றதனால், தலைமகன் பிரிவு தலைமகளது மேனிநலம் சிதைவிக்கும் என உள்ளுறை கொள்க. **பழைய வுரைகாரர்க்கும்** இதுவே கருத்தாதல் அறிக. (௪)

215 *கட்டளை யன்ன மணிநிறத் தும்பி*
*இட்டிய குயின்ற துறைவயிற் செலீஇயர்*
*தட்டைத் தண்ணுமைப் பின்ன ரியவர்*
*தீங்குழ லாம்பலி னினிய விமிரும்*
*புதன்மலர் மாலையும் பிரிவோர்*
*அதனினுங் கொடிய செய்குவ ரன்னாய்.*

**இஃது இரவுக்குறி நயந்த தலைமகள் பகற்குறிக்கண் வந்து நீங்கும் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியது.**

**உரை:** அன்னாய், தட்டையும் தண்ணுமையுமாகிய கருவிகளின் பின் வாச்சியக்காரர் இசைக்கும் தீவிய குழலாகிய ஆம்பலினும் இனியவாய்ப் பொன்னுரை கல்போலும் நீல மணியின் நிறத்தையுடைய தும்பிகள் ஒலிக்கும் புதல்கள் மலரும் மாலைக்காலத்திற் பிரியாமையைக் கருதாது பிரிவோர் அம்மாலையினும் வருத்துவனவற்றைச் செய்வாராகலின், சிறியவாய் நெருங்கிய துறைக்கண் நீ செல்வாயாக எ. று.

பொன் உரைத்த கட்டளைக்கல் போல வரிகள் கிடந்த சிறகுகளை உடையவாதல் பற்றித் தும்பியைக் **கட்டளை யன்ன தும்பி** யென்றும், அக்கட்டளைக்கல்லின் நிறத்தினும் தும்பியின் நிறம் நீலம் கலந்துள்ளமை பற்றிக், **கட்டளை யன்ன** என்றதோடு ஒழியாது **மணிநிறத்**

**தும்பி** என்றும் கூறினர். "அம்ம வாழியோ மணிச்சிறைத் தும்பி[1]" என்றும், "நறுந்தா தாடிய தும்பி பசுங்கேழ்ப் பொன்னுரை கல்லின் நன்னிறம் பெறூஉம்[2]" என்றும், "காந்த ளூதிய மணிநிறத் தும்பி[3]" என்றும் கூறுப பிறரும். "முதலும் சினையுமென் றாயிரு பொருட்கும், நுதலிய மரபின் உரியவை யுரிய[4]" என்றதனால், கட்டளை யுவமை தும்பிக்கும், மணியுவமை நிறத்துக்கும் உரிய வாக்கிக் கொள்க. **தட்டை**யாவது "மூங்கிலைக் கணுக்கள் உள்ளாக நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசை உண்டாக ஒன்றிலே தட்டுவதோர் கருவி.[5]" **இட்டிய** என்றது சிறுமை உணர்த்தும் சொல்; "ஆகாறு அளவு இட்டிது ஆயினும்[6]" என்றாற் போல.

புணர்ந்தோர் பூ மகிழ்ந்தணியப் பிரிந்தோர் வருந்த வருத்தும் இயல்பிற்றாகலின், மாலைப்போது பிரிவுக்கு ஆகாமை தோன்ற, **மாலையும் பிரிவோர்** என்றும், நாம் நயந்து குறித்த இரவுக்குறி ஒழித்துப் பகற்குறி வேண்டி வந்துழி, நாம் கூடேமாயின், இரவின்கண் உறக்கமின்மை முதலியவற்றைச் செய்து வருத்துவர் என்பாள், **அதனினும் கொடிய செய்குவர்** என்றாள். **தும்பி இமிரும் புதன்மலர் மாலையும் பிரிவோர்** என்றது இன்பத்தை வெறுத்தல். (௫)

**216.** குறுங்கை யிரும்புலிக் கோள்வ லேற்றை
நெடும்புதற் கானத்து மடப்பிடி யீன்ற
நடுங்குநடைக் குழவி கொளீஇய பலவின்
பழந்தூங்கு கொழுநிழ லொளிக்கும் நாடற்குக்
கொய்திடு தளிரின் வாடிநின்
மெய்பிறி தாதல் எவன்கொ லன்னாய்.

**இது, வரைவு நீட ஆற்றாளாகிய தலைமகட்குத் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி கூறியது.**

---

1. குறுந். 392. 2. நற். 25. 3. ஷை. 17.
4. தொல். பொ. 281. 5. குறிஞ். 43. உரை.
6. குறள். 478.

**ப. உரை:** புலியேற்றை பிடி யீன்ற குழவியைக் கொள்ள வேண்டிக் காலம் பார்த்து மறைந்திருக்கும் நாடன் என்றது, தன் வஞ்சனையாலே நின் பெண்மையை வௌவுகின்றான் என்பதாம்.

**உரை:** அன்னாய், குறுகிய முன்கால்களையுடைய பெரிய புலியின் கொலைத்தொழிலில் வல்ல ஆண், நெடிய புதர்கள் நிறைந்த கானத்தில் மடப்பம் பொருந்திய பிடியானை யீன்ற அசைந்த நடையினையுடைய கன்றினைக் கோடற்பொருட்டுப் பலாமரத்தின் பழங்கள் நாலுகின்ற கொழுவிய நிழலில் ஒளித்திருக்கும் நாடன் பொருட்டு, நீ கொய்திடப்பட்ட தளிர்போல் வாட்ட முற்று மேனி வேறுபடுதல் என்னையோ, கூறுக எ. று.

புலியின் ஆணை **ஏற்றை** என்றார்; "ஆற்றலொடு புணர்ந்த ஆண்பாற் கெல்லாம் ஏற்றைக் கிளவி யுரித் தென மொழிப[1]"; "குறுங்கை யிரும்புலிக் கோள்வல் ஏற்றை, பூநுத லிரும்பிடி புலம்பத் தாக்கித், தாழ்நீர் நனந்தலைப் பெருங்களி றடூஉம்[2]" என வருதல் காண்க. பின்கால்களினும் முன்கால் குறுகி யிருத்தல்பற்றிக் **குறுங்கை** எனப்பட்டது. "குறுங்கை யிரும்புலி பொரூஉம் நாட[3]" எனப் பிறரும் கூறுப. இளம்பிடியின் கன்று உடல் வளவிதாதலின், **மடப்பிடி யீன்ற குழவி** என்று சிறப்பித்தார். யானையினத்துக்கு இயல்பாதல் தோன்ற **நடுங்குநடைக் குழவி** என்றார். **நடுங்குதல்,** அசைதல். பலவின் பழம் கருதி மடப்பிடி கன்றொடு வருமென எண்ணி அப்பலாவின் கொழுவிய நீழற்கண் புலி ஒடுங்குமென அறிக.

கொய்திட்ட தளிர் மரத்திற் பிரிக்கப்பட்டமையால் பசை குன்றி வாடுதல் போல, தமரிற் பிரித்துத் தானும் வரையாது நீட்டித்துத் தங்குகின்றான் எனச் சிறைப் புறத்தானாக தலைமகன் கேட்க உரைத்தலின், **கொய்திடு தளிரின் வாடி** என்றும், மெய் வேறுபட்டவழிப் பிறர் அலர் கூறிப் பழிப்ப ரென்பது தோன்ற **மெய் பிறிதாதல்** என்றும் தோழி கூறினாள்.

1. தொல். பொ. 604. 2. நற். 36. 3. ஐங். 266.

' **மெய்பிறிதாதல்** என்றது உண்டியிற் குறைதல், உடம்புநனி சுருங்கல் முதலியனவாம். தான் வரைவு நீட்டித்தலால் நீ மெய்வேறுபட்டு வருந்துதலை அறிந்து விரைந்து போந்து வரையானாய்த் தனக்கு வேண்டிய நலமே விரும்பி யொழுகுவான் ஒருநன்மையும் புரியா னாகலின், அவனை நினைந்து நிற்றலிற் பயனின்று என்பாள் **எவன்கொல்** என்றாள்.

புலியேற்றை மடப்பிடியின் கன்றினைக் கோடற்குப் பலவின் கொழுநிழற்கண் ஒளித்திருக்கும் என்றதனால், தலைமகன் நின் பெண்மைநலம் கவர்தலைக் கருதிக் களவே விரும்பி யொழுகுகின்றான் என உள்ளுறுத்து உரைத்தா ளாயிற்று. இது உவம மருங்கில் தோன்றும் துனியுறு கிளவி. **பழைய வுரைகாரர்க்கும்** இதுவே கருத் தாதல்

"நாற்றமுந் தோற்றமும்[7]" என்ற சூத்திரத்து, "செங்கடு மொழியாற் சிதைவுடைத் தாயினும், என்பு நெகப்பிரிந்தோள் வழிச்சென்று கடைஇ, அன்புதலை அடுத்த வன்புறைக் கண்ணும், என்புழி, அன்புதலை அடுத்த வன்புறையாவது தலைவன் இன்றியமையான் என ஆற்றுவித்தல்" என்று கூறி, அதற்கு இதனை மேற்கோ ளாகக் காட்டுவர் **இளம்பூரணர்.** (௬)

217\. பெருவரை வேங்கைப் பொன்மருள் நறுவீ
மானினப் பெருங்கிளை மேய லாரும்
கானக நாடன் வரவுமிவண்
மேனி பசப்ப தெவன்கொ லன்னாய்.

**வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் மீட்சி உணர்ந்த தோழி ஆற்றாளாகிய தலைமகட்குச் சொல்லியது.**

7\. தொல். பொ. 112.

ப, உரை: **இவண்** என்றது இவ்விடத்து எ. று. வேங்கைப் பூவை மானினம் ஆரும் என்றது, அவன் மனைப் பெருஞ்செல்வம் நின் கிளையாகிய நாங்களும் நின்னோடு நுகர்வேம் என்பதாம்.

**உரை:** அன்னாய், பெரிய மலைக்கண் நின்ற வேங்கை மரத்தின் பொன்போலும் நறுவிய பூக்களை மானினங்களின் பெரிய சுற்றம் பலவும் மேய்ந்துண்ணும் கானத்தை யுடைய நாடன் இவ்விடத்து வந்தானாகவும், நீ நின் மேனி பசலை பாய்ந்து நிற்றல் என்னை எ. று.

**பொன்மருள் நறுவீ** என்றவிடத்து **மருள்** உவமவுருபு; "வேங்கைப் பொன்மருள் நறுவீ கல்மிசைத் தாஅம்[1]" எனப் பிறரும் கூறுதல் காண்க. மானினம் என்றதனோடு பெருங்கிளை யென மிகுத்தது, மான்திரளே யன்றி ஏனை அதன் இனமாய விலங்குகளையும் அகப்படுத்துநின்றது. "பசித்த ஆயத்துப் பயனிரை தருமார், பூவாட் கோவலர் கொய்துகட் டழித்த வேங்கை[2]" என்பது காண்க. **மேயலாரும்** என்றது ஒருசொல்லாய் மேயும் என்பது பட வந்தது. **வரவும்**, உம்மீற்று விரைவுப்பொருட்கண் வந்த வினையெச்சம். **இவண்** என்னாது, **இவள்** என்று கொள்ளின், தோழி செவிலிக்கு உரைப்பதாய் அகப்பொருள் நெறிக்கு மாறுபடும் என அறிக.

நாடன் வரின் மகிழ்ந்து உவக்கும் பான்மையை ஆகிய நீ பசந்து மெலிதல் ஆகாது என்பாள், **மேனி பசப்பது எவன் கொல்** என்றாள். இதனால் தலைவி ஆற்றா ளாயினமையும், **கானக நாடன் வரவும் இவண்** என்றதனால் தலைவன் வந்தமையும் கூறினாளாம். **மேனி பசப்பதெவன்** என்றது **பசலைபாய்தல்.** **வரவும்** என்றது அவன் வாராத காலத்தின் நீட்டம் உணர நின்றது.

1. நற். 257. 2. புறம், 224.

வேங்கையின் பொன்மருள் பூவினை மாவினத்தின் பெருங்கிளை மேயும் என்றது, தலைமகன் வரவால் வரைவு மாட்சிமைப்படுதல் கண்டு நின் கிளையேமாகிய யாங்கள் இன்புறுநின்றேம் எனத் தோழி கூறியவாறு. இஃது **இனிதுறு கிளவி.** (எ)

218. நுண்ணேர் புருவத்த கண்ணு மாடும்
மயிர்வார் முன்கை வளையுஞ் செறூஉம்
களிறுகோட் பிழைத்த கதஞ்சிறந் தெழுபுலி
எழுதரு மழையிற் குழூஉம்
பெருங்கன் னாடன் வருங்கொ லன்னாய்.

**இது, தலைமகன் வரைவு வேண்டிவிடத் தமர் மறுத்துழி, அது கேட்டு, "இஃது என்னாங் கோல்" என்று ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி தனக்கு நற்குறி செய்யக் கண்டு "கடிதின் வந்து வரைவான்" எனச் சொல்லியது.**

**ப. உரை:** தன்னாற் கொள்ளப்பட்ட களிறு தப்பினமையின் புலி கதம் சிறந்து குழூஉம் என்றது, நினைத்தவற்றிற்குக் குறைவான் அதற்கு வெகுண்டு முடிப்பான் எ. று.

**உரை:** அன்னாய், நுண்ணியவாய் அழகு பொருந்திய என் புருவத்தையுடைய கண் துடித்தலினாலும், மயிர் ஒழுகிய முன்கைக்கண் அணிந்த வளைகள் நெகிழாது செறிதலினாலும், களிற்றினைக் கொள்ளுமிடத்து வழுவியவதனால் சினம் மிக்கு எழுந்த புலி, எழுகின்ற மேகங்களைப் போல முழங்கும் பெரிய மலைநாடன் வருவானாகலின் நீ வருந்துதல் ஒழிவாயாக எ. று.

மகளிர்க்கு இடக்கண் துடித்தல் நன்னிமித்தமாகலின், **கண்ணும் ஆடும்** என்றார்; "பல்லியும் பாங்கொத்து இசைத்தன, நல்லெழி லுண்கணும் ஆடுமா லிடனே [1]" என்றும், "பூங்கண் இடனாடுங் கனவுந் திருந்தின, ஓங்கிய

1. கலி. 10.

குன்றம் இறந்தாரை யாம் நினைப்ப, வீங்கிய மென்றோள் கவினிப் பிணிதீரப், பாங்கத்துப் பல்லி படும்[1]" என்றும் சான்றோர் கூறுதல் காண்க. கண்ணுறுப்புப் புருவத்தை யும் உளப்படுத்தி நிற்றலின் **புருவத்த கண்** என்றார். கண்ணாடுதலாவது, புருவம் துடித்தல். வளைசெறிதலும் நன்னிமித்தமே யாம்; "சுரிவளை பொலிந்த தோளும் செற்றும், வருவர்கொல் வாழி தோழி[2]" எனச் சான்றோர் உரைப்பது காண்க. **வருங்கொல்** என்புழிக் கொல் என்பது அசைநிலை.

களிறு கோடலிற் பிழைபட்ட புலி சினஞ்சிறந்து முழங்கும் என்பது, "களிற்றிரை பிழைத்தலின் கயவாய் வேங்கை, காய்சினம் சிறந்து குழுமலின் வெரீஇ, இரும் பிடி யிரியும்[3]" என்பதனாலும் அறிக. தமர் வரைவு மறுத் தமை அறிந்து கண் கலுழ்ந்து மேனி மெலிந்து ஆற்றாளா கிய தலைமகட்கு, உள்ளுறையால் தலைவனது ஆண்மை நலம் கூறி ஆற்றுவிக்கின்ற தோழி, தன் கண் துடித்துக் காட்டினமையும், வளை செறிந்தமையும் ஆகிய நன் நிமித்தம் தோன்றுவது கூறுவாள், **கண்ணும் ஆடும், வளையும் செறூஉம்** என்றும், இவ்வாற்றால் தலைமகன் போந்து வரைந்து கோடல் ஒருதலை என்பாள் **பெருங்கல் நாடன் வரும்** என்றும் கூறினாள்.

இனி, "நாற்றமும் தோற்றமும்[4]" என்ற சூத்திரத்து, "அவன் வரைவு மறுப்பினும்" என்புழி இதனைக் காட்டி இது தமர் வரைவு மறுத்துழி ஆற்றாத தலைவிக்குத் தோழி தீய குறி நீங்கித் தனக்கு நற்குறி செய்யக் கண்டு 'கடிதின் வரைவர்' எனக் கூறியது என்பர் **நச்சினார்க்கினியர்.** (அ)

1. ஐங். எழு. 71. 2. . 260. 3. அகம். 221.
4. தொல். பொ. 114.

219. *கருங்கால் வேங்கை மாத்தகட் டொள்வீ*
*இருங்கல் வியலறை வரிப்பத் தாஅம்*
*நன்மலை நாடன் பிரிந்தென*
*ஒண்ணுதல் பசப்ப தெவன்கொ லன்னாய்.*

**இது, வரைவிடைப் பிரிந்த அணுமைக்கண்ணே ஆற்றா ளாகிய தலைமகட்குத் தோழி கூறியது.**

**ப. உரை :** வேங்கைமலர் அகலறையிலே பரக்கும் நாடன் என்றது, நம் பொல்லா ஒழுக்கம மறைய நல்லொழுக்கம் நமக்கு உதவும் நன்மையை யுடையான் என்பதாம்.

**உரை :** அன்னாய், கரிய காலினையுடைய வேங்கை யின் கரிய புறவிதழையுடைய ஒள்ளிய பூக்கள் பெரிய மலையின் அகன்ற பக்கமலையின்கண் உதிர்ந்து பரந்து அழகு செய்யும் நல்ல மலைநாட்டினையுடையவன் பிரிந் தானாக, பிரிந்த அணிமைக்கண்ணே நீ ஒள்ளிய நுதல் பசந்து காட்டுதல் என்னையோ, கூறுக எ று.

வேங்கைமரத்தைக் **கருங்கால் வேங்கை** என்பது பெருவழக்கு, "சுரும்புண விரிந்த கருங்கால் வேங்கை [1]" என்பர். **தகடு,** இதழ்; "கருந்தகட்டு உளைப்பூ மருது [2]" என்பதனால் அறிக. "அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை, மாத்தகட்டு ஒள்வீ [3]" எனப் பிறாண்டும் இவரே கூறுதல் காண்க. **வியலறை,** அகன்ற கற்பாறை.

வரைவிடைவைத்துப் பிரிந்தோன் தன் செய்வினை முற்றி வருதற்குள், அவன் தெளித்த சொல்லைத் தேறி இராது பிரிவுள்ளி மேனி வேறுபடுதல் நன்றன்று என்பாள் **ஒண்ணுதல் பசப்பது எவன்கொல்** என்றாள். **நன்று,** புறத் தார்க்குப் புலனாகி அலராகாமை. **நுதல் பசப்ப** என்றது, **பசலைபாய்தல்.**

வேங்கையின் மலர் வியலறைக்கண் பரக்கும் என்றது, நீ பசப்பது புறத்தார்க்குப் புலனாகி ஊரெங்கும் அலராய் விடும் எனத் தோழி உள்ளுறுத்து உரைத்தவாறு காண்க.

1. நற். 168.     2. முருகு. 27-8.     3. புறம். 202.

**பழையவுரைகாரர்,** இவ்வுள்ளுறையைத் தலைமகன் மேலேற்றி, வேங்கையின் ஒள்வீ வியலறைக்கண் பரப்பதுபோலத் தான் நின்னை வரையுமாற்றால் தன் பெருமை நலம் ஊரறியச் செய்வன் என்ற கருத்துப்பட உரைத்தார்.

இது வரைவிடை வைத்துப் பிரிந்துழித் தலைவி ஆற்றாமை கண்டு தோழி கூறியது; இது குறிஞ்சியுட் பாலை என்பர் **நச்சினார்க்கினியர்**[1]. (௯)

220. *அலங்குமழை பொழிந்த வகன்க ணருவி*
*ஆடுகழை யடுக்கத் திழிதரு நாடன்*
*பெருவரை யன்ன திருவிறல் வியன்மார்பு*
*முயங்காது கழிந்த நாளிவள்*
*மயங்கிதழ் மழைக்கண் கலிழு மன்னாய்.*

இது நொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.

ப. உரை: **அலங்குமழை பொழிந்த அகன் கண் அருவி ஆடுகழை அடுக்கத்து இழிதரும் நாடன்** என்றது, இவள்மேல் வைத்த தண்ணளி நம்மிடத்தும் வந்து இடையறாது ஒழுகும் எ. று.

**உரை:** அன்னாய், அசைகின்ற மழை பொழிய வந்த அகன்ற இடத்தையுடைய அருவி, ஒலிக்கின்ற மூங்கில் வளர்ந்த மலைப்பக்கத்தே ஒழுகும் நாடனுடைய பெரிய மலைபோன்ற, திருவீற்றிருந்த வெற்றி பொருந்திய, அகன்ற மார்பை முயங்காது கழிந்த நாட்களில் அதனையே நினைந்து இவள் இணையொத்த மலரிதழ் போலும் குளிர்ந்த கண்கள் நீர் சொரியா நிற்கும், காண் எ. று.

மழைமுகில் காற்றில் மிதந்து வருவதாகலின், **அலங்குமழை** எனப்பட்டது. **பொழிந்த** என்னும் பெயரெஞ்சு கிளவி காரியத்தின் மேனின்றது. பெருவரையன்ன மார்பு, திருவிறல் மார்பு, வியன்மார்பு என இயையும். உயர்வு அகலம் திண்மை முதலிய பேரியல்புகளால்

1. தொல். பொ. 9.

சிறந்த மலைகளை விறன்மலை[1], விறல் வரை[2] என்பது பற்றி, அவ்வியல்புகளால் ஒத்த தலைமகன் மார்பினைப் **பெருவரை யன்ன திருவிறல் வியன்மார்பு** என்று சிறப்பித்தார்; தலைமக்கள் மார்பு திருவீற்றிருக்கும் சிறப்புக் கருதி இவ்வாறு கூறினர் என்றலும் ஒன்று. **திருத்தக்க தேவர்,** "திருவீற்றிருந்த மார்பன் சேவடி சேர்ந்த யாங்கள்[3]" என்பது காண்க. **மயங்கிதழ்,** இலையொத்த மலர்இதழ் போன்ற கண்ணிமை மேற்று; "மயங்கிதழ் மழைக்கண் பயந்த தூதே[4]" என்று பிற சான்றோரும் கூறுவர்.

தலைமகனோடு தொடர்புண்டாய திறத்தைச் சுட்டி, **அகன்கண் அருவி இழிதரும் நாடன்** என்றும், அவற்கே தலைவி உரியளாய்க் களவொழுக்கம் பூண்டமை விளங்க **முயங்காது கழிந்த நாள் இவள் கண் கலிழும்** என்றும் கூறினள். முயங்குந்தோறும் புத்தின்பம் பயந்து, பாயலாய்ப் பயன் நல்கிய சாயல் மார்பாகலின், **வியன்மார்பு** என்றாள். நாடனது வியன்மார்பு முயங்காது கழியும் நாள் பேதுற்றுக் கண் கலுழும் இவள், நொதுமலர் வரைந்த வழி உயிர் வாழாள் என்பதுபட நிற்றலின், இஃது **உண்மை செப்பல்.**

மழைபொழியத் தோன்றிய அகன்ற அருவிகள் அடுக்கத்திடை இழியும் நாடன் என்றது, தலைவன் புரிந்த தலையளியால் உயிர் வாழ்கின்றாள் என்றும், எனவே நொதுமலர்க்கு வரைவுடன்படின் உயிர்வாழாள் என்றும் உள்ளுறுத்தவாறு.

இஃது, எளித்தல் ஏத்தல் என்ற அறத்தொடுநிலைப் பகுதிகளுள் உண்மைசெப்பலாம் என்பர் **இளம்பூரணர்[5].** "நாற்றமும் தோற்றமும்" என்ற சூத்திரத்து "அவன் வரைவு மறுப்பினும்[6]" என்றதற்கு இதனைக் காட்டுவர் **நச்சினார்க்கினியர்.** (ம)

1. அகம். 382. 2. ஷை. 179. 3. சீவக. 1930.
4. நற். 5. 5. தொல். பொ. 112. 6. ஷை. 207.

## 23. அம்மவாழிப்பத்து.

இதன்கண் வரும் பாட்டுக்கள் பத்தும் "அம்ம வாழி" என்று தொடங்கும் சிறப்பு நோக்கி, இஃது இப் பெயர்த்தாயிற்று.

221. அம்ம வாழி தோழி காதலர்
பாவை யன்னவென் னாய்கவின் றொலைய
நன்மா மேனி பசப்பச்
செல்வ லென்பதம் மலைகெழு நாட்டே.

இஃது, ஒருவழித் தணந்து வரைதற்கு வேண்டுவன முடித்து வருவல் என்று தலைமகன் கூறக் கேட்ட தலைமகள் அவன் சிறைப்புறத்தானாய்க் கேட்பத் தோழிக்குச் சொல்லியது.

ப. உரை: கூடிதின் வரைதல் பயன்.

**உரை:** தோழி, கேட்பாயாக: பாவை போலும் என் அழகு கெடவும், நல்ல மாமைநிறம் கொண்ட என் மேனி பசலை பாயவும், காதலர் தம் மலை பொருந்திய நாட்டிற்குச் செல்வேன் என்று கூறுகின்றனர்; ஆகலின் யாம் செயற் பாலது என் எ. று.

**அம்ம வாழி தோழி** யென்றது தலைவியது ஆற்றாமை தோன்ற நின்றது. **பாவை யன்ன என் ஆய்கவின்** என்பது மகளிர் உருநலம் பற்றி வழங்கும் வழக்கு.

தன் கவினையும் மேனியையும் விதந்தோதியது, அவற்றின் தொலைவு குறித்து வருந்துகின்றமையின், மாயாத என் ஆய்கவின் மாய்ந்து கெடவும், கெடாத என்

மேனி பசலை பாய்ந்து கெடவும் பிரியத்துணிந்தார் என்பாள், **பாவை யன்ன என் ஆய்கவின் தொலைய** என்றாள். பாவையின் இயல்பினைக் "கால் பொருது இடிப்பினும் கதமுறை கடுகினும், உருமுடன்று எறியினும் ஊறுபல தோன்றினும், பெருநிலம் கிளரினும் திருநல வுருவின், மாயா இயற்கைப் பாவை [1]" என்பதனால் அறிக. காதலர் தம்மால் அன்பு செய்யப்பட்டார் வருந்துவனவற்றைச் செய்யாராக, இவர் செய்யத் துணிந்தார் என்பாள், **காதலர்** என்று பன்மையிலும், **செல்வல் என்ப** என்று ஒருமையிலும், சென்ற விடத்துக் கவின் தொலைதலும் மேனி பசத்தலும் ஒரு தலையாகலின், யான் ஆற்றுகில்லேன் என்றும் கூறினாள்.

"இட்டுப் பிரிவிரங்கினும் [2]" என்பதற்கு இதனை எடுத்துக் காட்டுவர் **இளம்பூரணர்.** (௧)

222\. அம்ம வாழி தோழி நம்மூர்
நளிந்துவந் துறையு நறுந்தண் மார்பன்
இன்னினி வாரா மாறுகொல்
சின்னிரை யோதியென் னுதல்பசப் பதுவே

**இரண்டன்கண்ணும் வந்து ஒழுகும் தலைமகன் இடையிட்டு வந்து சிறைப்புறத்து நின்றவழி நின் நுதல் பசத்தற்குக் காரணம் என்னை என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.**

**உரை :** தோழி, கேட்பாயாக : நம்மூர்க்கண் செறிந்து வந்துறையும் நறிய குளிர்ந்த மார்பினையுடைய தலைமகன் இப்பொழுது வாராமையால், சிலவாய் நிரையுற்ற கூந்தலையுடைய என் நுதல் பசலை பாய்வதாயிற்று எ. று.

1\. நற். 201. 2. தொல். பொ. 109.

**நளிந்து,** செறிவுப் பொருளில் வரும் உரிச்சொல் அடியாகப் பிறந்த வினையெச்சம். "நளிந்து பலர் வழங்காச் செப்பம் துணியின்[1]" என்றும், "நளிந்தனை வருதல் உடன்றனளாகி[2]" என்றும் வழங்குவர்.

காலப்பெயர்; "இனியணி யென்னும் காலையும் இடனும்[3]" என்று **ஆசிரியர்** குறிப்பது காண்க. **இன்னினி** என்பது "தம்மியல் கிளப்பின் தம்முன் தாம் வரூஉம் எண்ணின் தொகுதி[4]" போல்வதோர் மரூஉமுடிபு. **இனி இனி** என்பது, "வல்லெழுத்து மிகினு மான மில்லை, ஒல்வழி யறிதல் வழக்கத் தான[5]" என்பதனுள், "வழக்கத்தான" என்றதனால் இகரம் கெடுத்து, "குறியதன் முன்னர்த் தன்னுருபு இரட்டல்[6]" என்றதனால் **இன்னினி** என முடித்துக் காட்டலும் ஒன்று. **மாறு,** ஏதுப் பொருள் படுவதோர் இடைச்சொல் என்பர்[7].

இருவகைக் குறிக்கண்ணும் வந்து கூடி இன்பம் துய்ப்பித்தானாகலின், **நளிந்து வந்து உறையும் நறுந்தண் மார்பன்** என்றும், இப்பெற்றியோன் இடையிட்டு வருதலோடு இதுபோழ்து போந்து சிறைப்புறத்தானாதலை அறிந்து அவற்குத் தன் ஆற்றாமை உணர்த்துவாள், **இன்னினி வாரா மாறு கொல்** என்றும் கூறினாள். **சின்னிரை யோதி** என்பதனை விளியாக்கினுமாம். **நுதல் பசப்பது** என்றது **பசலைபாய்தல்.** (உ)

*223.* *அம்ம வாழி தோழி நம்மலை*
*வரையா மிழியக் கோட னீடக்*
*காதலர்ப் பிரிந்தோர் கையற நலியும்*
*தண்பனி வடந்தை யற்சிரம்*
*முந்துவந் தனர்நங் காத லோரே.*

---

1. மலைபடு. 197. 2. பதிற். 52:16. 3. தொல். எழுத்து. 236. 4. ஷை. ஷை. 482. 5. ஷை. ஷை. 246. 6. ஷை. ஷை. 160. 7. புறம். 4. உரை.

இது, வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் குறித்த பருவத்திற்கு முன்னே வருகின்றமை அறிந்த தோழி தலைமகட்கு மகிழ்ந்து சொல்லியது.

உரை: தோழி, கேட்பாயாக: நம் மலைப்பக்கத்தே நீர் மிக்கு ஒழுக, செங்காந்தளின் நீண்ட இதழ்கள் மலரக் காதலரைப் பிரிந்த மகளிரும் ஆடவரும் செயலற்று வருந்தப் போந்து வருத்தும் மிக்க குளிர்ச்சியினையுடைய வாடைக்காற்று அலைக்கும் முன்பனிப்பருவம் வருதற்கு முன்பே நம் காதலர் வந்தனர்; ஆகலின், யாம் அவ்வாடையால் துன்பம் எய்துவே மல்லேம் எ. று.

ஆம், நீர். கோடல், செங்காந்தள். வடந்தை, வாடைக்காற்று; "வடந்தை தூக்கும் வருபனி யற்சிரம்[1]" என்று பிறரும் கூறுதல் காண்க. அற்சிரம், முன்பனி. இஃது அச்சிரம் எனவும் வழங்கும்; "அரிதின் தோன்றும் அச்சிரக் காலையும்[2]" எனவரும். அக்காலத்தில் காதலர்ப் பிரிந்த மகளிர் கையற்று வருந்துவர் என்பது, "அகன்றுறை மகளிர் அணிதுறந்து நடுங்க, அற்சிரம் வந்தன்று[2]" என்பதனுல் அறிக. வடந்தை அற்சிரம் செய்யும் வருத்தம் தலைமகட்கு எய்தாது என்பாள், **முந்து வந்தனர் நம் காதலோரே** என்றாள்.

இனி, "நாற்றமும் தோற்றமும்[3]" என்ற சூத்திரத்துப் "பாங்குற வந்த நாலெட்டு வகையும்" என்றவிடத்து "வகை"யாற் கொள்வன எனக்கொண்டு "இது வரைவிடைப் பிரிந்தோன் குறித்த பருவத்திற்கு முன் வருகின்றமை அறிந்த தோழி தலைவிக்குக் கூறியது" என்பர் **நச்சினார்க்கினியர்.** (௫)

---

1. அகம். 378. 2. சிலப். 14:105. 3. ஷை. 217.
3. தொல். பொ. 114.

224. அம்ம வாழி தோழி நம்மலை
மணிநிறங் கொண்ட மாமலை வெற்பின்
துணிநீ ரருவி நம்மோ டாடல்
எளிய மன்னு லவர்க்கினி
அரிய வாகுதன் மருண்டனென் யானே.

இஃது, இற்செறிப் புணர்ந்த தலைமகள் ஆற்றுளாய்த் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியது.

**உரை:** தோழி, கேட்பாயாக; நம்முடைய மலையாகிய நீலமணியின் நிறத்தையுடைய பக்கமலையின்கண் ஒழுகும் தெளிந்த நீரினையுடைய அருவியில் பண்டெல்லாம் நம்மோடு கூடி யாடுதல் அவர்க்கு எளிதாயிருந்தது; இப்பொழுது அஃது அரிதாகுதல் குறித்து யான் மறுகுகின்றேன் எ. று.

**இனி** என்றதற் கேற்பப் பண்டெல்லாம் என்பது வருவிக்கப்பட்டது. **துணிநீர்,** தெளிந்தநீர்; "துணிநீர் இலஞ்சி[1]" என்றாற் போல. அருவியாடுதல் எளிதாயிருந்தது ஒழிந்து அரிதாயிற்று என்பது பட நிற்றலின், **மன்** ஒழியிசை. "ஆர்கலி வெற்பன் மார்பு புணையாகக் கோடுயர் நெடுவரைக் கவாஅன் பகலே, பாடின் னருவி ஆடுதல் இனிதே[2]" எனப் பிறரும் அருவியாடல் விருப்ப முணர்த்தியவாறு அறிக.

அருவியாடல் முதலிய செயல்களால் தம் ஒழுக்கம் தமரால் உணரப்பட்டமையும், அதனால் அவர் இற்செறித்தமையும் குறிப்பா லுணர்த்துவாள், **இனி அரிய வாகுதல் மருண்டனேன் யானே** என்று கூறினாள். தலைமகன் சிறைப்புறத்தா னாகலின், **ஆடல் எளியமன்னால் அவர்க்கு** என்றாள். இது **முட்டுவயிற் கழறல்.** (௪)

1. அகம். 236. 2. குறுந். 353.

225. அம்ம வாழி தோழி பைஞ்சுனைப்
பாசடை நிவந்த பனிமலர்க் குவளை
உள்ளகங் கமழுங் கூந்தன் மெல்லியல்
ஏர்திக ழொண்ணுதல் பசத்தல்
ஓரார் கொல்லோ காத லோரே.

இது, மெலிவு கூறி வரைவுகடாவக் கேட்ட தலைமகன் தான் வரைதற்பொருட்டால் ஒருவழித் தணந்து நீட்டித் தானாக, ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி சொல்லியது.

உரை : தோழி, கேட்பாயாக : பசிய சுனைக்கண் பசுமையான இலைகளினிடையே உயர்ந்து விளங்கும் குளிர்ந்த மலராகிய குவளையின் மணம் உள்ளே கமழும் கூந்தலும் மெல்லிய இயலுமுடைய நினது அழகு திகழும் ஒள்ளிய நுதல் பசலை பாய்ந்து ஒளி கெடுதலை நம் காதலர் அறியார் கொல்லோ, நன்கு அறிவாராகலின் நீட்டியாது விரையவருவர், காண் எ, று.

மகளிர் கூந்தலினுள் மணம் எழும் என்றும், அது குவளைப் பூவின் மணம் போல்வதென்றும் கூறுவர். "குடவரைச் சுனைய மாயிதழ்க் குவளை, வண்டுபடு வாசப் போது கமழும் அஞ்சிலோதி[1]" எனவும், "குவளைக் குறுந்தாள் நாண்மலர் நாறும், நறுமென் கூந்தல்[2]" எனவும் சான்றோர் ஓதுமாறு காண்க. மெல்லியல், மேனி. கொல், அசைநிலை. ஓகாரம் எதிர்மறை.

தலைவன் வரைவு நீட்டித்தமை கண்டு ஆற்றாமையால் தலைவி கூந்தல் அவிழ்ந்து உடம்பு நனிசுருங்கி மெலிந்து காட்டினமை தோன்ற, குவளை உள்ளகம் கமழும் கூந்தல் மெல்லியல் என்றும், ஒளி திகழும் நுதல் பசந்தமைக்கு வருந்துவாளாய், ஏர்திகழ் ஒண்ணுதல் பசத்தல்

1. நற், 105. 2. குறுந். 270.

என்றும், நினது ஆற்ருமை மிக்க இந்நிலையினைத் தலைவர் அறியாரல்லர்; நன்கு அறிவர் என்பாள், **ஓரார்கொல்லோ** என்றும், அறிவராகலின் அவர் சிறிதும் தாழாது வருவர், அத்துணைப் பெருங்காத லுடையார் என்பாள், **காதலோர்** என்றும் தோழி கூறினள். **மெல்லியல்** என்றது **உடம்பு நனி சுருங்கல்.** ஒண்ணுதல் பசத்தல் என்றது **பசலை பாய்தல்.**

**ஓரார் கொன்னங் காதலோர்** என்ற பாடத்துக்கு அறியார் போலும், அறிவராயின் நீட்டியாது வருவர் காண் நம் காதலர் என வுரைக்க. அதனுல் தலைமகன் பால் தோழி அறியாமை காட்டி வழுப்படுமாறு அறிக. (௫)

*226. அம்ம வாழி தோழி நம்மலை*
*நறுந்தண் சிலம்பின் நாறுகுலைக் காந்தள்*
*கொங்குண் வண்டிற் பெயர்புபுற மாறிநின்*
*வன்புடை விறற்கவின் கொண்ட*
*அன்பி லாளன் வந்தன னினியே.*

**இது, வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் நீட்டித்து வந்துழித் தோழி தலைமகட்குச் சொல்லியது.**

**உரை:** தோழி, கேட்பாயாக: நம்முடைய மலையிடத்து நறிய குளிர்ந்த பக்க மலையில் மண நாறும் பூவின் குலைகளையுடைய காந்தளின் தேனை யுண்ணும் வண்டைப் போல் நம்மின் நீங்கி நின் வலிமையினையுடைய மிக்குற்ற அழகினைக் கவர்ந்து கொண்ட அன்பிலியாகிய தலைமகன் இப்பொழுது வந்தனன், காண்பாயாக எ. று.

**சிலம்பு,** மலை: ஈண்டு மலைச்சிலம்பு என்றதனல், ஒரு மலையை யடுத்துச் சேர இருக்கும் பக்கமலை யெனக் கொள்க. **காந்தள்,** மலைநிலத்துக்குச் சிறப்பாக உரிய

தாகலின், **சிலம்பின் நாறு குலைக்காந்தள்** என்றார். காந்தட்பூ குலைகுலையாக இருப்பது பற்றிக் **குலைக்காந்தள்** என்பது பெருவழக்கு. "சிலம்புடன் கமழும் அலங்கு குலைக் காந்தள்[1]" "காந்தள், கமழ்குலை யவிழ்ந்த நயவருஞ் சாரல்[2]" என வருவன காண்க. "பூவில் தேனை உண்டபின் வேறு பூத்தேர்ந்து நீங்குதல் வண்டின் இயல்பு.[3]" **விறற்கவின்** ஈண்டு மிகுதிப்பொருட்டு.

குலைகளாகிய பூவினையுடைய காந்தளின் தேனை உண்ட வண்டைப் போலத் தலைவனும் நாணம் சாயல் முதலிய பெண்மைக் குணங்களையுடைய தலைவியின் நலனை நுகர்ந்து, கொங்குண்டபின் அவ்வண்டு அக் காந்தளைப் பிரிந்து புறமாறுதல் போல் அவளைப் பிரிந்து நீட்டித்தான் என நிரனிறையாகக் கொள்க. **புறம் மாறுதல்,** இடம்பெயர்தல். **புறமாறி** என்றது தலைவன்பால் பரத்தைமைபட உரைத்தவாறு. தலைவன் பிரிந்தவிடத்துத் தலைவி தன் ஆற்றுமை ஏதுவாக உடம்பு மெலிந்து மேனிநலம் இழந்தாளாகலின், அதுபற்றி இரங்குவாள், **வன்புடை விறற்கவின்** என்றும், தலைமகன் அதனைக் கருதாது பிரிந்தும் நீட்டித்தும் வந்தமையின் அவனை **அன்பிலாளன்** என்றும் கூறினாள். "ஒன்றித் தோன்றும் தோழி மேன" என்றதனால், இது தோழி அறிவில் கூட்டத்து **முனிவு மெய்ந்நிறுத்தல்.** (சு)

**227.** *அம்ம வாழி தோழி நாளும்*
*நன்னுதல் பசப்பவு நறுந்தோண் ஞெகிழவும்*
*ஆற்றலம் யாமென மதிப்பக் கூறி*
*நப்பிரிந் துறைந்தோர் மன்றநீ*
*விட்டனை யோவவ ருற்ற சூளே.*

1. குறுந். 239. 2. நற். 313. 3. ஐங். 90.

இஃது, ஒருவழித் தணந்து வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

**உரை :** தோழி, கேட்பாயாக: நும்மைப் பிரிந்து தனித்துறைதல் யாம் ஆற்றேம் என நம் மனங்கொளச் சொல்லிப் பின்னர் நாடோறும் நம்முடைய நல்ல நுதல் பசப்பெய்தவும், நறிய தோள் மெலிவெய்தவும் நம்மைப் பிரிந்து நீட்டித்து வந்தோர் தெளிவாக அன்பிலராதலின், அவர் நம்மோடு உற்ற சூளினை நீ கொள்ளாதொழிந்தனையோ, கூறுக எ. று.

என்றது அச்சூள் கொள்ளற்பாலதன்று என்பதாம்.

பிரிவாற்றாமையால் உளவாகும் மெலிவினைப் புலப்படுத்தற்கண் நுதலும் தோளும் சிறந்து நிற்றலின் அவற்றை எடுத்தோதினர். "மென்றோள் நெகிழவும் திருநுதல் பசப்பவும், பொன்போல் விறற்கவின் தொலைத்த குன்ற நாடன்[1]" எனப் பிறரும் உரைத்தல் காண்க. **பசப்பவும் ஞெகிழவும்** என அடுக்கி நின்ற எச்ச வினைகள் **பிரிந்து** என்பதனோடு முடிந்தன. **மதிப்பக் கூறல்,** மனங்கொளச் சொல்லுதல். **ஆற்றலம் யாம்** என்றது, தலைமகன் கூற்றினைக் கொண்டெடுத்து மொழிந்தது. இனி, **ஆற்றலம் யாம்** என்ற இதனைத் தோழி கூற்றாக வைத்துத் தமது கூற்றினையே எடுத்தோதியதாகக் கொள்ளலும் ஒன்று; அப்பொருட்குத் தொக்கு நின்ற சிறப்பும்மையை விரித்துக்கொள்க.

தலைவன் பிரிந்தவிடத்துத் தலைமகள் வேறுபடுதல், "நன்னுதல் பசப்பவும் பெருந்தோள் நெகிழவும், உண்ணா வுயக்கமொடு உயிர்செலச் சாஅய், இன்னமாகவும் இங்குநத் துறந்தோர் அறவரல்லர்[2]" எனப் பிறரும் கூறுமாற்றா னறிக. தம்மாட்டு அன்பு செய்தார்க்குளவாகும் பசப்பும் மெலிவுங் கருதாது பிரிவோர் அறவ

1. ஐங். 230. 2. அகம். 85.

ரல்லர் என்பாள், குறிப்பால் **மன்ற** என்றும், அப்பெற்றி யோர் தெளித்த சூளினைத் தேறி யிருத்தலில் பயனின்று ஆகலின், **விட்டனையோ அவர் உற்ற சூளே** என்றும் கூறினாள். நீவிர் வருந்த யாம் பிரியேம், பிரியின் ஆற்றேம் என்று கூறிப் பின்னர்ப் பிரிந்து சென்றதே யன்றிப் பிரிவாற்றி உறைந்தோர் பொய்யர் ஆகலின், அவர் செய் யும் சூளுறவும் மெய்யெனக் கோடற்பாற்று அன்று என்றற்கு **மன்ற விட்டனையோ** என்றாள். (எ)

228. *அம்ம வாழி தோழி நம்மூர்*
*நிரந்திலங் கருவிய நெடுமலை நாடன்*
*இரந்து குறையுறாஅன் பெயரின்*
*என்னா வதுகொனம் மின்னுயிர் நிலையே.*

**ஈ, தலைமகன் வரைவு வேண்டி விடத் தமர் மறுத்துழி அவர் கேட்குமாற்றால் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி அறத்தொடுநின்றது.**

ப. உரை: நிரந்து இலங்கு அருவிய நெடுமலை நாடன் என்றது சேர்ந்தாருடன் இடையறாத நட்பையுடையான் எ. று.

**உரை:** தோழி, கேட்பாயாக: இடையறவு படாது ஒழுகும் அருவிகளையுடைய நெடிய மலைநாடன் நம்மூர்க் கண் வந்து நம் தமர்பால் வேண்டிய குறை பெறாது மீள்வானாயின், நம்முடைய இனிய உயிர் நிலைபெறுவது எவ்வாறாம் எ. று.

**நிரந்திலங்குதல்**, இடையறாது ஒழுகுதல். "நிரந்து இனிது சொல்லுதல் வல்லார்ப் பெறின்[1]" என்றாற் போல. அருவிக்கு இலங்குதல் நீர்ஒழுக்கம் என அறிக. "இலங்கு வெள்ளருவி[2]" எனவும், "வாளிலங் கருவி தாஅய்[3]" எனவும் வரும். **அருவிய**, பெயரெச்சக்குறிப்பு. **குறை**,

1. குறள். 648. 2. நற். 257. 3. அகம். 278.

இன்றி அமையாத காரியம். **உறுதல்,** ஈண்டுப் பெறுதல் என்னும் பொருட்டு.

நம் இனிய உயிர் நிற்றற்குக் காரணம் மலைநாடனது நட்பாகலின், அவன் நம்மைப் பெருது பெயரின் அவன் நட்பை யிழந்து நாம் உயிர் வாழ்தல் கூடாது என்பாள், **என்னுவதுகொல் நம் இன்னுயிர்நிலை** என்ருள். இவ்வாறு வருத்தம் மிக்கவழித் தலைவி, இன்னும் வாராராயின், "என்னும் தோழி நம் இன்னுயிர் நிலையே[1]" என்பது உண்மையின், ஈண்டுத் தோழி கூறினுள்.

உடம்பின்கண் உயிர் வேற்றுமையின்றி அதன்வழி நின்று அதனுல் வரும் துன்பங்களை நுகர்ந்தவிடத்தும் வெருது உடனிருந்து இன்ப நல்கும் பண்பு நோக்கி **இன்னுயிர்** என்ருள். "துன்பம் உழத்தொறும் காதற்று உயிர்[2]" என்று சான்ருேரும் கூறுதல் காண்க.

**நிரந்து** என்பதற்கு மேவி என்ற பொருள் கொள்ளின், நம்மூர்க்கண் மேவி விளங்கும் அருவிகளையுடைய நெடு மலை நாடன் என்பது பொருளாம். ஆகவே, நின்மேல் வைத்த தண்ணளியால் இவ்வூர்க்கட் போந்து ஒழுகிய தலைமகன் என அவனைக் குறிப்பாற் சிறப்பித்தாளாம். நிரந்து, மேவியென்னும் பொருட்டாதல், "விரைந்து தொழில்கேட்கு ஞாலம் நிரந்தினிது சொல்லுதல் வல்லார்ப் பெறின்[3]" என்பதற்கு ஆசிரியர் **மணக்குடவர்** கூறிய உரையான் அறிக. (அ)

*229.* *அம்ம வாழி தோழி நாமழப்*
*பன்னுள் பிரிந்த வறனி லாளன்*
*வந்தன னேமற் றிரவிற்*
*பொன்போல்* **விறற்கவின் கோள்ளுநின் னுதலே**

1. குறுந். 319. 2. குறள். 940. 3. குறள். 648.

**இது, வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் மீண்டான் என்பது கேட்டுத் தலைமகட்கு எய்திய கவினைத் தோழி தான் அறியாதாள் போன்று அவளை வினாயது.**

**உரை:** தோழி, இதனைக் கேட்பாயாக: நாம் புலம்பி அழ அதனை நினையாது பன்னாட்காறும் பிரிந்துறைந்த அறனில்லா னாகிய தலைமகன் வந்தான்கொல்லோ, நின் நுதல் இராக்காலத்தே பொன்போலச் செறிந்த அழகினைக் கொள்ளுவ தாயிற் றாகலான் எ. று.

**அறனிலாளன்,** அறனின்மையை ஆள்பவன்; அற வோர்பாற் காணப்படும் செந்தண்மைக் குரிய சொல்லும் செயலும் இல்லாரை அறனிலாளர் என்ப. களவின்கண் "திருநுதற் குறுமகள்" ஒ ரு த் தி யி ன் "அணிநலம் வௌவிய" ஒருவன், பின்பு, அவளைக் கைவிட்டு யான் அறியேன் என்று சூள்செய்து கெட்டானாக, அவனைச் சான்றோர், "அறனிலாளன்[1]" என்று வெறுத்துக் கூறியது காண்க. அகப்பொருள் நெறிக்கண், ஒரோவழிச் செவிலி யும் தோழியும் தலைமகளும் தலைவனை அறனிலாளன் எனப் பழித்தல் உண்டு. உடன்போக்கின்கண், தலைமகளை வளர்த் தெடுத்த தன்னை அறியாது தலைமகன் கொண்டு சென்றது அறனின்மை என்பது பற்றி, "அறனிலாளனொடு இறந்தனள் [2]" என்றும், "அறனிலாளன் தோண்ட [3]" என்றும் செவிலி கூறுவள். களவினால் தன்னை இன்றி அமையாளாகிய தலைவி வருந்தப் பிரிந்தமை குறித்து "அறனிலாளர் கண்ட பொழுதின் [4]" என்றும், "அறனி லாளன் புகழ [5]" என்றும் கூறுப. ஒகாரம் எதிர்மறை.

தன்னைக் காதலித்தார் புலம்புற்று வருந்தப் பிரிதலும், பிரிந்து நீட்டித்தலும் காதலர்க்கு அறமாகா வாகலின், அவற்றைச் செய்தமை குறித்துத் தலைமகனை **அறனிலாளன்**

---

1. அகம். 256  2. ஷை. 219.  3. ஷை. 207.
4. ஐங். 118.  5. நற். 275.

என்றாள். "வருதும் என்ற நாளும் பொய்த்தன, வரியே ருண்கண் நீரும் நில்லா, தண்கார்க் கீன்ற பைங்கொடி முல்லை, வைவாய் வான்முகை யவிழ்ந்த கோதை, பெய் வனப் பிழந்த கதுப்பு முள்ளார், அருள்கண் மாறலோ மாறுக வந்தில், அறனஞ் சலரே யாயிழை நமரெனச், சிறிய சொல்லிப் பெரிய புலம்பினும்[1]" என்றார் பிறரும். புணர்ந்த மகளிர்பால் மெய்ப்பட்டுத் தோன்றும் நுதற் கவின் தலைமகள்பால் நிகழக் கண்டமையான், **வந்தனனோ** என்று வினவினாள்.

இன்றியமையாமையேமாகிய நாம் ஆற்றாது அழஅழப் பிரிந்து சென்றதேயன்றி ஆங்கே நீட்டித்துத் தங்கினமை தலைமகற்கு அறமாகாது என்பாள், **நாமழப் பன்னாள் பிரிந்த அறனிலாளன்** என்றும், நின் நுதல் கொள்ளும் கவின் தலைமகன் வரவைத் தெரிவித்தலின், வந்தனன் என்பது அறிவேனாயினும், நின்னிற் பிரியாது உறையும் யான் அறியாதொழிந்தமையான் இரவுப் போதில் வந்திருத்தல் வேண்டுமெனக் கருதுகின்றேன் என்பாள், **வந்தனனோ மற்று இரவின்** என்றும் தோழி கூறினாள். ஈண்டுத் தலைமகன் அருள் கண்மாறி அறனி லனாயினான் எனத் தோழி கூறல் வழுவாயினும், "மங்கல மொழியும் வைஇய மொழியும், மாறி லாண்மையிற் சொல்லிய மொழியும், கூறியன் மருங்கிற் கொள்ளு மென்ப[2]" என்பதனால் அமைந்தது. (க)

230\. *அம்ம வாழி தோழி நம்மொடு*
*சிறுதினைக் காவல னாகிப் பெரிதுநின்*
*மென்றோ ணெகிழவுந் திருநுதல் பசப்பவும்*
*பொன்போல் விறற்கவின் றொலைத்த*
*குன்ற நாடற் கயவர்நன் மணனே.*

1\. அம்க. 144. 2. தொல். பொ. 244.

**இது, தலைமகன் வரைவு வேண்டித் தமரை விடுத்துழி மறுப்பர்கொல்லோ என்று அச்ச முறுகின்ற தலைவிக்குத் தோழி சொல்லியது.**

**உரை:** தோழி, கேட்பாயாக: பண்டு நாம் தினைக் காவற்குச் சென்றவிடத்தும் நம்மோடு கூடிச் சிறிய தினையைக் காவல் செய்வானாகிக் கூட்டம் பெற்றும், பின் வரைதற் பொருட்டு நின் மெல்லிய தோள் மெலிந்து வளை நெகிழவும், அழகிய நுதல் பசப்பெய்தவும் பிரிந்து சென்று, அதனாற் பொன்போற் செறிந்த அழகினைத் தொலைத் தழித்த குன்றினையுடைய நாடற்கு நமர் நல்ல மணத்தைச் செய்வ ராகலின், நீ நம் தமர் மறுப்பர்கொல்லோ என்று அஞ்சுதல் ஒழிக எ. று.

**மென்றோள் நெகிழவும்** என்புழி இடத்து ... பொருளின் தொழில் இடத்தின்மே னின்றது. 'மறையோர் தேஎத்து மன்ற லெட்டனுள்,' "இன்பமும் பொருளும் அறனு மென்றாங்கு, அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கிற் காமக் கூட்டம்" எனச் சிறப்பிக்கப்பெறும் களவுவழிப் பிறந்து, "கரணமொடு புணரக், கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக், கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வ" தாகலின், **நன்மணன்** என்றார். இல்லிருந்து நல்லறம் புரிந்து "சிறந்தது பயிற்றல்" சிறப்பிற் றாதலின், **நன்மணன்** என்று ரெனினுமாம்.

இயற்கைப் புணர்ச்சி பெற்ற தலைமகன் தோழியை மதியுடம்படுப்பான் ஊரும் பேரும் கெடுதியும் வினாய் வந்த போது அன்றித் தோழி அவனை அறியாளாகலின், அறிந்தகாலத்தை நினைவுறுத்துவாள் போன்று, **சிறுதினைக் காவலனாகி** என்றும், பின்னர் அவன் அவளால் வரைவு முடுக்கப்பட்டுப் பிரிந்தவழித் தலைவி ஆற்றா ளாயினமை யால் **மென்றோள் நெகிழவும் திருநுதல் பசப்பவும்** என்றும்,

வரைவு இடை வைத்துப் பிரிந்தோன் குறித்த பொழுதின் கண் வாராது நீட்டித்தலால் தலைவி உடம்பு சுருங்கி. மேனி வேறுபட்டுக் காட்டினமையின், **பொன்போல் விறற்கவின் தொலைத்த குன்ற நாடன்** என்றும் கூறினாள்; இதனாற் பயன், தலைவி தமரால் மணன் அயர்தற் குரியவன், தன்னைக் களவிற் கூடி மகிழ்வித்தும், ஒருவழித் தணந்து உளம் நெகிழ்வித்தும் ஒழுகின குன்றநாடனே என்று தேறி அச்சம் நீங்குவள் என்பதாம்.

இதன்கண் **சிறுதினைக் காவலனாகி** என்றது **தோழியிற் புணர்வு. மென்றோள் நெகிழவுந் திருநுதல் பசப்பவும், பொன்போல் விறற்கவின் தொலைத்த குன்றநாடன்** என்றது **வரைவிடை வைத்த பிரிவு.** இதனை, "வெளிப்படை தானே கற்பினோ டொப்பினும், ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக, வரையாது பிரிதல் கிழவோற் கில்லை[1]" என்ற சூத்திரத்துள், "மூன்றுமென முற்றும்மை கொடாது கூறினமையின் ஏனைப் பிரிவுகளின் வரையாது பிரியப் பெறும்" என்று கொண்டு, "அவை வரைதற்குப் பொருள் வயிற் பிரிதலும், வேந்தற் குற்றுழிப் பிரிதலும், காவற்குப் பிரிதலு மென மூன்றுமாம்" என்றும் கூறி அடக்குக.

"நாற்றமும் தோற்றமும்[2]" என்ற சூத்திரத்து, "ஆங்கதன் தன்மையின் வன்புறை" என்பதற்கு இதனை மேற்கோளாக்குவர் **இளம்பூரணர்.** (ம)

---

1. தொல். பொ. 141. 2. ஷை. ஷை. 112.

## 24. தெய்யோப்பத்து.

இஃது ஒவ்வொரு பாட்டிலும் ஈற்றில் **தெய்யோ** என்னும் இடைச்சொல் வரத் தொடுத்த பகுதியாகலின், இப்பெயர்த்தாயிற்று.

தெய்ய என்னும் இடைச்சொல் தொல்காப்பியத்துட் காணப்படா தாயினும், பின்வந்த தொகைநூல்களிற் காணப்படுவதுபற்றித் **தொல்காப்பிய** வுரைகாரர்களால், "கிளந்த வல்ல வேறுபிற தோன்றினுங் கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே[1]" என்ற விதியின் கீழ்க் காட்டப்படுகின்றது. "உதுக்காண் தெய்ய உள்ளல் வேண்டும்[2]" "தங்கினி ராயின் தவறோ தெய்ய[3]" "ஒன்றொடி ஞெமுக்கா தீமோ தெய்ய[4]" "அம்பல் வாய்ந்த தெய்ய[5]" "பண்டும் இற்றே கண்டிசின் தெய்ய[6]" "தங்கின் எவனோ தெய்ய[7]" எனத் தொகைநூல்களில் வருவது காண்க. இத் **தெய்ய** என்பது சிறுபான்மை **தெய்யோ** என இப்பத்தின்கண் வரும் பாட்டுத்தோறும் வருகிறது; வேறு தொகைநூல்களில் இவ்வாறு வாராமை குறித்து, இப்பத்துத் **தெய்யோப்பத்து** எனப்பட்டது போலும்.

*231. யாங்குவல் லுநையோ வோங்கல் வெற்ப*
*இரும்பல் கூந்தற் றிருந்திழை யரிவை*
*திதலை மாமை தேயப்*
*பசலை பாயப் பிரிவே தெய்யோ.*

இஃது ஒருவழித் தணந்து வந்த தலைமகற்குத் தோழி கூ...

1. தொல். சொல், 298. 2. குறுந். 81. 3. ௸ 345.
4. அகம். 60. 5. 100. 6. நற். 35.
7. ௸. 67.

**உரை :** உயர்ந்த மலையையுடையாய், கரிய பலவாகிய கூந்தலையும் திருந்திய இழைகளையு முடைய அரிவை, யாவாள் தேமலோடு கூடிய மாமைநிறம் தேய, அவ்விடத்துப் பசலை இடையீடின்றிப் பரவப் பிரிதல் எவ்வாறு வல்லையாயினையோ? கூறுக எ. று.

மகளிரின் கரிதாய்த் திரண்ட கூந்தலை **இரும்பல் கூந்தல்** என்பது வழக்கு; "இரும்பல் கூந்தல் கொடிச்சி[1]" என இந்நூலுள்ளும், "இரும்பல் கூந்தற் சேயிழை மடந்தை[2]" எனப் பிறநூலுள்ளும் வருதல் காண்க. இதுவே, "இரும்பல் ஒலிவருங் கூந்தல்[3]" என்றும், "பல்லிருங் கூந்தல்[4]" என்றும் வழங்கும். **திதலை** தேமல்; இது மகளிர் மார்பு வயிறு அல்குல் ஆகிய இடங்களிற் படர்வது. "திதலை மென்முலை[5]" எனவும், "திதலை யவ்வயிறு[6]" எனவும், "திதலை யல்குல்[7]" எனவும் சான்றோர் குறிப்பர். **மாமை,** மாந்தளிர் நிறத்தின் தன்மை; நோயின் றியன்ற இளமகளிர் மாமைநிறமும் திதலையும் கொண்டிருப்பர்; "நோயின் றியன்ற யாக்கையர் மாவின், அவிர்தளிர் புரையும் மேனியர் அவிர்தொறும் பொன்னுரை கடுக்கும் திதலையர்[8]" என்பதனுல் திதலையும் மாமையும் சேர்ந்து இலகும் சிறப்பு விளங்கும். பசலை தோன்ற மாமை கெடுவது, "பசலை யுணீஇயர் வேண்டும் திதலை யல்குலென் மாமைக்கவினே[9]" என்பதனுலும் அறியப்படும். **தெய்யோ** என்பது, "தம்மீறு திரிதலும்[1]" என்பதனுல் திரிந்து வந்த தெய்ய என்னும் இடைச்சொல்; அசை நிலை.

விளக்கற்றம் பார்க்கும் இருள்போலத் தலைவன் பிரிவற்றம் பார்த்துப் பசலை பாய்தலின் **பசலை பாயப் பிரிவு** என்றும், ஒளிமுன் நின்ற பொருள் அது நீங்கியவழித் தன் பொலிவழிதல் போலத் தலைவன் பிரிந்த விடத்துத் தலைவி

1. ஐங். 281.　2. அகம். 373.　3. நற். 6.
4. குறுந். 19.　5. நற். 380.　6. அகம். 86.
7. அகம். 119.　8. முருகு. 143-5.　9. குறுந். 27.
1. தொல். சொல். இளம். 246.

யின் மாமையொளி தேய்தல் பற்றித் **திதலை மாமை தேய** என்றும் கூறினள். **தேய்தல்,** "அல்லவை தேய அறம் பெருகும்[1]" என்புழிப் போலத் தன் பகையாய பசலை பாய்தலின் தனக்கு நிலையின்றி மெலிதல் என்க. ஒத்த அன்புடையார் இருவருள் ஒருவர் பிரிந்தவழி மற்றவர் ஆற்றாராய் வருந்த, அப்பிரிந்தவர் தாமும் ஆற்றாராய் மீளுதலன்றி மேலும் பிரிந்து சேறல் செய்யாராக, நீ அதனைச் செய்தமையானும், பண்டெல்லாம், இது செய்யாமை தோன்ற ஒழுகினமையானும், இச் செயற்கு வேண்டும் வன்மை நீ பிறிதோரிடத்துப் பிறிதோராற்றாற் பெற்றாயாதல் வேண்டுமென்பாள், **யாங்கு வல்லுநையோ** என்றாள். இது பொருட் பயம்பட வந்த அறக்கழிவுடைய வழக்கு. "ஈங்குவனை நெகிழப் பிரிதல், யாங்கு வல்லுநையோ ஈங்கிவட் டுறந்தே[2]" எனப் பிறாண்டும் வருதல் காண்க. **திதலை மாமை தேய** என்றது **உடம்பு நனி சுருங்கல். பசலை பாய** என்றது **பசலை பாய்தல்.** பிரிவு, **யாங்கு வல்லுநையோ** என்றது **அழிவில் கூட்டத்து அவன் பிரிவாற்றாமை.** (௧)

232\. போதார் கூந்த லியலணி யழுங்க
ஏதி லாளனை நீபிரிந் ததற்கே
அழலவிர் மணிப்பூ ணனையப்
பெயலா னாவென் கண்ணே தெய்யோ.

இஃது ஒருவழித் தணந்து வந்த தலைமகன், "நான் பிரிந்த நாட்கண் நீவிர் என்செய்தீர்" எனக் கேட்கத் தோழி கூறியது.

**உரை :** பூக்கள் நிறைந்த கூந்தலையுடைய என் தோழியின் இயலும் அணியும் வருந்த ஏதிலாளனாகிய நீ பிரிந்ததன் பொருட்டு, என் கண்கள், அழல் போல் விளங்கும் மணி பதித்த மார்பின் அணிகள் நனையுமாறு நீர் உகுத்தலை அமையாவாயின எ-று.

1\. குறள். 96. 2. ஐங். 235.

**போதார் கூந்தல்** என்றது தலைமகளை. **இயலணி,** உம்மைத்தொகை. அன்பிலனாய்ப் பிரிந்தான் எனத் தலைவனை **ஏதிலாளன்** என்றது, அவன்வயிற் பரத்தைமையும் தன்வயின் உரிமையும் தோன்றுதற்கு. "ஏதிலாளர் இவண் வரின், போதிற் பொம்மல் லோதியும் புனையல், எம்மும் தொடாஅல் என்குவ மன்னே[1]"என்று பிறண்டுத் தலைவி கூறுதல் காண்க. ஐ, சாரியை. சிவந்த மணிகள் இழைத்த பூண்களாதலின், அவற்றின் ஒளியை விதந்து **அழலவிர் மணிப்பூண்** என்றார்; "அழலவிர் வயங்கிழை[2]" என்றார் பிறரும். அழுங்க, நனையப் பெயலாறு என இயைத்தலும் ஒன்று.

தலைமகள் இயலும் அணியும் இழந்து வருந்த, அது கண்டு ஆற்றாத யான் கண்ணீர் சொரிய, நீ அன்பில்லாது அகன்றனை என்பாள் **ஏதிலாளனை நீ பிரிந்ததற்கே** என்றாள். **இயல் அழுங்குதலாவது,** "புறஞ்செயச் சிதைத்தல், புலம்பித் தோன்றல், கலங்கி மொழிதல், கையற வுரைத்தல்[3]" முதலியனவும், கண்டுயில் மறுத்தலும், கனவொடு மயங்கலும் பிறவும் செய்தொழுகுதல். **அணி யழுங்குதலாவது** பூவும் சாந்தும் பூணும் துகிலும் வெறுத்தலும், தொடியும் வளையும் நெகிழ நிற்றலும் பிறவும் செய்தொழுகுதல். என்றது தலைவியை ...னக் கருதுவாருமுளர்.

**ஏதி லாட்டியை நீ பிரிந்த...** என்ற பாடத்துக்கு, காதலி யெனக் கருதாது ஏதிலாட்டியாகக் கருதி நீ பிரிந்ததன்பொருட்டு என்று உரைக்க. (௨)

*233. வருவை யல்லை வாடைநனி கொடிதே*
*அருவரை மருங்கி னாய்மணி வரன்றி*
*ஒல்லென விழிதரு மருவியின்*
*கல்லுடை நாட்டுச் செல்லல் தெய்யோ.*

1. ...191. 2. கலி. 137. 3. தொல். பொ. 266.

இஃது ஒருவழித் தணந்து வரைய வேண்டும் என்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.

ப. உரை: ஆய்மணி வரன்றி ஒல்லென இழிதரும் அருவி நின் கல்லுடை நாட்டு என்றது செல்லின் வரைதற்கு வேண்டு வன கொண்டு வருவாயாக என்று உணர்த்தியவாறு.

**உரை:** அரிய மலைப்பக்கத்தே நுண்ணிய மணிகளைக் கவர்ந்து கொண்டு, ஒல்லென்னும் ஓசையிட்டு இழியும் அருவிகளையுடைய நின் மலைநாட்டிற்குச் செல்லுதல் ஒழிக; சென்றவழி நீ விரைந்து வருவாயல்லை; அதனால் முன்பனிப் பருவத்தைச் செய்யும் வாடைக் காற்றுப் போந்து தனித்தாரைப் பனிப்பித்து வருத்துமாகலான் எ. று,

**அருவரை,** உயரிய மலை; **வருவையல்லை** யென்பது, விரைய வரைகுவல் எனத் தலைவன் [illegible] எடுத்து மறுத்துரைக்குமாறு தோன்ற நின்[illegible]. **ஆய்மணி,** [illegible] மணிவகை. "ஆய்மணி [illegible][1]" [illegible]. மணிகள் கல்லிடைப் பிறப்பனவாகலின் **கல்லுடை நாடு** என்றார். "கற்பா [illegible] மணி[2]" என்று **தேவரும்** கூறுவர்.

"வருவை யல்லை" என்றவள் நின் வாராமையே யன்றி, முன்பனிப்பருவம் எய்தித் தனித்தாரை வருத்து மாக அவ்வருத்தத்தை [illegible]ள் ஆற்ருள் என்பாள், **வாடை நனிகொடிதே** என்றும், எனவே இந்நிலையில் நீ பிரிதல் ஆகாது என்பாள் **செல்லல்** என்றும் தோழி கூறினள்.

**கல்லுடை நாட்டுச் செல்லல்** என மறுக்கும் தோழி, **ஆய்மணி வரன்றி ஒல்லென இழிதரும் அருவி** என்றது, இதனின் மேலும் தலைமகன் பிரிவானேல், அவனை நீ செல்லின் வரைதற்கு வேண்டுவன கொண்டு வருவாயாக என்றற்கு. **பழைய வுரைகாரர்க்கும்** இது கருத்தாதல் அறிக. (௬)

1. நற். 239. 2. சீவக. 4.

234. மின்னவிர் வயங்கிழை ஞெகிழச் சாஅய்
நன்னுதல் பசத்த லாவது துன்னிக்
கனவிற் காணு மிவளே
நனவிற் காணுணின் மார்பே தெய்யோ.

இஃது, இடைவிடாது வந்து ஒழுகாநின்றே களவு நீடாமல் வரைதற்கு முயல்கின்ற தலைமகன், தலைமகள் வேறுபாடு கண்டு இதற்குக் காரணம் என் னென்று வினவிய வழி, நின்னைக் கனவிற் கண்டு விழித்துக் காணளாய் வந்தது எனத் தோழி சொல்லி வரைவு முடுக்கியது.

**உரை:** மின்போல் ஒளியிட்டு விளங்கும் இழைகள் நெகிழுமாறு மெலிந்து நல்ல நுதலும் பசந்து காட்டு தற்குக் காரணமாவது, கனவின்கண் நின் மார்பினை நெருங்கி முயங்கிக் கண்டவள் துயிலுணர்ந்து நனவில் அது காணு ளாயினமையே எ.று.

நாளும் தலைப்பெய்து ஒழுகுமிடத்துத் தலைவிபால் மெலிவு தோன்றி மெய்ப்பட்டமை கண்டு இதற்குக் காரணம் என்னை எனத் தலைமகன் வினவினு னுகலின், **வயங்கிழை ஞெகிழச் சாஅய் நன்னுதல்** பசந்தாள் என்றும், அதற்குக் காரணம், **நனவிற் காணுள் நின் மார்பு** என்றும் கூறினுள். **பசத்தல்,** ஈண்டுக் காரணத்தின் மேற்று.

கனவிற் கண்டது நனவின் எய்துதல், தேவர்க் காயினும் இசைதல் செல்லா தெனினும், அதனை அறியாத இவள் நனவிற் காணுமையே காரணமாக உடல் மெலிந்து நுதல் பசந்து வேறுபட்டாள் என்பதாம். **வயங் கிழை நெகிழச் சாஅய்** என்றது உடம்பு நனிசுருங்கல். **நன்னுதல் பசத்த லாவது** என்றது பசலை பாய்தல். **கனவிற் காணும் இவளே** என்றது கனவொடு மயங்கல்.

**நனவிற் காணாள்** என்றது **கண்துயில் மறுத்தல்.** நெகிழ்ந்து நீங்கும் இழைகள் பொருட்டும், பசந்து ஒளிமழுங்கும் நுதலின் பொருட்டும் இரங்குவாள், **மின்னவிர் வயங்கிழை** என்றும், **நன்னுதல்** என்றும் கூறினாள். "கேட்டிசின் வாழி தோழி யல்கற், பொய்வ லாளன் மெய்யுற மரீஇ, வாய்த்தகைப் பொய்க்கனா மருட்டற்றெழுந்து அமளி தைவந் தனனே [1]" எனத் தலைமகள் கனவொடு மயங்கி நனவின் அரற்றியவாறு காண்க.

வேறுபாட்டுக்குத் தோழி காரணம் கூறவே, நனவினும் பிரிவின்றிக் கூட்டம் பெறுமாறு வரைவாயாக என்றுரை ளாதலும் பெறப்பட்டது. (௪)

**235.** *கையற வீழ்ந்த மையில் வானமொடு*
*அரிதே காதலர்ப் பொழுதே யதனால்*
*தெரியிழை தெளிர்ப்ப முயங்கிப்*
*பிரியல மென்கமோ வெழுகமோ* தெய்யோ.

**ஐந்து உடன்போக்கு பின்பு மகன் உடன்கொண்டு போவான் (இ)டையாமத்து வந்துழித் தலைமகட்குத் தோழி சொல்லியது.**

**உரை :** ஒரு பக்கத்தே முற்றவும் சென்று ஒடுங்கின மையால், முகிலினமே யில்லாத வானமும், காதலரைக் கூடும் பொழுதும் பெறல் அரிதாகலின், இவை எய்தப் பெற்ற இப்பொழுதின்கண் ஆய்ந்த இழைகள் ஒலிக்கக் காதலரை முயங்கி, இனி யாம் நின்னைப் பிரியேம் என்று கூறுவேமோ, அது பற்றி உடன்போதற்கு எழுவேமோ, கூறுக எ. று.

**கை,** பக்கம். **அற வீழ்தல்,** முற்றவும் திரண்டு சென்று ஒடுங்குதல். **மை,** முகில்; "மையற விளங்கிய மணிநிற விசும்பில் [2]" என்று பிறரும் கூறுப. எஞ்ஞான்றும் இயங்கா

1. குறுந். 30. 2. நற். 231.

நிற்கும் காற்றின் வழிப்படுவதனுல், வானம் முகிலின்றிக் காணப்படுவது அருமையாகலின் **அரிது** என்ருர். **காதலர்ப் பொழுது,** காதலரைக் கூடற்கு வாய்க்கும் பொழுது. **அரிது காதலர்ப் பொழுது** என்றது அப்பொழுது வாய்த்துழித் தாழாது பயன்கோடல் அறிவுடைமை என்றவாறு.

வானம் முகிலின மின்றி யிருத்தலும், களவின்கண் புறத்தார்க்குப் புலனுகி அலராதற்கு அஞ்சித் தலைமகன் பிரிந்து ஒழுகுவதால் இடையீடின்றிய கூட்டமும் ஒரோருகா லன்றி அரிதாகலின், **வானமொடு அரிதே காதலர்ப் பொழுதே** என்ருள். உடன்போக்குத் துணிந்தார்க்கு மையுறைவானம் ஆகாமையின், **மையில் வான மொடு** என்ருள். தலைமகள் தான் உடன்கொண்டு போவான் வந்தானெடு செல்லின் இடையருக் கூட்டம் பெற்று மகிழலாம் என்றும், ஈண்டை இருப்பின் பிரியாத காலமும் முயக்கமும் பெறல் அரி தென்றும் கூறுவாள், **பிரியலம் என்கமோ** என்றும், பிரியலம் என்றவழி, தலைமகன் உடன் போக்குத் துணியின், தாமும் அதற்கு உடம்பட வேண்டுதலின் **எழுகமோ** என்றும் கூறினுள். மையில் வானமும், காதலர்ப் பொழுதும் பெறல் அரிது எனக் கூறித் தலைமகளைப் போக் குடன்படுத்துதலான், இது "தலைவரு விழுமநிலை யெடுத்து[1]" உரைத்தல். (௫)

*236. அன்னையு மறிந்தன ளலரு மாயின்று*
*நன்மனை நெடுநகர் புலம்புகொள வுறுதரும்*
*இன்னு வாடையு மலையும்*
*நும்மூர்ச் செல்க மெழுகமோ தெய்யோ.*

**இது களவொழுக்கம் வெளிப்பட்டமையும் தம் மேலியும் உணர்த்தித் தோழி உடன்போக்கு நயந்தாள் போன்று வரைவு கடாயது.**

1. நற். 231.

**உரை :** நாம் கொண்டுள்ள களவொழுக்கத்தினை அன்னையும் அறிந்தனள் ; அயலாரும் அறிந்து அலர் தூற்று வாராயினர் ; நல்ல மனைக்கண் நின்ற நெடிய இல்லின்கண் தனித்து வருந்தப் போதரும் கொடிய வாடைக் காற்றும் அலைப்பதாயிற்று ; அதனால் யாம் இவற்றை எய்தாவகை நும் மூர்க்குச் செல்வேமாய் எழுவேமோ, கூறுக எ. று.

காப்பு மிகுதியும் அலரும் காட்டி, இனி வரைவல்லது வேறு செய்தி யில்லை யென்பது படத் தலைவற்கு உரைக்க லுறுகின்றமையின், **அன்னை யறிவும் அலரும்** எடுத்தோதப் பட்டன. ஊர் நடுவே காப்பமைந்த இடத்தே அமைந்த பேரில்லம் என்பது பற்றி, **நன்மனை நெடுநகர்** என்றார் ; " நன்மனை நெடுநகர்க் காவல ரறியாமை [1]" எனப் பிறரும் குறிப்பது காண்க. **உறுதரல்,** மெய்யைத் தீண்டுதல் ; " வேந்தன்கண் ஊறெய்தி உள்ளப்படும் [2]" என்றாற் போல. தனித்து உறையும் மகளிர்க்கு வெம்மை தருதலின் **இன்னா வாடை** என்றார். உடன்போக்குக்கு ஒவ்வாத நிலையில் அதனை ஒருப்படுமாறு தோன்றக் கூறியது நகை யாடிக் கூறுவது என்க.

அன்னை யறிவும் அலரும் இற்செறிப்பிற்குக் காரண மாதலாற் பின்னை யாம் நின்னைக் கூடல் அரிதாம் ; கூட்டம் இன்றித் தனித்து உறையின், வாடைக் காற்றுப் போந்து ஆற்றொணாத் துன்பம் பயக்கும். இங்கு, இற்செறிப்பும் வாடையின் பனிப்பும் பெற்றுக் கூட்ட மின்றி வருந்து தலினும் நின்னொடு கூடிக் கடத்தற்கரிய சுரம் பல கடந் தேனும் நும்மூர்க் கேகுதல் நன்று என்பாள், '**நும்மூர்ச் செல்கம் எழுகமோ** என்றாள். ஆகவே, போக்கொருப் படுப்பாள் போன்று கூறினும், அன்னை யறிவும், அயலவர் அலர் கூறலும், **நெடுநகர் புலம்புகொள** என்று தனிமை கூறுமுகத்தால் மேனி மெலிவும் கூறினமையால், வரைவு

1. அகம். 22. 2. குறள். 665.

கடாவுவதே கருத்தென அறிக. இவை, "பொழுதும் ஆறும் [1]" என்ற சூத்திரத்துப் "புரைபட வந்த அன்னவை பிறவும், வரைதல் வேட்கைப் பொருள என்ப" என்ற துறைற் கொள்ளப்படும். **அன்னையும் அறிந்தனள் அலரும் ஆயின்று** என்றது முட்டுவயிற் கழறல். **நன்மனை நெடுநகர் புலம்**புகொள இருத்தல் **அவன் புணர்வு மறுத்தல்;** என்னை, தமரையும் அலரையு மஞ்சி, வரைவுகடாதற் கருத்தால், அவன் புணர்ச்சியை விலக்கி எழுந்த உள்ளத்தளா யிருக்கின்று ளாகலின். **இன்னு வாடையும் அலையும்** என்றது **துன்பத்துப் புலம்மல்.** இவை தோழி குறிப்பாயினும், "ஒன்றித் தோன்றும் தோழி மேன [2]" என்னும் இலக்கணத்தால் தலைமகள் குறிப்பெனவே கொள்க.

"நாற்றமும் தோற்றமும் [3]" என்ற சூத்திரத்து "எண்ணரும் பன்னகை கண்ணிய வகையினும்" நிகழும் கூற்றுக்கு இதனை மேற்கோளாகக் காட்டுவர் **இளம்பூரணர்.** தோழி தானே படைத்துமொழியும் பகுதிகளுள் "நல்வகை யுடைய நயத்திற் கூறிப் படைக்கவும் பெறுமே [4]" என்றதற்கு இதனை எடுத்தோதுவர் **நச்சினார்க்கினியர்.** (௬)

237. *காமங் கடவ வுள்ள மினைப்ப*
*யாம்வந்து காண்பதோர் பருவ மாயின்*
*ஓங்கித் தோன்று முயர்வரைக்*
*கியாங்கெனப் படுவது நும்மூர்* **தெய்யோ.**

**இஃது அல்லகுறிப்பட்டு நீங்கிய தலைமகனை வந்திலனாகக் கொண்டு அவன் பின்பு வந்துழி அவற்குத் தோழி சொல்லியது.**

1. தொல். பொ. 210. 2. ஷை. ஷை. 39.
3. ஷை. ஷை. 112. 4. ஷை. ஷை. 237.

**உரை:** எம்மிடை யெழுந்த காதல் செலுத்துதலால் மனம் வருந்தி யாமே போந்து நின்னைக் காண்பதோர் காலமும் எய்து மாயின், பிழைப்பின்றிச் சேறற்பொருட்டு இஃதோ உயர்ந்து தோன்றும் மலைக்கு நும்மூர் எவ்விடத்ததோ, கூறுக எ. று.

விகாரத்தால் தொக்க ஏயும் உம்மையும் தலைமகள் தானே சென்று தலைமகனைச் சேர்தல் இலக்கணம் அன்று என்பது உணர நின்றன. என்னை, "உடம்பு முயிரும் வாடியக் காலும், என்னுற் றனகொல் இவையெனின் அல்லது, கிழவோற் சேர்தல் கிழத்திக் கில்லை [1]" என்றார் ஆகலின். **கடவல்,** செலுத்தல். **இனைதல்,** வருந்துதல். "ஓங்கித் தோன்றும் உயர்வரை" என்புழி ஒருபொருட்கண் வந்த இருசொற்கள், "ஒருபொருள் இருசொற் பிரிவில வரையார் [2]" என்ற சூத்திரத்து "வரையார்" என்றதனால் பிரிந்து நிற்றல் கொள்க. "சேணிடை, ஓங்கித் தோன்றும் உயர்வரை, வான்றோய் வெற்பன் [3]" எனப் பிறரும் கூறுதல் காண்க. இதற்குப் பிறவாறும் உரைப்பர்.

இயற்கைப்புணர்ச்சி பெற்ற தலைமகன் வரைவு மேற்கொள்ளாது காமக்காதல் சிறத்தற் பொருட்டுக் குறிவழி ஒழுகுவானாக, தலைவி காமம் சிறந்து நிற்குமாறு தோன்ற, **காமம் கடவ** என்றும், காமக்கூட்டம் தாமும் இடையறாது நிகழ்தலின்றிப் பிரிவால் இடையீடுபடுதலின் **உள்ளம் இனைப்ப** என்றும், யாம் காமம் சிறந்தும், நின் பிரிவாலும், ஆற்றிடை யுளவாகும் ஏதங்களை ஆய்தலாலும் மனம் வருந்தியும் நிற்ப, நீ அவற்றை ஓராது அன்பின்றி வாராதொழிந்தனை; ஆயினும், நின்னை இன்றி யமையாமையின் யாம் ஆற்றுமாறு பிறிதில்லே மாகலின் என்பாள் **யாம் வந்து காண்பதோர் பருவ மாயின்** என்றும் கூறினாள்.

1. தொல். பொ. 203. 2. தொல். சொல். 460.
3. அகம். 42.

"அருங்கடி யன்னை காவ னீவிப், பெருங்கடை யிறந்து மன்றம் போகிப், பகலே பலருங் காண வாய்விட்டு அகல் வயற் படப்பை யவனூர் வினவிச் சென்மோ வாழி தோழி[1]" எனப் பிறண்டும் வருதல் காண்க. ஈண்டுக் காட்டிய **நற்றிணைப்பாட்டு**, "ஒருசிறை நெஞ்சமொடு உசாவுங் காலை, உரிய தாகலு முண்டென மொழிப[2]" என்ற சூத்திரத்து உம்மையால் தோழியொடு உசாவுங் காலத்து உண்டென அமைந்தது.

வரைக்கண்ண தாயின் பிறனை வினவாது நேரே நெறிபற்றி வருதல் கூடுமாயினும், வருவ லென்றவன் வாராது பொய்த்தமையால் தெருளாதாள் போன்று, **வரைக்கு யாங்கு எனப்படுவது நும்மூர்** என்றும், சொல் திறம்பினோர் வாழுமூர் யாவரானும் இழித்துக் கூறப்படும் இயல்பு நோக்கி, **யாங்கு எனப்படுவது** என்றும் வினவி னாள். பலரறிய ஓங்கித் தோன்றுதலின் **வரைக்கு** என்றாள் என்க. **காமம் கடவ** என்றது **காதல்கைம்மிகல்; உள்ளம் இனைப்ப** என்றது **ஏதம் ஆய்தல்.**

"நாற்றமும் தோற்றமும்[3]" என்ற சூத்திரத்து "நாடும் ஊரும் இல்லும் குடியும் பிறப்பும் சிறப்பும் இறப்ப நோக்கி அவன்வயின் தோன்றிய கிளவியொடு தொகைஇ, அனைநிலை வகையான் வரைதல் வேண்டி னும்[4]" என்ற விடத்து, இதனைக் காட்டி, இஃது ஊர்பற்றி வந்தது என்பர் **இளம்பூரணர்.** இனி **நச்சினார்க்கினியர்** இஃது ஊரை இறப்பக் கூறியது என்பர்.　(எ)

*238. வார்கோட்டு வயத்தகர் வாராது மாறினுங்*
*குரூஉமயிர்ப் புருவை யாசையி னல்கும்*
*மாஅ லருவித் தண்பெருஞ் சிலம்ப*
*நீயிவண் வரூஉங் காலை*
*மேவரு மாதோவிவ ணலனே தெய்யோ.*

---

1. நற். 365.　2. தொல். பொ. 204.
3. ஷை. ஷை. 112.　4. ஷை. ஷை. 114.

இது வரையாது வந்தொழுகும் தலைமகனுக்கு "இவள் கவின் நீ வந்தகாலத்து வருதலால் நீ போன காலத்து அதன் தொலைவு உனக்கு அறியப்படாது எனத் தோழி சொல்லி வரைவுகடாயது.

**உரை:** நீண்ட கொம்பும் வலியுமுடைய ஆட்டுக் கிடாய் தூராது பொய்ப்பினும் நல்ல நிறமுற்ற மயிரினை யுடைய பெண்யாடு பின்ன ரேனும் அது வருதல்கூடும் என்னும் ஆசையாலே தங்கும் பெரிய அருவிகளையுடைய குளிர்ந்த பெரிய சிலம்பினையுடையாய், இவளது கவின் நீ இங்கு வருங்காலை வருதலால், நீ செல்லுங்காலத்து அது கெடுதலை அறியாயாயினை எ. று.

நீ செல்லுங்காலத்து என்பன குறிப்பெச்சம். **புருவை,** ஆடு. இஃது இன்றும் பாண்டிநாட்டு மக்கள் வழக்கில் இருக்கிறது. "செந்நிலப் புறவின் புன்மயிர்ப் புருவை, பாடின் தெண்மணித் தோடு தலைப்பெயர[1]" என்றார் பிறரும்; "புருவைப் பன்றி வருதிற நோக்கி[2]" எனவரும் பாட்டிற்குப் **பழைய வுரைகாரர்** இளமை யென்று கூறு தலால், இதற்கு நிறமுற்ற மயிரினையுடைய இளமையை பொருந்திய ஆடு அது வரும் திசையை ஆர்வத்துடன் நோக்கி நிற்கும் என்று உரைப்பினுமாம். அது பொரு ளாயின், ஆசை என்பது திசையென்னும் பொருட்டு. ஆயினும், விருப்பம் என்ற பொருளே தொல்காப்பியர் காலமுதலே "காட்சி யாசையிற் களம்புக்குக் கலங்கி[3]" எனப் பயில வழங்கி வருதலின், முன்னதே சிறப்புடைத்து எனக் கொள்க. தலைவியது நலம் தலைமகன் வர வருத லும் பிரியப் பிரிதலு முடைய தென்பது, "வந்தனனே மற்று இரவில் பொன்போல் விறற்கவின் கொள்ளுமோ நின் நுதலே[4]" என உடன்பாட்டாலும், "பசலை நம் காதலர், தொடுவுழித் தொடுவுழி நீங்கி, விடுவுழி விடுவுழிப் பரத்த லானே[5]" என மறைமுகத்தாலும் சான்றோர் புலப்படுத்து வது காண்க.

1. நற். 321. 2 அகம். 88. 3. தொல். பொ. 107.
4. ஐங். 229. 5. குறுந். 399.

தலைவியது நலம் தொலைவது கூறித் தலைவனை வரைவு கடாவும் கருத்தினளான தோழி, தலைவன் தலைமகளது நலம்பாராட்டக் கேட்டு, இந்நலம் நீ போந்து காணும் போது சிறந்து தோன்றுமாயினும், பிரிந்தவழித் தானும் தொலைந்து போகிறது என்பாள், **நீ இவண் வரூஉங்காலை மேவரு மாதோ இவள் நலன்** என்றாள். எனவே, வாராக் காலை இவள் நலம் தொலைந்து காட்டும் என்று கூறி, அதனை அயலார் அறியின் ஏதமா மாகலின், நீ வரைந்து கோடலே தக்கது என வரைவு கடாயவாறும்.

**வார்கோட்டு வயத்தகர் வாராது மாறினும் பின் அது வரக்கூடு மென்னும் ஆசையாலே புருவை தங்கும்** என்றது, நீ நின் வரவுகளில் குறித்த வண்ணமே வாராது மாறி நீட்டித்தாலும் "நின்னைக் காணலாம் என்னும் ஆசை யாலே இவள் உயிர் வாழாநின்றாள்" என உள்ளுறுத்து உரைத்தவாறு உணர்க. இஃது இன்றியமையாமை கூறி வரைவு கடாதல். **நீ யவண் வரூஉங் காலை** என்பது பாட மாயின், நீ அக்குறியிடத்து வருங்கால் என உரைக்க. (அ)

239\. சுரும்புணக் களித்த புகர்முக வேழம்
இரும்பிணர்த் துறுகற் பிடிசெத்துத் தழூஉநின்
குன்றுகெழு நன்னாட்டுச் சென்ற பின்றை
நேரிறைப் பணைத்தோ ளணிகிழ
வாரா யாயின் வாழேந் தெய்யோ.

**இது வரைவிடை வைத்துப் பிரிவல் என்ற தலைமகற்குத் தோழி கூறியது,**

**ப. உரை:** மதவேழம் துறுகல்லைப் பிடி யென்று தழுவும் நாட னுதலால் நினக்குத் தகுதியில்லாதாள் ஒருத்தியைத் தகுதி யுடையா ளென்று நீ வரையவும் கூடும் என நகையாடிக் கூறியது.

**உரை :** சுரும்புண்ணுமாறு பெருகும் மதக்களிப்பினையும் புள்ளி யுற்ற பட்டம் அணிந்த முகத்தினையுமுடைய யானை, கரிய சருச்சரை பொருந்திய துறுகல்லைப் பிடியானை எனக் கருதிச் சென்று தழுவும் குன்று பொருந்திய நின் நல்ல நாட்டுக்குச் சென்றபின் இவளுடைய நேரியவாய் இறை பொருந்திய தொடி பெரிய தோள்களிலிருந்து நெகிழுமாறு நீ வாராயாயின் யாம் உயிர் வாழேம் எ. று.

யானைகள் பொழியும் மதநீரை வண்டுகள் உண்டல் இயல்பாகலின், **சுரும்புணக் களித்த** என்றார்; "வரிநிமிரூர்க்கும் வாய்புகு கடாஅத்துப், பொறிநுதற் பொலிந்த வயக்களிற் றொருத்தல்[1]" என்றார் பிறரும். "சுரும்புணக் களித்த" என்றவிடத்து **உண** என்றதனைப் பெயராக்கி, "சுரும்புகள் தாம் பலவுகை உணவும் உள்வழி அவ்வக் காலத்து ஆண்டுச் சென்று ஏறியும் இழிந்தும் சுழன்றும் மெய் வருந்தாது அவையெல்லாம் ஒருகாலத்தே ஒருவழி உண்ணும் உணவு[2]" கிடைக்க உண்டு களித்த என உரைத்தலும் ஒன்று. துறுகல் பிடி யானை போலத் தோன்றுதலின், **வேழம் இரும்பிணர்த் துறுகல் பிடிசெத்துத் தழூஉம்** என்றார். "உதுக்காண், பிடிதுஞ்சு வன்ன அறைமேல நுங்கின், தடிகண் புரையுங் குறுஞ்சுனை[3]" எனப் பிறரும் கூறுதல் காண்க. துறுகல் பிணருடைமை, "இரும்பிணர்த் துறுகல்[4]" எனப் பிறர் கூறலாலும் அறிக. **இறை**, ஆகு பெயர். இஃது இப் பொருட்டாதல், "வீங்கிறை வடுக்கொள வீழுநர்ப் புணர்ந்தவர்[5]" என்பதன் உரையால் உணர்க.

வரைவிடை வைத்துப் பிரிவல் என்ற தலைமகற்குப் பிரிவு உடன்படுவாள், நீ சென்று விரைந்து **வாராயாயின்,** என்றாள். சென்றவிடத்தும், விரைந்து வாராவிடத்துமாகிய ஈரிடத்தும், தலைமகள், அவன் பிரிவுள்ளி உடல்

---

1. அகம். 78. 2. சிலப். 2 : 28. அடி. உரை.
3. கலி. 108. 4. அகம். 57. 5. கலி. 66.

மெலிதல் ஒருதலை யாகலின், **சென்ற பின்றை, நேரிறைப் பணைத்தோள் நெகிழ, வாரா யாயின்** என்றாள். வாரா தொழிதற் குரிய ஏதுவினை உள்ளுறுத்து உரைத்தலின், **வாரா யாயின் வாழேம்** என்றது விரைந்து வரைவொடு வருதல் வேண்டும் எனத் தலைமகனை முடுக்கியவாறு.

மதவேழம் தகுதியில்லாத துறுகல்லை இரும்பிணருடைமை பற்றிப் பிடியெனக் கருதித் தழுவும் நாடனாதலின், நின் தலைமைக்குத் தகுதியில்லாத வேறு ஒருத்தியைப் பெண்மை நலமுடைமை பற்றிக் கருதி நீ வரையவும் கூடும் என உள்ளுறை கொள்க. பழையவுரையும் இதுவே கூறிற்று. **நேரிறைப் பணைத்தோள் நெகிழ** என்றது **உடம்பு நனி சுருங்கல்.**

வேழத்தின் மதநீர், சுரும்பினும் வருத்தமின்றிப் பல வகை உணவும் ஒருகாலத்து ஒருவழிப் பெற்றுண்ணும் உணவாகும் என்றதனால், நின்பாலுள்ள பொருள் சுற்றத்தார் பலரும் ஒருங்கிருந்து உவந்துண்ணும் அளவிற்றாகவும் நீ வரைவு இடைவைத்துப் பொருள்வயிற் பிரிகின்ற வாறு என்னை என **இறைச்சி** தோன்றுமாறு காண்க. (௯)

240. *அறியே மல்லே மறிந்தன மாதோ*
*பொறிவரிச் சிறைய வண்டினம் மொய்ப்பச்*
*சாந்த நாறு நறியோள்*
*கூந்த னாறுநின் மார்பே தெய்யோ.*

**தலைமகற்குப் புறத்தொழுக்கம் உளதானமை அறிந்து தலைமகள் புலந்தவழி, அவன் அதனை இல்லை என்று மறைத்தானாகத் தோழி சொல்லியது.**

**உரை ;** பொறியும் வரியும் பொருந்திய சிறகுகளையுடைய வண்டின் கூட்டங்கள் மொய்ப்பச் சந்தனத்தின் மணம் வீசும் நறியவளது கூந்தலின் மணத்தை நின் மார்பு கமழுதலால் நினக்குப் புறத்தொழுக்கம் உண்மையை யாம் அறியேமென எண்ணற்க, நன்கறிவேம் எ. று.

தன்பால் புறத்தொழுக்கம் இல்லையெனத் தலைமகன் கூறினானாக, அவன் கூற்றை மறுத்து அவ்வொழுக்கம் அவன்பால் உண்மையினை எடுத்துக் கூறுதலின், **அறியே மல்லேம்** என்று ஒழியாது, **அறிந்தனம்** என்றும், அதற்கு ஏது இஃது என்பாள், **நறியோள் கூந்தல் நாறும் நின் மார்பு** என்றும் கூறினாள். "பிறர்கூந்தல் மலர்நாறும் மார்பனை ஈங்கு எம்மில் வருவதை [1]" என்று பிறரும் உரைப்பது காண்க. நின்னைக் கூடிய பரத்தை நின் மார்பில் இன்றுயில் பெறுதலின், அவளது கூந்தல் மார்பிற் படிதலால் நின் மார்பு நறுமணம் கமழ்வதாயிற்று என்றற்கு, நறியோளுடைய கூந்தல் மணம் நின்மார்பு நாறுகின்றது என்றாள்.

**பொறிவரிச் சிறைய வண்டினம் மொய்ப்பச் சாந்தம் நாறும் நறியோள்** எனப் பரத்தையைக் கூறியது, ஆடவராகிய வண்டினம் சூழ்வரத் தன்னை மிகவும் வியந்து பாணரும் பிறரும் புகழ்ந்து பாடும் நலமுடையாள் எனப் புகழ்வாள் போல் இகழ்ந்து கூறியவாறு; பரத்தையை ஏத்தினும், "உள்ளத்து ஊடல் உண்டென மொழிப [2]" ஆகலின், இதுவும் புலவியென உணர்க.

"திணைமயக் குறுதலும் கடிநிலை யிலவே [3]" என்ற சூத்திர வுரையில் இப்பாட்டுக் குறிஞ்சிக்கண் மருதம் மயங்கிற்றெனக் கொண்டு, "இது புறத்தொழுக்கம் இன்று என்றற்குத் தோழி கூறியது" என்றும், "இரந்து குறையுற்ற கிழவனை [4]" என்ற விடத்து, "வாய்மை கூறலும்" என்றதற்கு இதனைக் காட்டி, இது வாய்மை கூறியது என்றும் கூறுவர் **நச்சினார்க்கினியர்.** (௩)

1. கலி. 13. 2. தொல். பொ. 233. 3. ௸. ௸. 12.
4. ௸. ௸ 237.

## 25. வெறிப்பத்து.

வெறி பொருளாக வரும் பாட்டுக்கள் பத்துக் கொண்ட பகுதியாகலின், இது **வெறிப்பத்து** என்னும் பெயர்பெறுவதாயிற்று.

**வெறி** யென்பது மணம் என்னும் பொருள்படுவதொரு பழந்தமிழ்ச் சொல். வெறிமலர், வெறிகமழ் பொழில் என்றெல்லாம் சான்றோர் செய்யுட்களில் இச் சொல் பெரிதும் வழங்கும். சொல்வடிவே நோக்கின் இது, மிகுதிப்பொருளில், வெறுக்கை, வெறுத்த கேள்வி எனவரும் பெயரும் வினையுமாகிய சொற்களின் முதனிலையாகிய வெறு என்னும் உரிச்சொல் லடியாகப் பிறந்தமை தோன்றும். ஆகவே, அழகும் ஒளியும் இளமைநலமும் திகழும் செடிகொடிகளின் பூக்களிடைச் சிறந்து நிற்கும் மிகுமணம் **வெறி** யென்ற சொல்லால் வழங்கப்படுவதாயிற்று.

கருமுகில் தவழும் மலையகத்தே இரவுப்போதில் இருளும் குளிரும் செய்யும் இன்னல் பொறுது ஒடுங்கி உறையும் தனக்கு நாட்காலையில் அழகிய ஒளி செய்து போதரும் ஞாயிற்றால் இருள் நீக்கமும் உள்ளக்கிளர்ச்சியும் உடலூக்கமும் கிளர்ந்தெழுவது கண்டு அதனையே முழுமுதற் பொருளாகப் பரவினன் தமிழ் முதன்மகன். ஞாயிறு தோன்றும் நாட்காலையில் மலையணைந்த காடுகள் இளமைத் தளிர் பரப்பிப் பூக்கள் மலர்ந்து எங்கும் இன்ப மணம் திகழ்வதும், மாவும் புள்ளும் தத்தம் தொழில் புரிவதும், மக்கள் அறிவுவிளக்கமும் தெளிவும் பெறுவதும் ஓர்ந்து இவற்றிற்கு உள்ளீடு, இளமை, அழகு, மணம், அறிவு முதலிய நலங்களே என்பதைக் கண்டான். ஞாயிறு, காலையில் தோன்றுவதும், மாலையில் மாய்வதும்

கண்டு, தோற்றமும் ஈறும் இன்றி என்றும் ஒருபெற்றித்தாய் நிலவுவதாய், ஞாயிற்றுக்கும் அதற்கு இடமாகிய வானத்துக்கும் கடலுக்கும் கடல்சூழ்ந்த நிலவுலகத்துக்கும் எல்லாவற்றிற்கும் முழுமுதலாய் உள்ளதொரு பொருள் உண்டு எனத் தெளிந்தான். தனக்கும் தான் பெறும் நலங்கட்கும் முதல் அதுவே யெனக் கொண்டு, செல்வக் காலை அல்லற்காலை யாகிய இருபோதினும் அதனை நினைந்து வழிபடலானான்.

அழகு திகழும் தளிரிடத்துத் தோன்றும் இளமையும் மலர்களிடையே தோன்றும் மணமும் மாவும் புள்ளு மாகிய பிறவுயிர்களிடத்தே தோன்றும் கிளர்ச்சியும், நாட்காலையில் நெடுங்கடலும் வானும் தொடுமிடத்தே எழும் ஞாயிற்றின் எழுச்சியில் விளங்கும் ஒளியும் அழகும் அம்முதற்பொருளால் அருளப்படுவன என்பது அவற்குப் புலனாயிற்று. அப்புலனெறியே கண்ட போது அழகும் இளமையும் மணமும் ஒளியும் தெளிவும் "நன்பகலமையமும் இரவும் போல, வேறுவேறு இயல வாகி" நிலவுவது விளங்கவே, இவற்றிற்கு முழுமுதலாகும் முதற்பொருள், மாறா அழகும் மாறா இளமையும் மாறாத மணமும் மாறாத ஒளியும் தெளிவு முடைய தென்பது தெரிந்தது. மாறாத அழகு முதலிய நலங்களெல்லாவற்றையும் ஒருங்கே ஒருசேரத் தொகுத்து உணர்த்தவல்லதொரு சொல்லைத் தேர்ந்தான். அது, முருகு என்னும் சொல்லாகும். அதனை அம் முழுமுதற் பொருளை **முருகு** என்று பெயரிட்டு வழிபடலானான். இம் முருகினைக் காண்டற்கு "மாக்கடல் நிவந்தெழுதரு செஞ்ஞாயிறு" முதற்பொருளாயினமையின், முருகின் நிறமும் செஞ்ஞாயிற்றின் செம்மைநிறம் எனக் கொண்டு, அதனைச் **சேயோன்** என வழங்கினான். **சேயோன்,** செம்மை நிற முடையவன்.

நிலவுலகின் உயர்நிலை யாகிய மலைமுடியில் வாழ்ந்த முன்னோனாகிய முதன்மகன் சேயோனாகிய முருகினை முழு முதற்பொருளாகக் கண்டு வழிபடத் தொடங்கவே, மலை

யுறையும் குறிஞ்சி நிலமக்கட்கு அவனே வழிபடுகடவுளா ஞன். இது தொல்காப்பியர் காலத்துக்குப் பல்லாயிர மாண்டுகட்கு முன்பே நிலவிய கொள்கை யாதலின், இதனை உணர்த்தப் புகுந்த போது அவர் "சேயோன் மேய மைவரை யுலகம்" என்று தெரிவித்தார். தொடக்கத்தில் முருகினது உண்மை காட்டிய செஞ்ஞாயிற்றின் தீவிய ஒளியில் இளந்தளிரும் மணமலரும் மலர்த்தேனும் சிறந்து தோன்றி முதன்மகன் உள்ளத்தை முருகன்கண் தோய்விக்கவே அவற்றையே அம்முருகிற்கு முதற்கண் கையுறையாகப் பெய்து வணங்கினன். அக் கையுறைக்குப் பலி யென்பது பெயர். தளிரைத் தளிர்ப்பலி எனவும், பூவைப் பூப்பலி எனவும் பண்டையோர் வழங்கினர். பின்னர்த் தன்பால் இளமையும் வளமையும் ஒளியும் தெளிவும் உண்டாக்கிய பூவும் தேனும் உண்பொருளும் பிறவும் முருகிற்குப் பலியாகப் படைக்கப்பட்டன. ஊனுணவும் ஒருவகையில் தன் உடற்கு ஆக்கம் தருவது கண்டு அதனையும் பலியிடலானன். அஃது உயிர்ப்பலி என வழங்கிற்று.

முருகனை வழிபடும் இடத்தே நறுமணம் மிக்க பூவும் தளிரும் புகையும் மிக்கு எங்கும் இனிய மணமே நிலவும்; ஆகலின் அதனை **வெறிக்களம்** என முன்னோர் வழங்கினர். இவ்வழிபாடு **வெறி** என்றும், **வெறியயர்தல்** என்றும் பெயர்பெறுவதாயிற்று. வெறிக்களத்தே வழிபடப்பெறும் முருகினையும் ஒரோவழி **வெறி** என்றும் சான்ருேர் குறிப்பர். "வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்[1]" என்பதனல், வெறிக்களம் **வெறிமனை** என்றும் குறிக்கப்படுவதை அறி கின்ருேம். "சால்வ தலைவ எனப் பேஎ விழவினுள், வேலன் ஏத்தும் வெறியும் உளவே[2]" என்று கூறுவதனல், வெறி முருகவேள் வழிபாட்டுக்குப் பெயராதல் தெளியப் படும்.

1. நற். 43. 2. பரி. 5:14-5.

முருகனை நோக்கி வெறியயரும் இடத்தில் மக்கள் பலரும் ஒருங்கு கூடி வழிபடுவராதலின், அவ்வழிபாடு ஒழுங்காக நிகழ்தற்கு ஒருவன் முன்னணியில் நிற்பன். அவன் முருகனது வேற்படையைக் கையிலேந்தி யிருப்பது மரபு; அதனால் அவனை **வேலன்** என்றும், அவன் வெறி அயரும் முறை முற்றும் அறிந்திருப்பதுபற்றி, "வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன் [1]" என்றும் ஆசிரியர் குறித்துரைக்கின்றார்.

பருந்து ஒன்று வானத்திற் பறக்க எழுங்கால் அதன் எழுச்சியை, "நெடுவிளிப் பருந்தின் வெறி [2]" எனச் சான்றோர் கூறுவர்; அதுவே வெறிக் களத்துக்கும் பெயராகக் கூறப்படுதலின், வெறியயர்களமும் பருந்தின் வட்டம் போல முழு வட்டமாக இருக்குமெனக் கருதலாம். களத்தின் நடுவே வேற்படையை நட்டு அதனைச் சுற்றி வட்டமாக அமைத்த இடத்தை வெறிமனை யெனக் கூறுவதும் உண்டு. வெறியயர் களமெல்லாம் வழிகள் பல வந்து கூடும் சந்திகட்கு அருகில் அமைக்கப்படுகின்றன; அவ்விடத்தை நூலோர் "செல்லாற்றுக் கவலை [3]" என்பர்.

வெறியயரக் கருதுவோர் முதற்கண் அதனை வேலற்கு உணர்த்துவர்; அவன் மேலே குறித்த "செல்லாற்றுக் கவலையில்" இடம் கண்டு, வெறிக்களம் அமைப்பன். நன்கு அமைந்த களத்தின்கண் "வேலை நடுவிற் கொண்ட வெறிமனையில் புதுமணல் பரப்பிச் செந்நெல்லின் வெண்பொரியும் [4]" பல்வகைப் பூக்களும் சொரிந்து அழகுறுத்துவன். மேலே பந்தர் அமைத்துப் "பசுந்தழையும் கடம்பின் மலரும் [5]" வேறுபல "நறுமணங் கமழும் பூக்களும் [6]" கொண்டு இனிய காட்சியமையச் செய்து, மறி யறுத்து அதன் குருதி கலந்த செந்தினையை வெறிமனையில் தூவி, பல்வேறு இயங்கள் இயம்ப மணி இயக்கி நறும்புகை எடுத்துப் பூப்பலி இடுவன். மகளிரும் பிறரும் குறிஞ்சிப் பண்ணிற் பாட்டுக்கள் பாடுவர்.

---

1. தொல். பொ. 60. 2. அகம். 299. 3. குறுந். 263.
4. ஷை. 53. 5. அகம். 98. 6. ஷை. 114.

இவ்வெறியின் வேருக முருகவேட்குக் குன்றவர் கூடி விழா அயர்தலும், அக்கர்லேயில் அவர்கள் தம்மிற் கூடிக் குரவைக்கூத்து ஆடுவதும் உண்டு. இவ்விழவும் குரவையும் நடைபெறும் நிகழ்ச்சிகளில் குறமகளிர் முன்னணியில் நிற்பர். இவை மழை வேண்டும் போதினும் வேண்டாப் போதினும் குன்றவர்களால் நிக்ழ்த்தப் பெறுகின்றன. இக்காலத்தும் மேற்குமலேயில் வாழும் தொல்குடி மக்களிடையே இவ்விழாவும் குரவையும் நடைபெறுகின்றன. காலக்கழிவால் சில நிகழ்ச்சிகள் வேறுபட்டன வாயினும், பல கூறுகள் பழந்தமிழ் நூல்கள் காட்டும் முறையில் அமைந்துள்ளன. அவற்றைத் திரு. **நாகமையர், தரிஸ்டர், கோபாலன் நாயர்** முதலியோர் எழுதிய பழங்குடிமக்கள் இயல்பு கூறும் நூல்களிற் காணலாம்.

வெறியயர்வது மாத்திரம் பெரும்பாலும் வேலனலே நிகழ்கின்றது. இளமையும் வனப்புமுடைய மகளிர் உடல் நலம் குன்றுவராயின், அது நீங்குதற் பொருட்டு அவர்களுடைய பெற்ருேர் வேலனைக் கொண்டு வெறி அயர்வர். மருந்தாலும் பிறவற்ருலும் நீங்காத நோய் இவ்வெறியால் நீங்கும் என்பது கொள்கை. இளநங்கை யொருத்தி நலம் குறைந்தாளெனின், அவளுடைய தாய் கட்டும் கழங்கும் கொண்டு அவள் நலக்குறைவுக் குரிய காரணத்தை ஆராய்வள். அவற்றை ஆராய்ந்து கூறுவோர் பெரும்பாலும் முதுமகளிரே யாவர். வேலனும் சிறுபான்மை கழங்குகொண்டு நோய்க்காரணம் அறிதல் உண்டு. "அணங்குறு கழங்கின் முதுவாய் வேலன், கிளவியின் தணியின் நன்றுமன்[1]" எனச் சான்ருேர் கூறுவது காண்க. வேலனைக் கொண்டு மகளுற்ற மெலிவுக்குக் காரணம் ஆராயின், அவன் "வெறியயர்தலால் இந்நோய் தீரும்" என்பான். அவ் வெறியயர்

1. நற். 282.

களத்தில் வேலன் முருகன் பெயரை வாழ்த்தித் தன் மேல் முருகவேள் வந்துற்றதாக ஆடுவன்; ஆடுதற் கேற்பப் பல்வகை இயங்களும் இயம்பும். வெறியயருமிடத்துக் கூடியிருக்கும் குன்றவர்களுள் ஆடவரும் மகளிரும் சேர்ந்து முருகன் புகழைப் பாடிக் குரவைக் கூத்தும் ஆடுவர்; இவ்வண்ணம் வெறியயர்தல் கொட்டும் பாட்டும் கூத்தும் கலந்து நிகழ்வது பற்றி, இதனை **வெறியாடல்** என்றும் சான்றோர் குறிக்கின்றனர்.

வெறியாடும் வேலன் மகட்குண்டாகிய நோய் முருகனால் உண்டாயிற்றென்று உரைத்து நோய்க்கு மருந்தாக முருகனுக் குரிய பூக்களைத் தந்து அவள் கூந்தலில் முடிக்கச் செய்வன். "வேலன் வந்தெனப் பின்னுவிடு முச்சி அளிப்பானே[1]" என வருதல் காண்க.

உடல்நலங் குன்றி மேனி வேறுபடும் இளமகளிர் பொருட்டு வெறியாடுமிடத்து அவர்களை நீராட்டி ஒப்பனைசெய்து வெறியயர்களத்தே நிறுத்தி வேலன் முருகனை வழிபட்டுப் பல்வகை இயங்கள் இயம்ப, பறை முழங்க, முருகனது வேலைக் கையிலேந்திக் களத்தில் ஆடுவன். அக்காலை அங்கே நிற்கும் மகளிர் சிலர் உடல் நடுங்கி மருண்டு ஆடுவதும் செய்வர். அதனை "வெறியுறு நுடக்கம்[2]" என்பர். மகளிர் எய்தும் மேனி வேறுபாடு வெறியாட்டால் தீரும் என்ற கருத்தில், "வெறியென உணர்ந்த உள்ளமொடு மறியறித்து அன்னை அயரும் முருகு[3]" "வெறியென உயங்கும்.அளியள் அன்னையை[4]" "அறியா தயர்ந்த அன்னைக்கு வெறியென வேலன் உரைக் கும் என்ப[5]" "வெறியென வுணர்ந்த வேலன்[6]" என்று சான்றோர் கூறுவது பெரும்பான்மை.

---

1. நற். 51. 2. பதிற். 51. 3. நற். 47.
4. ஷை. 173. 5. ஷை. 273. 6. குறுந். 360.

இவ்வெறியாட்டின்கண் வேலன் செய்யும் வழிபாடு **காந்தள்** என்றும் வழங்கியுளது. இதனை ஆசிரியர் "வெறியாட் டயர்ந்த காந்தள் [1]" என்பது காண்க. இக்காந்தள் என்னும் சொல் பிற்காலத்தில் கந்தழி யெனத் தவருக ஏடெழுதினோரால் எழுதப்பட்டுவிட்ட தென்றும், அதனை ஆராய்ந்து காணுது உரைகாரர்கள் கந்தழி யென்றே கொண்டு தத்தமக்குத் தோன்றியவாறு உரைத்தன ரென்றும் நன்கு பொருந்துமாறு பேராசிரியர் நாவலர், ச. **சோமசுந்தர பாரதியவர்கள்** கூறுகின்ருர்.

இவ்வெறியே பொருளாக அழகிய பாட்டுக்கள் பாடியது பற்றிச் சங்ககாலச் சான்ருேர் ஒருவர் **வெறி பாடிய காமக்காணியார்** என்று சிறப்பித் துரைக்கப் பெறுகின்ருர். அம்முறையே, இங்கே தொகுக்கப்பட்டுள்ள பாட்டுக்களில் வெறியே சிறப்பாகப் பாடப்பெறுவதைக் காணலாம்.

*241. நாமுறு துயர நோக்கி யன்னை*
*வேலற் றந்தா ளாயினவ் வேலன்*
*வெறிகமழ் நாடன் கேண்மை*
*அறியுமோ தில்ல செறியெயிற் ருேயே.*

**இஃது, இற்செறித்தவழித் தலைமகட்கு எய்திய மெலிவு கண்டு இஃது எற்றினு ளுயிற்று என்று வேலனைக் கேட்பத் துணிந்துழி, அறத்தொடுநிலை துணிந்த தோழி செவிலி கேட்கு மாற்ருல் தலைமகட்குச் சொல்லியது.**

**உரை:** நெருங்கிய பற்களையுடையோய், நாம் எய்தியுள்ள துயரத்தை நம் அன்னை கண்டு, அதற்குக் காரணம் அறிவாளாய் வெறியெடுத்தற்கு வேலனைத் தருவித்துள்ளாள்; ஆயினும், அவ்வேலன், மணம் கமழும் நாடனெடு நம்மிடை உளதாகிய நட்பினை அறிவான் கொல்லோ? அறியான் கொல்லோ? எ.று.

1. தொல். பொ. 60.

தலைமகட்குளதாகிய உடல்மெலிவு வேறு காரணங்களால் தோன்றிய தன்று என்பது தோன்ற **நாமுறு துயரம்** எனல் வேண்டிற்று. மெலிவுக்கு ஏதுவாகியது பற்றித் **துயரம்** என்றார். **அவ்வேலன்** என்ற சுட்டு, வேலன் எல்லாவற்றிற்கும் வெறியல்லது வேறே காரணமுண்மை அறியாதவன் என்பது பட நின்றது. **தில்ல,** அசைநிலை. **செறியெயிற்றோய்** என்றது செவிலியை.

தலைமகளோடு பயின்று ஒழுகாவாறு இற்செறிக்கப் பட்டமையால், தான் அவனொடு தலைப்பெயல் ஆகாமை யின், கண்படையின்றியும், உடம்பு நனிசுருங்கியும் மேனி வேறுபட்டுக்காட்டினமையின், **நாம் உறுதுயரம் நோக்கி** என்றும், அது கண்ட தாய், "கையறு நெஞ்சினள் வினவலின் முதுவாய்ப்," பொய்வல் பெண்டிர் பிரப்புளர் பிரீஇ, முருகன் ஆரணங் கென்றலின் அதுசெத்து, ஓவத் தன்ன வினைபுனை நல்லிற், பாவை யன்ன பலராய் மாண் கவின், பண்டையிற் சிறக்கவென் மகட்கு எனப் பரைஇக், கூடுகொள் இன்னியம் கறங்கக் களன்இழைத்து, ஆடணி நயந்த அகன் பெரும் பந்தர், வெண்போழ் கடம்பொடு சூடி இன்சீர், ஐதமை பாணி யிரீஇக் கைபெயராச், செல் வன் பெரும்பெயர் ஏத்தி வேலன்[1]" வெறியயர்கின்றான் என்பாள், **வேலன் தந்தா ளாயினும்** என்றும் கூறினாள். அவ்வேலன் நமக்கும் நாடற்கு முள்ள கேண்மையை அறிந்து பலரும் அறிய உரைப்பனேல், அஃது அலராய் நம்மை வருத்தும் என்று அறியாது, "அறிவர் உறுவிய அல்லல் கண்டு அருளி, வெறிகமழ் நெடுவேள் நல்குவன் எனினே, செறிதொடி உற்ற செல்லலும் பிறிது எனக் கான்கெழு நாடன் கேட்பின்[2]" தலைமகள் உயிர்வாழ்தல் அதனினும் அரிது என்று கூறுவாள், **நாடன் கேண்மை அறியுமோ** என்று மொழிந்தாள். வேலன் அறிந்து உரைப் பினும் அறியாது உரைப்பினும் இருவழியும் நம் துயரம் நீங்குமாறில்லை என்றாளாம்.

1. அகம். 98. 2. ஷை 98.

"மறைந்தவற் காண்டல்[1]" என்ற சூத்திரத்து "வெறியாட்டிடத்து வெருவின் கண்ணும்" தலைவிக்குக் கூற்று நிகழும் என்பதற்கு இதனைக் காட்டுவர் இளம்பூரணர். (க)

**242.** *அறியா மையின் வெறியென மயங்கி*
*அன்னையு மருந்துய ருழந்தன ளதனால்*
*எய்யாது விடுதலோ கொடிதே நிரையிதழ்*
*ஆய்மல ருண்கண் பசப்பச்*
*சேய்மலை நாடன் செய்த நோயே.*

மகள் அறத்தொடுநிலை நயப்ப
தோழி அவட்குச் சொல்லியது.

**உரை:** நிரல்பட நின்ற இதழ்களையுடைய மலர்கள் பலவற்றுள்ளும் ஆய்ந்து கொண்ட மலர்போலும் மையுண்ட கண்கள் பசப்பெய்துமாறு சேய்மைக்கண் தோன்றும் மலையினையுடைய நாடன் தன் பிரிவாற் செய்த நோயினை, அறியாமையால், வெறியயர்ந்து தீர்ப்பான் முயன்று, அன்னையும் மிக்க துயருழந்து வருந்தினள்; ஆகலின், அவன் செய்த நோயினை அவள் அறியாதொழிதல் நன்றன்றாகலான், அதனை அறிவித்தல் வேண்டும் எ. று.

அறிதற்குரிய கேண்மையைப் பின்னர்க் கூறலின் **அறியாமையின்** என்றும், வெறி அயர்ந்தவழித் தீர்தற்குரிய நோயினை **வெறி** என்றும் கூறினர். அறத்தொடுநிலை வகையால் அறிவித்தாலன்றி அறிதற்கு அருமைபற்றி அன்னை எய்திய துயர் **அருந்துய** ராயிற்று. **எய்யாமை** அறியாமை,[2] ஈண்டுப் பிறவினைமேல் நின்றது. நன்று அல்லது கொடிதாகலின், **கொடிது** என்றார். சேய்மலை நாடனாகிய தலைமகன் கூடிப் பிரிந்தமையால் உண்டாதல்

1. தொல். பொ. 109. 2. ஷை சொல். 342.

பற்றி **நாடன் செய்த நோய்** எனல் வேண்டிற்று, "அரிமத ருண் கண் பசப்ப நோய் செய்யும் பெருமான்[1]" எனப் பிறண்டும் கூறுவது காண்க.

செய்மலை நாடன் பிரிந்ததனால் தலைமகள் கண்கள் பசந்து மேனி வேறுபட்டாளாகலின், **ஆய்மலர் உண்கண் பசப்ப** என்றும், அது நாடன் காரணமாக உண்டாயிற்று என்று அறிவாளேல் வெறி விரும்பாளென்பாள், **அறியாமையின் வெறியென மயங்கி** என்றும், ஆராய்கின்றவர் உண்மை யறிந்தாலன்றி அதனைப் பயனுடைய செயல் எனக் கொள்ளாராகலின், அவள், கட்டினும் கழங்கினும் வெறியினும், பிறவற்றினும் முயன்றது வாளா முயற்சித் துன்பமே தந்தமையின், **அன்னையும் அருந்துயர் உழந்தனள்** என்றும், இனி நாமேயாதல் அறத்தொடு நிலைவகையால் உணர்த்தாவிடின், அவள் அத்துயரத்தைப் பொருள் என் பாள், **எய்யாது விடுதலோ கொடிதே** என்றும் கூறினாள். வெறி முதலியவற்றால் உண்மை அறிய முயன்றவள், அதனை அறியாமையால் மயங்கினாளாகலின், **அன்னையும் அருந்துயர் உழந்தனள்** என்றா ளென்றும், முன்னர் அறியாமையினால் அருந்துயர் உழந்தவள், பின்னரும் அறியாமையினால் வருந்தல் நன்றன்றாகலின், **கொடிது** என்றாள் என்றுமாம்.

ஆகவே, நாம் அறிவித்தலே கடன் என்பது குறிப் பெச்சம்; "அன்னைக்கு, அறிவிப்பேங்கொல் அறியலங் கொல்லென, இருபாற்பட்ட சூழ்ச்சி யொருபாற், சேர்தல் நன்று[2]" ஆகலின். அன்னை அறியாமையின் வெறியென மயங்கி அருந்துயருழத்தலை, "சிறந்திவள், பசந்தனள் என்ப துணராய் பன்னாள், எவ்வ நெஞ்சமொடு, தெய்வம் பேணி வருந்தல் வாழி வேண்டு அன்னை[3]" என்பதனால் உணர்க.

1. 82. 2. அகம். 52. 3. நற். 351.

அதனால் அறியாது விடுதலோ கொடிதே என்றும் பாட்டுமுண்டு.

"களவல ராயினும்[1]" என்ற சூத்திரத்துக் "'கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும், ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்" என்பதற்கு இதனைக் காட்டி, "இது வெறியென அன்னை மயங்கினமை கூறிற்று" என்பர் நச்சினார்க்கினியர். (உ)

243. *கறிவளர் சிலம்பிற் கடவுட் பேணி*
*அறியா வேலன் வெறியெனக் கூறும்*
*அதுமனங் கொள்குவை யனையிவள்*
*புதுமலர் மழைக்கண் புலம்பிய* நோய்க்கே.

இது, தாயுழை அறியாமை கூறித் தோழி வெறி விலக்கியது.

**ப. உரை:** அறியா வேலன் யாது கேட்பினும் வெறியெனக் கூறும்; அவனை இதற்கும் கேட்க மனங்கொள்ளா நின்றாய் எ. று.

**உரை:** அன்னாய், இவளுடைய புதுமலர் போலும் குளிர்ந்த கண்கள் தனிமையுற்றுக் கலுழ்தற் கேதுவாகிய நோய்க்குக் காரணம், மிளகு வளரும் மலையின்கண் உறையும் கடவுளைப் பரவி வெறியயர்த லல்லது பிறிதியாதும் அறியாத வேலனைக் கேட்டு, அவன் வெறி யென்று கூறும் இயல்பின னாகலின், வெறியெடுத்தல் வேண்டும் என்றானாக, நீ அவன் சொல்வதையே மனத்திற் கொள்ளா நின்றாய்; இவள் உற்ற நோய்க்கு மருந்து வெறியன்று எனத் தெளிவாயாக எ. று.

**கறி,** மிளகு. **கறிவளர் சிலம்பிற் கடவுள்,** முருகவேள். கழங்கின்கண் கடவுளைப் பரவி இவட்கு உற்ற நோய் முருகனா லாயது என்றும், அது வெறியெடுத்தால் நீங்கும்

1. தொல். பொ. 115.

என்றும் கூறுவ ஞகலின், **கடவுட் பேணி வேலன் வெறி யெனக் கூறும்** என்ருர். "அறியா தயர்ந்த அன்னைக்கு வெறியென வேலன் உரைக்கும் என்ப[1]" எனப் பிறரும் கூறுதல் காண்க. **அது**, வெறி. **அது மனங்கொள்குவை** என்றது குறிப்பால், அது கொள்ளற்கு உரித்தன்று என்பது தோன்ற நின்றது. "அன்னையும் அதுவென உணரும்[2]" எனப் பிறரும் கூறுதல் காண்க.

வேலனைப் படிமத்தான் என்று கூறி, "செவ்வேள் வேலைத் தான் ஏந்தி நிற்றலின் வேலன் என்ருர்" என்பர் **நச்சிஞர்க்கினியர்.**

வேலன், வெறியெனக் கூறுத லொழிய, அதனுல் இவட்கு உண்டாய நோய் தீர்க்கும் மருந்து அறியான் என்பாள், **அறியா வேலன்** என்றும், அவன் தன் கூற்றைப் பிறர் ஏற்க வேண்டும் என்பதற்காகவே முதற்கண் கடவுளைப் பரவுகின்ருன் என்றற்குக் **கடவுட் பேணி** என்றும் கூறினுள். அவன் மருந்தறியான் என்பது, "வெறியென உணர்ந்த வேலன் நோய்மருந்து அறியான் ஆகுதல் அன்னை காணிய[3]" என வருதலால் அறியப் படும். யாது வினவினும் அது முருகனுல் விளைந்தது எனக் கூறுவ தொன்றை யன்றி வேலன் இவள் நோய் தீரும் மருந்துவகை அறியானுகை, அதனை அறியாது நீ இவள் நோயையும் அவனிடம் கூறி அவன் கூறுமாறு வெறியயரக் கருதுகின்றனை; அதனுற் பயன் யாதும் இல்லை என்று தோழி வெறி விலக்கியவாரும்.

**வெறியெனக் கூறுமது மனங்கொள்குவை** எனவே, யாம் குறிப்பாலும் வெளிப்படையாலும் உணர்த்துவன வற்றையாதல், அறிவிலார்பால் ஒன்று கேட்டறிதல் அறிவுடைமை அன்றென்பதையாதல் நின் மனத்துட்

1. நற். 273.  2. குறுந். 111.  3. ஷை. 360.

கொள்ளாயாயினை யெனச் செவிலிமேல் அறியாமை கூறியவாறு அறிக. **மஞ்ழைக்கண் புலம்பிய நோய்க்கு** என்பது **இன்பத்தை வெறுத்தலும், பசலைபாய்தலுமாம்.**

எளித்தல், ஏத்தல் என்ற அறத்தொடுநிலைப் பகுதி களுள் இது **வேட்கையுரைத்தல்** என்பர் **இளம்பூரணர்.** வேட்கை யுரைத்தலாவது "தலைவியைத் தலைவற்குக் கொடுக்க வேண்டும் என்பதுபடக் கூறுதல் என்பர்[1]" "நாற்றமும் தோற்றமும்" என்ற சூத்திரத்துக் "களம் பெறக் காட்டினும்[2]" என்புழி இதனைக் காட்டி இது தாயறியாமை கூறி வெறி விலக்கியது என்பர் **நச்சினார்க் கினியர்.** (ருஉ)

*244. அம்ம வாழி தோழி பன்மலர்*
*நறுந்தண் சோலை நாடுகெழு நெடுந்தகை*
*குன்றம் பாடா ளாயின்*
*எவன்பயஞ் செய்யுமோ* **வேலற்கவ் வெறியே.**

**இது, வெறியாடல் துணிந்துழி விலக்க லுறும் தோழி செவிலி கேட்குமாற்றால் தலைமகட்குச் சொல்லியது.**

**உரை :** தோழி, கேட்பாயாக: வெறியாட லுறும் வேலனுக்கு அவ்வெறி என்ன பயனைச் செய்வதாகும், பலவாகிய மலர்கள் பொருந்திய நறுவிய குளிர்ந்த சோலைகள் நிறைந்த நாடுகளையுடைய நெடிய புகழோனாகிய தலைமகனது குன்றத்தைப் பாடா தொழிவா ளாயின் எ. று.

குன்றம் பாடுதலாவது, "கொடிச்சியர் கூப்பி வரை தொழு கைபோல், எடுத்த நறவின் குலையலங் காந்தள், தொடுத்ததேன் சோரத் தயங்குந்தன் னுற்றார், இடுக்கண் தவிர்ப்பான் மலை[3]" என்று பாடுவது போல்வது. வெறியாட்

1. தொல். பொ. 112. 2. ஷை. ஷை. 114. 3. கலி. 40.

டினும் குரவைக்கூத்தினும் குன்றவர் தம்முடைய தலைவ னுடைய குன்றத்தைப் பாடுவது வாழ்த்துவகை யாகலின், **குன்றம் பாடா னாயின்** என்றார்.

வேலன் வெறியயருங்கால் முதற்கண் தலைமகனது குன்றத்தைப் பாடுதலால், தான் கூறுவன வாயாதல் பெறு கின்றான் என்றும், அது செய்யானாயின், அவன் கூற்றுப் பொய்யாகி ஒரு பயனையும் எனக்கேயுமன்றி அவற்கும் செய்யா தொழியும் என்றும் கூறுவாள், **குன்றம் பாடா னாயின், எவன் பயஞ் செய்யுமோ** என்றாள். தனக்குப் பயன்படுதல் தலைமகன் உறுபெயர் கேட்டு மகிழ்வெய்து தல்; வேலற்குப் பயன் வெறியாடல் வாய்த்தமை குறித்து மகிழ்வும் பொருளும் பெறுதல். இஃது **உறுபெயர் கேட்டல்.**

"நாற்றமும் தோற்றமும்[1]" என்ற சூத்திரத்துக் "களம்பெறக் காட்டினும்" என்புழித் தலைவியை முன்னிலையாக்கிக் கூறுதற்கு இதனையே **இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும்** காட்டினர். (ச)

*245.* *பொய்யா மரபி னூர்முது வேலன்*
*கழங்குமெய்ப் படுத்துக் கன்னந் தூக்கி*
*முருகென மொழியு மாயின்*
*கெழுதகை கொல்லிவ ளணங்கி யோற்கே.*

**இது தலைமகன் சிறைப்புறத்தானாக வெறி அறிவுறீஇத் தோழி வரைவு கடாயது.**

ப. உரை: **கன்னம்** என்பது நோய் தணித்தற்குப் பண்ணிக் கொடுக்கும் படிமம். **கெழுதகை** என்பது உரிமை. இவளை அணங்கி யோற்கு வெறியாட்டு உரிமையன்று என்பதாம்.

---

1. தொல். பொ. 112.

**உரை :** பொய்த்தல் இல்லாத மரபினையும் ஊர்க்கண் வாழும் முதுமையையுமுடைய வேலன், கழங்கு நிறுத்தி, அதன் கண் தான் வழிபடுதெய்வம் வரப் பண்ணிப், பின்னர் அதற்குக் கன்னத்தை அணிந்து, வெறி யாடி, இவளை அணங்கியோன் முருகனுவான் என்று மொழிவானாயின், இவளை மெய்யாற் கூடித் தன் ஒழுக்கத்தால் மெலியச் செய்த தலைமகற்கு அவ்வெறியாட்டு உரித்தாங்கொல்லோ ? கூறுக எ.று.

வேலன் வெறியாடிக் கூறுவன உண்மை என்பவாதலின், **பொய்யா மரபின்** என்றும், அவன் ஊருக்கு ஒருவனாய் முதுகுடியில் தோன்றி வருபவனாகலின், **ஊர் முதுவேலன்** என்றும் கூறினர். **கழங்கு,** கழற்காய். இவற்றைக் கொண்டு வேலன் குறிகூறுமாறு: தன் தலையில் ஆடை கட்டி, சிறிய பைகள் நாலவிட்ட பல கிளைகளை உடைய வளைந்த கொம்பொன்றினால், கழற்காய்களை முருகன் முன்வைத்து அள்ளி யெடுக்குங்கால் கண்டு கூறும் ஒருவகைக் குறி. இதனை, "அறுவை தோயும் ஒரு பெருங் குடுமிச், சிறுபை நாற்றிய பஃறலைக் கொடுங்கோல் ஆகுவ தறியும் முதுவாய் வேல, கூறுக மாதோநின் கழங்கின் திட்பம்[1]" என்பதனால் அறிக. **முருகு,** முருகன். **கன்னம்** என்பது, நோய் தணிதற்குப் பண்ணிக் கொடுக்கும் மந்திரத்தகடு உள்ளே வைத்துக் கட்டிய தாயத்தை[2]; இது பொன்னாலும் செய்யப்படும் என்பது, "பொன்செய் கன்னம் பொலிய[3]" என்பதனாலும் அறியலாம். **கழங்கு மெய்ப்படுத்தலாவது** இது தெய்வத்தா னாயிற்றோ பிறிதொன்றினா னாயிற்றோ எனத் தெய்வம் பராவி அக்கழற்காய்களை எண்ணிப் பார்த்தல் என்றும், கழற்காய்களைத் தொகுத்து அவற்றிற்கு மஞ்சட் காப்புக் கட்டி, "இம் மையல் தீருங்காறும் இக்காப்பினை அணிந்திருக்க" எனக் கட்டுவது **கன்னம்** என்றும்

1. அகம். 195. 2. **Talisman.** 3. அகம். 137.

கூறுப. **கெழுதகை,** உரிமை. "யாமெம் காமம் தாங்கவும் தாந்தம், கெழுதகைமையின் அழுதன தோழி[1]" என்பதனுலும்

அன்னை வேண்ட வேலன் அயரும் வெறியாட்டின்கண் நம் குடிக்கு அலரும், தலைமகற்குப் பழியும் எய்தக் கூறுவனே என்று அஞ்சின ளாகலின், **பொய்யா மரபின் ஊர்முது வேலன்** என்றும், அவன் முருகெனமொழிவனுயின், அஃது அவனது பொய்யா மரபினெடு மாறு படுதலின், **கெழுதகை கொல் இவள் அணங்கியோற்கே** என்றும் கூறினள். **மொழியுமாயின்** என்றது மொழியாமையும் உணர நின்றது. எதிர்மறை ஒகாரம் விகாரத் தால்தொக்கது. இது கூறியதாற் பயன், அன்னை வேண்ட வெறியாடலுறும் வேலன், பொய்யா மரபின னுகலின், தான் கழங்கு மெய்ப்படுத்தும் கன்னம் தூக்கியும் வெறி எடுத்து இவள் அணங்கியோன் இன்னனென உண்மை கூறிவிடின் அது நினக்குப் பழியும் எங்குடிக்கு ஏதமும் பயக்கு மாகலின் நீ விரைந்து வரைந்து கொள்வாயாக எனச் சிறைப்புறம் நின்ற தலைமகன் கேட்ப வரைவு கடாயவாறும். (ரு)

**246.** *வெறிசெறித் தனனே வேலன் கறிய*
*கன்முகை வயப்புலி கழங்குமெய்ப் படூஉப்*
*புன்புலம் வித்திய புனவர் புணர்த்த[2]*
*மெய்ம்மை யன்ன பெண்பாற் புணர்ந்து*
*மன்றிற் பையு மூரும்*
*குன்ற நாட னுறீஇய நோயே.*

**இது வரையாது வந்தொழுகும் தலைமகன் சிறைப் புறத்தானுய் நின்றுழி அவன் கேட்குமாற்றுல் வெறி நிகழா நின்றமை தோழி தலைமகட்குச் சொல்லியது.**

1. குறுந். 241. 2. இந்த அடி, **சீகாழி திரு. கோவிந்தசாமி ரெட்டியார்** கையெழுத்துப் படியில் காணப்பட்டது.

**ப. உரை :** பயிர் விளைப்பார் விலங்குகள் நலியாமைக்குக் கழலைக் கண்ணாக வுறுத்திப் பொய்ம்மை வகையாற் பண்ணி வைத்த பெண்பாற் புலியைப் புணர்ந்து புலிப்போத்துப் படப்பைநடுவே துயரம் தீருமென்றது, வரைந்து கொள நினையாது இக்களவிற் புணர்கின்ற மாயப்புணர்ச்சியானே இன்பம் முடிய நுகர்கின்றான் என் பதாம்.

**உரை :** மலையிடத்தே புன்செய்க் கொல்லையில் தினைப் பயிரை விதைத்த குறவர் விலங்குகள் போந்து அழிக்காத வாறு கழங்கினைக் கண்ணாகப் பொருத்தி மெய்யான பெண் புலி போலச் செய்தமைத்த பொய்ப் புலியை, மிளகுக்கொடி படரும் கல்முழைஞ்சினுள் வாழும் வலிய புலியின் ஏறு போந்து கூடிப் புனத்திடையே அமைத்த மன்றிற் கிடந்து தன் வருத்தம் நீங்கும் குன்றத்தையுடைய நாடனாகிய தலை மகனால் உண்டாகிய நோயின்பொருட்டு வேலன் வெறி அயர்தற்கு உரியவற்றை ஒழுங்காகச் செய்யலுற்றான், இஃது என்னாகுமோ? எ. று.

**கறி,** மிளகுக்கொடி. **கழங்கு,** கழற்காய். மெய்யென்னா ராயினும் மெய்ம்மைத் தோற்றத்தைத் தருதற்குக் கண் சிறந்தமையின், கண்ணே கொள்ளப்பட்டது. **புன்புலம்,** ஈண்டுத் தினைவித்திய புன்செய்; "புன்புல மயக்கத்து விளைந்தன தினையே[1]" என்பது காண்க. **புனவர்,** குன்றவர். "இதைமுயல் புனவன்[2]" என வழங்குவ தறிக. பொய்யாகப் புணர்த்தமை அறியாமையின் வயப்புலி எய்திய வருத்தம் **பையுள்** எனப்பட்டது. புலத்தின் இடையே பரண் நிறுத்துதற் பொருட்டும் விளைந்தவிடத்துத் தினைக்கதிர்களைத் தொகுத்தற்பொருட்டும் விடப்பட்ட நடுவிடம் **மன்று** என உணர்க. நோய் என்ற விடத்துப் பொருட்டுப் பொருளதாகிய குவ்வுருபு தொக்கது.

தலைமகன் சிறைப்புறத்தா னமை அறிந்து அவன் கேட்பக் கூறுகின்றா ளாதலின், **குன்ற நாடன் உறீஇய நோய்** என்றும், நோயால் விளைந்த மேனி மெலிவு கண்டு

1. ஐங். 260. 2. அகம். 140.

ஆராய்ந்து வெறி யெடுத்தற்கு ஆவன செய்யுமாறு உணர்த்துவாள், 'வேலன் மேலேற்றி **வெறி செறித்தனனே வேலன்** என்றும் கூறினாள். பிறரும், "அலைங்காறி கழங்கின் கோட்டம் காட்டி வெறியென வுணர்ந்த உள்ளமொடு மறியறுத்து, அன்னை அயரும் முருகு[1]" என்று பிறரும் கூறுதல் காண்க.

உள்ளுறையால் தலைமகன் வரைதலை மேற்கொள்ளாது களவின்கண் பெறும் இன்பத்தையே நயந்தொழுகுதலை உணர்த்தினமையின், வேறு தன்றால் செயற்பாலது இன்மை தோன்ற, இஃது என்றாகுமோ என்பது குறிப்பிற் பெற மொழிந்தாள்.

கன்முழைகையில் வாழும் வயப்புலி புனவர் பொய்யாகப் புணர்த்த பெண்புலியைக் கூடிப் பையுள் தீரும் என்றதனால், உயர்குடி மகனாகிய தலைமகன் களவின்கண் தலைப்பெய்து பெறும் இன்பமொன்றே நுகர்ந்து அமைகின்றான் என்றாளாம். **பழையவுரைகாரர்க்கும்** இதுவே கருத்தாதல் காண்க.

**கழங்குகட்படூஉ** என்றும், **உ[illegible]ுய நோய்க்கே** என்றும் பாடமுண்டு. (எ)

247. அன்னை தந்த தாகுவ தறிவென்
பொன்னகர் வரைப்பிற் கன்னந் தூக்கி
முருகென மொழியு மாயின்
அருவரை நாடன் பெயர்கொ லோவ **ததுவே.**

**இது, வெறி விலக்கலுறும் தோழி தமர்கேட்பத் தலைமகளை வினவுவாளாய்ச் சொல்லியது.**

---

1. நற். 47.

**உரை :** அன்னை வெறியயர்தற்பொருட்டு வேலனைக் கொணர்ந்தமையும், அவன் எடுக்கும் வெறியால் விளையும் பயனையும் யான் நன்கு அறிவேனாகலின், அழகிய மனையிடத்தே வெறியாடிக் களனத்தை அணிந்து "இவளை அணங்கியோன் முருகன்" என அவ்வேலன் கூறுவானாயின், அம் முருகு என்னும் பெயர் அரிய மலைநாடனது பெயர் ஆகுமோ? கூறுக எ.று.

எனவே, அஃது அருவரைநாடன் பெயரன்றாகலின், அவ்வெறியாட்டுப் பயனில் செயலாம் என வெறிவிலக்கிய வாறும்.

ா, வேலனைத் தருவித்தது. **ஆகுவது**, வெறியயர்தல்; "நுதல் பசந்த படர்மலி அருநோய், அணங்கென உணரக் கூறி வேலன், இன்னியம் கறங்கப் பாடி, பன்மலர் சிதறிப் [1]" பரவுவதனை **ஆகுவது** என்றார் எனினுமாம்.

வெறியயரும் வேலன், "எம்மிறை அணங்கலின் வந்தன்று இந்நோய் [2]" என்பது ஒருதலையாகலின், **முருகென மொழியு மாயின்** என்றும், இவட்கு இந்நோய் செய்தான் அருவரை நாடனாகலின், அவனை முருகு எனல் பொருந்தாதென்பாள், **அது அருவரை நாடன் பெயர் கொலோ** என்றும் கூறினாள்.

தமர் கேட்பின் இவட்கு இம் மெலிவு தெய்வத்தானுயிற்றன்று என வெறிவிலக்குதல் பயன். (எ)

*248. பெய்ம்மணன் முற்றங் கவின்பெற வியற்றி*
*மலைவான் கொண்ட சினைஇய வேலன்*
*கழங்கினா னறிகுவ தென்றால்*
*நன்றா லம்ம நின்றவிவ ளலனே.*

1. நற். 322. 2. அகம். 388.

இது, தலைமகள் வேறுபாடு கழங்கினால் தெரியும் என்று வேலன் கூறியவழி அதனைப் பொய்யென இகழ்ந்த தோழி வெறிவிலக்கிச் செவிலிக்கு அறத்தொடு நின்றது.

**உரை:** மலையையும் வானையும் வென்றுகொண்ட சினத்தையுடைய முருகனது வேலை ஏந்திய வேலன் புது மணல் இடப்பட்ட முற்றம் அழகுபெற அமைத்துக் கழங்கு மெய்ப்படுத்துக் காண வல்ல தொன்று என்றால், இவள்பால் நின்ற கற்புநலம் நன்று, காண்; என்றது, இவளது கற்பின் மாண்பு கழங்கினால் அளத்தற் குரியதன்று எ.று.

ஏகாரம், தேற்றம். சிறப்பும் தெய்வவழிபாடும் நிகழுங்காலங்களில் பழமணல் மாற்றிப் புதுமணல் பெய்து அழகுசெய்தல் மரபாதலின், **பெய்ம்மணன் முற்றம் கவின் பெற** என்றார்; "பெய்ம்மணல் முற்றம் கடிகொண்டு மெய்ம்மலி கழங்கின் வேலற் றந்தே[1]" என்பது காண்க. சிறப்புக் குறித்துச் செய்யப்படுதலின், **இயற்றி** என்றும், வேலன் ஏந்திய வேல் செவ்வேளினது வேலாகலின், **மலைவான் கொண்ட சினைஇய வேல்** என்றும் கூறப்பட்டன. **மலை** என்றது குருகுபெயர்க்குன்றம். **வான்** என்றது வானவர் தலைவனாகிய இந்திரன் முதலியோரை. ஆகுபெயர். "நாவலந் தண்பொழில் வடபொழில் ஆயிடைக், குருகொடு பெயர்பெற்ற மால்வரை யுடைத்து, மலை யாற்றுப்படுத்த மூவிரு கயந்தலை[2]" என்றும், "செம்பொறிச் சேஎய், ஆரா வுடம்பின் நீ யமர்ந்து விளையாடிய, போரால் வறுங்கைக்குப் புரந்தரனுடைய, அல்லலி னவலம் பெற்றான் மெய்யிற் பிரித்துச், செல்வ வாரணங் கொடுத்தோன் வானத்து, வளங்கெழு செல்வன்றன் மெய்யிற் பிரித்துத், திகழ்பொறிப் பீலி யணிமயில் கொடுத்தோன், இருந்து கோன் ஞமன்றன் மெய்யிற் பிரிவித், திருங்கண் வெள்யாட்

1. நற். 268. 2. பரி. 5.

டெழின்மறி கொடுத்தோன்[1]" என்றும் வருவனவற்றால் உணர்க. "மலைவான் கொள்கென உயர்பலி தூஉய்[2]" என் புழிப்போல, மேகங்கள் சூழ்ந்துகொண்ட மலையைச் சினந்தழித்த வேல் என்றுமாம். **மலைவான்** என்பதை வானீற்று வினையெச்சமாகக் கொண்டு உரைகூறுவது முண்டு. **அறிகுவது** என்பது, அறிந்து செய்யும் மறியறுத்தல் வெறியாடல் முதலியவற்றால் தலைவி மேனிவேறுபாடு நீங்குவது குறித்து நின்றது. **ஆல்,** அசை; **அம்ம,** உரையசை. **நலன்,** குறிப்புமொழியாய்த் தலைமகளது வேறுபாடு தோற்றுவித்தது.

வேலன் தாங்கி நிற்கும் வேல் மலையைக் கிழித்து வானத்துக்குக் காப்பு வழங்கும் வன்மையும் வினைத்திறமும் உடையதாயினும் இவளது கற்பின் திண்மைமுன் செல்லாது என்பாள், **மலைவான் கொண்ட சினைஇய வேலன்** என்றாள். இவட்குற்ற வேறுபாட்டை வேலன் எடுக்கும் கழங்கும் வெறியும் தீர்க்கும் வன்மையும் தகுதியு முடையவல்ல என்பது தோன்றக் **கழங்கின் அறிகுவது என்றால்** என்றும், இவற்றாலெல்லாம் நீங்காமல் இவளது மெய்ப்பட்டு நிற்கும் வேறுபாடு, தலைமகன்பால் கொண்ட தொடர்புவழித் தோன்றித் திகழும் கற்பறம் என்றற்கு **நின்ற இவள் நலம்** என்றும், எனவே, இவற்றைக் கைவிட்டுத் தலைமகன் வரின் அவற்கு மகட்கொடை நேர்வது நன்று என்றும் தோழி உரைத்தவாறும். **நன்றால்** என்றும் **அம்ம** என்றும் கூறியது வெறிமுதலிய வற்றின் பயனின்மையைச் சுட்டி நின்றன.

"களவல ராயினும்[3]" என்ற சூத்திரத்துக் "கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும், ஒட்டிய திறத்தாற் செய்திக்கண்ணும்" என்பதற்கு இதனைக் காட்டி, இது வேலன் கழங்குபார்த்தமை கூறிற்று என்பர் **நச்சினார்க்கினியர்.**

1. பரி. 5. 54-62. 2. புறம். 143. 3. தொல். பொ. 115.

249. பெய்ம்மணல் வரைப்பிற் கழங்குபடுத் தன்னைக்கு
முருகென மொழியும் வேலன் மற்றவன்
வாழிய விலங்கு மருவிச்
சூர்மலை நாடனை யறியா தோனே.

இது, வேலன் கூறிய மாற்றத்தை மெய்யெனக் கொண்ட தாய் கேட்பத் தலைமகட்குத் தோழி கூறியது.

உரை ; விளங்குகின்ற அருவிகளையுடைய அச்சம் பொருந்திய மலைநாடனை அறியானுய், புதுமணல் பரப்பிய விடத்தே கழங்கு வைத்து, "இவட்கு உண்டாய மெலிவின் காரணம் முருகன்" என் வேலன் அன்னைக்கு மொழிந்தானுக, அன்னையும் அதனை மெய்யெனக் கொண்டு அமைந்தாளாகலின், அவ்வேலன் வாழ்வானுக எ.று.

வெறியெடுத்தற்கு முன்னர் நிகழ்த்தும் ஆராய்ச்சியாய கழங்கு வைத்துக் காண்டல் மனைக்கண் நிகழ்தலின், அது பற்றி ஒப்பனை செய்யப்பட்ட மனையகம் என்றற்கு, **பெய்ம்மணல் வரைப்பு** என்றார்; "முன்னர்ப் பெய்ம்மணல் முற்றம்[1]" என்றதும் இக்கருத்துப்பற்றியே என்க. முருகென மொழிதல் வேலற்கு இயல்பு என்பது தோன்ற, **மொழியும்** என்றார். மொழியும் என்றது, "நிகழுங் காலத்து மெய்ந்நிலைப் பொதுச்சொல்[2]" லாகலின் இறந்த காலம் கொள்ளப்பட்டது. **சூர்**, அச்சம். **சூர்மலைநாடன்** என்பதற்கு அச்சம் தரும் தெய்வத்தையுடைய மலைநாடன் எனினுமாம். "வெறியுறு வனப்பின் வெய்துற்று நடுங்கும், சூர்மலை நாடன்[3]" என்றார் பிறரும்.

1. ஐங். 248. 2. தொல். சொல். 242. 3. குறுந். 105.

வேலன் இவட்கு நோய்செய்த மலைநாடனை யறியாது அறிவான் போலக் கழங்குப்படுத்து முருகு என மொழிந் தானாக அன்னை அதனை மெய்யெனக் கொண்டாள்; இஃதன்றோ அவள் அறியாமை இருந்தவாறு எனத் தாயுழை அறியாமையும் வேலனது பொய்ம்மையும் கூறி இகழ்ந்தவாறு. நாடன் செய்த நோயினை அவனது மலைக் கண் உறையும் அச்சந்தரும் தெய்வம் தந்ததாகப் பிறழ உணர்ந்து கொண்டு வேலன் உரைத்தனன் என்றுமாம். சூர்மலை நாடனைக் கூறித் தலைமகள் குடிக்குப் பழியும் அலரும் விளையாவகை முருகு என மொழிந்தானாகலின், **அவன் வாழிய** என்றாள். நோய் செய்தானை விடுத்து, அது செய்யாத முருகனைக் கூறிய குற்றத்திற்கு இரங்கு வாள், **அவன் வாழிய** என்றாள் எனினுமாம். **இலங்கும் அருவிச் சூர்மலை நாடன்** என்றது அறத்தொடுநிலைப் பகுதி யாய ஏதீடு உணர்த்தியவாறும். (௯)

250. *பொய்படு பறியாக் கழங்கே மெய்யே*
*மணிவரைக் கட்சி மடமயி லாலுநம்*
*மலர்ந்த வள்ளியங் கானங் கிழவோன்*
*ஆண்டகை விறல்வே ளல்லனிவள்*
*பூண்டாங் கிளமுலை யணங்கி யோனே.*

**இது தலைமகட்கு வந்த நோய் முருகனால் வந்தமை இக் கழங்கு கூறிற்றென்று வேலன் சொன்னான் என்பது கேட்ட தோழி அக்கழங்கிற்கு உரைப்பாளாய்ச் செவிலி கேட்குமாற்றால் அறத்தொடுநிலை குறித்துச் சொல்லியது.**

**உரை :** பொய்ம்மையிற்பட்டு மெய்ம்மையை அறிய **மாட்டாது ஒழிந்த கழங்கே, இவளுடைய பூணாரம் தாங்கிய இளமுலை வருந்தப் புல்லி நட்புற்றவன், மணிகள் நிறைந்த மலைச்சாரற் காட்டின்கண் மடப்பம் பொருந்திய மயில்கள் மகிழ்ந்து ஆலும், விரிந்த வள்ளிக்கொடிகள் நிறைந்த**

கானத்துக்கு உரியனாகிய ஓர் ஆண்டகையாகும்; வெற்றியினையுடைய கடவுளாகிய செவ்வேள் அல்லன் என அறிவாயாக எ. று.

கழங்கே, அணங்கியோன், கிழவோனாகிய ஆண்டகை, வேளல்லன் என அறிக எனச் சில சொற்பெய்து உரைக்க. அணங்கியோன் வேள்அல்லன், கிழவோனாகிய ஆண்டகை என முடிப்பினுமாம். **கட்சி**, காடு; "வேங்கை வீயுகும் ஓங்குமலைக் கட்சி, மயிலறி பறியா மன்னோ[1]" "நரைவுறு கட்சியின் நன்மயி லால, மலையுடன் வெரூஉம் மாக்கல் வெற்பன்[2]" எனச் சான்றோர் வழங்குதல் காண்க. **வள்ளியங்கானம்**, வள்ளிக்கொடிகள் காடுபோல் படர்ந்துள்ளமை பற்றி இவ்வாறு கூறப்பட்டது; "வாடா வள்ளியங் காடு படர்ந்தோரே[3]" என்றார் பிறரும். இனி, வள்ளிமலையைச் சார்ந்த காடு என்றுமாம். இப்பகுதி முதல் இராசராசன் காலத்தும் அவற்கு முன்பும் "சயங்கொண்ட சோழமண்டலத்துப் பெரும்பாணப்பாடி நாட்டுத் துய்ய நாட்டு வள்ளிமலைப் பற்று[4]" என்று கல்வெட்டுக்களில் வழங்கிவந்துள்ளது.

வேலனைப் பொய்யா வாய்மையன் என்று கூறி அவனைத் தருவித்து அவன் கழங்கு கொண்டு உரைப்பனவற்றை மதித்துப் பேணுவது மரபாதலின், ஈண்டு அவனது கழங்குரை பொய்த்தமை கண்டு வியந்து கூறுவாளாய்ப் **பொய்படுபு அறியாக் கழங்கே** என்றும், கழங்கினைப் பார்த்து கட்டுரைத்தற்குப் பொருளாவோன் இன்னான் என்பாள், **மணிவரைக் கட்சி மடமயில் ஆலும் மலர்ந்த வள்ளியங் கானங்கிழவோன்** என்றும், அவனே தலைமகளைக் களவிற் கூடி நட்புச் செய்து இப்போது இவட்கு இம்மெலிவை எய்துவித்தவன் என்பாள், **பூண்தாங்கு இளமுலை அணங்கியோன்** என்றும், அவன் மக்களினத்தில் உள்ள ஆடவன்

1. நற். 13. 2. அகம். 392. 3. குறுந். 216.
4. A. R. No. 96. of 1921.

என்றற்கு **ஆண்டகை** என்றும், அவனைத் தெய்வமாகிய முருகவேள் என்பது குற்றம் என மறுப்பாளாய், **விறல் வேள் அல்லன்** என்றும் உரைத்தாள். வேலன் அதனைத் தன் கூற்றுக மொழியாது கழங்கு கூறுவதாக மொழிதலின், கழங்கினை நோக்கித் தோழி இது கூறினள் என்க. மணிவரைக் கட்சியில் மயிலாடுவது கண்டு தலைமகளைத் தலைமகன் எதிர்ப்பட்டுக் கூடி நட்புச் செய்தான் என்பது குறிப்பாய்த் தோன்ற **மணிவரைக் கட்சி மடமயிலாலும்** என்றாள் ; இஃது **உண்மை செப்பல்** என்னும் அறத்தொடு

"நாற்றமும் தோற்றமும்[1]" என்ற சூத்திரத்து "அவள் விலங்குறினும் களம்பெறக் காட்டினும்" என்ற விடத்துக் களம்பெறக் காட்டியவழிக் கழங்கினை முன்னிலையாகக் கூறுவதற்கு இதனைக் காட்டுவர் **இளம்பூரணர் ;** கழங்கு பார்த்துழிக் கூறியது என்பர் **நச்சினார்க்கினியர்**[2]

**மடமயிலாயம்** என்றும், **வரைதரு வள்ளியங் கானம்** என்றும் பாடமுண்டு. (௰)

1. தொல். பொ. 112. 2. ஷை. ஷை. 114.

## 26. குன்றக்குறவன் பத்து.

இதன்கண் வரும் பாட்டுக்கள் பத்தும் **குன்றக் குறவன்** என்ற தொடரால் தொடங்கி நடத்தலின், அச் சிறப்புக் குறித்து இஃது இப்பெயர்த் தாயிற்று.

251. குன்றக் குறவ னார்ப்பி னெழிலி
நுண்ப லழிதுளி பொழியு நாட
நெடுவரைப் படப்பை நும்மூர்க்
கடுவர லருவி காணினு மழுமே.

**இது வரையாது வந்தொழுகும் தலைமகற்கு வரைவு வேட்ட தோழி கூறியது.**

**ப. உரை: நும்மூர்க் கடுவரல் அருவி காணினும் அழும்** என்றது, அது நின் மலையினின்றும் வீழ்கின்ற அருவி என்றுகொண்டு அதற்கு நின் கொடுமை கூறி இவள் அழும் எ.று.

குறவன் உழவு முதலாகிய வினைக்கு ஆர்ப்பின் அதற்கு இன்றி யமையாத நீரை நுண்மழை பொழியும் நாடனாகி வைத்தும் எம் வேட்கை அறிந்து அதற்குத் தக ஒழுகுகின்றிலை என்பதாம்.

**உரை:** குன்றத்துக்கண் வாழும் குறவன் தன் தமர் உடன் சூழ, மழைவேண்டிக் கடவுளைப் பரவுங்கால் ஆரவாரிப் பானாயின், அம் மழை நுண்ணிய பலவாகிய மிக்க பெயலைப் பொழியும் நாடனே, நெடிய வரையைச் சார்ந்த தோட்டங்களையுடைய நும்மூர்க்கட் செல்லும் விரைந்த செலவினையுடைய அருவியைக் காணினும், அது நின் மலையினின்றும் வீழ்கின்ற அருவி யென்று கொண்டு அழாநிற்பள் எ. று.

மழை வேண்டுங்காலத்துப் பெய்வித்தற்கும் வேண்டாக்காலத்து ஒழித்தற்கும் குறவர் கடவுளைப் பேணுதல் மரபென்பது, "மலைவான் கொள்கென வுயர்பலி தூஉய், மாரி யான்று மழைமேக் குயர்கெனக், கடவுட் பேணிய குறவர் மாக்கள் [1]" என்ற இவரது புறச்செய்யுளான் அறிக. **அழிதுளி** என்பது, ஈண்டு, "அழிபசி [2]" என்புழிப் போல மிக்க பெயல் என்னும் பொருட்டு. விளைபுலங்களில் மழைநீர் நிரம்புதற் பொருட்டுச் செய்துவைத்த காலும் வரம்பும் விளைபயனும் கெடப் பொழிதலின், **அழிதுளி** என்றார் என்க. "அகலிரு விசும்பகம் புதையப் பாஅய்ப், பகலுடன் கரந்த பல்கதிர் வானம், இருங்களிற் றினநிரை குளிர்ப்ப வீசிப், பெரும்பெயல் அழிதுளி பொழித லானது [3]" எனச் சான்றோர் கூறுதலானும் உணர்க. **கடுவரல்** விரைந்த செலவு; "கடுவரற் கான்யாறு [4]" என்றாற் போல.

இடையறா நீரொழுக்க முடைய அருவிகளையுடைய மலைநாடனாயினும் என் மாட்டுத் தன் தண்ணளியை இடையறாது செய்வானல்லன் என வருந்துகின்றாள் என்பாள், **கடுவரல் அருவி காணினும் அழுமே** என்றாள்.

குறவன் தனக்கு இன்றியமையாத தினை நீரின்மையால் வாடுதல் கண்டு, அவ்வாட்டங்கெடக் கடவுட் பேணி ஆர்த்தவிடத்து, எழிலி நுண்பல் அழிதுளி பெய்வது போல, நினக்குத் துப்பாகிய இவள் நலம், அலர் முதலிய வற்றால் வாடுதல் கண்டு யாம் நின்னை வேண்டியவிடத்து, நீ அவ்வலர் கூறுவார் வாயடங்க வரைந்துகொள்க என உள்ளுறுத்து உரைத்தவாறு உணர்க. நின் மலையிற் குறவன் ஆர்ப்பினைச் செய்து வேண்டும் மழை பெற்றுத் தன் விளைபயனை நுகர்தல் போல, இவளும் தன் நலங் கெடாது நின் அருளைப்பெற்று இடையறா இன்பம் நுகர்வாளாதல் வேண்டும் என்பதொரு நயமும் தோன்றியவாறு காண்க. **காணினும் அழுமே** என்றது **துன்பத்துப் புலம்பல்.** (க)

1. புறம். 143. 2. . 226. 3. அகம். 214.
4. ஷை. 18.

252. குன்றக் குறவன் புல்வேய் குரம்பை
மஞ்சா டிளமழை மறைக்கு நாடன்
புரையோன் வாழி தோழி விரைபெயல்
அரும்பனி யளைஇய கூதிர்ப்
பெருந்தண் வாடையின் முந்துவந் தனனே

இது வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் குறித்த பருவத்திற்கு முன்னே வந்தானாக உவந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.

**ப. உரை:** குறவனது புல்வேய் குரம்பைப் பொல்லாங்கினை இளமழை மறைக்கும் நாடன் என்றது பிரிவின்கண் தங்கட்கு வந்த துன்பத்தை இவன் மறைத்தது நோக்கிக் கூறியவாறு.

**உரை:** தோழி, குன்றத்துக்கண் வாழும் குறவனுடைய புல்லால் வேயப்பட்ட வீட்டினைப் புகைமுகிலாய் அசையும் இளமழை தாழ்ந்து கண்ணுக்குத் தோன்றாவகை மறைக்கும் நாடன், விரைந்த மழையையும், பொறுத்தற் கரிய பனியையும் கலந்து வீசும் கூதிர்ப்பருவத்துப் பெரிய தண்ணிய வாடைக்காற்று வருவதன்முன்னே தான் வந்தானாகலின், அவன் உயர்ந்தோனாய் வாழ்வானாக எ.று.

**புல்வேய்** குரம்பை, புல்லைக் கூரையாக வேய்ந்த வீடு. புல்லென்றது, மலைகளில் நீண்டு வளர்ந்திருக்கும் பைம்புல், சாய்க்கோரைப்புல்; இது மஞ்சம்புல் என்றும் எருவைப் புல்லென்றும் வழங்கும்; "எருவை நீடிய பெருவரைச் சிறுகுடி[1]" என்பதனால் அறிக. பனை தெங்கு முதலியனவும் புல்லென்னும் இனத்தைச் சேர்ந்தவையாகலின், அவற்றின் ஓலை வேய்ந்த வீடும் புல்வேய் குரம்பை எனப்படும். செல்வ ரல்லாத மிக்க எளியராகிய மக்கள் புல்வேய் குரம்பையில் வாழ்வர்; அது பற்றியே சான்றோர், "படலைப்

1. நற். 156.

பந்தர்ப் புல்வேய் குரம்பை நல்கூர் சீறூர்[1]" என்றும், "சிறப்பும் சீருமின்றிச் சீறூர், நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை [2]" என்றும் உரைப்பது காண்க. புகைபோல் திரண்டு செல்லும் வெண்முகில் மஞ்சு எனவும், கரும் புகைபோல் பரந்து சிறு சிறு மழைத்துளியைச் சிதறிச் செல்லும் மழைமுகில் இளமழை எனவும் வழக்கிலும் நூல்களிலும் காணப்படும். இவை மழைக்காலத் திறுதியில் தோன்றிப் பனிப்பருவத்திற் பெருகிப் பரவிநிற்கும்; "புகைபுரை அம்மஞ் சூர [3]" என்றும், "ஆடியல் இளமழைப் பின்றை, வாடையும் கண்டிரோ வந்துநின்றதுவே [4]" என்றும் வருவன காண்க. காற்றில் மிக நொய்தாய் மந்தந்து அசைந்து செல்லுதல் பற்றி, இதனை **ஆடியல் இளமழை** என்று கூறுவர். "ஆடியல் இளமழை சூடித் தோன்றும், பழந்தூங்கு விடரகம் [5]" என்றார் பிறரும்" "இளவாடை[6]" என வழங்குவ துண்மையின், "பெருந்தண் வாடை" என்றார்; தட்பமிகுதி தோன்ற, நாடன் வந்தனன் ஆகலின், புரையோன், வாழி எனக் கூட்டி முடிக்க.

"பனியெதிர் பருவமும் உரித்தென மொழிப [7]" என்றவிடத்து, "உரித்து என்றதனல் கூதிர் பெற்ற யாமமும் முன்பனி பெற்று வரும் எனக் கொள்க;" எனவே, பனியும் கூறப்பட்டது. கூதிர்க்கண், "இருள் தூங்கித் துளி மிகுதலில் சேறல் அரிதாகலானும், பாஉட் கங்குலிற் பரந்துடன் வழங்காது, மாவும் புள்ளும் துணையுடன் இன்புற்று வதிதலின் காமக் குறிப்புக் கழியவே பெருகுதலானும் [8]" **மூந்து வந்தனன்** என்றும், இவ்வாறு காலத்தின் சிறப்பும், காதலியாகிய நினக்குத் தான் வாராதொழியின் உளதாகும் வருத்தமும் ஒப்பு நோக்கிப் போந்தவன் பெரிதும் நயனுடையான் ஆகலின், **புரையோன்** என்றும், **வாழி** என்றும் கூறினள். "புரைய மன்ற புரையோர் கேண்மை[9]" என்பது காண்க.

---

1. அகம். 87.　2. அகம். 369　3. அகம். 97.
4. நற். 229.　5. அகம். 271.　6. நற். 364.
7. தொல். பொ, 7.　8. தொல். பொ. 6. உரை.　9. நற். 1.

குறவனுடைய புல் வேய்ந்த குரம்பையின் புன்மை புலனாகாவாறு இளமழை மறைக்கும் நாடன் என்றது, தன் பிரிவின்கண் தலைமகட்கு உண்டாகிய மெலிவு பிறர்க்குப் புலனாகாவாறு குறித்த பருவம் வருமுன்பே வந்து தலைமகன் மறைத்த சிறப்பு நோக்கி என்க. இஃது அறனை

**மன்றூடு இனமழை** என்றும் பாடமுண்டு. "கிழவோட்கு உவமம் ஈரிடத்து உரித்தே[1]"என்பதன் உரையில் இதனைக் காட்டி, "இக் குறிஞ்சிப் பாட்டினுள் வறுமை கூர்ந்த புல்வேய் குரம்பையை மழை புறமறைத்தாற்போல வாடை செய்யும் நோயைத் தீர்க்க வந்தா னென்று உள்ளுறை உவமம் செய்தவாறு கண்டுகொள்க" என்பர் **பேராசிரியர்.** மேலும், அவர், இதன்கண், **பெருந்தண் வாடையின் முந்து வந்தோன்** என்பது பிரிவன்றாகலின் **ஈரிடம்** என்ற (பாடம் கோட)லே வலிதென்பது என்பர். (௨)

253. குன்றக் குறவன் சாந்த நறும்புகை
தேங்கமழ் சிலம்பின் வரையகங் கமழும்
கானக நாடன் வரையின்
மன்றலு முடையள்கொ றோழி யாயே.

இது வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் வரைவோடு புகுதராநின்றான் என்பது தோழி கூறக் கேட்ட தலைமகள் அவட்குச் சொல்லியது.

ப. உரை: தேன் நாறுகின்ற மலைக்கண்ணே குறவன் சாந்த நறும்புகை கமழும் என்றது நம் மனைக்கண்ணே செய்கின்ற சிறப்புக்கு மேலே மணவினையால் அவர் செய்யும் சிறப்பு மிகும் .... வண்ணம் வினைப்பாள் கொல் எ. று.

1. தொல். பொ. 304.

**உரை:** தோழி, குன்றத்துக்கண் வாழும் குறவன் எழுப்பிய சந்தனக்கட்டையின் நறிய புகை தேன் நாறு கின்ற சிலம்பின் பக்கமலையகத்தே மணம் வீசுங் காடுகளை யுடைய நாடன் போந்து வரைந்து கொள்வா னாயின், நம் அன்னை தன் மனையின் கண்ணும் ஒரு வதுவைச்சிறப்புச் செய்தலை உடையளாவளோ? கூறுக, எ. று.

என்றது, கானகநாடன் போந்து நம்மை வரைந்து கொள்ளுங்கால், நம் அன்னை வேறும் ஒரு மணவினையால் அவர் செய்யுஞ் சிறப்பினும் மிக்க சிறப்புச் செய்தலை உடையளாவளோ? அன்றி, தன் மனைக்கட் செய்யும் சிறப்பினால் அவர் சிறப்பு மிகுமாறு செய்வளோ? யாதோ? யான் அறியேன் என்பதாம்.

**சாந்த நறும்புகை,** சந்தனக் கட்டைகளை எரித்தலால் எழும் புகை. பாரியது பறம்பைப் பாடுங்கால், இந் நூலாசிரியர், இக்கருத்தே தோன்ற, "குறத்தி மாட்டிய வறற்கடைக் கொள்ளி, ஆர மாதலின் அம்புகை யயலது, சாரல் வேங்கைப் பூஞ்சினை கமழும் பறம்பு[1]" என்பது காண்க.

தலைமகன் வரைவொடு வந்தமை தோழி கூறக்கேட்டு மகிழ்ந்த உள்ளத்தளாய்த் தலைவி கூறுதலின், **கானக நாடன் வரையின்** என்றும், வரைவுக்கு உடன்படுதலோடு அமையாது மணநிகழ்ச்சியை இங்கே நிகழ்த்துதற்கும் விருப்ப முடையளாவள் என்பது தோன்ற, **மன்றலும் உடையள் கொல்** என்றும் கூறினாள்.

நம் அன்னை எனக்கு வதுவை நன்மணம் தன் அகத்தே நடைபெறுவித்தலை விரும்பி, கானகநாடன் வரைந்து கொண்ட காலையும், அவனின் மிக்க சிறப்புச் செய்யும் கருத்தின ளாயினள் என்பாள், **மன்றலும் உடையள்கொல் தோழி யாயே** என்றாள். "எம்மனை முந்துறத் தருமோ, உய்க்குமோ, யாதவன் குறிப்பே[2]" என்றும்,

1. புறம். 108. 2. அகம். 195.

"நும்மனைச் சிலம்பு கழீஇ யயரினும், எம்மனை வதுவை நன்மணம் கழிகெனச் சொல்லின் எவனோ [1]" என்றும் வருவனவற்றால், நற்றாய் தன் மகட்கு வதுவைச் சிறப்புத் தன்னகத்தே நிகழ்த்தும் விருப்ப முடையளாதல் பெறப் படும்.

தேங்கமழ் சிலம்பின் வரையக மெல்லாம் குறவன் சுட வெழுந்த சந்தனநறும்புகையின் மணம் கமழும் நாடாதலால், நம் மனைக்கட் செய்யப்படும் சிறப்புக் களினும், மணவினையால் தான் செய்யும் சிறப்பு மிகச் செய்வன் என்றவாறும். )௩)

254. குன்றக் குறவ னார மறுத்தென
நறும்புகை சூழ்ந்து காந்த ணாறும்
வண்டிமிர் சுடர்நுதற் குறுமகள்
கொண்டனர் செல்வர்தங் குன்றுகெழு நாட்டே

**இஃது உடன்போக்கு உடன்பட வேண்டிய தோழி தலை மகட்குச் சொல்லியது.**

**உரை:** குன்றத்துக்கண் வாழும் குறவன் சந்தன மரத்தை அறுத்துச் சுட்டானாக, அதனுடைய நறுவிய புகை சூழ்ந்து காந்தள் மலர்களோடு மணம் கமழும், வண்டுகள் ஒலிக்கும் ஒளி பொருந்திய நுதலினையுடைய இளையமகளே, நின்னைத் தம் குன்றுகள் பொருந்திய நாட் டிற்கு உடன்கொண்டு செல்லத் துணிந்தன ராகலின், நீ நாணாது அதற்கு உடன்பட்டு எழுவாயாக எ. று.

சந்தனத்தின் புகையும் காந்தள் மலரின் மணமும் ஒருங்கு கமழ்தல் தோன்ற **நறும்புகை சூழ்ந்து காந்தள் நாறும்** என்றார். நறும்புகை சூழ்ந்து நாறும், காந்தள்

1. ஐங். 399.

நாறும் என் இயைக்க. இனி, சூழ்ந்து என்பதனைச் சூழ என்பதன் திரிபு எனக் கொண்டு, நறும்புகை சூழ, காந்தள் நாறும் நுதல் என இயைத்தலும் ஒன்று. நுதல் காந்தள் நாறும் என்பதைப் பிறரும், "காந்தள் மென்பிணி முகையவிழ்ந் தலர்ந்த, தண்கமழ் புதுமலர் நாறும் நறு நுதற்கே[1]" என்பது காண்க. மலரின் மணம் கமழும் நுதலாதலின், அதனை வண்டு மொய்த்து அரற்றுவ தாயிற்று என்பார், **வண்டிமிர் சுடர் நுதல்** என்றும், இயற்கை யறிவின் செவ்விய ஒளி திகழ்வதுபற்றிச் **சுடர் நுதல்** என்றும் கூறினர்; "அறிவும் அருமையும் பெண் பாலான[2]" என்பர் **ஆசிரியர்.**

உடன்போக்குத் துணிந்தவன் செல்லுதல் ஒருதலை யாகலின் **செல்வர்** என்றாள். நின் தமர் மகட்கொடை மறுத்தமையின், வேறே செயல்வகை இன்மையான் காதலர் தம்மோடு கொண்டு தலைக்கழிதலைத் துணிந்து வந்தன ரென்பதற்கு **கொண்டனர் செல்வர்தம் குன்றுகெழு நாட்டே** என்றாள். உள்ளுறையால் விளைவு கூறித் தேற்று கின்றா ளாகலின், நாணழிவு நினைந்து வருந்தற்க என்பது குறிப்பாற் பெறவைத்தாள்.

குன்றக்குறவன் சந்தன மரத்தை அறுத்துக் கொணர்ந்து சுடுதலால் எழுந்த புகை காந்தளின் மணத்தை நாற வண்டுகள் ஆரவாரிக்கும் என்றது, தலை மகன் நின்னை இவணின்று உடன் கொண்டு சென்று தன் மனைக்கண் வதுவை நன்மணம் அயரும் சிறப்பைத் தமர் கேட்டு மகிழ்வ ரென உடன்படுத்தியவாறும். (௪)

*255. குன்றக் குறவன் காதன் மடமகள்*
*வரையர மகளிர்ப் புரையுஞ் சாயலள்*
*ஐய ளரும்பிய முலையள்*
*செய்ய வாயினள் மார்பினள் சுணங்கே.*

1. அகம். 238. 2. தொல். பொ. 209.

**இது நின்னாற் காணப்பட்டவள் எத்தன்மையள் என்ற பாங்கற்குத் தலைமகன் சொல்லியது.**

**உரை:** குன்றத்துக்கண் வாழும் குறவனுடைய அன்புடைய மகள், வரைக்கட் போந்தாடும் அரமகளிர் போலும் சாயலும், அழகும், மலரரும்பு போலும் முலையும், சிவந்த வாயும், தேமல் படர்ந்த மார்பும் உடையள்; ஆகலின், நீ அவளைக் காணின் என்னைக் கழறி யுரையாய் எ. று.

குடிப்பிறப்பும் தலைமையும் தோன்றக் **குன்றக் குறவன் காதல் மடமகள்** என்றார். மடமகள், சாயலள், ஐயள், முலையள், வாயினள், மார்பினள் ஆவள் என முடிக்க. **ஐ**, அழகு. ஏனைமகளிர் கண்டு வியக்கத்தக்க அழகுடைமை பற்றி **ஐயள்** என்றார். காமச்செவ்வி எய்திய மகளிர்க்கு மார்பின்கண் பரந்து தோன்றும் தேமல் **சுணங்கு** எனப் பட்டது. அரும்பு போல்வதனை அதன் வினைப்படுத்து **அரும்பிய முலையள்** என்றார். ஆகலின் முதலியன குறிப்பெச்சம்.

குன்றக் குறவன் மகள் தன்னால் காதலிக்கப்படும் மடப்பமும் காமச்செவ்வியு முடையள் என்பது தோன்றக் **காதல் மடமகள்** என்றும், இயற்கைப் புணர்ச்சி பெற்ற விடத்து, அவள் தன் ஆயவெள்ளம் வழிபட்ச் சென்று சேரக் கண்டு அவளுடைய அருமையையும், ஆயவெள்ளத்தின் மிகுதியையும் நோக்கிப் பெறலரியள் என எண்ணி மயங்கினானாகலின் **வரையர மகளிர்ப் புரையும் சாயலள்** என்றும்.

அருமைக்கு வரையர மகளிரைக் கூறுதல் மரபு; பிறரும், "கெடாஅ நல்லிசைத் தென்னன் தொடாஅ, நீரிழி மருங்கிற் கல்லளைக் கலந்த அவ்வரையர மகளிரின் அரியள் [1]" என்பது காண்க. சாயற்கு மயிலைக் கூறுமையும் பற்றி யென அறிக.

1. அகம். 342.

முலையும் வாயும் மார்பும் கூறியது, தன் பெருவேட்கையை உணர்த்தற்கு. வரையர மகளிர் போலும் சாயலள் என்றது வரையரமகளிர் விளையாட்டயரும் மலைப்பக்கமென **இடமும்**, **அரும்பிய முலையள், செய்ய வாயினள், மார்பினள் சுணங்கே** என்றது **இயலும்** கூறிய வாறு. இயற்கைப்புணர்ச்சி எதிர்ப்பாட்டின்கண், தான் அவளை மக்களினத்து மகளோ, தெய்வமகளோ என ஐயுற்றுத் தெளிந்தா னாகலின், முதற்கண் **குறவன் காதன் மடமகள்** என்றும், தெய்வமகளோ என மயங்குதற்குக் காரணமாயிருந்த சாயலைப் பின்னர், **வரையர மகளிர்ப் புரையுஞ் சாயலள்** என்றும் கூறினான் எனக் கொள்க. (௫)

*256. குன்றக் குறவன் காதன் மடமகள்*
*வண்டுபடு கூந்தற் றண்டழைக் கொடிச்சி*
*வளையண் முளைவா ளெயிற்றள்*
*இளைய ளாயினு மாரணங் கினளே.*

**இது நீ கூறுகின்றவள் நின்னை வருத்தும் பருவத்த ளல்லள் என்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.**

**உரை:** குன்றத்துக்கண் வாழும் குறவனது அன்புடைய மடப்பம் பொருந்திய மகள் வண்டுகள் மொய்க்கும் கூந்தலையும் குளிர்ந்த தழையையு முடைய கொடிச்சியாவாள்; அவள் வளை அணிந்து முளைபோல் ஒளிவிடும் பற்களையுடைய இளையவ ளாயினும் கண்டார்க்குத் தடுத்தற்கரிய வருத்தத்தைச் செய்யும் அணங்கேயாவள் எ. று.

**கொடிச்சி,** குறிஞ்சிநிலத்து மகளிர்க்குப் பெயர்; "தேனுறு கதுப்பின் கொடிச்சியர் தந்தை[1]" என்றும், "குறவர் மகளிரேம் குன்றுகெழு கொடிச்சியேம்[2]" என்றும்

1. அகம். 58. 2. நற். 276.

கூறுதல் காண்க. **முளைவாள் எயிற்றள்** என்ற விடத்து முளை கூர்மையும், வாள் ஒளியும் குறித்தன. வளையும் எயிறும் இளமை விளங்க நின்றன. அணங்குபோல் கண்டார்க்கு வருத்தம் செய்வதுபற்றி **அணங்கினள்** என்றார். "ஆயும் அறிவின ரல்லார்க்கு **அணங்கு** என்ப [1]" என்பதனுல் இது பொருளாதல் தெளிக. உம்மை, தெரிநிலை; ஏகாரம், தேற்றம்.

கூந்தல் முடித்தல், தழையுடுத் தணிதல், மொழி நிரம்புதல் முதலியன இல்லாத இளம்பருவத்தள் எனத் தலைமகளது இளமை கூறித் தன்னை மறுக்க தோழிக்கு, "நன்மல ராய்ந்தணியுங் கூந்தலும், மேதக்க தழை யணியும் மதுகையும் உடையளாயினுளை" வருத்தும் பருவத்த ளல்லள் எனவ் ஆகா தென்பான், **வண்டுபடு கூந்தல் தண்டழைக் கொடிச்சி** என்ருன். மேலும், முளைவாள் எயிறும், இளமையுமுடையள் என்று தோழி கூறியதனையே கொண்டு, அப்பெற்றிய ளாயினும், நமக்கு உரித்தல்லாத அணங்குதற் றன்மை மிக்குடையளாய்த் தன்னுற் காணப்பட்டாரை வருத்துமாறு வல்லளாயினுள் என்பான், **இளைய ளாயினும் ஆரணங்கினளே** என்ருன்.

இது வருத்தும் பருவத்தளல்லள் என்ற தோழிக்குக் கூறியது என்பர் **நச்சினர்க்கினியர்;** [2] இனி, **இளம்பூரணர்,** "பண்பிற் பெயர்ப்பினும் [3]" என்பதற்கு இதனைக் காட்டினராக, "இஃது இளையள் எனப் பெயர்த்துழித் தலைவன் கூறியது [4]" என்ருர் **நச்சினர்க்கினியார்.** (௬)

257. குன்றக் குறவன் கடவுட் பேணி
இரந்தனன் பெற்ற வெள்வளைக் **குறமகள்**
சேயரி நெடுங்கண் கலிழச்
சேயநாற் றெய்யநீ பிரியு நாடே.

1. குறள். 918. 2. தொல். பொ. 21. 3. ஷை. ஷை. 100.
4. ஷை. ஷை. 103.

இது வரைவிடை வைத்துப் பிரிவல் என்ற தலைமகற்குத் தோழி உடன்படாது கூறியது.

**உரை:** குன்றத்து வாழும் குறவன் தான் கடவுளை இரந்து வழிபட்டுப் பெற்ற, விளங்குகின்ற வளை அணிந்த இளையவளாகிய இவளுடைய சிவந்த அரி பரந்த நீண்ட கண்கள் நீர் சொரியுமாறு, நீ பிரிந்து செல்லும் நாடு சேய்மைக்கண்ண தாகலின், இவள் நின் பிரிவை ஆற்றாள் என்பதறிக எ. று.

குறவரிடையே பெண்மக்கட் பேறு அரிதாகலின், அவ் வருமை தோன்றக் **கடவுட் பேணி இரந்தனன் பெற்ற குறுமகள்** என்றார். ஆடவருள் ஆண்மை வளம் மிக்குற்றார்க்குப் பெண்மகப்பேறு அரிதாம் என்பது இன்றைய விஞ்ஞான நெறியில்[1] கண்டது. பிரிவின்கண் ஆற்றாமையை முற்படக் காட்டுதலின், **நெடுங்கண் கலிழ** என்று எடுத்துரைத்தார். வரைவிடைவைத்த பிரிவு சேய்மைக் கண் செல்லும் செலவின் மேலதாதல் அறமன்மையின், சேயதென அதனை ஏதுவாக்கிக் கூறினார். **தெய்ய,** அசை

தந்தை தவம் செய்து பெற்றுத் துன்ப மறியாமை வளர்த்தான் என்பாள், **குன்றக் குறவன் கடவுட் பேணி, இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்** என்றும், எனவே, அவள் சிறிது துன்பம் எய்தினும் பொறாள் என்றற்குச் **சேயரி நெடுங்கண் கலிழ** என்றும், நீ பிரிந்து செல்லின் விரைவின் மீளுதல் ஆகா தாகலின் இவள் ஆற்றாது இறந்து படுவாள் என்பாள், **சேயதால் தெய்ய நீ பிரியும் நாடே** என்றும் கூறினாள். **சேயரி நெடுங்கண் கலிழ** என்றது **துன்பத்துப் புலம்பல்.**

**ஆயரி நெடுங்கண்** என்றும் பாடமுண்டு. (எ)

1. Dr. Mark Henry Frank: Eugenics and Sex Relations for Men and Women. P. 103-5.

258. குன்றக் குறவன் காதன் மடமகள்
அணிமயி லன்ன வசைநடைக் கொடிச்சியைப்
பெருவரை நாடன் வரையு மாயின்
கொடுத்தனெ மாயினோ நன்றே
கெடுத லானாது நன்னுத றுயரே

வரைவு வேண்டிவிட மறுத்துழித் தோழி தமர்க்குரைப்பாளாய்ச் சொல்லியது; வரையாது வந்தொழுகும் தலைமகற்குத் தோழி அவன் மலைகாண்டலே பற்றாகத் தாங்கள் உயிர் வாழ்கின்றமை தோன்றச் சொல்லிய தூஉமாம்[1].

**உரை:** குன்றக் குறவனுடைய அன்புடைய மடமகளாகிய அழகிய மயில் போன்ற, அசைந்த நடையினையுடைய கொடிச்சியைப் பெரிய மலைநாடன் வரைந்து கொள்வானாயின், அவற்கு நாம் மகட்கொடை நேர்ந்தேமாயின் நன்றாம்; இன்றேல், நல்ல நெற்றியையுடைய இவளுடைய துயர் கெடாது மிகுமாகலான் எ. று.

கொடி போலும் மகளிர்க்கு நடையில் அசைவு இயல்பாய் அமைந்து அழகு செய்தலால், **அசைநடைக் கொடிச்சி** என்றார். "அந்திலோதி அசையியற் கொடிச்சி[2]" என்று பிறரும் கூறுதல் காண்க. ஓகாரம் அசைநிலை.

காதல் மாட்சிமைப்படுவது குறித்துத் தலைமகன் களவே விரும்பி வரையாது ஒழுகினுகை, தலைமகள் நுதல் பசந்து மேனி வேறுபட்டு எய்திய துயரத்தை, **நன்னுதல் துயர்** என்றும், தலைமகனது பெருமையும் தகுதியும் தோன்ற, **பெருவரை நாடன் வரையும் ஆயின்** என்றும்,

---

1. இது வரைவு வேண்டிவிட மறுத்தழித் தமர்க்குரைப்பாளாய் வரையாது வந்தொழுகும் தலைமகற்குத் தோழி அவன் மலைகாண்டலே பற்றாகத் தாங்கள் உயிர் வாழ்கின்றமை தோன்றச் சொல்லியது என அச்சுப்படியிற் காணப்படுகிறது. 2. குறுந். 214.

அவன் வரைவு வேண்டி விட்டவழி அவனது பெருமையும் இவளது துயரும் நோக்காது தமர் மகட்கொடை மறுப்பது நன்றன்று என்பாள், **கொடுத்தனெ மாயினோ நன்று** என்றும், மறுப்பின், இவள் துயர் கெடுவதின்றி இவட்கு இறந்துபாடு எய்துவிப்பது ஒருதலை என்பாள் **கெடுதல் ஆனாது** என்றும் கூறினாள். "சான்றோர் வருந்திய வருத்த மும் நுமது வான்றோய் வன்ன குடிமையும் நோக்கித் திருமணி வரன்றும் குன்றங் கொண்டு இவள் வருமுலை யாகம் வழங்கினோ நன்றே[1]" என்று பிறரும் கூறுவது காண்க.

இரண்டாவதாய் நிற்கும் துறை பொருளாயின், தலை மகன் விரைந்து வரைதல் வேண்டும் என்றற்கு **வரையு மாயின்** என்றும், தமர் மகட்கொடை மறாது நேர்வர் என்பது தோன்றக் **கொடுத்தனெ மாயினோ நன்று** என்றும், வரைவு நீட்டித்தலால் தலைவியது துயர் கெடாது மிகுவதாயிற்று என்றற்குக் **கெடுதலானாது நன்னுதல் துயர்** என்றும் கூறியவாறாகக் கொள்க. வரையாதொழுகும் தலைவனைப் **பெருவரை நாடன்** எனச் சிறப்பித்தது, நாடனது வரை தன் பெருமையால் தலைவிக்குக் காட்சி தந்து அதுவே பற்றுக்கோடாக வாழச்செய்த மாண்பு பாராட்டி என்க.

**இன்னு மாறாது நன்னுதல் துயரே** என்றும் பாட முண்டு. தலைமகன் வரைவு வேண்டி விட்டமை கண்ட பின்னும் துயர் அமையாது என்றும், **மாறாது** என்ற பாடத் துக்குத் துயர் நீங்காதாயிற்று என்றும் உரைக்க.

இனி, "நாற்றமும் தோற்றமும்[2]" என்ற சூத்திரத்து "அவள் வரைவு மறுப்பினும்" என்புழி நிகழும் கூற்றுக்கு இதனைக் காட்டுவர் **இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும்.**

1. தொல். பொ. 114. மேற் 2. தொல். பொ. 112.

259. குன்றக் குறவன் காதல் மடமகள்
மன்ற வேங்கை மலர்சில கொண்டு
மலையுறை கடவுட் குலமுதல் வழுத்தித்
தேம்பலிச் செய்த ஈர்நறுங் கையள்
மலர்ந்த காந்த ளாறிக்
கலிழ்ந்த கண்ணளெம் மணங்கி யோளே.

**வரையத் துணிந்த தலைமகன் வரைவு முடித்தற்குத் தலைமகள் வருந்துகின்ற வருத்தம் தோழி காட்டக் கண்டு இனி அது கடிதின் முடியுமென உவந்த உள்ளத்தனாய்த் தன்னுள்ளே சொல்லியது.**

**உரை:** குன்றக் குறவனுடைய அன்புற்ற மடமகள் மன்றத்து நின்ற வேங்கைமலருட் சிலவற்றைக் கொண்டு மலையின்கண் உறையும் கடவுட்கு எடுத்த கோயிலில் எழுந்தருளும் முதற்பொருளாகிய இறைவனை வழிபட்டு இனிய பலியிட்டுக் குளிர்ந்த நறிய கையினையும், மலர்ந்த காந்தளின் மணம் வீசும் நீர் சொரிந்த கண்ணினையு முடையளாய் எம்மை வேட்கை மிக்கு வருந்தச் செய்தாள்; ஆகலின் இவளை இனி விரைவில் வரைந்து கோடல் இயலும், காண் எ. று.

மடமகள் வழுத்திக் கையளாய்க் கண்களால் அணங்குகின்றாள் என இயைக்க. ஊர்நடுவே அமைந்த மன்றத்தின்கண் நிற்பதுபற்றி வேங்கை மரத்தை **மன்ற வேங்கை** என்றார். **கடவுட்குலம்,** கோயில். இது தேவகுலம் எனவும் வழங்கும்; "ஊரானோர் தேவகுலம்" என்றாற்போல. **முதல்** என்றது கோயிலின்கண் எழுந்தருளும் முதற்பொருளாகிய மலைக்கடவுள். தேனாகிய பலி தேம்பலி எனப்பட்டது. வேங்கைப்பூ, பூப்பலியும், குறவர் ஈட்டிய தேன் தேம்பலியு மாயின. தேன் சொரிந்து பூவிட்டு வழிபட்ட

மையின், கையை **ஈர்நறுங்கை** என்றார். கூந்தற்குக் காந்தள் மணம் இயற்கை; "காந்தள் நாறும் குறுமகள்[1]" என்றமை காண்க.

மனமுருகி வழிபட்டமையின், கண்கள் நீர் சொரிந்தமை பற்றிக் **கலிழ்ந்த கண்ணள்** என்றார்.

குறவரது கடவுள் மலையில் உறையும் என்பது, "அணங்கொடு நின்றது மலைவான் கொள்கெனக் கடவுள் ஓங்குவரை பேண்மார்[2]" என்பதனாலும் அறிக.

பிரியேன் எனச் சூளுறவு செய்தவன், பிரிந்து தன்னை ஆற்றாமையால் மெலியச் செய்தமையான், அவற்குத் தீங்குவருமென்று அஞ்சிக் கடவுளைப் பரவுகின்றாளாகலின், **கடவுட் குலமுதல் வழுத்தித் தேம்பலிச் செய்த ஈர்நறுங் கையள், மலர்ந்த காந்தள் நாறிக் கலிழ்ந்த கண்ணள்** என்றாள். கற்புடைய மகளிர் பிற தெய்வம் தொழும் கடப்பாட்டின ரல்லராயினும், பிரியேன் என்றவன் பிரிந்த கொடுமை பற்றி "மன்ற மராஅத்த பேமுதிர் கடவுள், கொடியோர்த் தெறூஉ மென்ப யாவதுங் கொடிய ரல்லர் எங் குன்றுகெழு நாடர்[3]" என வேண்டுதலின் அமைந்ததாம். அன்றி, வரையாது வைத்துப் பிரிந்தவன் குறித்த காலத்தில் வந்தெய்தி விரைவில் வரைதல் வேண்டுமெனக் கடவுட்குப் பலியிட்டுப் பரவினள் எனினு மாம். "யாமும், வல்லே வருக வரைந்த நாளென, நல்லிறை மெல்விரல் கூப்பி, இல்லுறை கடவுட் கோக்குதும் பலியே[4]" என்றார் பிறரும். தலைப்பெய்த விடத்தன்றி மற்றைய போதுகளில், அவள் நினைவு தன் மனத்தே தோன்றி வேட்கை மிகுவித்து வருத்துதலின், **அணங்கியோள்** என்றும், என்பொருட்டு இயன்ற காதலால் கடவுட் குலமுதல் வழுத்தி வழிபடும் அவள் உடன்போக்கு வலிப்பினும் உடன்படுவா ளென்றும், அதனால் தான் அவளை வரைதல் விரைவின் முடியு மென்றும் மகிழ்கின்றான் என்பதாம். (கூ)

1. ஐங். 254. 2. நற். 165. 3. குறுந். 87.
4. அகம். 282.

259. குன்றக் குறவன் காதன் மடமகள்
மன்ற வேங்கை மலர்சில கொண்டு
மலையுறை கடவுட் குலமுதல் வழுத்தித்
தேம்பலிச் செய்த வீர்நறுங் கையள்
மலர்ந்த காந்த ணாறிக்
கலிழ்ந்த கண்ணளெம் மணங்கி யோளே.

**இது வரையத் துணிந்த தலைமகன் வரைவு முடித்தற்குத் தலைமகள் வருந்துகின்ற வருத்தம் தோழி காட்டக் கண்டு இனி அது கடிதின் முடியுமென உவந்த உள்ளத்தனாய்த் தன்னுள்ளே சொல்லியது.**

**உரை:** குன்றக் குறவனுடைய அன்புற்ற மடமகள் மன்றத்து நின்ற வேங்கைமலருட் சிலவற்றைக் கொண்டு மலையின்கண் உறையும் கடவுட்கு எடுத்த கோயிலில் எழுந்தருளும் முதற்பொருளாகிய இறைவனை வழிபட்டு இனிய பலியிட்டுக் குளிர்ந்த நறிய கையினையும், மலர்ந்த காந்தளின் மணம் வீசும் நீர் சொரிந்த கண்ணையு முடைய ளாய் எம்மை வேட்கை மிக்கு வருந்தச் செய்தாள்; ஆகலின் இவளை இனி விரைவில் வரைந்து கோடல் இயலும், காண் எ. று.

மடமகள் வழுத்திக் கையளாய்க் கண்களால் அணங் கினாள் என இயைக்க. ஊர்நடுவே அமைந்த மன்றத்தின் கண் நிற்பதுபற்றி வேங்கை மரத்தை **மன்ற வேங்கை** என்றார். **கடவுட்குலம்,** கோயில். இது தேவகுலம் எனவும் வழங்கும்; "ஊராளோர் தேவகுலம்" என்றாற்போல. **முதல்** என்றது கோயிலின்கண் எழுந்தருளும் முதற்பொரு ளாகிய மலைக்கடவுள். தேனாகிய பலி தேம்பலி எனப் பட்டது. வேங்கைப்பூ, பூப்பலியும், குறவர் ஈட்டிய தேன் தேம்பலியு மாயின. தேன் சொரிந்து பூவிட்டு வழிபட்

மையின், கையை **ஈர்நறுங்கை** என்றார். கூந்தற்குக் காந்தள் மணம் இயற்கை; "காந்தள் நாறும் குறுமகள்[1]" என்றமை காண்க.

மனமுருகி வழிபட்டமையின், கண்கள் நீர் சொரிந்தமை பற்றிக் **கலிழ்ந்த கண்ணள்** என்றார்.

குறவரது கடவுள் மலையில் உறையும் என்பது, "அணங்கொடு நின்றது மலைவான் கொள்கெனக் கடவுள் ஓங்குவரை பேண்மார்[2]" என்பதனாலும் அறிக.

பிரியேன் எனச் சூளுறவு செய்தவன், பிரிந்து தன்னை ஆற்றாமையால் மெலியச் செய்தமையான், அவற்குத் தீங்குவருமென்று அஞ்சிக் கடவுளைப் பரவுகின்றாளாகலின்; **கடவுட் குலமுதல் வழுத்தித் தேம்பலிச் செய்த ஈர்நறுங் கையள், மலர்ந்த காந்தள் நாறிக் கலிழ்ந்த கண்ணள்** என்றாள். கற்புடைய மகளிர் பிற தெய்வம் தொழும் கடப்பாட்டின ரல்லராயினும், பிரியேன் என்றவன் பிரிந்த கொடுமை பற்றி "மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள், கொடியோர்த் தெறூஉ மென்ப யாவதுங் கொடிய ரல்லர் எங் குன்றுகெழு நாடர்[3]" என வேண்டுதலின் அமைந்ததாம். அன்றி, வரையாது வைத்துப் பிரிந்தவன் குறித்த காலத்தில் வந்தெய்தி விரைவில் வரைதல் வேண்டுமெனக் கடவுட்குப் பலியிட்டுப் பரவினள் எனினுமாம். "யாமும், வல்லே வருக வரைந்த நாளென, நல்லிறை மெல்விரல் கூப்பி, இல்லுறை கடவுட் கோக்குதும் பலியே[4]" என்றார் பிறரும். தலைப்பெய்த விடத்தன்றி மற்றைய போதுகளில், அவள் நினைவு தன் மனத்தே தோன்றி வேட்கை மிகுவித்து வருத்துதலின், **அணங்கியோள்** என்றும், என்பொருட்டு இயன்ற காதலால் கடவுட் குலமுதல் வழுத்தி வழிபடும் அவள் உடன்போக்கு வலிப்பினும் உடன்படுவாளென்றும், அதனால் தான் அவளை வரைதல் விரைவின் முடியுமென்றும் மகிழ்கின்றான் என்பதாம். (க)

1. ஐங். 254. 2. நற். 165. 3. குறுந். 87.
4. அகம். 282.

260. குன்றக் குறவன் காதன் மடமகள்
மென்றோட் கொடிச்சியைப் பெறற்கரிது தில்ல
பைம்புறப் படுகிளி யோப்பலள்
புன்புல மயக்கத்து விளைந்தன தினையே.

இது பகற்குறிக்கண் வந்த தலைமகனைத் தோழி இனிப் புனம் காவற்கு வாரேம் எனக் கூறி வரைவு கடாயது.

ப. உரை: விளைந்தன என்றது முற்றின என்றவாறு.[1]

உரை: புன்செய்க்கண் உழுது புழுதி செய்யப்பட்ட நிலத்து வித்திய தினை முற்றினமையான், அதனை அறுத்து மனைக்கட் சேர்ப்ப ராகலின், பசிய புறத்தையுடைய கிளிகளை ஓப்புதல் செய்யாள்; ஆகவே, குன்றக் குறவ னுடைய அன்பு மிக்க மடமகளாகிய, மெல்லிய தோள்களை யுடைய கொடிச்சியை இனிப் பெறுதற்கு அரிது, காண் எ. று.

தினை விளைந்தன; கிளி ஓப்பலள்; ஆகலின், பெறற் கரிது தில்ல எனக் கூட்டி வினைமுடிவு செய்க. புன்புல மயக்கம், காடு கெடுத்து நிலங்கண்டு புழுதியுற உழுது பண்படுத்திய புன்செய் நிலம்; "கானவர் கரிபுன மயக்கிய அகன்கட் கொல்லை[2]" என்பது காண்க. பசுமை நிறம் உடைமை பற்றிக் கிளியைப் பைம்புறப் படுகிளி என்றார். படுதல், ஈண்டுத் தினைப்புனத்தே தோன்றிக் கதிர்களை மேய்தல். தில்ல, அசைநிலை. இதுகாறும் பெற்றுப் போந்த கூட்டம் இனிக் கழிந்தது என்பது பட நிற்றலின், ஒழியிசையுமாம்.

தினை விளைந்து முற்றுதவழி யாம் கிளி கடிவேமாய் நின்னைத் தலைப்பெய்வேமாக, நீயும் அவளைப் பெற்று மகிழ் வாயாயினை; அவள் இனி இப்புனம் வாரான் என்பாள்,

1. இஃது அச்சுப்படியில் இல்லை. 2. தொல். பொ. 112.

**பைம்புறப் படுகிளி யோப்பலள் புன்புல மயக்கத்து விளைந் தன தினையே** என்றும், எனவே குறிப்பால் யாம் கிளி கடிந்து பேணிய தினை முற்றிப் பயன் தந்தாங்கு, நீ இவளைத் தலைபெய்து கொண்ட நின் நட்பு வரைவால் சிறப் பெய்து தல் வேண்டும் என்று கூறினளாம். தினைவிளைவினால் தலை மகன் பெறுதற்கு அரிதா யொழிந்த கூட்டத்திற்கு இரங்கு வாள், **மென்றோள் கொடிச்சி** என்றாள்.

"நாற்றமும் தோற்றமும்[1]" என்ற சூத்திரத்துக் "காதல்மிகுதி யுளப்படப் பிறவும்" என்புழிப் **பிறவும்** என்ற இலேசினால் இதனை அதன்கண் அமைப்பர் **இளம்பூரணர்**. "இது, புனங்காவல் இனி இன்று என்பது[4]" என்பர் **நச்சினார்க்கினியர்**. (௰)

---

1. தொல். பொ. 114.

## 27. கேழற்பத்து.

கேழல் என்பது காட்டுப்பன்றி. குறிஞ்சி நிலத்தில் வாழும் விலங்குகளுள் இது பொருளாக இப்பகுதிக்கண் வரும் பாட்டுக்கள் அமைந்திருப்பது பற்றி இப்பத்து இப்பெயரினைப் பெறுவதாயிற்று. மக்கள் வாழும் இடங்களில் ஒருசிலரால் வளர்க்கப்பெறும் பன்றியினத்தைச் சேர்ந்தது கேழல்.

ஒருகாலத்தில் இப்பன்றிகள் யாவும் காடுகளில் வாழ்ந்து வந்தன. 5000 ஆண்டுகட்கு முன்பே மக்கள் பன்றிகளைப் பிடித்து வளர்க்கும் பழக்கம் சீனாவில் உண்டாகியிருக்கிறது. மேனாட்டவர்க்கு கி. மு. 1500 ஆண்டு அளவில் பன்றியாகிய இவ்விலங்குண்மையே தெரிய வந்தது.

பன்றியினத்திற் பல்வேறு வகைகள் இருந்துள்ளன; அவை பெரும்பாலும் மக்களால் அழிப்புண்டு ஒழிந்தன. இப்போது இருவகைப் பன்றிகளே நிலவுலகில் வாழ்கின்றன. நம் நாடுகளில் வாழ்ந்தனவும் வாழ்வனவும் ஒரு வகை[1]. அமெரிக்கப் பன்றி வெள்வாய்[2] என்றும் மிடற்றணி[3] என்றும் இருவகையாகும். இவை இரண்டனுள் வெள்வாய்ப் பன்றி கொடுமையுடையது; மிகக் கூரிய கோடுகொண்டு மக்களுக்குப் பெருந்தீங்கு செய்ய வல்லது. சில போதுகளில் இவை வேட்டை நாய்களையே தாக்கி நார் நாராய்க் கிழித்தெறிந்து விடுவதும் உண்டு. ஏனை மிடற்றுப் பன்றி அத்துணைக் கொடுமையுடையதன்று. இருவகையும், பழவகைகளையும் கிழங்குகளையும் தின்று உயிர் வாழ்வன. பிற விலங்குகள் செய்துள்ள வளைகளிலும் மரப்பொந்துகளிலும் இவை உறைகின்றன.

1. The peccaries of America. 2. White lipped.
3. Collard peccary.

அமரிக்கப் பன்றியின் இனமல்லாத ஏனைப்பன்றிகள் அமரிக்க நாடுகளின் வேருன ஐரோப்பா, ஆப்பிரிக்கா, ஆசியா, ஆத்திரேலியா என்ற இந்த நாடுகளில் வாழ்கின்றன. நம் நாட்டுக் கேழல் இந்த இனத்தைச் சேர்ந்தவை. இவை நம் நாட்டுக் காடுகளிலும் ஏனை ஐரோப்பாவிலும், வட ஆப்பிரிக்கப் பகுதிகளிலும் காணப்படுகின்றன. கிழக்கிந்தியத் தீவுகளில் ஒருவகைப் பன்றிகள் உண்டு. அவற்றிற்கு நான்கு கோடுகள் கலைமான் கொம்புபோல் வளைந்து தோன்றுகின்றன; அவற்றின் காலும் மெல்லியவாய் நீண்டிருக்கும். ஆணுக்கு நான்கு கோடு உண்டு. அதனல் அவற்றைக் கலைப்பன்றி[1] என வழங்குகின்றனர். அவை நன்கு நீந்தவும் வல்லன; ஒரு தீவுக்கும் மற்றெரு தீவுக்கும் இடையில் உள்ள கடற் பகுதியை மிக எளிதில் அவை நீந்திச் செல்கின்றன.

ஆப்பிரிக்காவில் சகாராவின் தென் பகுதியில் சில கேழற் பன்றிகள் வாழ்கின்றன. அவற்றுள் சில மிக நல்லனவாகும். ஒருசில கொடியனவும் உண்டு. நீண்ட வாலும் பருத்த உடலும் உடைய அவை பெரிய பெரிய கோடுகளைக் கொண்டுள்ளன. பிற விலங்குகள் குடைந்து விட்டுச் சென்ற மண்ணளைகளில் இப்பன்றிகள் புகுந்து வாழும். இந்தப் பன்றி மண்ணளைக்குள் புகும்போது தன் முகத்தை வாயிற் புறமாக வைத்துப் பின்புறமாகவே அளைக்குள் செல்லும்; அவ்வாறு செய்வது, பகையுயிர் ஏதேனும் தன்னைத் தொடர்ந்து வரின் அதனை எளிதில் தாக்குதற்காகவே யாம். சென்ற 1904-ம் ஆண்டு இத் தகைய பன்றியினத்தில் மிகப் பெரிய ஒன்று ஆப்பிரிக்காவில் காணப்பட்டது.

மேனுடுகளின் சில பகுதிகளில் இக் கேழலினம் மறைந்துபோயின. பிரிட்டன் தீவுகளில் இவை நானூறு ஆண்டுகட்கு முன்பே மறைந்து போயின. ஐரோப்பாவில் சதுப்புநிலப்பகுதிகளில் ஒருசில அருமையாய்க் காணப்படுகின்றன.

1. Pig Deer.

ஒரு காலத்தில் பிரிட்டன்தீவுகளில் கேழல்களை வேட்டையாடும் உரிமை ஒருசிலர்க்கே இருந்தது. பன்றி வேட்டை யாடுதலைப் பாராட்டி மேனாட்டுப் பாவலர் பாட்டுக்கள் பல பாடியுள்ளனர். கிறித்துவ விழாவில் பன்றியின் தலைக்கு நன்மதிப்பு உண்டு; அவ்விழாவில் பன்றியின் தலைவன் பொருளாகப் பெருமிதமான செயற் சிறப்பும் பாராட்டும் நடைபெறுமாம். போர்வீரர் மறத்துக் குப் பன்றி நல்ல எடுத்துக்காட்டாதலு முண்டு. கேழல் வேட்டம் புரிவோர் குதிரை யூர்ந்தும் வேட்டை நாய் களைத் துணைகொண்டும் செல்வர். இனி நம் நாட்டுக் கேழற் பன்றிகளைக் காண்பாம்.

நம்நாட்டு மலைக்காடுகளில் இக்கேழல் தன் னிச்சை யில் வளர்ந்து கொழுத்து உடல்வளத்திலும் மெய் வன்மையிலும் உருவமைப்பிலும் சிறிது வேறுபட் டுள்ளது. அதன் கீழ்வாயில் முன்னே இருபற்கள் கோடு போல் மேல்வாய்க்குமேல் வெளியே நீண்டு மிக்க கூர் மையும் பெருவன்மையும் கொண்டுள்ளன. அதன் உடல்மயிர் கரியநிறமும் வன்மையும் உடையது. பிடரி மயிர், ஏனை உடற் பகுதிகளில் உள்ளவற்றினும் வலி மிகுந்து இருப்பூசிபோல் நிமிர்ந்து நிற்கும்.

ஊர்ப்புறங்களில் வாழும் பன்றிகளினும் காட்டுப் பன்றியாகிய கேழல்கள் உடல் வன்மையிலும் விரைந்த செலவிலும் மேன்மையும் சிறப்பும் உடையவை. மூன்றடி உயரமும் நாலரையடி நீளமும் உடையனவும் இவற்றுள் உண்டு. இவை எருமை போலச் சேற்றுநிலத்திலும் புல்லும் புதலும் நிறைந்த நீர்ப்பாங்குகளிலும் வாழும் இயல்பின. பகற்போதில் ஞாயிற்றின் வெம்மையை விரும் பாது இருட்செறிவுகளில் வீழ்ந்து கிடந்து இருட்போது களில் இரை தேடி யுண்பது இவற்றின் பண்பு. இவற்றுள் முதுமையுற்றவை மட்டில் தனித்து உறையும்; ஏனையவை கூட்டத்தில் இருக்கும்.

பன்றியின் பெண் ஒருகாலத்தில் ஆறுமுதல் பத்துக் குட்டிகளை ஈனும் என்ப. பெண்ணினும் ஆணே கொடுமை மிகுந்த தெனினும், புனிறு தீராக் காலையில் பெண்பன்றியின் வெம்மையும் கொடுமையும் சிறந்து தோன்றுகின்றன. கேழற்குட்டிகள் மிக்க மென்மை யுடையவை யாதலின், அவற்றை நாடி உண்டற்கு பகையுயிர்கள் பல வேட்டையாடுகின்றன. ஒரு பன்றி பல குட்டிகளை ஈன்றதாயினும் முடிவில் எஞ்சி நிற்பன ஒன்று இரண்டே. பன்றிக்குருளையின் உடலில் மெல்லிய வரிகள் பல காணப்படும்.

நம் தமிழகத்தில் கேழல்கள் குறிஞ்சி முல்லையாகிய இருபகுதிகளிலும் மிகுதியாக இருந்துள்ளன. பாலைப் பகுதியில் மிக அருமையாக உளது. இதன் கரிய நிறமும் பிடரிமயிரும் கண்ட சான்றோர் "இரும்பிணர் எருத்தின் இருள்துணிந் தன்ன ஏனம்[1]" என்று குறிக்கின்றார். இது பெரும்பாலும் இரவுப்போதில் இரை தேடித் திரிவதாகலின், இதன் கட்பார்வையை வியந்து "கடுங்கட் கேழல்[2]" என்றும், இதனுடைய வளைந்த பல் யானைக் கோடு போலத் தோன்றுவது பற்றி **மருப்பு** என்றும் கூறுவர்; "வளைமருப்பு ஏனம்[3]" என்றும் "கேழல் வளை மருப்பு[4]" என்றும் "வளை வெண் மருப்பின் கேழல்[5]" என்றும் பண்டையோர் வழங்குவது காண்க. கேழற் பன்றி யின் கரிய முகத்தில் வெண்ணிறம் கொண்டு வளைந்து தோன்றும் மருப்பை, அகத்திப்பூவோடும் இளம்பிறை யோடும் உவமஞ்செய்து இன்புறுவது தமிழ்ப்புலமைச் செல்வத்தின் செயல்வகையுள் ஒன்று: "புகழா வாகைப் பூவின் அன்ன வளைமருப் பேனம்[6]" எனவும் "இளம் பிறை யன்ன கோட்ட கேழல்[7]" எனவும் வருவன வற்றால் அறிக.

1. மலைபடு. 246-7. 2. புறம். 190 3. பெரும்பாண். 110.
4. அகம். 223. 5. ஐங். 265. 6. பெரும்பாண். 109-10.
7. ஐங். 264.

குறிஞ்சி நிலத்தில் வாழும் புனவர்கட்கு இக்கேழல்கள் ஒருவகையில் உதவியாகவும் பல வழிகளில் பகையாகவும் இருந்துள்ளன. தினைப்புனங்கள் தினை விதைப்பதற்குமுன் கரம்புபட்டுக் காந்தளும் கோரைப்புல்லும் செறிந்திருக்கும்; புதுப்பெயல் பொழிந்ததும், இக்கேழல் அப்புனத்துள் புகுந்து காந்தள் முதலியவற்றின் கிழங்குகளை அகழ்ந்து உண்ணும்; அதனால் புனக்கொல்லை முழுதும் நன்கு உழுததுபோல் புழுதியாய்விடும்; அது காணும் புனவர், வேர் அறுந்து வாடிக் கிடக்கும் காந்தள் முதலியவற்றைக் களைந்து விட்டுத் தினை விதைத்தற் குரிய காலம் எய்தியதும் உழாமலேயே அத் தினையை விதைத்து விடுவர்; தினையும் அவ்வழியே நன்கு வளர்ந்து விளைந்து சிறக்கும். "மலர்ந்த காந்தள், கொழுங்கிழங்கு மிளிரக் கிண்டிக் கிளையொடு கடுங்கட் கேழல் உழுத பூழி, நன்னாள் வருபதம் நோக்கிக் குறவர், உழாது வித்திய சிறுதினை [1]" என்றும், "கிழங்ககழ் கேழல் உழுத சிலம்பில், தலைவிளை கானவர் கொய்தனர் பெயரும் [2]" என்றும் அறிஞர் அறிவிப்பது காண்க.

தான் கிழங்கு அகழ்ந்து செய்த பூழியில் புனவர் வித்தி விளைக்கும் தினையைக் காணும் போது தனக்கு அதனை உண்டற்கு உரிமையுண்டு என்று கருதினாற் போல, இரவுப்போதில் அது தன் கிளைசூழ வந்து தினையை மேய்ந் தழிப்பது உண்டு; "மென்றினை மேய்ந்த தறுகட் பன்றி [3]" "நன்பொன் னன்ன புனிறுதீர் ஏனல், கேழல் மாந்தும் [4]" எனச் சான்றோர் குறிப்பன காண்க. இவ்வாறு தாம் விளைக்கும் தினைக்கு ஊறுசெய்து அழிப்பது பற்றிக் கானவர் இப்பன்றியை வேட்டம் புரிந்து கொல்லுதலை மேற்கொண்டனர். தொகை நூல்களில் பன்றியை உணவு குறித்து வேட்டை யாடுவது அருகியே உளது. பன்றியை வீழ்த்தற்குப் பெருங்கற்களின் இடையே பொறியமைத்து

---

1. புறம் 168. 2. ஐங் 270. 3. ஷை. 261. 4. ஷை. 263.

வைப்பதும் உண்டு. இதனை "விளைபுனம் நிழத்தலின் அஞ்சிப் புழை தொறும் மாட்டிய இருங்கல் அரும்பொறி உடைய ஆறே[1]" என்றும், "தினையுண் கேழல் இரியப் புனவன் சிறுபொறி மாட்டிய பெருங்கல் அடாஅர்[2]" என்றும் வருவனவற்றால் அறியலாம். காட்டுயானைகளைப் பிடிப்பதற்குச் செய்வதுபோல், இவற்றையும் வரும் வழியில் குழிகள் அமைத்து அவற்றுள் வீழ்வித்துக் கொல்வது பண்டு குறவர் கொண்டிருந்த தொரு நெறி. "சேணோன் அகழ்ந்த மடிவாய்ப் பயம்பின், வீழ்முகக் கேழல் அட்ட பூசல்[3]" என **மாங்குடி மருதனார்** குறிக்கின்றார். நீர்நிலைகட்கு நீர் அருந்த வருங்கால் ஆங்கே ஒளித்திருந்து இவற்றைத் தாக்கியும் கொல்வதுண்டு; "வான்மடி பொழுதில் நீர்நசைஇக் குழித்த அகழ்சூழ் பயம்பின் அகத்தொளித் தொடுங்கிப், புகழா வாகைப் பூவின் அன்ன, வளைமருப் பேனம் வரவுபார்த் திருக்கும் அரைநாள் வேட்டம்[4]" என்பதனால் இது தெளியப்படும்.

இக்கேழல்களைச் செந்நாய்க்கூட்டமும் புலியும் மிகவும் விரும்பிக் கொன்று தின்கின்றன. "செந்நாய் கேழலைக் கொன்று குருதி சொரிய ஈர்த்தேகும் எனவும் அக்குருதியைக் கழுகினம் இருந்து அருந்து மெனவும்[5]" புலியேறு கேழலைத் தாக்கி வீழ்த்துங்கால் அது வலத்தில் வீழாது இடப்பக்கத்தே விழுமாயின், "புலி அன்று உண்ணாது கழியு மெனவும்[6]" "செந்நாய் தன் பிணவின் பொருட்டு இக்கேழலை வேட்டம் புரியுமெனவும்[7]" சான்றோர் பலவகையில் பாடியுள்ளனர். இப்போது கேழற் பன்றியின் ஊனை மக்களிற் பலர் உண்கின்றனர்.

உலகிலுள்ள கொடிய விலங்குகளில் நம்நாட்டுக் கேழற் பன்றியே தலையாயது என்று உயிர் நூலறிஞர் உரைக்கின்றனர். பகையினத்தால் மிகப்பெரும் புண்

1. மலை படு. 193-5. 2. நற். 119. 3. மதுரை. 294-5. 4. பெரும்பாண். 105-11. 5. அகம். 111. 6. புறம். 190. 7. ஐங். 323.

பட்ட போதிலும் வாய்த்த விடத்து மக்களையும் குதிரைகளையும் பெரிய களிற்றியானைகளையும் ஒரு சிறிதும் தயக்கமின்றித் தாக்கும் தறுகண்மையால் இக்கேழல்கள் சிறந்து விளங்குகின்றன. பெருங்குதிரை யொன்று சிக்கிக்கொள்ளின் அதனை ஒரே குத்தில் இரண்டாய்ப் பிளந்தெறிந்துவிடும் இப்பன்றி விரைவாக ஓடக் கூடியதே; ஆயினும் நெடுந்தொலைவு இதனால் ஓட இயலுவதில்லை.

200 ஆண்டுகட்குமுன் ஐரோப்பியர் நம்நாட்டில் வந்து இடம்பெற்ற போது இக்கேழற் பன்றியை வேட்டையாடத் தொடங்கினர். தொடக்கத்தில் கரடிகளை வேட்டையாடி வந்தோர், அவற்றின் தொகை குறைந்து போகவே இப்பன்றிகளை வேட்டையாடத் தொடங்கினர். மேனாட்டார் குதிரை யூர்ந்து வேட்டை நாய்கள் துணை செய்ய இக்கேழல்களை வேட்டையாடுவர். அவர்கள் எறியூசி கொண்டு முதலில் வேட்டையாடினர்; அதன் பின் ஐந்தடி நீளமுடைய எறிவேல் கொண்டு வேட்டையாடுவாராயினர். பிரிட்டன் நாட்டில் நடக்கும் நரி வேட்டைபோலவே இவர்கள் இவ்வேட்டையாடச் செய்தனர். இப்பன்றி வேட்டைக்கெனக் கழகங்கள் நிறுவிப் போட்டிப் பந்தயங்கள் நடத்தினர். அவற்றுள் 1869-ம் ஆண்டு நடந்த பன்றிவேட்டையே சிறந்ததாகப் பாராட்டிக் கூறுகின்றனர்.

1800 ஆண்டுகட்குமுன் கானவன் ஒருவன் பன்றி வேட்டம் புரியச் சென்றவன், அப்பன்றியின் மறமாண்பு கண்டு வியந்த திறத்தை இந்நூலாசிரியரான கபிலர் கூறுவது ஈண்டு நினைவுகூர்வது நன்று; அதனை இக் குறிஞ்சிப்பகுதி முன்னுரைக்கண் காண்க. இனி இக் கேழற் பன்றி பொருளாக இப்பகுதிக்கண் வரும் பாட்டுக்களைக் காண்பாம்.

261. மென்றினை மேய்ந்த தறுகட் பன்றி
வன்க லடுக்கத்துத் துஞ்சு நாடன்
எந்தை யறித லஞ்சிக்கொல்
அதுவே தெய்ய வாரா மையே.

**இஃது, அல்லகுறிப் பட்டுத் தலைமகன் நீங்கினமை அறியாதாள் போன்று தோழி பிற்றை ஞான்று அவன் சிறைப் புறத்தானாய் நிற்பத் தலைமகட்குச் சொல்லியது.**

**ப. உரை:** தினைமேய்ந்த பன்றி கல்லடுக்கத்துத் துஞ்சும் நாடன் என்றது, தான் வேண்டின இன்பம் நுகர்ந்து இனிது கண் படுவதல்லது வரைதற்கு வேண்டுவன முயலாதான் எ. று.

**உரை:** மெல்லிய தினையை மேய்ந்த மறம் பொருந்திய பன்றி, வலிய கற்கள் நிறைந்த மலைப்பக்கத்தே உறங்கும் நாடனாகிய தலைமகன் வாராதொழிவது, நம் தந்தை அறிவன் என்று அஞ்சியே போலும்; பிறிது காரணம் இன்மையின், அதுவேயாம் எ. று.

தினையின் தாளும் விளையும் செவ்வியிலுள்ள தினையும் மிக்க மென்மையுடைமை பற்றி **மென்றினை** என்றும், மக்களுடைய ஆரவாரத்துக்கும் அச்சுறுத்தலுக்கும் பின்னிடாது கருதியதைச் செய்தே முடிக்கும் உறைப்புக் கேழலின் சிறந்த பண்பாதலின், **தறுகட்பன்றி** என்றும் சிறப்பித்தார். நாடன் வாராமை அஞ்சிக்கொல் என முன்னும் கூட்டிக் கொள்க. வாராமை அதுவே என்றது துணிந்துரைத்தல். **கொல்,** ஐயம். **தெய்ய,** அசைநிலை. கேழல் தினைமேய்தலை, "தினையுண் கேழல் இரிய[1]" எனப் பிறர் கூறுதலானும் அறிக.

தலைமகன் சிறைப்புறத்தானாதலை அறிந்து அவன் கேட்ப உரைக்கின்றமையின், அவன் வாராமைக்குக் காரணம் ஆராய்வாள் போன்று, தந்தையின் வலியும்

1. நற். 119.

கொடுமையும் அறிந்து, வரின் தனக்கு ஏதமாம் என்று உணர்ந்து அஞ்சியே தலைமகன் வாரானாயினான் எனப் படைத்துமொழிவாள், **எந்தை அறிதல் அஞ்சிக்கொல்** என்றவள், மேலும் **அதுவே தெய்ய வாராமையே** என்று கூறினாள். இவ்வாறு ஒரு காரணம் படைத்துக்கொண்டு கூறுதலால், அஃது உண்மை யென வற்புறுத்துவாள் போன்று, ஐயமும் தெளிவும் முறையே தொடுத்துக் கூறினாள். அல்ல குறிப்பட்டுத் தலைமகன் நீங்கினான் என்பதனை அறிந்துவைத்தும், அறியாதாள் போன்று, வரைவு கடாவும் கருத்தினளாய்க் கூறுதலின், **அதுவே தெய்ய** என்றாள். அறிந்தது ஒன்றனை அறியாதாள் போன்று தோழி கூறுதல் வழுவாயினும், வரைவுகடாதற் கண் அமையும் என்க; என்னை: "இரந்து குறையுற்ற கிழவனைத் தோழி, நிரம்ப நீக்கி நிறுத்த லன்றியும், வாய்மைகூறலும் பொய்தலைப் பெய்தலும், நல்வகை யுடைய நயத்திற் கூறியும், பல்வகை யானும் படைக்க வும் பெறுமே[1]" என்ப வாகலின். இது வந்த கிழவனை மாயஞ் செப்பியது.

புனங்காப்போர்க்கு அஞ்சாது தான் கருதிய மென் றினையைத் தன் தறுகண்மையால் வயிறார மேய்ந்த பன்றி வன்கல் லடுக்கத்து இனிது உறங்கும் நாட னாயினும், நின் தந்தைக்கு அஞ்சிய அச்சத்தால் கருதிய கூட்டமும் பெறாது தன் மனைக்கண் ஒடுங்கினான் என உள்ளுறைக் கண் துனியுறு கிளவி தோன்றக் கூறுமாறு காண்க. பழைய வுரைகார்க்கும் இதுவே கருத்தாதல் அறிக.

**அதுவே மன்ற** என்றும் பாடம். வாராமைக்கு ஏது அச்சம் என்று தோழி கூறுவது படைத்து மொழியே யன்றி உண்மையன்று ஆதலின், **தெய்ய** என்ற பாடமே சிறப்புடைத்தாதல் அறிக. **மன்ற** என்பது தேற்றப் பொருட்டு.

1. தொல். பொ. 237.

"மறைந்தவற் காண்டல்" என்ற சூத்திரத்து "அச்சம் நீடினும் என்பதற்கு இதனை உதாரணமாக்குவர் தொல்காப்பிய உரைகாரர்[1]" (௧)

262. சிறுதினை மேய்ந்த தறுகட் பன்றி
துறுக லடுக்கத்துத் துணையொடு வதியும்
இலங்குமலை நாடன் வரூஉம்
மருந்து மறியுங்கொ ரேழியவன் விருப்பே

இது, வரைந்துகோள்ள நினைக்கிலன் என வேறுபட்ட தலைமகள், அவன் நின்மேல் விருப்பமுடையன், நீ நோகின்றது என்னை? என்ற தோழிக்குச் சொல்லியது.

ப. உரை: சிறுதினை மேய்ந்த தறுகட்பன்றி துறுகல் அடுக்கத்துத் துணையோடு வதியும் நாடன் என்றது, களவொழுக்கத்தான் வரும் சிற்றின்ப மின்றியே வரைந்து கொண்டு நின்னொடு ஒழுகுவன் எனத் தோழி கூறியவதனைத் தலைமகள் கொண்டுகூறிற்று எனக் கொள்க.

உரை: தோழி, சிறியவாகிய தினையை மேய்ந்த தறுகண்மையையுடைய பன்றி, நெருங்கிய கற்கள் நிறைந்த மலைப்பக்கத்தில் தன் துணைப்பன்றியொடு தங்கும் விளங்குகின்ற மலைநாடன் வருதற்குக் காரண மாகிய அவனது அருள், யானுற்ற நோய்க்கு மருந்தாகலின், அத்தன்மையை அவனது அருளுள்ளம் அறியுங் கொல்லோ எ. று.

பன்றி துணையொடு வதியும் மலை, இலங்கும் மலை என இயையும். தினை மேய்ந்த பன்றி அடுக்கத்து வதிதல், "சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல், துறுகட் கண்ணிக் கானவர் உழுத, குலவுக்குரல் ஏனல் மாந்தி ஞாங்கர், விடரளைப் பள்ளி வேங்கை யஞ்சாது, கழைவளர் சாரல் துஞ்சும் நாடன்[2]" என்பதனாலும் அறியப்படும்.

---

1. இளம், தொல். பொ. 109. நச்சி. தொல். பொ. 111.
2. நற். 386.

**வருஉம் மருந்து** என்பது "நின்முகம் காணும் மருந்தினேன் என்னுமால் [1]" என்புழிப் போலக் காரணகாரியப் பொருள் தந்து வினைப்பெயர் கொண்டது. **விருப்பு** ஆகு பெயர். காரணகாரியங்கள் தம்முள் வேறல்ல வாகலின் "காட்சியை மருந்தென்றான்" என்பர் **சேனாவரையர்**; அங்ஙனமே வரவினை மருந்தென்றார் எனினும் ஒக்கும் என்க. **மருந்து** ஈண்டு மருந்தாந்தன்மை. "வறிதால் இகுளையென் யாக்கை, இனி, அவர் வரினும் நோய்மருந் தல்லர், வாராது அவண ராகுக காதலர் [2]" என்புழியும் வரவு மருந்தென வழங்கப்படுமாறு உணர்க.

அவன் வாராமை குறித்து மெலிந்து வருந்துகின்றவள், தோழி "நின்மேல் அன்புடையனாகலின் நீ மெலிகின்றது என்னை" என அவன் விருப்பமுடைமை உணர வுரைத்த சொற்களான் மகிழ்கின்றா ளாகலின், **மருந்தும் அறியுங்கொல்** என்றும், "அவன் விருப்பம் உணர்த்தும் நின் சொற்கள் யான் ஆற்றியிருத்தற்கு மருந்தானாற் போல அவன் வரைந்து கொள்ளுதலையும் செய்யுமாயின் நன்றென்பாள், **வருஉம் மருந்தும் அறியுங்கொல்** என்றும், அவள் வந்தாலன்றித் தன்மெலிவு தீராது என்பாள் அவன் வரவினையே **மருந்து என்றும்** கூறினாள். அவனது விருப்பமுடைமை தன் **வரைப்பட்ட** என்னைத் தன் வாராமையால் வருத்துதலின் நோயாதலே யன்றி, வரலால் அது தீரும் மருந்துமாதலை அறியுங்கொலோ என்பதுபட நிற்றலின், உம்மை எச்சப்பொருட்டு.

1 "மறைந்தவற் காண்டல் [3]" என்பதன் உரையில், பிரிந்தவழிக் கலங்கியதற்குச் செய்யுள் காட்டலுற்றவர், "உறங்காமையும் உண்ணாமையும் கோலஞ் செய்யாமையும் சொல்லுதல்" எனவுரைத்து, "இவ்வழி நீ வருந்தாதி, நின்மாட்டு அன்பு பெரிதுடையன்" எனத் தோழி ஆற்றுவித்தவழி ஆற்றாமையால் தலைவி கூறியதற்கு இதனைக் காட்டுவர் **இளம்பூரணர்**. (உ)

1. கலி. 24. 2. நற். 64. 3. தொல். பொ. 109.

263. நன்பொ னன்ன புனிறுதீ ரேனல்
கட்டளை யன்ன கேழன் மாந்தும்
குன்றுகெழு நாடன் றானும்
வந்தனன் வந்தன்று தோழியென் னலனே

**இது, வரைவிடைவைத்துப் பிரிந்த தலைமகன் மீண்டமை அறிந்த தலைமகள், "நீ தோலைந்த நலம் இன்று எய்திய காரணம் என்னை?" என்ற தோழிக்குச் சொல்லியது.**

**ப. உரை:** பொன் போன்ற தினையைக் கேழல் மாந்தும் நாடன் என்றது தன் நாட்டு வாழும் விலங்குகளும் தமக்கு வேண்டுவன குறைவின்றிப் பெற்று இன்பம் நுகரும் நாடன் எ. று.

**உரை:** தோழி, நல்ல பொன்னை யொத்த ஈன்றணிமை தீர்ந்த தினையைப் பொன்னுரை காணுங் கட்டளைக் கற் போலும் நிறமுடைய பன்றி மேய்ந்து உண்ணும் குன்றுகள் பொருந்திய நாடனும் வந்தானாகலின் என் நலனும் வந்து எய்துவதாயிற்று எ. று.

பொன்னுக்கு நன்மை ஒடுதலின்மை. **புனிறுதீர் ஏனல்** என்றது முற்றின தினையை. "புனிறுதீர் பெருங்குரல் நற்கோட் சிறுதினை[1]" எனப் பிறரும் கூறுப பழுத்து முதிர்ந்த தினையை **நன்பொன் அன்ன ஏனல்** என்றதற் கேற்ப அதனிடைப் புகுந்த கரிய நிறத்தையுடைய கேழலைக் **கட்டளை யன்ன கேழல்** என்றார். பொன்னும் கட்டளையும் நிறம்பற்றி வந்த உவமம். "புனவன் துடைவைப் பொன்போற் சிறுதினை[2]"என்றும், "பரூஉமயிர்ப் பன்றி பொன்னுரை கட்டளை கடுப்பக் காண்வரக், கிளையமல் சிறுதினை விளைகுரல் மேய்ந்து, கண்ணினிது படுக்கும் நன்மலை நாடன்[3]" என்றும் சான்றோர் கூறுதல் அறிக.

1. குறிஞ்சி. 37-8. 2. குறுந். 133. 3. அக. 178.

**நாடன் தானும்** என்றது படுத்தலோசையால், தலைமகன் பிரிந்து நீட்டித்தமையும் தலைமகளது ஆற்றாமை மிகுதியும் உணர்த்திற்று; என்னை, நெஞ்சின் மிக்கது வாய் சோர்ந்து சொல்லாய் நிகழு மாகலின். எண்ணும்மை விகாரத்தால் தொக்கது. அவன் வர வருதலும் பிரியத் தொலைதலும் என் நலத்துக்கு இயல்பென்பாள், **நாடன் தானும் வந்தனன் வந்தன்று தோழி என் நலனே** என்றாள். " நீ இவண் வருஉங்காலை, மேவரு மாதோ இவள் நலனே தெய்யோ [1]" என்று முன்னரும் கூறியவாறு காண்க. (௩)

264. இளம்பிறை யன்ன கோட்ட கேழல்
களங்கனி யன்ன பெண்பாற் புணரும்
அயந்திகழ் சிலம்ப கண்டிகும்
பயந்தன மாதோநீ நயந்தோள் கண்ணே

**இது வரையாது வந்தொழுகும் தலைமகனைப் பகற் குறிக்கண்ணே எதிர்ப்பட்டுத் தோழி வரைவுகடாயது.**

**ப. உரை:** கேழல் பிணைவைப் புணரும் என்றது ........ அறி வில்லாதன ஒழுகும் ஒழுக்கமும் நின்மாட்டுக் கண்டிவேம் எ. று.

**உரை:** கலை முதிராத பிறைத்திங்கள்போல் வளைந்த மருப்பினையுடைய பன்றி களங்கனிபோற் கரிய பெண் பன்றியோடு கூடிச் சென்று அருந்தும் நீர் மிக்க சிலம்பினை யுடையாய், நீ விரும்பும் இவளுடைய கண்கள் பசலை ...க் காண்பாயாக எ. று.

பன்றியின் கோடு இளம்பிறை போலும் வடிவும் நிறமும் உடைமை பற்றி **இளம்பிறை யன்ன கோட்ட கேழல்** என்றார். "பிறையுறழ் மருப்பின் கருங்கட் பன்றி[2]" எனப் பிறரும் கூறுதல் காண்க. **களங்கனி,**

1. ஐங். 238. 2. அகம். 322.

களாவின்பழம்; இது கருநிறமுடையது; "களங்கனியைக் காரெனச் செய்தாரும் இல்[1]" என்ப. **அயம்** நீர்; "அருவி ஆர்க்கும் அயந்திகழ் சிலம்பு[2]" என்பதனாலும் அறிக. புணர்ந்து சென்று அருந்தும் அயம் எனற்பாலது, **புணரும் அயம்** என நின்றது. எதுகை நோக்கிப் பசந்தன எனற் பாலது **பயந்தன** என்றாயிற்று.

நீ வரைந்துகொள்ளாது குறிவழி யெய்திக் கூட்டம் தருகுவை; ஆயினும் நின் பிரிவு நினைந்து இரங்கியும் ஏதம் ஆய்ந்து மேனி மெலிந்து வேறுபட்டுக் கண் பசந்தும் தலைமகள் வருந்துகின்றாளாகலின், **பயந்தன மாதோ நீ நயந்தோள் கண்ணே** என்றும், நின்னால் விரும்பப் பட்டாள் இவ்வேறுபாடு எய்த, அதனை நீ அறியாதிருத்தல் ஆகாது என்பாள், **நீ நயந்தோள் கண்ணே** என்றும் கூறினாள். இது தலைவனைப் பேதைமை யூட்டியது. **பயந்தன மாதோ** என்றது **பசலைபாய்தல்**. இனி, இவ் வேறுபாடு தமர் அறியின் இவளை இற்செறிப்பா ராகலின் நீ வரைந்து கொள்வதே கடன் என வரைவு கடாயவாறும்.

கேழற் பன்றி வேண்டுவதாகிய நீரைத் தன் பெண் பன்றியோடு கூடிச் சென்று அருந்துவது போல, நீயும் நினக்கு வேண்டுவதாகிய இன்பத்தை நின் காதலியை வதுவையிற் கூடி நுகர்தல் வேண்டும் எனத் தோழி குறிப்பால் வரைவு கடாயினாளாயிற்று. இவ்வுள்ளுறைப் பொருள் பழைய வுரையில் சிதைந்துவிட்டது. (௪)

265. புலிகொல் பெண்பாற் பூவரிக் குருளை
வளைவெண் மருப்பிற் கேழற் புரக்கும்
குன்று கெழு நாடன் மறந்தனன்
பொன்போற் புதல்வனோ **டென்னீத் தோனே**

1. நாலடி 103. 2. நற். 365.

**இது, பரத்தை யிடத்தானாகத் தலைமகன் விடுத்த வாயின் மாக்கட்குத் தலைமகள் சொல்லியது.**

**ப. உரை:** புலியாற் கொல்லப்பட்ட தன் பிணவின் குட்டியைத் தந்தையாகிய கேழல் புரக்கும நாடன் என்றது பரத்தையர் காரணமாக யான் இறந்தால் தன் புதல்வனைத் தானே வளர்க்கத் துணிந்து என்னை நீத்தான் என்பதாம்.

**உரை:** புலியாற் கொல்லப்பட்ட பெண் பன்றியின் அழகிய வரிகள் பொருந்திய குட்டியை வளைந்த வெண்மையான கோட்டினையுடைய ஆண் பன்றி காக்கும் குன்றுகள் பொருந்திய நாடன் எம்மிடை வருதலை மறந்து பொன்போலும் மகனையும் அவற்குத் தாயாகிய என்னையும் நீத்தொழிந்தா னாகலின் அவன் பொருட்டு நீவிர் வாயில் வேண்டுவது என்னை? எ. று.

**கொல் பெண்பால்** என்னும் தடுமாறு தொழிற் பெயர் பூவரிக் குருளை கேழல் புரக்கும் என்ற "மெய்யறி பனுவலின் வேற்றுமை தெரியப்பட்டது.[1]" **மறந்தனன்,** முற்றெச்சம்; பெறற் கருமை பற்றிப் புதல்வனைப் பொன்னோடு உவமித்தல் பண்டையோர் மரபு. "தென்புல வாழ்நர்க் கருங்கடன் இறுக்கும் பொன்போற் புதல்வன்[2]" என்று பிறரும் கூறுவர். பொன் பெறற்கருமை குறித்து வருதலை "வாடிய மேனியர் பொன்நிறை சுருங்கார்[3]" என்ற விடத்துப் பொன்னிறை என்றதற்குப் **பெறுதற்கரிய நிறை** என்று **நச்சினார்க்கினியர்** உரை கூறுவதனால் அறிக.

மறந்தில னாயின், புதல்வனையும் தன்னையும் நீத்தொழுகான்; ஆகலின், **மறந்தனன்** என்றும், உடற்கு நன்கலனாய் அணிசெய்யும் பொன்போல் மனைமாட்சிக்கு நன்கலனாய் விளங்குதலின் மகனைப் **பொன்போற் புதல்வன்** என்றும், தன் குலம் விளக்கும் சால்புடைய மகன் தன்னினும் உயர்ந்தோ னாதல் பற்றிப் **புதல்வனோடு**

1. தொல். சொல். 56. 2. புறம். 9. 3. சீவக. 2380.

என்றும், தன் பிரிவால் மிக்க துன்ப முற்று வருந்தும் என் வருத்தமும் நோக்கிற்றிலன் என்பாள், **என் நீத்தோனே** என்றும் கூறினள். இது களவுக்காலத்துப்போல் அன்றிக் கற்புக்காலத்துப் பிரிவாதலின், புறத்தார்க்குப் புலனுகாமை மறைக்கப்படா தாகலான், ஆற்ருது வாயில்கட்குக் கூறுவா ளாயினள். இஃது **அழிவில் கூட்டத்து அவன் பிரிவாற்ருமை.** புலியால் கொல்லப்பட்ட பெண்பாற் பன்றி யிடத்துக் கொண்ட காதலால் கேழல் அஃது ஈன்ற குட்டிகளைப் புரக்கும் நாடனயினும், தலைமகன் தன் பரத்தைமையால் வீழ்த்தப்பட்ட என்பால் அன்பிலனுதலோடு யான் ஈன்ற என் மகன் பாலும் அன்பிலனுய்ப் பிரிந்தேகினன் எனத் துனியுறு கிளவியைத் தலைவி உள்ளுறுத் துரைத்தாள்.

இது வாயில்களுக்குத் தலைவிகூறியது என்பர் **நச்சினர்க்கினியர்.**

**புலிகொள் பெண்பால்** என்ற பாடத்துக்குப் புலியாற் கொன்று கொண்டு போகப்பட்ட பெண்பன்றி என உரைக்க. (ரு)

266. *சிறுக்கட் பன்றிப்* **பெருஞ்சின வொருத்தலொடு**
*குறுக்கை யிரும்புலி பொரூஉ நாட*
*னனிநா ணுடைய மன்ற*
*பனிப்பயந் தனநீ நயந்தோள் கண்ணே.*

**நொதுமலர் வரைவு மகட்கு உளதாகிய வேறுபாடு தோழி கூறித் வரைவு கடாயது.**

**ப. உரை:** பன்றியொருத்தலொடு புலி பொரும் என்றது நினக்கு நிகரல்லாதார் வந்து தலைப்படவும் அதனை நீக்காது இடங் கொடுத்து ஒழுகா நின்ருய் என்பதாம்.

**உரை :** சிறிய கண்களையுடைய பன்றியின் மிக்க சினம் பொருந்திய ஆணோடு குறுகிய முன்கால்களையுடைய பெரிய புலி பொருகின்ற நாடனே, நீ விரும்பிய இவளுடைய கண்கள் தெளிவாக மிக்க நாணுடையவை யாகலின், பசந்து நீர் சொரிவனவாயின எ. று.

சிறுக்கண், குறுக்கை என்பன வலிக்கும் வழி வலித்தல். இப்பண்புதொகுமொழிகள் "புணரியல் நிலையிடை உணரத் தோன்றா" வாயினும், தொடைநோக்கி வலித்தமை கொள்க. "வழங்கியல் மருங்கின் உணர்ந்தனர் ஒழுக்கல்[1]" என்ற புறனடையால் அமைத்தலும் ஒன்று. **ஒருத்தல்,** ஆண்பாற் பெயர். "ஏறும் ஏற்றையும் ஒருத்தலும் களிறும் ........ யாத்த ஆண்பாற் பெயரென மொழிப[2]" என ஆசிரியர் கூறுதல் காண்க. பன்றியிற் புலி சிறந்ததாயினும், ஈண்டுப் பன்றியின் வன்மை தோன்றப் **பெருஞ்சின வொருத்தல்** என்றும், புலியின்பால் அஃது சிறவாமை தோன்றக் **குறுக்கை யிரும்புலி** யென்றும் கூறினர்.

நீ நயந்தோள் நொதுமலர் வரைவு பிறந்தமையினாலும், தன்னுறு வேட்கையைத் தானே கூறலாகாமையினாலும், நாணமிகுதியால் ஆற்றுளாயினள் என்பாள், அதனைக் கண்மே லேற்றி, **நனி நாணுடைய மன்ற, பனிப் பயந்தன நீ நயந்தோள் கண்ணே** என்று கூறினாள். "தன்னுறு வேட்கை கிழவன்முற் கிளத்தல், எண்ணுங் காலைக் கிழத்திக் கில்லை, பிறநீர் மாக்களின் அறிய ஆயிடைப், பெய்ந்நீர் போலும் உணர்விற் றென்ப[3]" என்பதனால் அதனைத் தோழி யுணர்ந்து கூறினாள். நொதுமலர் வரைவு பிறந்தமை கண்டு ஆற்றாது கண் கலுழ்ந்து வேறுபடுதலைக் கண்டும் நீ வரையாதொழுகுதல் நாணுடைமையன்று என்பாள், குறிப்பால் **நாணுடைய** என்றும், மேனி

1. தொல். எழுத்து. 483.   2. தொல். பொ. 555.
3. ௸. ௸. 118.

வேறுபாடு நோக்கி அயலார் கூறுவனவற்றால் நாணி வருந்துகின்ற தலைமகள் வேற்றுவரைவு முற்று மாயின் உயிர்வாழாள் என்றற்கு **நனி நாணுடைய மன்ற** என்றும் கூறினாள் என்க. தலைமகளின் நாணுடைமையை விதந்து கூறியது, நாண்கெட வரின் உயிர்வாழாள் என்றற்கு. இவ்வாறு நாணுடைமையும், மேனிவேறுபாடும் கூறித் தோழி வரைவுகடாதல், "புரைபட வந்த அன்னவை [1]" என்புழி யடங்கும்.

எளிதில் தன்னால் வீழ்த்தப்படுதற்குரிய பன்றி யொருத்தலொடு இரும்புலி நாணுது பொரும் என்றது, வேற்றுவரைவு வருதல் கண்டும் நாணாது களவே விரும்பி ஒழுகுவாயாயினை எனத் தோழி உள்ளுறுத்தவாறு; **பழைய வுரைகாரர்க்கும்** இதுவே கருத்தாதல் அறிக. **பனிப் பயந்தன** என்றது பசலைபாய்தல்.

**நனிநாணுடையை** என்று பாடமாயின் அஃது எதிர் மறைக் குறிப்புமொழியாய் மிகவும் நாணுடையையல்லை என்பது பட நின்றதாம். **நனிநாணுடைமையம்** என்றும் **நனிநாணுடையம்** என்றும் பாடமுண்டு. (௬)

*267. சிறுகட் பன்றிப் பெருஞ்சின வொருத்தல்*
*துறுக லடுக்கத்து வில்லோர் மாற்றி*
*ஐவனங் கவருங் குன்ற நாடன்*
*வண்டுபடு கூந்தலைப் பேணிப்*
*பண்பில சொல்லும தேறுதல் செத்தே.*

**வரைவலெனத் தெளித் தான் என்று அவள் கூறக் கேட்ட தோழி அவன் சிறைப் புறத்தானாகச் சொல்லியது.**

1. தொல். பொ. 210.

**ப. உரை : பண்பில சொல்லும்** என்றது பொய்ம்மொழி களைச் சொல்லுபர் எ.று. **தேறுதல் செத்தே** என்றது தான் சொன்ன சொற்களை இவள் மெய்யாகக் கொள்ளும் என்பது கருதி எ. று.

பன்றி யொருத்தல் காவலரை யோட்டி ஐவனநெல் கவரும் என்றது களவினிற் காவலரை வென்று பெறும் இன்பமே விரும்புவான் எ. று.

**உரை :** சிறிய **கண்களையுடைய** பன்றியின் மிக்க சினத்தையுடைய ஆண், துறுகற்கள் நிறைந்த மலைப் பக்கத்து வில்லேந்தும் குறவரை வெருட்டி, அவராற் காக்கப்படும் ஐவனநெல்லைக் கவரும் குன்றுகளையுடைய நாடன், வண்டுகள் மொய்க்கும் கூந்தலையுடைய இவளை விரும்பி, இவள், தான் கூறுவனவற்றைப் பண்புடையவை எனத் தெளிந்து கொள்வாள் என்பது கருதிப் பண்பிலவாய சொற்களைச் சொல்லுவானாயினன் எ. று.

துறுகல் அடுக்கத்து மேலும் இடையிலும் ஒளித் திருந்து நெல் கவர வரும் கேழலைத் தாக்குவது பற்றி, **துறுகல் அடுக்கத்தை** விதந்தோதினர். வில்லோர் அம்புக்கு இலக்காகாது விலகுதலால் அவர் தளர்ந் தொழியச் செய்வதனை ஈண்டு **மாற்றுதல்** என்றார். **ஐவனம்,** ஒரு வகை நெல்; இதனை வெதிர்நெல் என்பதும் வழக்கு. மலைச்சாரற் காடுகளைத் தீயிட்டுக் கொளுத்திச் செய்த புன்செய்க் கொல்லையில் "ஐவனநெல் கானவர்களால் விளைவிக்கப்பெறுகிறது.[1]" அவர்கட்கு இந்த "ஐவனமும் உணவுப்பொருளாகும்.[2]" ஐவனம் விளையுங்கால் கானவர் இரவில் காட்டுவிலங்குகள் வந்து அழிக்காவண்ணம் காவல்புரிவர்; அப்போது "இரவுமுற்றும் தீ எரிக்கப் படும்[3]".

1. புறம். 159. 2. நற். 373. 3. புறம். 172.

**பண்பு**, மெய்ம்மைப் பண்பு; அஃதாவது சொல்லும் செயலும் ஒத்தொழுகும் பண்பாடு. வரைவல் என்று சொல்லி வரையாது ஒழுகுகின்றானாகலின், அவனைப் **பண்பில சொல்லும்** என்றும், தலைமகளும் அவன் மேற் கொண்ட ஆராக் காதலால், "அவன் வரம்பிறத்தல் அறம் தனக்கு இன்மையின்[4]" அவன் கூறியவற்றை ஆராய் தலின்றி ஏற்று ஒழுகும் இயல்பினள் என்பதைத் தலைமகன் நன்குணர்ந்துளான் என்பாள், **தேறுதல் செத்தே** என்றும் கூறினாள். பொய் கூறாரெனத் தம்மைத் தெளிந் தார்மாட்டுத் தலைமகன் அதனைக் கூறி யொழுகுதல் அறனன்று என்றாளாம். இதனாற் பயன் தலைமகன் தெருண்டு வரைவானாவது.

பன்றியொருத்தல் காவலரை மாற்றி ஐவனநெல்லைக் கவரும் நாடனாகலின் தலைமகன் தலைமகள்பால் இனிய சொற்களைச் சொல்லி மாற்றி அவள் நலன் நுகர்ந் தொழுகுதலைச் செய்கின்றானேயன்றி வரைந்துகோடலை நினைக்கின்றிலன் எனத் தோழி குறிப்பாய் வரைவுகடாயினாள் எனக் கொள்க.

*268. தாஅ யிழந்த தழுவரிக் குருளையொடு*
*வளமலி சிறுதினை யுணீஇய கானவர்*
*வரையோங் குயர்சிமைக் கேழ லுறங்கும்*
*நன்மலை நாடன் பிரிதல்*
*என்பயக் கும்மோ நம்விட்டுத் துறந்தே.*

**இஃது, " அவன் குறிப்பிருந்தவாற்றால் நம்மைப் பிரிந்து வந்தல்லது வரையமாட்டான் போன்றிருந்தது " என்று தலைமகள் கூறக் கேட்ட தோழி தலைமகன் சிறைப்புறத்தானாக அவட்குச் சொல்லியது.**

---

4. தொல். பொ. 120.

**ப. உரை :** தாயிழந்த குருளையோடே தினையை உண்டு கேழல் உறங்குகின்ற இத்தன்மையையுடைய நாடனாதலால் இவ்வாறு நிகழ்தல் கூடாது என்பதாம்.

**உரை :** தாயை இழந்த பருத்த வரிகளையுடைய பன்றிக்குட்டியுடன் வளம்மிக விளைந்த சிறுதினையை உண்ணக் கருதிக் கானவர் வாழும் மலையினது உயர்ந்த உச்சிக்கண் பகற்போதில் ஆண்பன்றி உறங்கும் நல்ல மலைநாடன் நம்மைத் துறந்து செல்லுவானாயின், அஃது அவற்கு எப்பயனைத் தருமோ? அறியேன் எ. று.

**தழுவரி,** நெருங்கிய வரிகள். **குருளை,** குட்டி; "நாயே பன்றி புலி முயல் நான்கும், ஆயுங் காலைக் குருளை என்ப [1]" என **ஆசிரியர்** கூறுதல் காண்க. கேழல், குருளையொடு, உணீஇய, உறங்கும் என இயையும். நாடன் நம் விட்டுத் துறந்து பிரிதல் என்பயக்கும்மோ எனக் கூட்டி இயைக்க. **விடுதல்,** தனிப்ப விடுதல். **துறத்தல்,** உள்ளத்தே பிரிதற்குரிய துணிவு கொளல். **பிரிதல்,** மெய்யால் நீங்குதல். ஓகாரம், எதிர்மறை. கேழல் இரவுப்போதில் இரைதேடி மேயும் இயல்பிற்றாகலின், உறங்குதற்குரிய பகற்போது வருவிக்கப்பட்டது.

தழுவரிக் குருளை யென்றற்குத் தாயை யிழந்தமையால் தந்தையைத் தழுவிச் செல்லும் வரி பொருந்திய குருளை யெனினுமாம். **நம்மைத் துறந்து நன்மலை நாடன் பிரிதல்** என்றது, "அவன் குறிப்பிருந்தவாற்றால் நம்மைப் பிரிந்தல்லது வரையமாட்டான் போன்று இருந்தது" எனத் தலைமகள் கூறியதனைக் கொண்டு கூறியதாம். தன்னை யின்றியமையாத நம்மைத் துறந்து பிரிதலால், அவன் பெறலாகும் பயன் ஒன்றும் இல்லை என்பாள், **என் பயக்கும்மோ** என்றாள்.

---

1. தொல். பொ. 561.

வளம் மலிந்த தினையைக் குருளையுடன் உண்ணக் கருதிக் கேழல் உயர்சிமைக்கண் உறங்கும் என்றது, நலம் முதிர்ந்த நின்னை வரைந்து கோடலை எண்ணி நின் பாற் பிறந்த காதலுடன் பிரிந்துறைதலைத் தலைமகன் கருதுகின்றான் என்று தோழி கூறியவாறு. இவ்வண்ணம் பிரிந்தானாயின், நாம் நலம் துறந்து கெடுவதன்றி வேறு பயன் இன்று என்பாள் **என் பயக்கும்மோ** என்றாள். இனிக் கேழல் குருளையைத் தன் உடன்கொண்டு சென்று தினையுண்பான் உறங்கும் நாடனாகவும், நின்னையும் தன் உடன்கொண்டு வரைந்து கோடலை எண்ணாது இவண் விடுத்துப் பிரிதலைக் கருதுவது என்னை என்றற்கு **என் பயக்கும்மோ** என்றாள் என்றுமாம். பழையவுரைகாரர், **சிறுதினை யுணீஇக் கேழல் உறங்கும்** என்று பாடங்கொண்டமையின், "தினையையுண்டு கேழல் உறங்குகின்ற இத் தன்மையையுடைய நாடனாதலால் இவ்வாறு நிகழ்தல் கூடாதென்பதாம்" என்பாராயினர்.

**வளமலை சிறுதினை உணீஇ யுறங்கும்** என்றும் பாடம் உண்டு. **உணீஇய வுயங்கும்** என்ற பாடத்துக்கு ஒருபால் பிணவின் பிரிவு வருத்த ஒருபால் கானவர்காவல் வருத்தக் கேழல் குருளையொடு தினையுண்டற்கு வருந்தும் என்றது, ஒருபால் நலந்தொலைவும் ஒருபால் இற்செறிப்பும் வருத்த இடையே தலைவி தலைவன் தந்த காதலொடு அறிவில் கூட்டம் பெறுதற்கு வருந்தியுறைகின்றாள் எனத் தோழி சிறைப்புறத்தானாகிய தலைமகனைக் குறிப்பால் வரைவு முடுகியவாறாகக் கொள்க.

கேழல் தன் குருளையை உடன்கொண்டு சென்று தினை யுண்பான் உயர்சிமைக்கண் உறங்கும் நாடனாகலின் நின்னை உடன்கொண்டு சென்று வரைந்து கொள்வான் எண்ணாது, அவன் பிரிதலைக் கருதுவது பயனின்றென்றாள் என்றுமாம். (அ)

269. கேழ லுழுதெனக் கிளர்ந்த வெருவை
விளைந்த செறுவிற் றோன்று நாடன்
வாரா தவணுறை நீடி னேர்வளை
இணையீ ரோதி நீயழத்
துணைநனி யிழக்குவென் மடமை யானே.

இது, குறைநயப்பக் கூறித் தலைமகளைக் கூட்டிய தோழி, அவன் இடையிட்டு வந்து சிறைப்புறத்து நின்றுழித் தலைமகட்குச் சொல்லியது.

ப. உரை: **துணைநனி இழக்குவேன் மடமையான்** என்றது நீ எனக்குத் துணையாதலை இழப்பேன் யான், அவனைத் தேறி முன் செய்த மடமையான் எ. று. இறந்துபடுவேன் என்பதாம். நீ அழ வாராது அவண் உறை நீடின் எனக் கூட்டுக.

கேழல் உழுததாக எருவை நெல் விளைந்த செறுப் போலத் தோன்றும் என்றது வேட்கை நலியத் தனக்கு வந்த வருத்தத்தானே தலைசாய்த்து நல்லாரைப் போல ஒழுகிய துணையே யுள்ளது என்பதாம்.

**உரை:** பன்றி யுழுததாக ஓங்கி யெழுந்த கோரை நெல்விளை வயல்போலப் பொலிந்து தோன்றும் நாட்டினை யுடையோன், அழகிய வளையும், கடையொத்த நெய்ப்பினை யுடைய கூந்தலு முடையாய், நீ புலம்பியழ, இவண் வாராது அவன் பிரிந்துறைதலையே நீட்டிப்பா னயின், அவன் குறைநயப்பக் கூறியவற்றைத் தெளியாது நின்னை அவனொடு தலைக்கூட்டிய யான் என் மடமையால், நினக்குத் துணையாதலை இழப்பேனாவேன் எ. று.

**எருவை,** பஞ்சாய்க் கோரை. "எருவை நறும்பூ நீடிய பெருவரை[1]" என்றார் பிறரும். நீ, யழ, அவணுறை, நீடின் எனக் கூட்டுக. பன்றிகள், காந்தள் வள்ளி

1. நற். 261.

முதலியவற்றின் கிழங்குகளை உண்டற்பொருட்டுக் கிளைத்தமண் நன்கு உழுதது போறலின், **கேழல் உழுதென** என்றும், அதனால் புழுதி படிந்து எருவைக்கோரை வளம் பட வளர்தல் கண்டு, **கிளர்ந்த எருவை** என்றும் கூறினர். விளைந்த செறு, விளைந்த நெல்வயல். **உறை**, உறைதல்; முதனிலைத் தொழிற்பெயர். ஒதி, நாடன் நீடின் நீ அழ, மடமையான் துணை நனி இழக்குவென் என முடிக்க. **துணை**, துணையாந்தன்மை. துணையாந்தன்மை இழத்த லாவது துணையா யிருக்கும் திறமின்றி இறந்துபடுவேன் என்றவாறு.

அவன் பிரிவாற்றாது, தலைமகள் வளைநெகிழ்ந்து, கூந்தல் சரிந்து வேறுபட்டமையால் அவளை **நேர்வளை, இணையீரோதி** என்றாள். நாடன் வாராது அவணுறைதல் நீடுமாயின், உடம்புநனி சுருங்கி வேறுபட்டு நீ ஆற்றா மையாற் பிறிதுபடுதற் காற்றாது யான் உயிர் இறப்பேன் என்பாள், **துணை நனி யிழக்குவென்** என்றாள். தோழியிற் கூட்டத்துக் குறை நயந்த போது அவன் கூறியவற்றை நன்கு ஆராயாது அவனொடு தலைக்கூட்டிய கேண்மை, தோழியாகிய தான் ஆய்ந்தாய்ந்து கொள்ளாத தொன் றாய்த் தான் "சாம் துயரந் தருவதாயிற் றாகலின் [1]" அச்செயற்குக் காரணமாய தன் அறியாமைக்கு இரங்கித் **துணைநனி இழக்குவென் மடமையானே** என்றாள்.

இனி, கேழல் உழுததனால் கிளர்ந்தெழுந்த எருவைப் புல் விளைந்த நெல்லைப்போலத் தோன்றும் நாடன் என்ற தனால், தலைவனொடு உளதாகிய தொடர்பினால் தலைவி மேனிக்கண் தோன்றிய வேறுபாட்டை இளமைக்கதிர்ப்புப் போலும் எனத் தோழி மறைத்து ஒழுகியவாறு கூறின ளாம. ஆகவே, தலைமகன் பிரிந்து உறைதற்கண் நீட்டித்தால் தலைவியது வேறுபாடு புறத்தார்க்குப் புலனாகிக் களவை வெளிப்படுத்தும் எனவும், அதனால் தான் இறந்துபடுதல் ஒருதலை யெனவும் கூறுவாள், **நீயழத் துணைநனி இழக்குவென்** என்றும், இவ்வளவிற்கும் காரணம் இது வென்பாள் **மடமையானே** என்றும் கூறினாள் எனினும் அமையும். (௧)

1. குறள். 792.

270. கிழங்ககழ் கேழ லுழுத சிலம்பில்
தலைவிளை கானவர் கொய்தனர் பெயரும்
புல்லென் குன்றத்துப் புலம்புகோள் நெடுவரை
காணினுங் கலிழுநோய் செத்துத்
தாம்வந் தனர்நங் காத லோரே.

இது, வரைவு காரணமாக நெட்டிடை கழிந்து பொருள் வயிற் போகிய தலைமகன் வந்தமை அறிந்த தோழி உவந்த உள்ளத்தளாய்த் தலைமகட்குச் சொல்லியது.

**ப. உரை:** கிழங்ககழ் கேழல் உழுத புழுதிக்கண்ணே வித்த விளைந்த பயிர் கானவர் கொய்யும் சிறப்புடையதேனும், அவன் அவ்விடத்து உறையாமையின் தனக்குப் புல்லென்று தோன்றுதலால் **புல்லேன் குன்றம்** எனவும், **புலம்புகோள் நேடுவரை** எனவும் இழித்துக் கூறப்பட்டதெனக் கொள்க.

**உரை:** கிழங்குகளை அகழ்ந்து எடுக்கும் பன்றிகள் தம் கோடுகளால் உழுத புழுதி நிறைந்த சிலம்பில், கானவர் விதைப்ப விளைந்த முதல்விளைவினைக் கொய்துகொண்டு நீங்குதலால் புல்லென்று தோன்றும் குன்றத்து, அன்னோர் கூட்டத்தையின்றித் தனித்த தோற்றத்தைக் கொண்ட நெடிய பக்கமலையைக் கண்டாலும் கலுழ்தற்குக் காரணமான நோயைக் கருதி நம் காதலர் தாம் மேற்கொண்ட வினைமுடித்து வந்தன ராகலின் நீ மகிழ்வாயாக எ. று.

காந்தள், வள்ளி, கோரை முதலியவற்றின் கிழங்குகளை அகழ்ந்துண்டல், கேழல்கட்கு இயல்பாகலின், மலைப்பக்கம், **கிழங்ககழ் கேழல் உழுத சிலம்பு** எனப் பட்டது. கிழங்கு ஈண்டு இஞ்சிக்கிழங்கு என்பாரும் உளர்; அதனைக் கேழல்கள் அகழ்ந்துண்டல் மரபன்மை யறிக. **தலைவிளைவு,** முதல் விளைச்சல். விளைவின் முன்னர்ச் சிலம் பின்கண் வித்திய தினைப்பைங்கூழ் பச்சென்னத் தோன்றிக் காண்பார்க்கு அழகுசெய்தலாற் பொலிந்து தோன்றும் குன்றம், அது முற்றியதனுல் கானவர் கொய்து பெயர்ந்த

பின் அப்பொலிவு குன்றுதலின், **புல்லென் குன்ற** மென்றும், விளைவு முற்றுதவிடத்து அதனைக் கவர்வான் வரும் விலங்குகளாலும், புட்களாலும், அவற்றைக் கடிதற்குப் போந்து காவல்செய்யும் கானவர் குழுவானும் விளங்கிய குன்றம், அவ்விளக்கமின்மையின், **புலம்புகொள் நெடு வரை** என்றும் கூறப்பட்டது. **கலிழும் நோய்**, கலிழ் தற்குக் காரணமாகிய நோய்.

தினைவிளைவும் மாவும் புள்ளும் மக்கட்கூட்டமும் கொண்டு இனிய காட்சி வழங்கிற்றாயினும், தலைமகன் பிரிவின்கண், குன்றமும் நெடுவரையும் தலைமகள் நினைவில் தலைவன் நினைவை யெழுப்பி வருத்தினமை பற்றிப் **புல்லென் குன்றம்** என்றும், **புலம்புகொள் நெடுவரை** என்றும் தோழி கூறினாள். அதனைக் காணுங்கால், பண்டு தான் மேற்கொண்டிருந்த புனங்காவலும், தலைமகனை எதிர்ப்பட்டு நட்புற்றமையும், புணர்வின் இன்பமும், பிரிவுத்துன்பமும் ஒன்றன்பின் ஒன்றாய்த் தோன்றித் தலைவி யுள்ளத்தை அலைத்தமை குறித்து, **காணினும் கலிழும்** என்றும், அத்துன்பம் தலைமகன் வரவானன்றித் தீராமை உணர்ந்து அவன் வந்தனன் என்றற்கு, **நோய் செத்துத் தாம் வந்தனர்** என்றும், ஈண்டு யாம் உற்ற துன்பத்தை ஆண்டு அவர்தாம் உணர்தற்கு ஏது, அவர்பால் நம்மிடை யுளதாகிய காதல் என்பாள், **நம் காதலோர்** என்றும் கூறினாள். இது, **துன்பத்துப் புலம்பல்.** உள்ளுறையால் தலைமகனது வரவு வரைவு கண்ணிய தென்று குறித்தமையின், வாளாது **வந்தனர்** என்றாளென்க.

சிலம்பில் விளைந்த தலைவிளைவைக் கானவர் கொய்து கொண்டு பெயர்வர் என்றது, தலைமகனைத் தலைப்பட்டுக் கூடியதன் தலைவிளைவாகிய வரைவினை நீ தலைமகன் வரவால் பெறுவாயாயினை என்றவாறு. பின் விளைவன மணமும் மனையறமும் மகப்பேறும் முதலாயினவாம். (௰)

## 28. குரக்குப்பத்து.

பாட்டுத்தோறும் குரங்காகிய கருப்பொருளே சிறந்து வரத் தொகுக்கப் பெற்றமையின், **குரக்குப்பத்து** என்னும் பெயர்த்தாயிற்று.

உலகிலுள்ள உயிர்வகைகளுள் மக்களுயிர் உயர்ந்து விளங்குவதுபோல அஃறிணை உயிர்வகைகளில், முகத்திற் கண்கொண்டு பொருள்களை நேரே முற்ற நோக்கும் பெற் றிமையால் உயர்ந்தது குரங்கு. "புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகி" மேன்மையுற்று வளர்ந்து போந்த உயிரினத்துள் மக்களுயிர், குரங்குயிராய் இருந்தே இந் நிலை யெய்திற்று என்பது ஒருசார் ஆராய்ச்சியாளர் கொள்கை.

குரக்கினத்துள் ஆண் **கடுவன்** என்றும், பெண் **மந்தி** என்றும், குட்டி **பறழ்** என்றும் பார்ப்பென்றும் தமிழ்நூல் களில் வழங்கும் குரக்கினத்துள் பலவகை யுண்டு. இவை பொதுவாக வாலுடையன வாலில்லாதன என இருவகை யாம். வாலில்லாதன கொரில்லா, சிம்பஞ்சி என வகைப் படும், அவற்றுள் **சிம்பஞ்சி** ஆப்பிரிக்காவின் மேலைப்பகுதி யிலும் நடுப்பகுதியிலும் வாழ்கிறது; நன்கு வளர்ந்த கடுவன் ஐந்தடி உயரம் இருக்கும்; பழங்கள் விதைக் கொட்டைகள் பசுந்தழைகள் இதற்கு உணவு. **கொரில்லா** ஆறடி உயரம் வளரும். இஃது ஆப்பிரிக்காவின் வெப்ப மான பகுதியிலுள்ள காடுகளில் உளது; உணவுக்காக அடிக்கடி இடம்விட்டு இடஞ்செல்லும் இயல்புடையது; நடக்கும்போது கைகளை ஊன்றி நான்குகால் விலங்கு போலவே செல்லும்; ஆயினும் கையை முடக்கிப் புறங் கையை ஊன்றிச் செல்லுகிறது. கொரில்லாக்கள் மரத்தில் ஏறுமல் தரையிலேயே வாழ்கின்றன. **ஒராங்குட்டான்**

சுமத்திரை போரணியோ தீவுகளில் சதுப்பு நிலக் காடுகளில் உளது. ஒராங்குட்டான் என்னும் மலேயாமொழிக்குக் காட்டுமனிதன் என்பது பொருள்; ஏனையவற்றைப் போலின்றி இவற்றின் கைகால்கள் காட்டுமரங்களில் வாழ்தற் கேற்ப அமைந்துள்ளன. ஒராங்குட்டான் முப்பதாண்டுகள் வாழ்கிறது. **கிப்பன்** குரங்குகள் கிழக்காசியக் காடுகளில் உள்ளன; வாலில்லாத இனத்துள் இவை உருவில் சிறியவை. நன்கு வளர்ந்தது மூன்றடி உயர மிருக்கிறது. இவை பறவைகளையும் பழவகை தழை வகைகளையும் உண்கின்றன.

ஏனைய பலவும் வாலுடையனவே. நிலவுலகில் வெம்மையான நிலப்பகுதிகளில்தான் குரக்கினம் காணப் படுகிறது. சிலவகைக் குரங்குகள் மிக்க குளிரையும் தாங்கி உயிர்வாழக் கூடியனவாகும். அவை இமயமலைப் பகுதியிலும், திபேத்து, சீனநாட்டு வடமேற்குப் பகுதி ஆகிய இடங்களிலும் வாழ்கின்றன. ஐரோப்பாவில் சிபிரால்டர் பகுதியில் ஒருவகைக் குரக்கினம் உண்டு. ஆத்திரேலியாவில் குரங்கே கிடையாது. மடகாசிகர்,நியூகினியா, மேற்கிந்தியத்தீவுகள் ஆகிய இப்பகுதிகளிலும் குரக்கினம் இல்லை.

குரங்குகள் யாவும் மரஞ்செறிந்த காடுகளில் மரங்களையே இடமாகக் கொண்டு வாழ்வன என்பது நாடறிந்த செய்தி. "குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பில்லை" என்பது பழமொழி; ஆயினும், ஆப்பிரிக்காவில் பாபூன் என்னும் ஒருவகைக் குரக்கினம் இவ்விதிக்கு விலக்காக உளது. மருதம் நெய்தல் பாலை என்ற இந்த நிலப்பகுதிகளில் இவை கூட்டம் கூட்டமாய் வாழ்கின்றன. தரையிலேயே இவற்றின் வாழ்வுமுழுதும் பெரும்பாலும் கழிகிறது. குரங்குகளின் வாய்க்குள் இருமருங்கிலும் இரு பைகள் உண்டு. உண்ணும் உணவை முதலில் விரைவாக எடுத்துக் கடித்துப் பைக்குள் அடக்கிக்கொண்டு

பின்னர் ஓரிடத்தே ஆர அமர்ந்து உண்பது அவற்றிற்கு வழக்கும். ஒருசிலவற்றிற்கு இப்பைகள் இருப்பதில்லை, அமரிக்கநாட்டுக் குரங்குகட்கு இப்பைகள் அறவே கிடையா. மேலும் அமெரிக்கக் குரங்குகட்கு வேருெரு சிறப்பியல்பும் உண்டு. குரங்குகளின் வாலின்கீழ் எருவாய்ப் பகுதியில் சிவந்த உறுதியான இரு தோற்பட்டை யுண்டு; அதனல் அவை எவ்விடத்திலும் நன்கு உட்கார இயலு கிறது. இப்பட்டை அமரிக்கக் குரங்குகட்கு இல்லை. அன்றியும் தென்னமரிக்காவிலுள்ள ஒருவகைக் குரங்கு கள் தம் வாலைக் கைபோல் பயன்படுத்துகின்றன. வாலி ஞல் மரக்கிளையைப் பற்றிக்கொண்டு கைகால்களைத் தொங்கவிட்டு ஊசலாடும் இயல்பு அவற்றிற்கு நன்கு வாயத்துள்ளது; சிறுகிளைகளை ஈர்த்துக் கிழிப்பதும், வேரூன்றிய செடிகளை வேரோடுபற்றிப் பிடுங்குவதும் இவற்றிற்கு வாலிஞலே ஆகின்றன. அமரிக்கக்குரங்கு களின் மூக்குத் துளைகட்கு இடைவெளி ஏனை எந்நாட்டுக் குரங்குகட்கும் இல்லாத அளவில் அகன்றுள்ளது.

அமரிக்கநாட்டுப் பிரேசில்பகுதியில் தான் பலவேறு வகைக் குரக்கினங்கள் உள்ளன. இவை வடக்கே மெக்சிகோ நாடுவரையிலும் காணப்படும். அதற்குமேல் குளிர்மிகுதலின் குரங்குகள் இருப்பதில்லை. இவ்வினங் களில் **சிலம்பிக்குரங்கு** வகை ஒன்று; அஃது அமைதி யாகவும் எளிதில் மக்களோடு பழகுவதாகவும் உளது; குளிர்மிக்க நாடுகளில் வாழக் கூடிய வாய்ப்பும் அதற்கு இயல்பாக அமைந்திருக்கிறது. **பூனைக்குரங்கு** என்ற இனம், தசை செறிந்த வட்டமான முகமும் அகன்ற கண்ணும் மயிர் அடர்ந்து பருத்து நீண்ட வாலும் உடை யது. இக்குரங்கு இரவுப்போதுகளில் வெளிப்பட்டுச் சிறு சிறு பூச்சிகளையும் பறவைகளையும் தேடி யுண்டு, பகற் போதுகளில் பெருமரப் பொந்துகளில் ஒடுங்கி உறையும். இவற்றின் வேருக நரிபோல் ஊளையிடும் **நரிக்குரங்கு** களும், பறவைபோல் கூவும் **சிறுகுரங்கு**களும், கைகால் களில் அணில்போல் கூரிய விரல் படைத்த **அணிற் குரங்கு** களும் தென்னமரிக்காவில் உண்டு.

வெம்மை நிலங்களில் வாழ்வதற்குரிய குரக்கினம் குளிர்நாடாகிய ஐரோப்பாவைச் சேர்ந்த சிபிரால்டரில் வாழ்வது ஆராய்ச்சியாளர்க்கு வியப்புத் தருகிறது. ஒரு காலத்தில் ஆப்பிரிக்காவும் ஐரோப்பாவும் கடலாற் பிரிக்கப்படாமல் நிலமாகவே தொடர்புற்றிருந்தன வாகலான், அக்காலத்தில் இக்குரக்கினம் இங்கே போந்து தங்கியிருக்கலாம் என்பது ஒருசார் ஆசிரியர் கொள்கை. பண்டை நாளைய சுபானியர்களில் எவரேனும் இதனை அண்மையிலுள்ள ஆப்பிரிக்காவிலிருந்து கொண்டு வந்திருக்கலாம் என்பது வேருெரு சாரர் கொள்கை. இக்குரங்குகள் இப்பகுதியிலிருந்து எப்போது வேரோடு தொலைந்து மறைகின்றனவோ அப்போது பிரித்தானியர் இப்பகுதியினின்றும் போய்விடுவர் என்ற கொள்கை அங்கே இன்றைய மக்களிடையே நிலவுகிறது. பிரித்தானியருக்கும் இப்பகுதியிலுள்ள குரக்கினத்துக்கும் யாது தொடர்போ!

நம் நாடு வெம்மை செம்மையுற அமைந்த நாடாகலின், இங்கே குரங்குகள் பல்கி யிருப்பதில் வியப்பில்லை. குரக்கினத்தைச் சிறப்பித்தே சீர்த்த காவியம் பாடிக் களிக்கின்ற நாடு நமது; இராமனுக்கும் இராவணனுக்கும் நடந்த போரை உரைக்கும் இக்காவியத்தில் அனுமனும் அனுமனைச் சேர்ந்த குரக்கினமும் இல்லையாயின், காவியமேது? நம்நாட்டுக் குரங்குகளில் செங்குரங்கு கருங் என இருவகை உண்டு. முகஞ் சிவந்தது செங்குரங்கு, கரியது கருங்குரங்கு. கருங்குரங்கினை **முசுக்கலை** எனவும், **ஊக** மெனவும் வழங்குவர். செங்குரங்கைக் குரங்கென்றே பொதுவாக வழங்குவது இயல்பு.

இக்குரங்குகள் ஒன்றேடொன்று அன்புசெய்து கலந்து வாழும் திறம் அறிஞர்கள் நன்கு அறிந்தது. அதனல் இவை எப்போதும் கூட்டமாய் வாழ்கின்றன. தாம் வாழும் இடத்தில் போதிய உணவு கிடையாதாயின் இவை வேறு இடங்கட்குத் திரண்டு செல்லும். அங்ஙனம்

செல்லுங்கால் முதிர்ந்த குரங்கு இவற்றிற்குத் தலைமை தாங்கி முன்னே செல்லும். இளங்குரங்குகளில் எவை யேனும் ஒழுங்கு தவறிச் சிதறிச் செல்லுமாயின், உடனே குரக்குத் தலைவன் அவற்றைச் சீறித் தாவிப் பற்றிக் கடித்தோ அடித்தோ தக்காங்கு ஒறுத்துச் செம்மை நெறி யில் நிற்கச் செய்யும். வேறு பகையினம் போந்து இக் கூட்டத்தைத் தாக்குமாயின், பெண்குரங்குகளையும் குட்டி களையும் ஆண் குரங்குகள் சூழ்ந்து காத்து நின்று பகை யினத்தோடு கடும்போர் உடற்றும். அவற்றுள் ஒன்று இறந்துவிடின் ஏனையாவும் ஒன்றுகூடி அதன்பொருட்டுப் புலம்பி வருந்துவது காண்போர் மனத்தை உருக்கும் தன்மைத்து. அதுபற்றியே கானவரும் வேட்டுவரும் குரக்கினத்தைக் கொல்ல நினைப்பதில்லை; கொல்லுவதும் இல்லை.

குட்டி ஈன்று அவைகளைப் பேணி வளர்ப்பதிலும், அன்பு செய்வதிலும் அவற்றிற்குத் தீங்குண்டாகாதவாறு காப்பதிலும் குரக்கினம் சிறந்து விளங்குகிறது. குரங்கின் பாற் காணப்படும் தாய்மைப்பண்பு பெரிதும் மதிக்கத் தகுவ தொன்று. தான் ஈன்ற குட்டி தன் முதுகின்மேல் ஏறிக் குதிரைவாதுவன் போல் தன்னைச் செலுத்தத் தான் அதன் குறிப்பின்படி குதிரைபோல் நடந்து அதற்கு இன்ப மூட்டும் தாய்மந்தியின் செயல் காண்போர்க்கு மிக்க இன்பம் தருவதொன்று. குட்டியொன்று இறந்து படின், சில மந்திகள் ஓரிரு நாட்கள் அதனைத் தம் மெய் யில் தழுவிக்கொண்டே கிடந்து வருந்தும்; இவ்வாறு ஒருதாய்க்குரங்கு உயிர் நீத்த தன்குட்டியை ஆறுநாட் கள் வரைத் தானே சுமந்து வருந்தினதை உயிர்நூலறிஞர் கண்டிருக்கின்றனர். இவ்வாறு வருந்தும் நாட்களில் அது நீர்குடியாமலும் உணவு கொள்ளாமலும் ஏனைய வற்றோடு கூடி விளையாடாமலும் இருக்கும்; அதன் துயரைப் போக்குதற்கு அதன் கடுவனும் ஏனைக் குரங்கு களும் எத்துணையோ நன் முயற்சிகளைச் செய்கின்றன. தம் குட்டி இறந்துவிடின், அதனை எறிந்துவிட்டுவேறொன் றின் குட்டியைத் திருடிக்கொண்டு தனது போல அன்பு செய்து ஒழுகும் மந்திகளும் உண்டு.

தினையை உணக்கிய மகளிர் சுனையில் நீராடச் சென்ற செவ்வி நோக்கி "ஒருமந்தி போந்து தினையைக் கவர்ந் துண்பதும்[1]" அருவியிற் பாய்ந்த குரங்கொன்று அங்கே வீழ்ந்து மிதந்த "பலாக்கனியைப் புணையாகக் கொண்டு நீந்துவதும்[2]" சங்க நூல்களில் காணப்படுகின்றன. மகவுடை மந்திகள் கீழே இருப்பக் கடுவன் பழமரங்களில் ஏறிப் பழங்களை உதிர்ப்ப, அவற்றுள் ஏற்பனவற்றை எடுத்துக் குட்டிக்குத் தந்து தாமும் உண்ணும் அழகிய காட்சி[3] சான்றோர் செய்யுட்களிலும் பிரேசில்நாட்டுக் குறிப்புகளிலும் காட்சி தருகிறது.

பலாவின் முதுகனி யொன்றைப் பெற்ற கடுவன் அதனை உண்பது குறித்துத் தன் "காதல் மந்தியைக் கையிட் டழைப்பதும்[4]" தினைக்கொல்லையுட் சென்று தினைக்கதிர் கொய்த கடுவனும் மந்தியும் மலைப்பக்கத்துத் துறுகல் மேல் இருந்து "ஞெமிடித் தின்பதும்,[5]" காட்டுப் பசுவொன்று கன்றூட்டி யுறங்குவது கண்ட மந்தி தன் சுற்றத்தை வாயடக்கி மெல்லக் குறுகி அதன்மடியைப் பற்றித் தன் பார்ப்பின் கையில் பால்பிழிவதும்[6]" இனிய இலக்கியக் காட்சிகளாகும்.

ஒருமந்தியின் கணவன் இறந்ததாக அதன் பிரிவாற்ருது தன் குட்டியை இனத்திடம் தந்து, அது வரையேறிப் பாய்ந்து உயிர் செகுத்துக்கொண்ட காட்சியைக் **கருந்தோட் கரவீரன்** என்பார்[7] குறிக்கின்ருர். தன் கண்ணுக்கு இனிய காதலனுகிய கடுவனொடு கூடிய இளமந்தி, தன் செயலை ஏனைக் குரக்கினம் அறிதற்கு நாணிச் சுனைநீரில் தன் நிழலை நோக்கித் தலைமயிரைத் திருத்திக் கொள்ளுவதை[8] **மருதன் இளநாகனுர்** வரைந்து காட்டுகின்ருர். [illegible]வை பொருளாக [illegible]ந்நூற் கண் வரும் பாட்டுக்களை [illegible]ரிக் காண்பாம்.

1. குறுந். 335. 2. அகம். 382. 3. குறுந். 278.
4. புறம். 158. 5. நற். 22. 6. ஷை. 57.
7. குறுந். 69. 8. நற். 151.

271. அவரை யருந்த மந்தி பகர்வர்
பக்கிற் றோன்று நாடன் வேண்டிற்
பல்பசுப் பெண்டிரும் பெறுகுவன்
தொல்கே ளாகலி னல்குமா லிவட்கே.

**இது, தலைமகன் வரைவுவேண்டி விடத் தமர் மறுத்துழிச் செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது.**

**ப. உரை** அவரையை நிறையத் தின்ற மந்தி பண்ட வாணிகர் பைபோலத் தோன்றும் நாடன் என்றது ஆண்டு வாழ் வனவும் மேலாம் உணவுகளில் குறைவின்றி வாழும் நாடன் எ. று.

**பல் பசுப் பெண்டிரும்** என்றது, வரைவெதிர் கொள்ளார் தமர் மறுத்த தீங்கினைத் தங்கள் மேலேற்றி இத்தீங்கு செய்யாது தான் நினைத்தவழி ஒழுகும் குணமுடைய பெண்டிர் பலரையும் பெறுகுவன் அவனே வேண்டின் எனக் கொள்க. **பசுப்போற் பெண்டிரும்** என்று பாடமோதுவாரு முளர்.

உரை: அவரையை நிறைய உண்ட மந்திகள் பண்டம் பகரும் வணிகருடைய பைபோலத் தோன்றும் நாடன் மகட்கொடை வேண்டுவானாயின், பல பசுப் போலும் இயல்பினையுடைய பெண்டிர் பலரைப் பெற்றோர் மருது தரப்பெறுவனாயினும், அவ்விடத்து, அவன் தானும் பழைமையான உறவினையுடைய னாகலின் இவள் பொருட்டு அவரெல்லார்க்கும் தரற்குரியவற்றை ஒருங்கே நல்குவன் எ. று.

**அவரை,** அவரைக்கொடி; ஈண்டு ஆகுபெயரால் அதன் காய்மேல் நின்றது. இது குறிஞ்சி முல்லை யாகிய நிலங்களில் வாழ்வார்க்கு உணவுப்பொருள்; "கருங்காழ் வரகே இருங்கதிர்த் தினையே, சிறுகொடிக் கொள்ளே பொறிகிள ரவரையொடு, இந்நான் கல்லது உணவும் இல்லை [1]" என்பது காண்க. அவரை முல்லைநிலத்துப்

1. புறம். 335.

புதல்களிலும், குறிஞ்சியின் தினைப்புனத்து இருவியிலும் படர்ந்து வளரும்; "புதல் பூங்கொடி அவரை [1]" எனவும் "சிறுதினை மறுகால் கொழுங்கொடி யவரை பூக்கும் [2]" எனவும் சான்றோர் கூறுப. அவரையின் இலை மும்மூன்றாக இருக்கும்; இலையும் கொடியும் கொழுவியன; "கோழிலை அவரைக் கொழுமுகை [3]" என்பர். இது முல்லை மலரும் கார்காலத்தே பூப்பது. அவரையின்பூ புறம் சிவந்து பவழம் போல்வது; "பைந்நனை அவரை பவழங் கோப்ப [4]" என வரும். இதன் இதழ் வெளிதாதலின், "அவரைப் பூவின் அன்ன வெண்டலை மாமழை [5]" என உவமம் செய்ப. அவரையின் சிவந்த பூ வளைந்து தோன்றுவதுபற்றிக் கிளியின் வாய்க்கு உவமையாக, "பைங்கொடி யவரை கிளிவா யொப்பின் பனமலர் [6]" என்று சான்றோர் கூறுவர். இதன் காய் வளைந்திருப்பதனால், "இருவிதொறும் குளிர் புரை கொடுங்காய் கொண்டன அவரை [7]" என்றனர். இக்காயை மக்களே யன்றிக் கிளிகளும் படிந்துண்பது வழக்கம். "காய்த்த அவரைப் படுகிளி [8]" என்பது காண்க. ஈண்டு, இதனைக் குரங்கின் மந்தி தின்று வாயின் இரு மருங்கினும் அடக்கிக் கொண்டிருப்பது கூறப்படுகிறது. **ஆர்ந்த** என்பது அருந்த என நின்றது. **பகர்தல்** விற்றல் ஆகலின், விற்பனை செய்யும் வணிகரைப் **பகர்வர்** என்றார். **பக்கு**, பை. "பக்கழித்துக் கொண்டீ [9]" எனவரும்.

**பசுப்பெண்டிர்** பசுவைப் போலும் இயல்புடைய பெண்டிர்; பசு தன்னால் அன்புசெய்யப்பட்ட கன்றின்வழி நின்றொழுகுதல் போலத் தம்மாற் காதலிக்கப்பட்டோர் நினைவுவழி யொழுகும் மகளிரைப் **பசுப்பெண்டிர்** என்றார். "மூத்தார் இளையார் பசுப் பெண்டிர் [10]", "பார்ப்பார் அறவோர் பசுப்பத்தினிப் பெண்டிர் [11]" எனவருதல் காண்க.

1. அகம். 104. 2. குறுந். 82. 3. அகம். 217.
4. சிறுபாண். 164. 5. ஐங். 209. 6. குறுந். 240.
7. மலைபடு 109-10. 8. ஐங். 286. 9. கலி. 65.
10. ஆசா. 65. 11. சிலப். 21:53.

பசுப்போலும் அறப்பண்புடைய மகளிர் அரியராகலின், அவரைப் **பசுப்போல் பெண்டிர்** என்றும், அப்பெண்டிரும் பலருளர் என்றற்குப் பன்மைவாய்பாட்டிலும் கூறினுள். **நாடன் வேண்டின்** என்றது, தலைமகளை யன்றிப் பிறபெண்டிரைத் தலைமகன் வேண்டாமை யுணர நின்றமையின், இது **வேட்கை யுரைத்தல். பெண்டிரும்** என்புழி நின்ற உம்மையால், தலைமகன்பால் "பிறப்பே குடிமை ஆண்மை யாண்டோடு, உருவு நிறுத்த காமவாயில், நிறையே யருளே யுணர்வொடு திருவென, முறையுறக் கிளந்த ஒப்பினது வகை[1]" யாவும் அமைந்தமை கூறியவாருயிற்று. இதனுற் பயன், தமர்கேட்டு மகட்கொடை நேர்தற்குரிய தகுதியுடைமை கண்டு உடன்படுவாராவது; என்னை "நிரல் அல்லோர்க்குத் தரலோ இல்[2]" என்னும் கொள்கையின ராகலின். கழிந்த பிறப்பில் தொடர்ந்த கேண்மையால் இப்பிறப்பில் களவுவழி வந்த கேண்மையன் என்பாள் **தொல் கேள்** என்றும், இவள்பொருட்டு நீவிர் வேண்டுவன முற்றும் தரவல்ல திருவினன் என்றற்கு **நல்குமால் இவட்கே** என்றும் கூறினுள். இஃது **உண்மை செப்பல்.** தொல்கேள் இப்பொருட்டாதல், "பழங்கேண்மை கண்டறியாதேன் போல் கரக்கிற்பென்மற் கொலோ[3]" என்பதனுல் அறிக.

இனி, நாடன் வேண்டின் பெண்டிரும் பெறுகுவன் என்றது தலைமகள் அவனையல்லது பிறரை வேண்டாள் என்றும், இவள் பொருட்டு அவன் யாவும் நல்கும் என்றது, அவனையன்றிப் பிறர்க்கெனின் உயிர் வாழாள் என்றும் குறிப்பால் தோழி கூறினுளாம். இதற்குப் பிற வாறும் உரைப்ப.

அவரையை யுண்ட மந்தி வணிகரது பக்குப் போலத் தோன்றும் நாடனுகலின், தமர் அவனது கேண்மைச் சிறப்பை அறியாது ஏனோர் போலக் கருதி மகட்கொடை மறுத்தார் எனத் தோழி உள்ளுறுத் துரைத்தவாறு அறிக.

1. தொல். பொ. 273. 2. புறம். 345. 3. கலி 39.

**பசுப்போற் பெண்டிரும் பெறுகுவன்** என்ற பாடத்துக்குப் பசுத்திரளைப் பெறுவது போலப் பெண்டிர்பலரைத் தன் ஆண்மையால் பெறுகுவன் என வுரைக்க. இதனாற் பொருள் சிறவாமை யறிக. (கூ)

272. *கருவிரன் மந்திக் கல்லா வன்பறழ்*
*அருவரைத் தீந்தே னெடுப்பி யயல*
*துருகெழு நெடுஞ்சிமைப் பாயு நாடன்*
*இரவின் வருத லறியான்*
*வரும்வரு மென்ப டோழி யாயே.*

**இஃது, அல்லகுறிப்பட்டு நீங்கும் தலைமகன் சிறைப்புறத்தானாக முன்னைநாள் நிகழ்ந்ததனைத் தோழிக்குச் சொல்லுவாள் போன்று தலைமகள் சொல்லியது.**

ப. உரை: மந்திக்கு ஒருமகவாகிய பார்ப்பு மலைக்கண் பெருந்தேன் இருலைக் கிளர்த்து எழுப்பி ஈக்கு வெருவி அதன் அயற் சிகரத்திலே பாயும் என்றது, தான் நுகரக் கருதி வந்து நம்மை உணர்த்திச் சுற்றத்தார் பலரும் உணர்ந்த அதற்கு வெருவிப் பெயர்வான் எ. று.

**உரை:** தோழி, கரிய விரலையுடைய மந்தியின் நல்லறிவில்லாத வலிய குட்டி, ஏறுதற்கரிய வரையிடத்துத் தீவிய தேனை அழிப்பான் தேனீக்களை எழுப்பி, அவை கொட்டுதற்கஞ்சி அயலதாகிய உட்குப் பொருந்திய நெடிய உச்சிக்கண் பாய்ந்தோடும் நாடன் இரவுக்குறிக்கண் வருதலை அறியானாக, அவனை வருகின்றான் வருகின்றான் என யாய் பன்முறையும் கூறாநிற்பள், காண் எ. று.

முகம் போலாது மந்தியின் விரல் கருத்திருத்தலின், **கருவிரல் மந்தி** எனப்பட்டது. இது செய்யின் இது விளையும் என்னும் நல்லுணர்வு பெறாத இளமைச் செவ்வி தோன்றக் **கல்லா வன்பறழ்** என்றார்; கல்வியின் பயன்

அதுவாகலின். "கல்லா வன்பார்ப்பு[1]" எனப் பிறண்டும் கூறுப. குரங்கிற் குரிய தொழிலை அறியாமை பற்றி இவ்வாறு கூறினா ரென்றலு மொன்று; ஆயினும் கல்லா மையைக் குரங்கினத்துக்கே பொதுவாகக் கூறுதல் மரபு. "கல்லாக் கடுவன்[2]" என்றும், "கல்லா மந்தி[3]" என்றும் நூலோர் நுவல்வது நோக்குக. **பறழ்**, குட்டி. தாயாகிய மந்தி விலக்கவும் விலகாது தேனை அழித்தற்கு ஓடும் பேதைமைத்தடிப் புடைமைபற்றி **வன்பறழ்** என்றார் என்க. ஏறுதற் கருமையின் **அருவரை** எனப்பட்டது. தேனீக்கள் அடை வைக்கும் இடமும் அதுவே என அறிக **உரு**, உட்கு. நெடுஞ்சிமையின் உருவுடைமை நோக்காது **பாயும்** எனவே, ஈக்கள் கொட்டுதற்கு அஞ்சினமை பெறப் படும். வாரான் என்னாது **வருதல் அறியான்** என்றது, வரு வதிலன், ஒருகால் வரினும் பிறர் அறியாவகை வருமாறு தெரிந்திலன் என்பதுபட நின்றது.

யிரவில் தான் அல்லகுறிப்பட்டு உழந்த அல்லலைக் குறிப்பாலுணர்த்துவாள், **இரவின் வருத லறி யான்** என்றும், வாராதானை வந்தான் என்று யாய் மருண்டு கூறுகின்றாள் என்பாள், **வரும் வரும் என்பள் யாய்** என்றும் கூறினாள். அடுக்கு வன்புறை குறித்து நின்றது.

மந்தி விலக்குவது இரவுக்குறி விலக்கிய குறிப்பாக வும், வன்பறழ் தலைவனாகவும், தேனீ சுற்றத்தாராகவும், பறழ் நெடுஞ்சிமையிற் பாய்ந்தது தலைவன் பெயர்ந்து சென்றதாகவும் உள்ளுறையுவமம் கொள்க. **யாய் வரும்வரும் என்பள்** என்றது தாய் அறிந்தமை கூறி இரவுக்குறி மறுத்து வரைவு கடாவியவாறு.

**நெடுஞ்சினை** என்பது பாடமாயின், மலையின் சிமையம் அதற்குச் சினையாகும் இயைபு குறித்துச் சினை எனப்பட்டது என்க. (உ)

1. ஐங். 280. 2. அகம். 252. 3. ஷ 378.

273. அத்தச் செயலைத் துப்புற ழொண்டளிர்
புன்றலை மந்தி வன்பறழாரும்
நன்மலை நாட நீசெலின்
நின்னயந் துறைவி யென்னினுங் கலிழ்மே,

இது, வரைவிடைவைத்துப் பிரியும் தலைமகன் நின் துணைவியை உடம்படுவித்தேன், இனி நீயே இதற்கு உடன் படாது கலிழ்கின்றாய் என்றாற்குத் தோழி கூறியது.

ப. உரை: பிரிவு உடம்பட்டாளே யாயினும் நீ பிரிந்துழி ஆற்றாள் என்பதாம்.

அசோகந்தளிரை மந்திப்பார்ப்பு அருந்தும் என்றது இளமை கழிவதற்கு முன்னே வரைதல் வேண்டும் என்பதாம்.

உரை: வழிக்கண்நின்ற அசோகினது பவளம் போலும் ஒள்ளிய தளிர்களைப் புல்லிய தலையினையுடைய மந்தியின் வலிய குட்டி உண்ணும் நல்ல மலைநாடனே, நீ பிரிந்து செல்லின் நின்னைவிரும்பி நின் பிரிவுடன்பட்டு ஈண்டு உறைபவள் பின்னர் ஆற்றாது என்னினும் மிகக் கலுழ்ந்து வருந்துவள், காண் எ. று.

பெருவழிகளில் நெல்லிமரங்களை வழிக்கரையில் நிரல்பட வளர்ப்பது பண்டைத்தமிழர் மரபு. வழிக்கரையில் நிற்பதுபற்றிச் செயலை, **அத்தச்செயலை** எனப்பட்டது; "அத்த நெல்லி [1]" எனவும், "அத்தப் பலவு [2]" எனவும் சான்றோர் உரைப்பது காண்க. செயலையின் தளிர் செந்நிறத்த தாதலின், **துப்புறழ் ஒண்டளிர்** என்றார்; பிறரும், "ஊட்டி யன்ன ஒண்டளிர்ச் செயலை [3]" "அழலேர் செயலை [4]" என்று கூறுவர். இளந் தளிர்களை உண்டல் குரங்குகட்கு இயல்பு; "முறிமேய் கடுவன் [5]" "குளவி மேய்ந்த மந்தி [6]" எனப் பின்னரும் கூறுப. மந்தியின்

1. அகம். 241. 2. ஐங். 351. 3. அகம். 68
4. ஷ 188. 5. ஐங். 276. 6. ஷ 279.

தலைமயிர் சிலிர்த்துத் துய் போறலின், **புன்றலை மந்தி** என்றார்; ஏனைச் சான்றோரும் "புன்றலை மந்தி[1]" "துய்த் தலை மந்தி[2]" என்று குறிப்பர். **உறைவி,** உறைபவள்; "உவர்நீங்கு கற்பின் எம் உயிர் உடம்படுவி[3]" என்றாற் போல.

தலைமகள் நின் பிரிவுடன்பட்டா ளாயினும், நீ பிரிந் துழி ஆற்றா ளென்பதாம். நின்னைச் சிறிது பிரியினும், ஆற்றாது நின்னையே நினைந்து வாய்வெருவி வருந்துமவள் நீ பிரிதற்கு உடன்படாள்; மற்று நின் வரம்பிகத்தல் தன் கடனன்று என்னும் கற்புடைமையால் உடம்பட்டா ளாதல் வேண்டு மென்பாள், **நின்நயந் துறைவி** என்றும், தன் இளமையால் என்னினும் விரைந்து உடன்பட்டா ளாகலான், பிரிவின்கண் என்னினும் ஆற்றாளாவள் என்றற்கு **என்னினும் கலிழ்மே** என்றும் கூறினாள்.

மந்தியின் வன்பறழ் செயலையின் தளிர் முற்றி நிறம் மாறுமுன்பே உண்டாற் போல, நீயும் இவள் இளமை கழிந்து காமச்செவ்வி மாறுமுன்பே வரைந்து கோடல் வேண்டும் என்பது உள்ளுறை; "இளமை கழிந்த பின்றை வளமை, காமம் தருதலும் இன்றே[4]" என்று சான்றோர் கூறுதல் காண்க. (௩)

**274.** மந்திக் கணவன் கல்லாக் கடுவன்
ஒண்கேழ் வயப்புலி குழுமலின் விரைந்துடன்
குன்றுய ரடுக்கங் கொள்ளும் நாடன்
சென்றனன் வாழி தோழியென்
மென்றோட் கவினும் பாயலுங் கொண்டே.

**இது, வரைவிடை வைத்துப் பிரிந்துழி ஆற்றுவிக்கும் தோழிக்குத் தலைமகன் சொல்லியது.**

---

1. நற். 379. 2. ஷை 57. 3. அகம். 136.
4. நற். 126.

**ப. உரை:** மந்திக் கணவனுகிய கல்லாக் கடுவன் புலி முழக்கிற்கு அஞ்சிக் வரையகத்துப் பாயும் நாடன் என்றது, நமக்கு உரியனுய் ஒழுகுகின்றவன் யாம் எம்மைப் பாதுகாத்து உரைக்கின்ற உரைக்கு அஞ்சிச் சென்ருன் என்பதாம்.

**உரை:** தோழி, மந்திக்குக் கணவனுய் மேல் விளைவ தறியும் கல்வி யில்லாத கடுவன், ஒள்ளிய நிறம் பொருந்திய வலியுடைய புலி முழங்குதலால் வெருவி யோடிக் குன்றின் கண் உயர்ந்த மலைப்பக்கத்தை அடையும் நாடன், என் மெல்லிய தோளழகும், அதனைச் செறிய எய்தும் உறக்க மும் என்னிடத்தே இலவாகச் செய்து, தான் என்னைப் பிரிந்து சென்ருன்; அவன் வாழ்வானுக எ. று.

**குழுமல்**, முழக்குதல், "கயவாய் வேங்கை காய்சினம் சிறந்து குழுமலின் வெரீஇ[1]" என்றும், "கொடுவரிச் செங்கண் இரும்புலி குழுமுஞ் சாரல்" என்றும் வருவன வற்ருலுணர்க. **பாயல்**, உறக்கம்.

தலைமகன் பிரிவினுல் வருந்துபவள், புறத்தார்க்குப் புலப்படுத்தும் தோள்மெலிவும், அதற்குக் காரணமாய ஆற்ருமையும் கண்டு அஞ்சி யிரங்குவாள், **மென்ருேட் கவினும் பாயலும் கொண்டே** என்றும், தன்னை யின்றி அமையாத இவள் தோள் மெலிந்து கண்ணுறக்கம் இன்றி வருந்திநிற்கத் தான் சென்று இனிதிருக்கின்ருன் என்பாள் **சென்றனன்** என்றும், தன் பொருட்டுப் பிறர் வருந்தாநிற்ப அது காணுது இன்புறுவோர்க்கு எய்தும் பழி அவற்கு வாராமை குறித்து **வாழி** என்றும் கூறினுள்.

கல்லாக் கடுவன் புலி குழுமல் கேட்டு குன்றுயர் அடுக்கம் கொள்ளும் என்றது, வேற்றுவரைவு வருமென யாம் படைத்து மொழிந்தமை கேட்டு அஞ்சி வரைபொருட்குச் சென்ருன் எனத் தலைமகன் செலவுக் குரிய காரணத்தை உள்ளுறுத்து உரைத்தவாறு.

1. அகம். 221.

அவன் கவினும் பாயலும் கொண்டு சென்றானாயினும் வரைபொருள் முற்றி விரைந்து வருவானாக என்னும் விழைவு தோன்ற **வாழி** என்றாள் என்றுமாம். (௬)

275. குரங்கின் றலைவன் குருஉமயிர்க் கடுவன்
சூரலஞ் சிறுகோற் கொண்டு வியலறை
மாரி மொக்குள் புடைக்கு நாட
யாநின் னயந்தன மெனினுமெம்
ஆய்நலம் வாடுமோ வருளுதி யெனினே.

**இது, வரையாது வந்தொழுகும் தலைமகன் இடையிட்டு வருதலால் எதிர்ப்பாடு பெறாத தோழி குறியிடத்து எதிர்ப்பட்டு அவன் கொடுமை கூறி நெருங்கிச் சொல்லியது.**

**ப. உரை:** நின் நயந்த எம் நலம் வாடுதல் ஒருதலை யன்றே; அங்ஙன மாயினும் நின்னை யாங்கள் நயந்ததனை வெருளாது அருளப் பெறின் எம் நலம் வாடுமோ? எ. று.

குரங்கின் தலைவனாகிய கடுவன் சூரற்கோலைக் கொண்டு தானே அழிகின்ற மாரிமொக்குளைப் புடைத்து அழிக்கும் நாட என்றது நின்னை நயந்த எங்கள் நலம் நீ வரையாமலே அழிகின்றது; இதனை நீ இவ்விடையிட்ட ஒழுக்கத்தாலே அழியா நின்றாய் என்பதாம்.

**உரை:** குரங்கின் தலைவனாகிய நிறம் பொருந்திய மயிரினையுடைய கடுவன் சூரலின் சிறிய கோலைக்கொண்டு அகன்ற மலைப்பக்கத்தே யுள்ள மழைநீரா லாய மொக்குளைப் புடைக்கும் நாடனே, யாம் நின்னை விரும்பினே மாகலின், நலந்தொலைவு எய்தக்கடவே மாயினும் இடையறா ஒழுக்கத்தான் நீ எமக்கு அருளுவையாயின், எங்கள் அழகிய நலம் வாடாதன்றோ? எ. று.

தன்னை நயந்தாரைத் தான் நயத்து தலையளி செய்தல் தலைமகனுக்குக் கடனாக, நீ அது செய்யாதொழிந்தனை என்பாள், **யாம் நின் நயந்தனம்** என்றும், அந்நயப்பால்

யாம் நலம் வாடக் கடவேம் என்பது ஒருதலை யன்று என்பாள், **எனினும்** என்றும் கூறினாள். கூறவே, அவள் நலம் வாடுதற்குக்காரணம் அவனது அருளாமை என்றும், அவ் வாட்டந்தானும் அழிவில் கூட்டத்தால் அருளுவை யாயின் இன்றாம் என்றற்கு, **ஆய்நலம் வாடுமோ அருளுதி யெனின்** என்றும் கூறினாளாயிற்று. **நயந்தனம்** எனத் தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தைமையும் படத் தோழி கூறுதலின், **அருளுதி யெனின்** என அவள் நெருங்கி யுரைப்பது அமையும் என அறிக. **யாம் நின் நயந்தன மெனினும்** என்றது **தன்னை யழிதல்; ஆய்நலம் வாடுமோ** என்றது, வாட்டம் புறத்தார்க்குப் புலனாகி அலர் விளைக்கும் என நலத்தின் மேல் வைத்துத் **தீமை கூறல்.** இவை புரைபட வந்தன வாயினும் வரைதல் வேட்கைப் பொருள வாகலின் அமைந்தன. (சு)

276. மந்திக் காதலன் முறிமேய் கடுவன்
தண்கமழ் நறைக்கொடி கொண்டு வியலறைப்
பொங்க லிளமழை புடைக்கு நாட
நயவா யாயினும் வரைந்தனை சென்மோ
கன்முகை வேங்கை மலரும்
நன்மலை நாடன் பெண்டெனப் படுத்தே

**இது, வரையாது வந்தொழுகும் தலைமகனைத் தோழி நெருங்கிச் சொல்லியது.**

**ப. உரை;** மேல் கருக்கொண்டு முற்றிப் பயன்படுவ தாய இளமுகிலைக் கடுவன் நறைக்கொடி கொண்டு புடைக்கும் நாட என்றது; வரைந்து மகப்பெறுதற்கு உரியளாகிய இவளை இம் மறைந்த ஒழுக்கத்தாலே கொலை சூழ்கின்றாய் என்பதாம்.

**கல்முகை வேங்கை மலரும் நாட** என்றதனால் வரைதற் குரிய பருவமும் கூறியவா றாயிற்று.

உரை: மந்தியின் காதலனாய்த் தளிர்களையுண்ணும் கடுவன் தண்ணிதாய் மணம் கமழும் நறைக்கொடி கொண்டு அகன்ற மலைப்பக்கத்துப் படியும் இளமுகிலைப் புடைக்கும் நாடனே, கல்லிடையே அரும்பிய முகைகளை யுடைய வேங்கை மலரும் நல்ல மலைநாடனுக்குரிய பெண்டு எனப்படுமாறு வரைந்து கொண்டு செல்வாயாக எ. று.

**நறைக்கொடி** நறவங்கொடி என்றும் வழங்கும். **முறி** யெனப் பொதுப்படக் கூறியதனால், செயலை, குளவி முதலிய தளிர்களைக் கொள்க. "கறிவளர் அடுக்கத் தாங்கண் முறி யருந்து, குரங்கு ஒருங்கிருக்கும்[1]" என்ப. **பொங்கல்** என்பது மிகுதிப் பொருட்டாயினும், ஈண்டுத் திரள்திரளாய் எழுதலை யுணர்த்திற்று; "பெய்து புலந் திறந்த பொங்கல் வெண்மழை,[2]" எனப் பிறருங் கூறுதல் காண்க. **கன்முகை வேங்கை மலரும்** என்பதற்குக் கல் முழைஞ்சினுள் நின்ற வேங்கை மலரும் எனினுமாம். **முகை,** முழைஞ்சு. "கன்முகை வயப்புலி[3]" எனப் பிறாண்டுங் கூறியவாற்றா னறிக. **பெண்டு,** மனைவி. "ஊரார் பெண்டென மொழிய என்னை[4]" என்றார் பிறரும்.

நின்னை யின்றியமையாது விரும்பும் இவளைத் தலைவனாகிய நீ வரைந்து கோடலைச் செய்யாது நீட்டிக்கின்றா யாகலின், **நயவா யாயினும்** என்றும், நின் முயக்கின்பம் இன்றேனும், நின் பெண்டு எனப்படுதல் பெறின், இவள் இறந்து படாது உயிர் வாழ்வாள் என்பாள், **நன்மலை நாடன் பெண்டு எனப்படுத்தே** என்றும் கூறினாள்.

மேன்மேற் படிந்து குளிர்ந்து மழைபெய்தற் குரிய இளமுகிலைக் கடுவன் நறைக்கொடி கொண்டு அலைக்கும் நாட என்றது வரைந்துகூடி மகப்பெறுதற் குரியளாகிய இவளைக் களவையே நீட்டித்து அலைக்கின்றாய் என்பதாம்.

(௬)

1. குறுந். 288. 2. அகம். 217. 3. ஐங்குறு. 246
4. ஷை 113.

277. குறவர் முன்றின் மாதீண்டு துறுகற்
கல்லா மந்தி கடுவனொ டுகளும்
குன்ற நாட நின் மொழிவ லென்றும்
பயப்ப நீத்த லென்னிவள்
கயத்துவளர் குவளையி னமர்த்த கண்ணே.

து, வரையாது வந்தொழுகும் தலைமகன் புணர்ந்து நீங்குழி எதிர்ப்பட்ட தோழி வரைவுகடாயது.

ப. உரை: குறவர் முன்றிலில் மா தீண்டு துறுகற்கண்ணே நாணாது மந்தி கடுவனோடு உகளும் நாட என்றது சுற்றத்தார் நடுவே இவ்வொழுக்கம் புலனாகிய ஞான்று விளையும் ஏதத்திற்கு நாணாதோய் என்பதாம்.

உரை: குறவர் இன்முன் நிறுத்திய மாதீண்டு துறுகல்லில் கல்லா மந்தி தன் கடுவனோடு தாவியாடும் குன்றங்களையுடைய நாடனே, நின்னை ஒன்று வினவுவல்; குளங்களில் வளரும் குவளை மலரைப் போல அமர்த்த இவளுடைய கண்கள் பசலைபாயும்படி இன்றை இல்லையாயினும் என்றேனும் பிரிந்துசேறல் யாது கருதியோ? கூறுக எ. று.

மாதீண்டு துறுகல், ஆதீண்டு குற்றி போல மாவினம் தினவு தீர்த்துக் கோடற் பொருட்டு நிறுத்தப்படுவது. மந்தி கடுவனோடு உகளுதலை விதந்து "அள்ளிலைப் பலவின் கனிகவர் கையு, கல்லா மந்தி கடுவனோ டுகளும், கடுந்திற லணங்கின் நெடும் பெருங் குன்றம்[1]" எனப் பிறரும் கூறுதல் காண்க. **பயத்தல்,** பசத்தல். **அமர்த்தல்,** மாறுபடுதல். மேவற் பொருட்டாகிய அமர்தல், அமர்த்த வென நின்றது எனவும் கூறுப.

1. அகம். 388.

நாடோறும் தலைமகளைக் குறியிடத்தே எதிர்ப்பட்டுக் கூடுதலும் பின்னர்ப் பிரிதலும் செய்தொழுகும் இக்களவினை விலக்கி வரைந்து கொண்டு, என்றும் பிரிவறியாத பேரின்பத்தில் திளைக்க வேண்டும் என்னும் விழைவினால் தலைமகனை வரைவுகடாவுவான் சொல்லாடுகின்றாளாகலின், **நின் மொழிவல்** என்று முகம்புகுந்தாள். நாடோறும் குறியிடத் தெய்திக் கூடுதலின் ஒழியாத பெருங்காதல் உடையை என்றற்கு **என்றும்** என்றும், இவ்வண்ணம் இடையறவு இன்றிக் கூடுதலை விரும்பும் நீ, கூடியபின் பிரிவது கூடாது என்பாள் **நீத்தல் என்** என்றும், நின் பிரிவால் இவள் கண் பசந்து வேறுபடுதலை அறிதல் வேண்டும் என்றற்கு, **பயப்பநீத்தல் என்** என்றும் கூறினாள். இருதலையும் காதற்காமம் சிறப்பது குறித்துத் தலைமகன் புணர்வும் பிரிவும் நிகழ்த்தி யொழுகுகின்றான் என்பதைத் தோழி அறிந்துளா ளாயினும், தலைமகள்பால் அது சிறந்தமை யுணர்த்தி வரைவுகடாவும் கருத்தின ளாகலின் **என்** என்று கடாவினாள் என அறிக. **கயத்துவளர் குவளை** என்றது, குவளைக்குக் கயம் இன்றியமையாதவாறு போல நீ இவட்கு இன்றியமையா யாயினை எனக் காதற்சிறப்பும், கயத்தின் நீங்கிய வழிக் குவளை பசந்து சாம்புவது போல நின்னின் நீங்கியவழி இவள் கண் பசந்து வேறுபடுவளெனப் **பயப்பதற்கு** ஏதுவும் சுட்டி நின்றது.

பசலை பாய்ந்து மேனி வேறுபட்டா ளாயின், அதனைத் தமர் அறிந்து இற்செறிப்பு முதலிய இடையீடு செய்வ ராகலின், **பயப்ப நீத்தல் என்** என வெளிப்படையாலும் இடையூறு கூறி வரைவுகடாயவாறும் கொள்க. குறவர் முன்றிலில் கல்லா மந்தி ஏதம் நினையாது கடுவனோடு உகளும் என்றது மனையின் அகத்தும் புறத்தும் அமைந்த குறியிடத்தே கூட்டத்துக்கு உண்டாகும் ஏதம் நினையாது இன்றியமையாக் காதலால் கூடி யொழுகுகின்றாள் என உள்ளுறையால் இருவகைக் குறியையும் விலக்கிக் குறிப்பால் வரைவுகடாவிய வாறு. இரவுக்குறி இல்லகத்த தெனவும் பகற்குறி புறம் எனவும் ஆசிரியர் கூறுப. [1]

1. தொல். பொ. 131-2.

278. சிலம்பின் வெதிரத்துக் கண்விடு கழைக்கோல்
குரங்கின் வன்பறழ் பாய்ந்தென விலஞ்சி
மீனெறி தூண்டிலி னிவக்கு நாடன்
உற்றோர் மறவா நோய்தந்து
கண்டோர் தண்டா நலங்கொண் டனனே

இது, வரையாது வந்தொழுகும் தலைமகன் சிறைப்புறத் தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

ப. உரை: குரங்கு தன்மேல் இருந்துழி வளைந்து, அது பாய்ந்து போவுழி நிமிர்கின்ற மூங்கிற்கோல் மீனெறி தூண்டில் போல ஓங்கும் நாடன் என்றது, தன் நெஞ்சத்து அன்புளதாகிய காலத்து வளைத்து வளைத்தொழுகி அன்பற்ற காலத்துப் பணிவின்றித் தலைமை செய்து நம் நலம் கொண்டு தன் கொடுமை தோன்ற ஒழுகுகின்றான் என்பதாம்.

உரை: மலைக்கண்ணுள்ள மூங்கிலின் கணுவிடத் தெழுந்த கோலின் மேலிருந்து குரங்கினது வலிய குட்டி பாய்ந்ததாக, அக்கோல் குளத்தின்கண் மீன் பிடிப்பதற்கு வைத்த தூண்டிலைப் போலத் தாழ்ந்திருந்து நிமிரும் நாடன் தன்னைச் சார்ந்தோர்க்கு என்றும் மறக்கலாகாத நோய் தந்து, கண்கொள்ளாக் கவின்மிக்க அவரது நலத்தைக் கவர்ந்துகொண்டனன்; அவர்தாமும் தம் நலமிழந்து வருந்துவாராயினர், காண் எ. று.

வெதிர், வெதிரம் என நின்றது. இலஞ்சி, நீர்நிலை. **மீனெறி தூண்டில்,** மீனைக் கரையிடத்துத் தூக்கி யெறியும் கழைக்கோல். தாழ்ந்திருந்த மூங்கில் நிமிர்வதனை மீனெறிதூண்டிற் குவமித்தல், "ஏனல் காவலர் கவணொலி வெரீஇக், கான யானை கைவிடு பசுங்கழை, மீனெறி தூண்டிலின் நிவக்கும், கானக நாட[1]" எனப் பிறரும் கூறுதல் காண்க.

1. குறுந். 54.

தன்னைக் கூடிய காதலன் பிரிவு இடை வைத்து வரையாது ஒழுகுதலின், தலைமகள் அவனையே நினைந்து வருந்துகின்றாளாகலின், **உற்றோர் மறவா நோய் தந்து** என்றும், அதனால் அவள் தன் மேனி வேறுபட்டு, நலம் கெடுதற்கிரங்கி, **கண்டோர் தண்டா நலம்கொண்டனன்** என்றும் கூறினாள். **தண்டா நலம்** என்றது, கழிந்ததற்கு இரங்கிக் கூறியது. நலங்கொண்டு நோய் தருதல் காதலர்க்கு அறமன்று எனத் தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தைமையும் தோன்றக் கூறியது, நோய் பயக்கும் நலக்கேடு கூட்டத்துக்கு இடையூறு பயக்குமெனக் குறிப்பால் வரைவுகடாயது.

வெதிரத்துக் கோல் மீனெறி தூண்டிலின் நிவக்குமாயினும் அது தூண்டில் போல் பிறவுயிர்க்குத் தீங்கு செய்யாதாக, தலைமகன் வரையா தொழுகும் ஒழுக்கம் எனக்குத் தீங்காயினவாறு என்னை என இறைச்சி தோன்றுதல் காண்க. "இறைச்சி தானே பொருட்புறத்ததுவே" என்றும் "இறைச்சியிற் பிறக்கும் பொருளு மாருளவே[2]" என்றும் **ஆசிரியர்** கூறுப. (அ)

*279. கல்லிவ ரிற்றி புல்லுவன வேறிக்*
*குளவி மேய்ந்த மந்தி துணையொடு*
*வரைமிசை யுகளு நாட நீவரிற்*
*கல்லகத் ததுவெம் மூரே*
*அம்பற் சேரி யலராங் கட்டே.*

**இது, இரவுக்குறி வேண்டும் தலைமகனைத் தோழி வரவருமை கூறி மறுத்தது.**

**ப. உரை : எம்மூர்** என்றது சூழ்ந்த மலைகளின் நடுவகத்தது எம்மூர் எ. று.

2. தொல். பொ. 229-30.

இற்றிமேற் படர்ந்த குளவித்தளிரை மேயந்து வரையகத்திலே மந்தி கடுவனோடு உகளும் நாடனுதலான் இதற்கு முன்பு இவள் நின்னோடு நுகர்ந்ததே கொண்டு இனி இவள் நின் பதிக்கண் வாழ்தல் வேண்டும் என்பதாம்.

**உரை:** கற்களின் மேலோடும் இற்றிமரத்தின் வேரையும், வேறு பற்றுவனவற்றையும் பற்றிச் சென்று, அவ் விற்றிமேற் படர்ந்த குளவித்தளிரை மேய்ந்த மந்தி, தன் துணைக்குரங்கோடு கூடி மலையின்மேல் தாவி யாடுகின்ற நாடனே, கற்கள் சூழ்ந்த மலைகளின் நடுவகத்த தாகிய எமது ஊர், அம்பல் மொழியும் சேரியும் அலர்விளைப்பார் உறையும் இடமும் உடையது; ஆகவே நீ வருதல் நன்றன்று எ. று.

**இற்றி**, ஒருவகை மரம். இக்காலத்தார் இதனை இத்தி என வழங்குப. இதன்வேர் கற்களின்மேற் பரவியிருத்தலின், அதனைப் பற்றி யேறிச் சென்று மந்தி குளவித்தளிரை மேய்ந்ததெனக் கொள்க. "புல்வீழிற்றிக் கல்லிவர் வெள்வேர், வரையிழி யருவியிற் றோன்றும் நாடன்[1]" எனப் பிறண்டும் இவரே கூறுமாறு உணர்க. **குளவி**, காட்டுமல்லிகை. குளவி, மிக்க மணமுடைய பூவையுடையது. இது புதல் புதலாக அரிய இடங்களில் வளர்ந்திருக்கும். "குளவித் தண்புதல்[2]" என்றும், "நீரிழி மருங்கின் ஆரிடத் தமன்ற குளவி[3]" என்றும் சான்றோர் கண்டுரைப்பது காண்க. எளிதில் சென்றடைதற்குரிய இடத்தில் இருத்தலின், மந்தி இற்றிவேரைப் பற்றிச் சென்று குளவியை மேய்வதாயிற் றென அறிக. ஊர்க்குப்புறமாய்ச் சேர இருப்பது சேரி. ஊரகம் அலரும், புறமாய சேரி அம்பலும் உடைய என்பது கருத்து.

**நீவரின்** என்றது நீ வாராதொழிதல் நன்றென்பது பட நின்றது. எம்மூர் மலைகள் சூழ்ந்த நடுவகத்த தாகலின், செவ்விய நெறியின்றிக் கொடிய விலங்குகள் இயங்

1. குறுந். 106. 2. அகம். 182. 3. ௸. 272.

கும் படுவழிகளை யுடைத் தென்பாள், **கல்லகத்தது எம்மூரே** என்றும், எம்மூரிலுள்ளார் இயல்பாகவே அம்பலும் அலரும் கூறுவராகலின், நீ வரின், அது பெருங் கௌவையாம் என்பாள், **அம்பற் சேரி யலராங் கட்டே** என்றும் கூறினள். இவை **ஏதமாய்தல்.** "அம்பலென்பது சொல் நிகழாதே முகிழ்முகிழ்த்துச் சொல்வது; இன்னதின் கண்ண தென்பது அயலறிய லாகா தென்பது. அலரென்பது இன்னானொடு இன்னாளிடையது போலும் பட்டது என விளங்கச் சொல்லி நிற்பது. அம்பலென்பது பெரும் போதாய்ச் சிறிது நிற்க அலருமென நிற்பது; அலரென்பது அப்பெரும்போது தாதும் அல்லியும் வெளிப்பட மலர்ந்தாற் போல நிற்கும் நிலைமை[1]" என்பர். இற்றியின் வேரையும் வீழ்தையும் பற்றி ஏறிய மந்தியும் கடுவனும் ஆண்டுப்படர்ந்த குளவியின் தளிரை மேய்ந்து இன்புறும் என்றது, களவு நெறி பற்றிக் காதலன்பு வாழ்வில் தலைப்பட்ட நீவிர் இருவரும் இனிக் கற்புவழி மணந்து இல் விருந்து நுகரும் நல்லின்பத்தை எய்துதல் வேண்டும் எனக் குறிப்பாய் வரைவு கடாவியவாறு. (க)

280. *கருவிரன் மந்திக் கல்லா விளம்பார்ப்*
*பிருவெதி ரீர்ங்கழை யேறிச் சிறுகோல்*
*மதிபுடைப் பதுபோற் றோன்று நாட*
*வரைந்தனை நீயெனக் கேட்டியான்*
*உரைத்தனெ* னல்லனோ வஃதென் யாய்க்கே.

**இது, புணர்ந்துடன் போகிய தலைமகன் தலைமகளைக் கரணவகையான் வரைந்தானாக, எதிர்சென்ற தோழிக்கு "இனி, யான் இவளை வரைந்தமை நுமர்க்கு உணர்த்த வேண்டும்" என்றானாக அவள் சொல்லியது.**

---

1. இறை. அ. பொ. 22. உரை.

**ப. உரை:** குரங்கின் இளம்பார்ப்பு இருவெதிர்ங்கழை ஏறி மதிபுடைப்பது போல் தோன்றும் நாட என்றது தீங்குசெய்வாயைப் போலத் தோன்றுவ தல்லது உண்மைவகையாற் செய்யாய் என்பதாம்.

**உரை:** கரிய விரலையுடைய மந்தியின் கல்லாத இளைய குட்டி பெரிய மூங்கிலின் பசிய கழைமேலேறிச் சிறு கோலைக் கொண்டு மதியத்தைப் புடைப்பது போலும் தோற்றத்தைச் செய்யும் நாடனே, நீ இவளைக் கரண வகையான் வரைந்தனை யெனக் கேட்ட யான் விரைந்து அதனை யாய்க்கு உரைத்தேன், காண். எ. று.

மந்தியின் குட்டியைப் பறழ் என்பதே யன்றிப் **பார்ப்பு** என்பதும் உண்டு; "மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பும், அவையும் அன்ன அப்பாலான[1]" என **ஆசிரியர்** கூறுவர். **வெதிர்,** மூங்கில்வகை. இதன் நுனிப்பகுதி ஈண்டுக் கோல் எனக் குறிக்கப்படுகிறது. நெடிதுயர்ந்து தோன்றும் வெதிர்ங்கோல் வானத்தைத் தொடுவது போலத் தோன்றுதலின், அதன் நுனிக்கண் தங்கிய பார்ப்பு, வானத்திற் காணப்படும் மதியைப் புடைப்பதுபோலக் காட்சி தருவது பற்றி, **மதி புடைப்பது போல் தோன்றும்** என்றார்.

**நீ வரைந்தனை** என்றது பிறர் கூறிய கூற்றைக் கொண்டெடுத்து மொழிந்தது. தலைமகன் தன் வாய்மை குன்றாது தலைவியைக் கரணவகையால் மணந்தான் என்று பிறர் கூறக் கேட்டேன் என்பாள் **கேட்டு** என்றவள், தன் உள்ளம் நிறைந்தெழுந்த உவகையால் மேலே சொல்லாடாது கண்ணினும் முகத்தினும் விளங்கக் காட்டினு ளாகலான், பின்னர்த் தான் தலைமகற்கு விடை யிறுக்கும் வாயிலாக, அவன் வரைந்த செய்தியை **அஃது** என்றும், அதனை விளங்க உரைத்தமை தோன்ற **உரைத்தனெ னல்லெனோ** என்றும் கூறினாள்.

---

1. தொல். பொ, 567.

இருவெதிர் ஈர்ங்கழை யேறி அதன்மிசை இனிதிருக்கும் குரங்கின் பார்ப்பு, மதியைப் புடைத்து வருத்துவது போலத் தோன்றும் நாடன் என்றது, களவுவழி யொழுகி உடன்போக்கின் முடிவில் கரணவகையால் மணந்து இன்புறும் நீ, மதிபோல் உயர்ந்த எம் குடிக்குத் தீங்கு செய்வாய் போல என் யாய்க்குத் தோன்று நின்றனை எனத் தாயர் முதலியோர் கொண்ட கருத்தினைத் தோழி உள்ளுறுத்து உரைத்தவாறு.

இனி, "தலைவரும் விழுமநிலை [1]" என்ற சூத்திரத்து "இயல்புற நாடின்" என்றதனால், "தலைவன் கரணவகையால் வரைந்தானாக எதிர்சென்ற தோழிக்கு யான் வரைந்தமை நுமர்க்கு உணர்த்தல் வேண்டும் என்றாற்கு அவள் உணர்த்தினேன் என்றது என்பர் **நச்சினார்க்கினியர்.** (௰)

---

1. தொல். பொ. 39.

# 29. கிள்ளைப்பத்து

கிள்ளை பொருளாக வரும் பாட்டுக்கள் பத்தின் தொகுதியாகலின் இது கிள்ளைப்பத்து எனப்பட்டது.

புள்ளினத்துள் கிள்ளையினம் பெரிது. இது வகையால் ஆருகப் பிரியினும் விரித்து நோக்குங்கால் ஐஞ்ஞூறு இனமாகக் காணப்படுகிறது. வெம்மை நிலப் பகுதிகளிலும் அவற்றைச் சார்ந்த நிலங்களிலும் கிள்ளைகள் வாழ்கின்றன. மலேயா, ஆத்திரேலியா, அமரிக்கா ஆகிய நாடுகளில் இவை மிக்கிருப்பினும் ஏனை எல்லாவற்றினும் தென்னமரிக்காவில்தான் மிகுதியும் பல்கி யிருக்கின்றன. நம் நாட்டில் கிள்ளையினம் குறைவே; ஆப்பிரிக்காவில் நம் நாட்டினும் மிகக் குறைவு. ஐரோப்பாவில் கிள்ளையினமே கிடையாது. வட அமரிக்காவின் தென்பகுதியில் சில இடங்களில் ஒருவகைக் கிள்ளை வாழ்கின்றது. கிள்ளைகள் அறுபது முதல் எண்பது ஆண்டுகள் உயிர் வாழும் உரன் படைத்தவை.

கிள்ளைகள் யாவும் பொதுவாக மரங்களில் வாழ்வன; ஆதலான் அதற் கேற்பவே அவற்றிற்குக் கால்களும் வாயலகுகளும் அமைந்துள்ளன. கால்கள் ஒருவகை உறுதியான செதிள்களால் மூடப்பட்டிருக்கின்றன. சில கிள்ளைகட்குக் கால்கள் குறுகியும் சிலவற்றிற்கு நீண்டும் இருப்ப துண்டு. கிளியின் வாயலகு சிறியது; ஆயினும் வன்மை வாய்ந்து நுனி வளைந்திருக்கும். சில கிளிகளின் மேலலகு நெளிக்கவும் விரிக்கவும் தக்க வகையில் உளது. கிளிகள் மரமேறுங்கால் அவற்றின் கால்களினும் வாயலகே பெரிதும் பயன்படும். நம் நாட்டில் காணப்படுவன பலவும் சிறுகிளியினம். பெருங்கிளி யினமும் கிள்ளையினத்துள் உண்டு. அவற்றின் வாயலகு வியக்கத்

தக்க பெருவன்மை யுடையது. இப்பெருங்கிளிகள் பிரேசில் நாட்டில் மாக்கா[1] என்ற பெயரால் வாழ்கின்றன. ஒருவன் சம்மட்டி கொண்டு உடைக்கக் கூடிய சில கொட்டைகளைப் பெருங்கிளியின் அலகு மிக எளிதில் உடைத்து மாவாக்கி விடுகிறது. பெருமரங்களைத் துளைத்துக் கூடமைப்பது அவற்றின் இயல்பு. அத்தொழிற்கு அவற்றின் வாயலகு பெருங் கருவியா யுளது. அவற்றின் முட்டைகள் வெண்மை நிறமுடையன. பெருங்கிளியினம் இரண்டு மூன்று முட்டைகட்குமேல் இடுவதில்லை. தாயும் தந்தையுமாகிய இரண்டுமே ஒன்று மாற்றி ஒன்றிருந்து அம்முட்டைகளை அடைகாக்கும்.

கிளிகள் யாவும் பழவகைகளையும் கொட்டைகளையும் உணவாகக் கொள்கின்றன. தாம் உண்ட வுணவில் செரித்தும் செரிக்காமலும் இருக்கும் உணவை வெளிக் கொணர்ந்து பார்ப்புக்கட்கு அளிப்பது கிள்ளையினத்தின் சிறப்புப் பண்பாகும்.

கிளிகள் பலவும் கூட்டம் கூட்டமாக ஆரவாரம் செய்துகொண்டு வாழும். வெள்ளிடைகளிலும் வெயில் பரந்த தோட்டங்களிலும் இவை விருப்பத்தோடு தங்கும். நியூசீலந்தில் ஒருவகைக் கிளியினம் ஆடுகளின் குண்டிக்காயைச் சூழ்ந்துள்ள நிணத்தைக்குடைந்து உண்கின்றன என்றும், அதனல் அந்நாட்டிற் பல ஆடுகள் இறந்தொழிகின்றன என்றும், அந்நாட்டிற்கு ஆடுகள் வந்து சேர்ந்தபின்பே அக்கிளிகட்கு அக்கொடிய பழக்கம் உண்டாயிற்றென்றும் அந்நாட்டவர் உரைக்கின்றனர். அவை ஏனைக் கிள்ளையினம் போலாது இடைப்பனிக்காலத்தே பனிமூடிய மலைமுடியிலும் பனிப்பாறைகளிலும் கூடமைக்கின்றன; அதனல் அவ்வினத்தை மலைக்கிள்ளை என்று பெயர் குறிக்கின்றனர்.

---

[1] Macaw.

நியூகினியாவில் வாழும் கிளிகள் இரண்டரையடி நீளமுள்ளன. அமரிக்காவில் வாழ்வன பொதுவாக மூன்றடி நீளமாகும். இடை அமரிக்காவில் உள்ளவை மூன்றடி நீள மிருப்பினும், அவற்றின் வால்மட்டில் இரண்டடி நீளம் உளது. அங்கே காணப்படும் பச்சைக் கிளியும் நீலக்கிளியும் ஆப்பிரிக்காவில் வாழும் காதற் கிளியும்[1] ஐந்து அங்குல நீளமே யுள்ளன. நியூகினியா வில் குறுங்கிள்ளை[2] என்றோர் இனமுண்டு. அஃது இரண்டு அங்குல நீளமேயாகும்.

ஆப்பிரிக்காவில் சாம்பல்நிற முடைய கிளிகள் வாழ் கின்றன. அவற்றின் வால் நீண்டு சிவந்துள்ளது. பொதுவாகக் கிள்ளையினம் யாவும் பசுமைநிற முடை யவே; எனினும், பொன்மை, நீலம், சிவப்பு, வெண்மை, கருமை ஆகிய நிறமுடையனவும் உள்ளன; சில கிள்ளை யினம் இந்நிறங்களுட் பல விரவியும் உள்ளன. அமரிக் காவிலுள்ள மாக்காக்கிளி[3] பெருவனப் புடையதாகக் கருதப்படுகிறது. வனப்பிலே யன்றி ஆரவாரம் செய்வ திலும் பெருமை அவற்றிற்கே யாகும். ஆத்திரேலியப் பகுதியிலுள்ள கிள்ளை செம்மை கலந்த நீலநிறமான தலையும், நீலமும் பசுமையும் பொருந்திய இறகும், சிவந்த குஞ்சியும்[4] கொண்டுள்ளன. இவற்றின் வேருகக் கொண்டையுடைய கிளிகளும் அங்கே வாழ்கின்றன. அவற்றின் காலும் அலகும் மிகவும் குறுகி யிருக்கின்றன. இவை பெரும்பாலும் வெண்மைநிற முடையவை யெனினும் முதுகிலும் வாலிலும் செந்நிறமோ பொன் நிறமோ பொருந்தியிருக்கின்றன. சில கிள்ளையினத்துக்கு வயிற்றுப்பகுதி சிவந்தும் முதுகு சாம்பல்நிறம் பெற்று முள்ளன. சில தலைமட்டில் சிவந்து உடல் முழுதும் சாம்பல்நிறமே பரவி யிருப்பது உண்டு. சில கிளிகள்

1. Love birds. 2. Pigmy parrots.
3. Macaws of America. 4. Cap.

உடல்முழுதும் கருமைநிறம் பெற்று வாற்பகுதி சிவந்து தோன்றும். கருங்கிள்ளைகளுட் சில வெண்கருமை நிறம் கொண்டு இருகன்னமும் சிவந்துள்ளன. கிள்ளைகளுள் இந்த இனமே உடல் பருத்தவையாகும்; அலகின் வன்மையிலும் சிறந்தவை. ஆத்திரேலியாவின் தென் பகுதியில்வாழும் வெள்ளைக்கிளிகள் மிக்க அழகுடையன. அவை அலகின் கீழும் மார்பிலும் இறகடியிலும் சிவந்து விளங்கும். அந்நாட்டிலே ஐவண்ணக் கிளிகள் சிறந்து உள்ளன. அக்கிள்ளையின் மேனியில் பசுமை, நீலம், வெண்மஞ்சள், கருமை ஆகிய வண்ணங்கள் விரவி யிருக்கின்றன. அதன் உடல் நீளத்தில் வால் செம்பாதி; அஃது ஏழரை அங்குலம்.

கிளிவகை பலவும் பிடித்துப் பழக்குதற் கேற்ற பண்பாடுடையவை. பச்சைக்கிளி, சாம்பற்கிளி, மாக்காக் கிளி எனவரும் இக்கிள்ளைகள் பேசப்பழகும் இயல்புடைமையால் பன்னூருண்டுகட்கு முன்பே மக்கள் இவற்றைப் பிடித்துக் கூட்டில்வைத்துப் பேச்சுக் கற்றுக் கொடுத்து அவை மிழற்றும் மழலை கேட்டு இன்புற்றனர். வேள்பாரியின் பறம்பினைத் தமிழ்வேந்தர் முற்றிக் கொண்ட போது அங்குள்ள கிளிகள் வேற்றுப்புலங் கட்குச் சென்று நெற்கதிர்களைக் கொணர்ந்தன என **ஔவையாரும், நக்கீரனும்** கூறுகின்றனர். பண்டைத் தமிழ் நன்மக்களோடு நெருங்கிப் பழகியதனுல், உரோமானியர் இக்கிளிகளைக் கொண்டு சென்று வளர்த்தனர். அந்நாளை யவனப் பெண்கள், "**வெல்க சீசர்**" என்று சொல்லுமாறு பயிற்றி யிருந்தார்களென வரலாறு கூறுகிறது. எய்தன்[1] என்னும் ஒரு பாண்பெருமகன் பேணி வளர்த்த கிளி அவர் பாடிய பாட்டைப் பாடுமாம். விவிலிய நூலில் உள்ள 104ஆம் சங்கீதத்தை 1802ஆம் ஆண்டில் ஒரு கிளி பாடிற்றென மேனட்டார் குறித்துள்

1. **Hayden.**

ளனர். இதை நோக்க, "பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின்றோதும் ஓசைகேட்டு வேரிமலி பொழிற் கிள்ளை வேதங்கள் பொருட் சொல்லும் மிழலையாமே[1]" எனத் திருஞானசம்பந்தர் சொல்வது எத்துணை இன்ப மாக வுளது காண்மின். இக்கிள்ளை பொருளாக வைத்துப் பிற்காலப் புலவர் கிள்ளைவிடு தூது பாடித் தாம் இன்புறு வதுடன் உலகு இன்புறக் கண்டு உவகை மீதூர்ந்தனர்.

*281. வெள்ள வரம்பி னூழி போகியும்*
*கிள்ளை வாழிய பலவே யொள்ளிழை*
*இரும்பல் கூந்தற் கொடிச்சி*
*பெருந்தோட் காவல் காட்டி யவ்வே*

**இஃது, ஆயத்தோடு விளையாட்டு விருப்பினாற் பொழி லகம் புகுந்த தலைவியை எதிர்ப்பட்டு ஒழுகுகின்ற தலைமகன் அவள் புனங்காவற் குரியளாய் நின்றது கண்டு மகிழ்ந்து சொல்லியது.**

**உரை:** ஒள்ளிய இழையினையும் கரிய பலவாகிய கூந்தலையுமுடைய கொடிச்சி பெரிய தோளாற் புரியும் புனங்காவலை மேற்கொண்டாள் என்பதைக் காட்டின வாகலின், பலவாய் வந்து படியுங் கிளிகள் வெள்ளமென் னும் பேரெண்ணை வரம்பாக வுடைய ஊழியாகிய காலம் முடியினும் முடியாது நெடிது வாழுமாக எ. று.

**வெள்ளம்,** நூறுயிரம் என்னும் பேரெண்ணுக்கு மேலே கூறப்படும்; தாமரை, வெள்ளம் ஆம்பல் எனப்படும் கழிபேரெண்களுள் இடையாயது. "ஐயம் பல்லென வரூஉம் இறுதி[2]" யையுடைய எண்ணுப்பெயர். ஊழி போகியும் போகாது வாழ்க என்றற்குப் **போகியும்** என்றார். கிள்ளைகள் இனிது பேணப்படின் 60 முதல் 80 ஆண்டுகள்

1. திருஞான. 132-1. 2. தொல். எழுத்து. 393.

வாழ்கின்றன என உயிர்நூல்றிஞர் கூறுவர். காலத்துக்கு எஞ்ஞான்றும் கழிவது தொழிலே யன்றி நிற்பதன்மையின் **போகியும்** எனல் வேண்டிற்று. மகளிர்க்குத் தோள் பெருத்தல் இலக்கணமாகலின், **பெருந்தோள்** என்றும், தட்டை யொலித்தற்கும் கவண் எறிதற்கும் தோளாற்றல் சிறப்ப வேண்டியிருத்தலின், அது கொண்டு செய்யும் காவற்றொழிலைப் **பெருந்தோட் காவல்** என்றும் சிறப்பித்தார். **காட்டிய,** அன்பெறு து வந்த அகரவீற்றுப் பலவறி சொல்.

கவணும் தட்டையும் கொண்டு புனத்திற் படியும் கிளிகளை ஓப்புங்காலத்து, அவை கதுமென எழுதலால், அவள் புனங்காவற் குரியளாய் நின்றது உணர்ந்து ஆண்டுச் சென்று அவளைக் கண்டானுகலின், **பெருந்தோட் காவல் காட்டியவ்வே** யென்றும், கருவியால் ஓப்பினுளாயினும், மொழியால் இனமெனக் காட்டுதலின், கிளிகள் மீட்டும் போந்து படிந்து அவள் புகழ்விளக்குதலின், **கிள்ளை வாழிய பலவே** என்றும், அது குறித்து அக்கிளிகட்குத் தன் நன்றியை அறிவிக்குமுகத்தால் வாழ்த்துதலால், **வெள்ள வரம்பின் ஊழி போகியும்** என்றும் கூறினுன். " நன்றே செய்த உதவி [1]" எனப் பிறண்டும் கூறுதல் காண்க. **வாழிய பலவே** என்பதற்குப் பல்லூழி காலம் வாழ்க எனினுமாம். தான் எதிர்ப்பட்டுக் கூடுதற்கண், தனக்கு இன்பம் தந்து மகிழ்வித்த பெருமை நோக்கி, **பெருந்தோள்** என்று விதந்தோதினுன் என்றலும் ஒன்று.

"மெய்தொட்டுப் பயிறல் [2]" என்ற சூத்திரத்துச் "சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழி" என்புழிச் **சொல்லிய** என்றதனுல் அமையும் கிள்ளை வாழ்த்துக்கு இதனைக் காட்டினர் **நச்சினுர்க்கினியர்.** (க)

1. ஐங். 288. 2. தொல். பொ. 102.

282. சாரற் புனத்த பெருங்குரற் சிறுதினைப்
பேரமர் மழைகட் கொடிச்சி கடியவும்
சோலைச் சிறுகிளி யுண்ணும் நாட
ஆரிருள் பெருகின வாரல்
கோட்டுமா வழங்குங் காட்டக நெறியே

இஃது, இரவுக்குறி நேர்ந்த தோழி தலைமகன் வந்து புணர்ந்து நீங்குழி அவனை எதிர்ப்பட்டுச் சொல்லியது.

**ப. உரை:** கொடிச்சி கடியவும் சோலைச் சிறுகிளி தினையை உண்ணும் நாட என்றது காவலர் காத்தொழுகவும் களவொழுக்கத் தையே விரும்பா நின்றாய் என்பதாம் எ. று.

**உரை;** மலைச்சாரலில் அமைந்த விதைக்கப்பட்டனவாகிய பெரிய கதிர்களையுடைய சிறுதினையைப் பெரிய மதர்த்த கண்களையுடைய கொடிச்சி யாகிய குறமகள் கடியவும், சோலைகளில் வாழும் சிறிய கிளிகள் ஓவாமல் அத்தினையை யுண்டலைச் செய்யும் நாடனே, நிறைந்த இருள் பெருகின வாகலினாலும், நீ வரும் வழிகளும் கோட்டினையுடைய மாவாகிய யானை முதலிய கொடிய விலங்குகள் இயங்கும் காட்டிடத்தன வாகலினாலும் நீ வாராதொழிவாயாக எ. று.

கொடிச்சி கடியவும், சிறுகிளி தினை உண்ணும் நாட என இயைக்க. **சாரற்புனம்,** சாரலிடத்தே யுள்ள புனக் கொல்லை. **குரல்,** கதிர். **சிறுதினை** என்றவிடத்துச் சிறுமை, தினையரிசியைச் சிறப்பித்தது. **உண்ணும்,** உண்ணுதலைச் செய்யும். தட்டையும் கவணும் கொண்டு ஓப்பிய வழி யும் சோலைக்கிளிகள் தம் சிறுமையால் ஓவாமல் உண்ணு தலையே விடாது செய்கின்றன என்றற்குச் **சிறுகிளி உண்ணும்** என்றார். **வாரல்,** அல்லீற்று எதிர்மறை வியங்கோள்முற்று.

பெருமையும் குளிர்ச்சியு முடைய வாயினும் நோய் செய்யும் தன்மையு முடைமையான் மாறுபடுதலின், **பேரமர் மழைக்கண்** எனப்பட்டது. **கோட்டுமா,** கோடுகளையுடைய மாக்கட்குப் பொதுவாயினும், தலைமையும் பெருமையும் பற்றிக் களிற்றின்மேல் நின்றது.

உள்ளுறையால் தான் பகற்குறி மறுத்து வரைவு கடாவினமையும் தலைமகன் அதனைத் தெருளாது இரவுக் குறி வருகென்றற தாகக் கொண்டு வந்தமையும் குறிக்கின்று ளாகலின், வெளிப்படையாக **வாரல்** எனத் தோழி கூறினள். **ஆரிருள்** என்றது இரவின்கண் வருதலின் அருமையும், **கோட்டுமா** என்றது விலங்குகளின் கொடுமையும், **காட்டக நெறி** யென்றது நெறியின் இன்னாமையும் சிறப்பித்து நின்றன. எனவே இஃது இருள் பெருகியதோடு நெறியும் கோட்டுமா வழங்கும் காட்டகத்தது என்றது இரவுக்குறி யருமையும், நெறியது ஏதமும் கூறி மறுத்தவாறு. ஆகவே, "பொழுதும் ஆறும் காப்பும் என்றிவற்றின், வழுவினாகிய குற்றங் காட்டலின்," இது வரைதல் வேட்கைப் பொருட்டே என அறிக.

கொடிச்சி கடியவும் கடியாது சிறுகிளி சிறுதினை உண்ணும் நாட னாதலின், யான் பகற்குறி விலக்கவும் விலகாது இரவுக்குறிக்கண் வந்து கூடுதலை விரும்புகின்றாய் என உள்ளுறை காண்க.

இனி, "நாற்றமும் தோற்றமும்[1]" என்ற "ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும்" என்றதற்கு காட்டி இஃது ஆறின்னாமை கூறியது என்பர்

**சாரற் புறத்த** என்றும், **உண்ணும்** என்றும் பாடமுண்டு.

1. தொல். பொ. 112.

283. வன்கட் கானவன் மென்சொன் மடமகள்
புன்புல மயக்கத் துழுத வேனல்
பைம்புறச் சிறுகிளி கடியு நாட
பெரிய கூறி நீப்பினும்
பொய்வலைப் படூஉம் பெண்டுதவப் பலவே.

இது, தோழி வாயின்மறுக்கவும் தலைமகன் ஆற்றுமை கண்டு தலைமகள் வாயில்நேர அவன் பள்ளியிடத்தானு ழைப் புக்க தோழி கூறியது.

ப. உரை: பேரிய கூறி நீப்பினும் பொய்வலைப்படூஉம் பேண்டு தவப்பலவே என்றது தம் தமராயுள்ளார் நின் குறை பலவும் கூறி நீப்பினும் நின் பொய்வலைப்படூஉம் பெண்டிர் பலர் எ. று. இவளும் அவருள் ஒருத்தி என்பதாம்.

தினைப்புனத்துப் பலவாய்ப் படிகின்ற கிளிகளை ஒருத்தி தன்னுற் காக்க முடியா தாயினும் அவற்றை அவள் கடிய முயலும் நாட என்றது நின்னோடு இன்பநுகர்ச்சி விரும்பும் மகளிரை யாங்கள் விலக்க முயல்கின்றது முடியா தென்பதாம்.

உரை: வன்கண்மை மிக்க கானவன் புன்செய் நிலத்தே உழுது வித்திய ஏனலின்கட் படியும் பசிய புறத் தையுடைய சிறுகிளிகளை, அவனுடைய மெல்லிய சொல் லும் மடமையுமுடைய மகள் ஓப்பும் நாடனே, தமரா யினுர் நின்மாட்டுப் பெருங்குறைகள் கண்டு பலபடக்கூறி விலக்கினும் விலகாது, நின் பொய்ம்மொழி யாகிய வலையின் கட் படும் பெண்டிர் மிகப்பலர் எ. று.

**உழுத ஏனல்,** உழுது வித்தி விளைத்த ஏனல். **ஏனல்,** தினை. தினை விளையுங் காலத்தை ஏனற்பருவம் என இக் காலத்தும் **கொண்கான நாட்டவர்** வழங்குவர். "புன்புல மயக்கம்[1]" காண்க. **பெரிய கூறி** என்புழிப் பெரிய என்றது

1. ஐங். 260.

பொறுத்தற் கரிய பெரிய குற்றங்கள் என்பதுபட நின்றது. இனி, பலவாய குற்றங்களை விரியக் கூறி நீப்பினும் என்றுமாம். "பெரிய வோதினும் சிறிய வுணரா .......... பாடின் மன்னர்[1]" எனப் பிறரும் கூறுதல் காண்க. பொய்புனைந் துரைக்கும் இன்சொல்லை, **பொய்வலை** என்றார். **பெண்டு,** வேந்து, அரசு என்றாற்போல உயர்திணைப் பொருண்மைக் கண் வந்த அஃறிணைச் சொல்லாதலின், தவப்பலவே என அஃறிணை முடிபு பெற்றது; "துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே[2]" என்றாற்போல. **தவ,** உரிச்சொல். கானவன் உழுத ஏனற்கண், மடமகள் கிளிகடியும் நாட, தமர் கூறி நீப்பினும், வலைப்படும் பெண்டு தவப்பல என இயையும்.

கேட்போர் மனத்தில் ஒரு சிறிதும் அன்பு தோன்றாத வகையில் பொறுத்தற்கரிய பெரிய குற்றங்களைப் படைத்து மொழிந்து நீக்கினும் என்பாள், **பெரிய கூறி நீப்பினும்** என்றும், பின்னர் நீ போந்து பொய்யே சொல்லினும், அச்சொல்லைக் கேட்டு மறுத்து நீங்கும் வன்மையுடைய மகளிர் எவரும் இலர் என்பாள், **பொய்வலைப் படூஉம் பெண்டு தவப்பலவே** என்றும் கூறினாள். கூறுதலாவது ஈண்டுத் தலைவனது புறத்தொழுக்கத்தை இடத்தொடும் காலத்தொடும் படுத்துச் சான்றுகாட்டிக் கூறிட்டு மொழிதல்: அஃதாவது இன்ன இடத்தில் இன்ன காலத்தில் இன்னார் அறிய இவ்வண்ணம் நிகழ்ந்ததென மொழிதல்.

**பைம்புறச் சிறுகிளி,** பசுமையான நிறம் பொருந்திய சிறிய கிளி. "பயில்குரல் கவரும் பைம்புறக் கிளியே[3]" என்றார் பிறரும்.

தந்தை உழுத ஏனற்கண் படியும் கிளிகளை அவன் மடமகள் கடியவும், அவளது சொல்லின் மென்மை நயந்து கிளிகள் படிதலால் அவள் மாட்டாளாயினவாறு போல, யாங்கள் நின்னை மறுத்தேமாயினும், நின் மார்பு

1. புறம். 375. 2. ௸. 3. நற். 13.

தரும் இன்பம் நயந்து கூடும் மகளிரை விலக்கும் வன்மையிலே மாயினேம் எனத் தோழி உள்ளுறுத்துரைத்தாள், எனக் கொள்க.

"பெரிய கூறி நீப்பினும்" "எள்ளின் இளிவாமென்றெண்ணி" அவன்திறமே உள்ளி உறைகின்றாளாகலின், தலைவி வாயில் நேர்ந்து கூடினள் என்பதாம். இது **புரையறம்தெளிதல்.**

இனி, **பெரிய கூறி நீ நீப்பினும்** என்று பாடம் கொண்டு அதற்கேற்பப் பொருள் உரைப்பதுமுண்டு. அது பொருளாயின், பிரிவென்பதே இனி நிகழாதெனத் துணியுமளவு பெரிய சூளுறவுகளைச் சொல்லிப் பின் அவை பொய்ப்ப நீ பிரிந்தாயாயினும் என்பாள், **பெரிய கூறி நீ நீப்பினும்** என்றாள் என்றும், நீ போந்து கூறும் இன்சொல் வலையில் அகப்படாது நீங்கும் மகளிர் இலர் என்றற்குப் **பொய் வலைப்படூஉம் மகளிர் பலர்** என்றாள் என்றும் உரைக்க; "இல்வழங்கு மடமயில் பிணிக்கும், சொல்வலை வேட்டுவனாயினன் முன்னே[1]" என்பது காண்க. இது தலைவன் ஆற்றாமை வாயிலாகப் புணர்ந்துழிப் பள்ளியிடத்துச் சென்ற தோழி சொல்லியது என்பர் **நச்சினார்க்கினியர்.**[2]

*284. அளிய தாமே செவ்வாய்ப் பைங்கிளி*
*குன்றக் குறவர் கொய்தினைப் பைங்கால்*
*இருவி நீள்புனங் கண்டும்*
*பிரிதல் தேற்றாப் பேரன் பினவே.*

**இது தினையரிந்துழிக் கிளியை நோக்கிக் கூறுவாள் போற் சிறைப்புறமாக ஓம்படுத்தது.**

**உரை:** குன்றத்தின்கண் வாழும் குறவர் வித்திய கொய்யப்படும் தினையின் பசிய தாளாகிய இருவி நிற்கும் நீண்ட தினைப்புனத்தைக் கண்டு சிவந்த வாயையுடைய பசிய கிளிகள் அப்புனத்தைப் பிரிதலைத் தெளியாத மிக்க அன்பினையுடைய வாகலான், அவை அளிக்கத்தக்கனவாம் எ. று.

1. புறம். 252.　　2. தொல். பொ. 12.

**இருவி,** தினையை அரிந்து கொண்டவழி நிலத்தில் நிற்கும் அரிதாள். தினைப்புனம் முழுதும் இருவியே நின்று காட்சி தருதலின் **இருவி நீள்புனம்** என்றார். பண்டு தினையுதவியது பற்றிப் புனத்தின்பால் உண்டான அன்பு இப்பொழுது அத் தினை யில்லையாயினும் பிரியாவாறு பிணித்தலின், **பிரிதல் தேற்றாப் பேரன்பின** என்றார். உறின் நட்டு அறின் ஒருவுவது அன்புடையார் செயலன் றென்பது பற்றிப் பேரன்பு கூறப்பட்டது. **பிரிதல் தேற்றா** என்பது, " உய்த்தல் தேற்றாதையின் [1]" என்றாற் போல்வது.

வறும்புனங் கண்டு ஆற்றாது மிழற்றித் திரிவது பற்றி, **செவ்வாய்ப் பைங்கிளி** என்றும், அதற் கெய்திய வருத்தம் கண்டு உள்ளம் இரங்குதலின், **அளிய தாமே** என்றும், வேறு புனங்கட்குச் செல்லாது அலமருவதுபற்றி **இருவி நீள்புனம் கண்டும் பிரிதல் தேற்றா** என்றும், அதற்கு ஏது இது வென்பாள், **பேரன்பின** என்றும் கூறினாள்.

தாம் பண்டு போந்து உணவுண்டு இனிது வாழ்தற் குவா யிருந்த தினை இதுபோது இல்லையாயினும், கிள்ளை அதன் இருவி கண்டு பிரியாப் பேரன்புடைய வாதல் போலப் பண்டு இவண் போந்து கூடி இன்பம் நுகர்தற் கேதுவாயிருந்த இவள் இளமைநலம் புதல்வர்ப் பயந்து முதுமை யெய்துதலாற் குறையினும், பிரியாப் பேரன்புடையையாய் வாழ்வாயாக என ஓம்படுத்த வாறறிக. சுட்டென்னும் உள்ளுறை யுவமம். (௪)

285. பின்னிருங் கூந்த லன்னுதற் குறமகள்
மென்றினை நுவணை யுண்டு தட்டையின்
ஐவனச் சிறுகிளி கடியு நாட
வீங்குவளை நெகிழப் பிரிதல்
யாங்குவல் லுநையோ வீங்கிவட் டோந்தே.

1. புறம்.

**இஃது, ஒருவழித் தணந்து வந்த தலைமகற்குத் தோழி கூறியது.**

**ப. உரை:** குறமகள் தினைப்பிண்டியை யுண்டு ஐவனச் சிறுகிளி கடியும் நாட என்றது, நின்னோடு இக்காலத்து இன்பம் நுகர்ந்து பின்பு நின் மனைச்செல்வமும் பிறமகளி ரொழியத் தானே நுகரும் வேட்கையுடையாளைப் பிரிந்து ஒழுகுகின்றாய் என்பதாம்.

**உரை:** பின்னப்படும் கரிய கூந்தலையும், நல்ல நெற்றியையுமுடைய குறமகள், மெல்லிய தினையின் மாவை யுண்டு, தட்டையினால் ஐவன நெல்லின்கட் படியும் சிறுகிளிகளை யோப்பும் நாடனே, இங்கு இவளுடைய பெரிய வளைகள் நெகிழ்ந்தோடும்படி இவளைத் துறந்து பிரிதலைச்செய்ய நீ எவ்வாறு வல்லையா யினையோ, அறியேன் எ. று.

**நுவணை,** தினைமா; "மென்றினை நுவணை முறைமுறை பகுக்கும்[1]" என்ப பிறரும். ஐவனத்தின் கதிர் கவரும் கிளியை **ஐவனச் சிறுகிளி** யென்றார். **ஐவனம்,** மலைநெல். **தட்டை,** கிளிகடியும் கருவி. துறந்து பிரிதல் யாங்கு வல்லுநை யாயினையோ என ஆக்கங்கொடுத்து முடிக்க. வினையினெச்சம் வினைப்பெயரொடு முடிதல், "வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பும், நினையத் தோன்றிய முடிபா கும்மே, ஆவயிற் குறிப்பே யாக்கமொடு வருமே[2]" என்புழி "நினையத் தோன்றிய" என்றதனால் அமையும். செய்யுளாகலின் ஆக்கம் எஞ்சி நின்றது.

பிரிந்தவழி இவள் ஆற்றாமையால் மிக்க துன்புறு வாளாக, அத்துன்ப மெய்த இவளைப் பிரிதல் மிக்க வன்கண்மையுடையார்க் கன்றிக் கூடாத செயலென்பாள், **யாங்கு வல்லுநையோ** என்றாள். "வீங்குவளை நெகிழப் பிரிதல்" என்றது **உடம்நனி சுருங்கல்.** எனவே, இவளை

1. பதிற். 30. 2. தொல். சொல். 432.

ஆற்றுவிக்கும் திறமும் திண்மையு மின்றி யான் பெரிதும் வருந்தா நின்றேன் என்றாளாயிற்று.

ஒருவழித் தணத்தல் என்பது காதல்வாழ்வின் இடையே கடமை காரணமாக நிகழும் பிரிவு. காதற் காமம் தோன்றியவிடத்து அது கணந்தோறும் கடல்போற் பெருகி, அறிவு நிறை பொறை முதலிய ஆண்மைநலம் அனைத்தையும் அடிப்படுத்தித் தான் ஓங்கிநிற்கும்; "வான்தோய் வற்றே காமம்[1]" "இன்பம் கடல்மற்றுக் காமம்[2]" எனவும், "பொறை யென்வரைத்தன்றிப் பூநுதல் ஈத்த நிறையழி காமநோய் நீந்தி அறையுற்ற உப்பியல்பாவை உறை யுற்றதுபோல, உக்குவிடும் என் உயிர்[3]" எனவும் சான்றோர் உரைப்பது காண்க. **இத்துணை ஆற்றல்** இதற்கு **இலதாயின் உலகில் உயிர்வாழ்க்கை நிலை பெறாது** என்பதும் அறிக. இப்பெற்றித்தாய காதற்காமம் தோன்றிப் பெருகுங்கால் கடமையுணர்வு கெடாது நிலவல் வேண்டுதலின் இரண்டற்கும் இடையறவின்றிப் போர் நிகழும்; அப்போரில் காமத்தை அடிப்படுத்திக் கடமை வெற்றிபெறத் திகழும் காளையர் மக்கட்பண்பால் உயர்ந்து தலைமக்களாவர்: **களவின்கண் வரைவிடை வைத்து நிகழும் பிரிவுகள் யாவும் காமத்தை அடக்கி அற நெறிப்படுத்தி மேம்படும் கட்டாண்மைக் கடமை யுணர்வு களின் வெற்றிச்செயல்கள்** என **விளங்க உணர்தல் வேண்டும் என்பது அகப்பொருளுரைக்கும்** அறம்.

குறமகள் தினைமாவை யுண்டு தட்டையினால் ஐவன நெல்லைக் கவரும் கிளிகளைக் கடிவள் என்றதனால் நின்னால் துறக்கப்பட்ட இவள், நின் பிரிவுத்துன்பத்தை உட்கொண்டு, தன் நிறையினால் பிறரறியாவண்ணம் தன் மறையினைக் காத்தொழுகினாள் என உள்ளுறையால் தலைமகள் ஆற்றியிருந்தமை கூறியவாறு. (௫)

1. குறுந். 102. 2. குறள். 1166. 3. கலி. 138.

286. சிறுதினை கொய்த விருவி வெண்காற்
காய்த்த வவரைப் படுகிளி கடியும்
யாண ராகிய நன்மலை நாடன்
புகரின்று நயந்தனன் போலும்
கவருந் தோழியென் மாமைக் கவினே.

இஃது, உடன்போக்குத் துணிந்த தலைமகன் அஃது தோழிந்து தானே வரைவிடைவைத்துப் பிரிய நினைந்ததனைக் குறிப்பினான் உணர்ந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது; தலைமகன் வரைவிடைவைத்துப் பிரிவல் என்றவழித் தலைமகள் தோழிக்குச் சொல்லியதூஉமாம்.

ப. உரை: புகர் என்றது உடன்போதலை. தினையிற் கடிந்த கிளியைத் தினை யரிகாற்கண் விளைந்த அவரைக்கண்ணும் கடியும் நாடன் என்றது, வரையாது ஒழுகுதலன்றி உடன்போதலையும் நம்மை விலக்காநின்றான் என்பதாம்.

உரை: தோழி, சிறுதினைகள் கொய்யப்பட்ட அரிதாளாகிய வெள்ளிய காலில் வளர்ந்து காய்த்த அவரையின்கட் படியும் கிளிகளை ஓப்பும் புதுவருவாயினையுடைய நல்ல மலைநாடன் இன்று புகரை விரும்பினான் போலும், என் மாமைக்கவின் விளர்ப்பதும் தளிர்ப்பதுமாய்த் தடுமாறு மாகலான் எ. று.

தினை யரிந்தபின் அதன் தாள் நின்ற நிலத்தை உழாது அதனிடையே அவரையை விதைப்பது மரபு; கொய்வார் நடந்த நடையே உழவாகவும், ஆங்கு நிலத்திடை நின்ற ஈரமே நீர்வளமாகவும் கொண்டு அவரை வேரூன்றி வளர்ந்து பயன்தரும்; "சிறுதினை மறுகால் கொழுங்கொடி அவரை பூக்கும்[1]" என்றும், "இருவி தொறும் குளிர்புரை கொடுங்காய் கொண்டன அவரை[2]"

1. குறுந். 82. மலைபடு 109-10.

என்றும் சான்றோர் கூறுவது காண்க. இவ்வண்ணமே மருதநிலத்தவர், நெல்லரிதாளில், உழுந்து பயறு முதலியவற்றை வித்திப் பயன்பெறுவர் என அறிக. **யாணர்,** புதுமை; ஈண்டுப் புதுவருவாய் மேற்று. **கவர்த்தல்,** ஈண்டு ஒருபாற்படாது தடுமாறுதல்: "பல்வேறு கவர் பொருள் நாட்டத் தானும்[1]" என்றாற் போல. **மாமைக் கவின்,** மாந்தளிர் போலும் நிறம் திகழும் அழகு. **புகர்** என்பது குற்றம்; "புகரறு சிறப்பு[2]" என்றாற்போல. களவொழுக்கத்தின்கண் தலைமகன் வரைதற்பொருட்டுத் தன் தலைமைப்பண்பினின்றும் தலைப்பிரியாத நெறியிற் செய்யும் வினைவகைகளுள் உடன்போக்கு அடங்காமைபற்றி இது **புகர்நெறியாம்** என்ற கருத்தால் இவ்வாறு ஆசிரியர் **கபிலர்** கூறுகின்றார் போலும். பெரும்பாலும் மகட்கொடை மறுத்தவழித் தலைமகளது தலையாய கற்பினைக் காத்தற்பொருட்டாய இது, தலைமக்கள் தகுதிக்குப் புகராயினும் அறமாதலின் அமையும் எனக் கொண்டு மேற்கோடலால், பண்டைத் தமிழ்ச்சான்றோர் பொருணெறிக்கண் இதனையும் அன்பொழுக்கத்து அறநெறியாக இலக்கணம் அமைத்திருப்பது ஈண்டு நினைவுகூர்தற்பாலது. "ஒருதலை யுரிமை வேண்டியும் மகடூஉப், பிரிதல் அச்சம் உண்மை யானும், ஆம்பலும் அலரும் களவுவெளிப் படுக்கும் என்று, அஞ்ச வந்த ஆங்கிரு வகையினும், நோக்கொடு வந்த இடையூறு பொருளினும், போக்கும் வரைவும் மனைவிக்கண் தோன்றும்[3]" என ஆசிரியர் உரைப்பது காண்க.

புகரென்றது உடன்போதலை யென்பது **பழையவுரை.** இடையிட்டொழுகுங் களவே விரும்பாது உடன்போக்கினைத் துணிந்தான் என்பாள் **புகர் இன்று நயந்தனன்** என்றும், அது துணிந்தவன் பின்னர் அதனை ஒழிந்து

1. தொல். பொ, 114. 2. மதுரை. 765.
3. தொல். பொ. 225.

வரைவிடை வைத்த பிரிவு நினைந்தமையின், **நயந்தனன் போலும்** எனக் குறிப்பால் நயவாமை யுணரவும், பிரிந்த வழித் தன் மாமைக்கவின் பசலை பாய்ந்து வேறுபடு மென்பாள், **கவரும் தோழி என் மாமைக்கவினே** என்றும் கூறினாள். உடன் போக்குத் துணியக் கேட்டவழி மகிழ்ச்சியால் நுதலொளியும் மாமைக்கவினும் சிறக்கப் பெற்றவள், அவன் பிரிய நினைந்தமை யுணர்ந்தவழிக் கெடுதல் குறித்துத் தன் மாமைக்கவினைவிதந்து கூறினாள். இனி, அவன் உடன்போக்குத் துணிந்தவழித் தந்த மாமைக்கவினை, அஃது ஒழிந்த விடத்துக் கவர்ந்து கொள்வா னெனக் கூறினா ளெனவுமாம். என் மாமைக் கவின் உடலெங்கும் பரவி விளங்குகின்றமையின், அது கெடும்வகைப் பிரிவாகிய குற்றம் செய்ய விரும்பினன் போலும் என்றுமாம். உரை இரண்டற்கும் ஒக்கும்.

**புகரின் றுய்ந்தனன்** என்ற பாடத்துக்கு வரையா தொழுகுதலால் வரும் ஏதத்தின் நீங்குவான் உடன் போக்குத் துணிந்தனன் போலும் என்றும், வரைதற் பொருட்டுப் பிரியத் துணிந்தனன் போலும் என்றும் உரைக்க.

"நாற்றமும் தோற்றமும்[1]" என்ற சூத்திரத்து, "காதன் மிகுதி யுளப்படப் பிறவும்" என்புழிப் பிறவும் என்றதனான் தலைவனைப் பழித்தலுங் கொள்க என்று கூறி அதற்கு இது தலைவனைப் பழித்ததாகக் கூறுவர் **இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும்.** (௬)

287. நெடுவரை மிசையது குறுங்கால் வருடை
தினைபாய் கிள்ளை வெரூஉ நாட
வல்லை மன்ற பொய்த்தல்
வல்லாய் மன்றநீ யல்லது செயலே.

1. தொல். பொ. 112.

**இஃது, இன்ன நாளில் வரைவல் எனக்கூறி அந்நாளில் வரையாது பின் அவ்வாறு கூறும் தலைமகற்குத் தோழி கூறியது.**

**ப. உரை:** தமக்கு ஓர் இடையூறும் செய்யாத, நெடுவரைக் கண்ணே வாழும் வருடையைத் தினைமேய்கின்ற கிள்ளை வெரூஉம் நாட என்றது, நீ சொன்ன போழ்தே எம் சுற்றத்தார் வரைவிற்கு இடையூறு செய்யார் என்பது அறியாது வெருவுகின்றாய் என்பதாம்.

**உரை:** நெடிய மலைமேல் வாழ்வதாய குறுங்கால்களை யுடைய வருடைமானைக் கண்டு தினையை யுண்கின்ற கிளிகள் அஞ்சியோடும் நாடனே, நன்றல்லது செய்தல் வல்லுவையல்லை யாயினும் பொய்கூறுதலில் நீ தெளிவாக வல்லையாயுள்ளா யாகலின், யாம் நினக்குக் கூறுவ தென்னை எ. று.

**வருடை,** ஒருவகை மான். "செவ்வரைச் செச்சை வருடை மான்மறி, சுரைபொழி தீம்பால் ஆர மாந்திப், பெருவரை நீழல் உகளும் நாடன்[1]" என்று பிறண்டுங் கூறுவர்.

கூட்டமாய்ப் போந்து தினைப்புனத்திற்குட் படிந்து உண்பது பற்றி, **தினை பாய் கிள்ளை** யென்றார். **மன்ற,** தெளிவுப்பொருட்டாய உரிச்சொல். **வல்லாய்** என்பது வல்லையல்லை யென எதிர்மறைக்கண் வந்தது. "யாவதும் வல்லா கொல்லோ தாமே[2]" என்றாற் போல.

இன்ன நாளிற் போந்து வரைவல் என்க் கூறிச் சென்றவன், பின்பு அது செய்யாது நீட்டித்தமையின், **வல்லைமன்ற பொய்த்தல்** என்றும், பொய்ம்மையில் வல்லுந ராயினோர்க்கு அறமல்லது யாதும் எளிதின் இயலுவதாக, நீ அதனையும் செய்யாது இவண் போந்து இவளை

1. குறுந். 187. 2. ஐங். 333.

அருளுவதாகிய அறத்தைச் செய்கின்றாய் என்பாளாய், **வல்லாய் மன்ற நீ அல்லது செயலே** என்றும் கூறினாள். **அல்லது** வரையாமையாற் கொலைசூழ்தல்; அதனை யொழியப் பொய்ம்மையின் மிக்கது பிறிதில்லை யாகலின், **அல்லது** என்றாள்.

இன்ன நாளில் வரைவல் எனக் கூறிய தலைமகன் நாளுற வரையாதொழிவதே யன்றி வாராமையும் செய்யின், தலைமகள் இறந்துபடுவ தன்றி வேறு செய்திறம் இலள் என்பது உணர்ந்து அஞ்சி வந்தமையான், அவனை **நீ அல்லது செய்தற்கு வல்லுவை யல்லை** என்றாள். இங்ஙனம் தலைமகன் கொண்ட அச்சத்தைப் பிறிதொன்றாகத் திரித்து உள்ளுறையில் குறிப்பாய்ப் பழித்தாளாகலின், இதனால் நீ வரைதலும் செய்யாது, வாராமையால் எம்மை இறந்துபா டெய்தவும் விடாது, வறிதே துன்பத்துள் ஆழ்ந்து வருந்தச் செய்வது நன்றன்று என வெளிப்படையாய்த் தலைவன் எய்தக்கடவ இன்பம் உயர்தற்பொருட்டுத் தோழி உறழ்ந்து கூறியது காண்க. இஃது "உயர்மொழிக் குரிய வுறழுங் கிளவி, ஐயக் கிளவி யாடூஉவிற் குரித்தே [1]" என்புழி "உறழுங் கிளவி" எனப் பொதுப்படக் கூறினமையாற் கொள்ளப்படும்.

"நாற்றமும் தோற்றமும் [2]" என்ற சூத்திரத்துக் "காதல் மிகுதி யுளப்படப் பிறவும்" என்றவிடத்துப் **பிறவும்** என்ற இலேசினால், இது தலைவனைப் பழித்தது என **இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும்** [3] கொள்வர். (எ)

**288.** *நன்றே செய்த வுதவி நன்றுதெரிந்*
*தியாமெவன் செய்குவ நெஞ்சே காமர்*
*மெல்லியற் கொடிச்சி காப்பப்*
*பல்குர லேனற் பாத்தருங் கிளியே.*

1. தொல். பொ. 238. 2. ஷை. ஷை. 112. 3. ஷை. ஷை. 114.

**இது, கிளிகள் புனத்தின்கட் படியாநின்றன என்று தலைவியைக் காக்க ஏவியவழி அதனை யறிந்த தலைமகன் உவந்து தன்னெஞ்சிற்குச் சொல்லியது.**

**உரை:** நெஞ்சே, அழகிய மெல்லிய இயல்பினை யுடைய குறமகள் காவல் செய்ய, பலவாகிய கதிர்களை யுடைய தினைப்புனத்தே பரவிப் படியும் கிளிகள் செய்த உதவி நன்றாகலான், அந்நன்றியினைத் தெளிந்து நாம் செய் யத்தகும் செயல் யாதோ? கூறுக எ. று.

கிளி உதவி நன்று செய்த என முடிப்பினும் அமை யும். அதுவெனச் சுட்டி யொழியாது **நன்று** எனப் பெயர்த் தும் கூறியது செய்யாமற் செய்த பெருநன்றி என்பது யாப்புறுத்தற்கு. **பாத்தரல்,** பரந்துவருதல்.

கிளிகள் ஏனற்கதிர்களைக் கவரும் விருப்பால் புனம் நோக்கிப் பாத்தருதலான், தினை கதிர் கொண்டமையும், தலைமகள் கிளி கடிவாள் அப்புனம் மேவிக் காவல்புரி தலும் சேய்மைக்கண்ணேயே அறிந்தா னாகலின், அதனை உணர்த்திய கிளிமேலேற்றி, **நன்றே செய்த உதவி** என்றும், அந் நன்றிதானும் பின்னர்த் தெளிந்தவிடத்துச் செய் யாமற் செய்த வுதவியாய், படிதற்கு வையகமும் பறத் தற்கு வானகமும் அக்கிளிகட்குக் கொடுப்பினும் ஆற்றாச் சிறப்பிற்றாய் விளங்குதலின், **யாம் எவன் செய்குவம்** என்றும் கூறினன்.

"பண்பிற் பெயர்ப்பினும்[1]" என்ற சூத்திரத்து "அவட்பெற்று மலியினும்" என்பதனை இரட்டுற மொழி தல் என்பதனால் இதற்கமைத்து, இது பகற்குறிக்கண் கிளி புனத்தின்கண் படிகின்றதென்று தலைவியைக் காக்க ஏவியதனை அறிந்த தலைவன் அவளைப் பெற்றேம் என மகிழ்ந்து கூறியது என்பர் **நச்சினார்க்கினியர்.** (அ)

---

1. தொல். பொ. 103.

289. கொடிச்சி யின்குரற் கிளிசெத் தடுக்கத்துப்
பைங்குர லேனற் படர்தருங் கிளியெனக்
காவலுங் கடியுநர் போல்வர்
மால்வரை நாட வரைந்தனை கொண்மே

இஃது, இற்செறித்த பின்னர்த் தோழி வரைவுகடாவுழி முதிர்ந்த தினைப்புனம் இவள் காத்தொழிந்தால் வரைவல் என்றற்கு அவள் சொல்லியது.

**உரை:** பெரிய மலைநாடனே, கொடிச்சியாகிய தலைமகளின் இனிய குரலோசையைக் கிளியோசை யெனக் கருதி மலையடுக்கத்து வளர்ந்த பசிய கதிர்களையுடைய தினைப்புனத்தினை யுள்ளிக் கிளிகள் போதரும் என எண்ணித் தமர் இவளை விடுத்துத் தினைப்புனக் காவல் செய்தலையும் நீக்குவார் போன்றுளா ராகலின், நீ விரைய வரைந்து கோடலே தக்கது எ. று.

**கிளி,** ஆகுபெயர். இன்குரல் கிளிசெத்து ஏனற் படர் தருமெனக் காவலுங் கடியுநர் போல்வர் என இயைக்க. உள்ளுதற் பொருட்டாய **படர்தரும்** என்றது உள்ளிப் போதரு மென நின்றது. **காவலும்** என்புழி உம்மை சிறப்பு; எச்சவும்மையாகக் கொண்டு, தலைமகளைப் புனத் திற்கு ஏவாமையே யன்றிக் காவலும் நீக்குவார் போன்று உள்ளார் என்றுமாம். தலைமகளைத் தினைக்கட் படியும் கிளி கடியுமாறு ஏவுதல், "வளைவாய்ச் சிறுகிளி விளைதினை கடியச் செல்கென் றோளே யன்னை [1]" என வருதலாலறிக. முதிர்ந்த தினைப்புனம் இவள் காத்தொழிந்தால் வரைவல் என்ற தலைமகற்கு, இவளை ஏவியவழி, இவள் குரலைக் கேட்டுக் கிளிகள் தம் இனமெனக் கருதித் திரண்டு போந்து புனத்தின்கட் படிதல் கண்டு, இவள் காவலை

1. குறுந். 141.

நீக்குவா ராயின ரென்பாள், **காவலுங் கடியுநர் போல்வர்** என்றும், அது நோக்கித் தாழ்க்காது விரைந்து வரைதலே செயல் வேண்டுவது என்றற்கு **வரைந்தனை கொண்மே** என்றும் கூறினாள். தினைகாவல் செய்யுமாறு ஏவாவழி, தினைக்கதிர்களைக் கிளிகள் கவர்ந்துகொள்ளு மென்ற அச்சமும், ஏவிய வழியும் அவை போந்து அது செய்தல் குறித்து அவலமும் தோன்றித் தமர் மனத்தை அலைத்த லின், புனவர் காவல் கடிவாராயினர் என்றவாறு. கொடிச்சியின் இனிய ஓசையைத் தம் ஓசையெனக் கருதி மலையடுக்கத்து விளைந்த பசிய கதிர்களையுடைய தினைப் புனத்துப் படரும் கிளிகளை ஓப்பிக் காவல் செய்தலையும் விடுத்தார் போன்றுளார் தமர் என்று உரைப்பின், என வென் இடைச்சொல் நின்றுவற்றுதல் காண்க. **மலைந்தனை கொண்மோ** என்ற பாடத்துக்கு, கரணவகையான் வதுவை சூடிக்கொள்வாயாக என்றுரைக்க. மகளிர்க்கு மாலை என்றும் பெயராகலின், அதற் கேற்ப **மலைந்தனை கொண்மோ** என்றானென்க. "பூப்புனை மாலைபுனையு மாதரும் தோற்புனை வின்னாண் டொடர்கைக்கட்டியும், கோச்சேரன் பெயருங் கோதையென் றாகும்[1]" என்பதனால் மகளிர்க்கு மாலை யென்பதும் பெயராயிற்று.

"நாற்றமும் தோற்றமும்[2]" என்ற சூத்திரத்து "காதல் மிகுதி யுளப்படப் பிறவும்" என்புழிவரும் **பிறவும்** என்ற இலேசினால் இதனை அமைப்பர் **இளம்பூரணர்.** "வேட்கை மறுத்துக் கிளந்தாங் குரைத்தல் மரீஇய மருங்கின் உரித்தென மொழிப[3]" என்பதனுள் அடக்குவர் **நச்சினார்க்கினியர்.** (கூ)

290\. *அறம்புரி செங்கோன் மன்னனிற் றானளி*
*சிறந்தனள் போலுங் கிள்ளை பிறங்கிய*
*பூக்கமழ் கூந்தற் கொடிச்சி*
*நோக்கவும் படுமவ ளோப்பவும் படுமே.*

1. திவா. கக. 2. தொல். பொ. 112. 3. ௸. ௸. 208.

இது, காவலம்'குதியான் இரவுக்குறி மறுக்கப்பட்டு நீங்கிய தலைமகன் வந்துழி' அவன் கேட்டு வெறுப்புத் தீர்தற் பொருட்டால் தினைப்புனம் காவல் தொடங்கா நின்றாள் என்பது தோன்றத் தோழி கூறியது.

**உரை ;** அறத்தைச் செய்கின்ற செங்கோன்மையை யுடைய மன்னனைப் போலப் பூக்களின் மணம்கமழும் கூந்தலையுடைய கொடிச்சியாகிய தலைமகள் மிகவுயர்ந் தாள்; கிள்ளைகளும் உயர்ந்தன, அவளால் உவந்து நோக்கப் படுதலே யன்றி விரைந்து கடியவும் படுமாகலான் எ. று

செவ்விய கோல் போறலின் அரசன்நீதி **செங்கோல்** எனப்படுவது மரபு. அஃது அளியும் தெறலும் என இருவகையின் இயன்று அறப்பயன் விளைத்தலின் **அறம் புரி செங்கோல்** எனப்படுவதாயிற்று. நல்லது செய்வோரை நயந்து அருள் செய்வது அளி; அல்லது செய்வோரைக் கடிந்து ஒறுப்பது தெறல். **போலும்** உரையசை. **பிறங் குதல்** உயர்தல். **சிறந்தனள் பிறங்கிய** என்பன துணி வும் விரைவும் பற்றி இறந்தகாலத்து வந்தன. அவ ளென்புழி ஆலுருபு தொக்கது. **தான்,** அசை. மன்னனில் கொடிச்சி நனிசிறந்தனள், கிள்ளை பிறங்கிய, 'அவள் நோக்கவும் ஓப்பவும் படுமாகலான் என இயையும்.

அறம்புரிதற்கண் செங்கோன்மை நல்லது செய்தலி னும் அல்லது தோன்றின் அதனை விரையாது மடியாது ஆராய்ந்து கடிதல் முறையாகலின், புனத்துக்கு அல்லது செய்யும் கிள்ளையை விரைந்து கடியும் செயல்முறை பற்றித் தலைவியை **நனிசிறந்தனள்** என்றாள். "அல்லது கடியுமிடத்தும் அது செய்தாரைக் கடிதோச்சி மெல்ல எறிதல் செங்கோன்மை யாயினும்[1]" கடிதோச்சுமிடத் துக் கண் சிவந்து அச்சம் விளைத்தல் போலாது, தலைவி யால் உவந்து நோக்கப்படுமாறு தோன்ற, **கிள்ளை அவள்**

1. குறள். 562.

**நோக்கவும் படும்** என்றும், அதனுல் செய்தற்குரியது செய்யப்படாது கழிதலின்று என்றற்கு **ஒப்பவும் படும்** என்றும், இவ்வாறு தெறுமிடத்தும் அகத்தாலேயன்றி முகத்தாலும் அளியுற நோக்கப்படுதல் செங்கோன் மன்னன் குடைநிழல் வாழ்வார்க்கும் இல்லாத சிறப்பாதலின் **கிள்ளை பிறங்கிய** என்றும் கூறினுள். தலைவியால் கடியப்படும் கிள்ளையும் அவள் புனங்காவல் புரியுங்கால் பிறங்குகின்றன எனின், தலைமகன் கூட்டம் பெறுதல் ஒருதலை யென்பது தானே பெறப்பட்டது.

**தாநனி** என்றும், **சிறந்தன** என்றும் பாடமுண்டு. "மன்ன னென்றது தலைமகனை" யென்ற **பழையவுரைக்** குறிப்புச் சில ஏடுகளில் இல்லை. (௰)

## 30. மஞ்ஞைப்பத்து.

இதன்கண் வரும் பத்துப்பாட்டுக்களினும் மயிலாகிய கருப்பொருளே சிறந்து வருதலின், இப்பகுதி இப்பெயர்த் தாயிற்று.

மஞ்ஞை என்பது மயில்களைக் குறிக்கும் பழந்தமிழ்ச் சொல். இம்மயில்கள் காட்டில் வாழும் கோழியினத்தைச் சேர்ந்தவை. ஆயினும், ஏனைக் கோழிகட்கு இல்லாத நெடிய தோகை இருப்பதுதான் இம்மயிற்குச் சிறப்பு. மயிலின் ஆணைச் சேவல் எனவும், பெண்ணைப் பெடை பேடை எனவும் இக்காலத்தே வழங்குகின்றனர். மயிற் சேவலைப் போத்து என வழங்குதலும் உண்டு என்பர் ஆசிரியர் தொல்காப்பியனுர்.[1] அவர் காலத்தில் ஆண் மயிலைச் சேவல் என்னும் வழக்காறு கிடையாது; அது பற்றியே அவர், "சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணும், மாயிருந் தூவி மயிலலங் கடையே[2]" என்று ஓதுவாராயினர்.

மயிற்போத்துக்குத் தோகை யுண்டு. அதனை அது விசிறி போல் விரித்தலும் சுருக்குதலும் செய்யும். மயிற் றோகையில் இடையிடையே கண்போல் அழகிய பொறி யுண்டு; கண்போறலின் அவற்றைக் கண்ணென்றே எல்லா நாட்டாரும் குறிக்கின்றனர். மயிலின் ஆணுக்குத் தான் நீண்ட தோகையும் தலையில் சிறு விசிறிபோன்ற மெல்லிய கொண்டையும் உண்டு. ஒரு மயிற்போத்துக் குரிய தோகை முழுவளர்ச்சி பெற மூன்று ஆண்டுகளாகும்.

மயில்கள் இந்திய நாடு முதல் கிழக்கே யுள்ள கிழக் கிந்தியத் தீவுகள் முடிய வுள்ள நிலப்பகுதியில் காடு களில் பெருகி வாழ்கின்றன. நாட்டிலேயன்றி உயரிய

[1] மரபு. 44. [2] ஷை. 49.

மலைகளிலும் இம்மயில்கள் காணப்படும். மழைக்காலத்தில் மலைமுகடுகளிலிருந்து கீழ்நிலத்துக்கு இறங்கிவிடுவது மயில்களின் இயல்பு. காட்டில் விளைந்து உதிரும் புல் மணிகளும் கிழங்குவகைகளும் சிறுசிறு பழங்களும் புழு பூச்சிகளும் இவற்றிற்கு உணவாவன.

நம் நாட்டுப் பண்டைய உயிர்நூல் அறிஞர்களுள் அமிசதேவர் என்பார், மயில்களை அறுவகையாக வகுத்து அவற்றை மயூரம், பாரி, நீலகண்டி, பாம்புணி, சிகாவளம், கேகயம் என்று எடுத்தோதுகின்றார். இவற்றுள், **மயூரம்** பசுமைநிறமும் நீண்ட கழுத்தும் கால்களும் உடையவை; **பாரி** வகை, மிக்க உயரமும் அகன்ற கொண்டையும் கொண்டுள்ளன; மேனிமுழுதும் பன்னிறம் பரந்திருக்கும். கருநீனிறக் கழுத்தும் உடல் சிறுத்தும் கால்குறுகியும் இருப்பன **நீலகண்டி**; இவை ஆடும் போது ஒருகாலை யூன்றிச் சுழன்றுசுழன்று குதித்தாடுவது சிறப்பு. பாம்புகளைத் துரத்திக் கொன்று தின்பவை **பாம்புணிமயில்** என்று பெயர் பெறுவன; இவை மக்களைக் கண்டால் சினங் கொண்டு குத்தும். **சிகாவளம்** நீண்ட கழுத்தும் நெடிய அலகும் உடையவை. பெண்கள் ஆடும் நடனத்தைக் கண்டால் தானும் அவ்வாறே ஆடும் இயல்புடையது இச் சிகாவளம். **கேகயம்** "கே" "கா" என்று அகவுவதால் இப்பெயர் பெறுகிறது. வெயில் வெம்மையைத் தாங்கும் வன்மையில்லாமையால் இவை எப்போதும் நீர் நிலைகளின் கரைகளிலும் இருண்டு குளிர்ந்திருக்கும் புதர்களிலும் விரும்பியுறைகின்றன. இவ்வினத்துள் பெடைக்கும் ஓரளவு தோகையுண்டு; ஆனல் கொண்டை மட்டும் கிடையாது; பிறந்த ஐந்து அல்லது ஆறு ஆண்டுகட்குப் பின்பே இவை சினையீனும் செவ்வியைப் பெறுகின்றன என **அமிசதேவர்** கூறுகின்றார்.

இந்தோசீனவில் ஒருவகை மயில் உண்டு. அதன் தோகை ஏழடி நீளமாகும். அஃது இருள்படச் செறிந்த பெருங்காடுகளில்தான் காணப்படுகிறது. ஏனை மயில்களை விட அது மிகவும் பெரியது. பெருங்காடுகளின் நடுவே

சமநிலம் கண்டு ஒரு பகுதியை வரைந்து கொண்டு, அதன் கண் கல்லும் முள்ளும் சிறிதும் இல்லாதவாறு தூய்மை செய்து அவ்விடத்தே நின்று தன் நீண்ட தோகையை விரித்து ஆடும். இளவேனிற் காலத்தில் பூம்புதல்களும் மரங்களும் புதுத்தளிரும் பசுந்தழையும் கொண்டு இனிய காட்சி வழங்கும் போது, வானத்தில் வெயில் வெம்மையைத் தணிப்பது குறித்து இளமழை தவழுங்கால் இம் மயில்களின் கூத்துக் காணப்படுகிறது. அக்காலை அதன் ஆட்டத்திலும் தோகை விரிப்பின் தோற்றத்திலும் ஈடு பட்டுப் பெடைமயில் வேட்கை மிக்கு அதனை நெருங்கும். தன் பெடையின் மனதைக் கவர்தற்பொருட்டுத் தோகையை விரித்து ஆடும் காட்சி காண்பார் கண்கட்குப் பெருவிருந்தாய் ன்பம் செய்யும்.

பெடையின் பொருட்டு மயிற்போத்துக்கள் பிற மயில்களோடு போர்செய்வதும் இயல்பு. அக்காலை மயிர் சிலிர்த்துக்கொண்டு தன் அலகாலும் கால் விரலாலும் ஒன்றையொன்று தாக்கிக் கடும்போர் செய்யும். பெடைமயில் பத்து முதல் பதினைன்குவரை முட்டையிடும். முட்டையின் உள்ளிருக்கும் நீர் பன்னிற வண்ணங் கொண்டு உளது. அந்நிறங்களே பின்னர் அதன் மேனியில் விரிந்து காட்சிதரும். மயிற் குஞ்சுகள் இளமையில் தோற்றத்தால் ஆண்பெண் வேற்றுமை தெரியாதவாறு மென்சிறை மூடிக் கிடக்கின்றன.

மிகப்பழங் காலத்தேயே மக்கள் மயில்களைப் பிடித்து மனைகளில் வைத்து வளர்க்கலுற்றனர். இம்மயில்களிடத்தே யவனர்களுக்குப் பேரீடுபாடு உண்டு. அவர்கள் பண்டைநாளில் அழகுக்காகவும் உணவுக்காகவும் இம்மயில்களை நம்நாட்டினின்று கொண்டுபோயினர். பின்னர் அவர்கள் அவற்றை ஐரோப்பாவுக்குக் கொண்டு சென்றனர். அதற்குமுன் ஐரோப்பியருக்கு இம்மயில் தெரியாது.

நம் நாட்டிலும் இலங்கை மலேயா கிழக்கிந்தியத் தீவுகள் ஆகிய இந்நாடுகளில் நீர்வள மிக்க பகுதியில் உள்ள காடுகளில் ஒருவகைப் புள்ளினம் மயில்போல் காட்சி தருகின்றது. ஆயினும் மயில்போல் மக்கள் மனம் விரும்பத்தக்க மாண்பும் வனப்பும் அவற்றின்பால் இல்லை.

இம்மயில்களை நம் பண்டைத் தமிழ்ச்சான்றோர் நன்கு ஆராய்ந்துள்ளனர். இவற்றை இந்நாளைய உயிர் நூல் அறிஞர் போலவே கோழியினத்தோடு சேர்த்தே எண்ணினர். மலைக்காடுகளில் இவை காணப்படும் இயைபு கண்டுரைக்கும் அறிஞர், "பொறிப்புற மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக் கோழி வயப்பெடை இரிய[1]" எனக் கோழிகளிடையே வைத்துக் கூறுவது கொண்டு அறிய லாம். மயிலினங்கள் பெரும்பாலும் மலையும் மலையடுக்கங் களுமாகிய குறிஞ்சிநிலக் காடுகளிலும் கற்பாறைகளிலும் காட்சி வழங்குகின்றன. "மலைய மயில் அகவ மலைமாசு கழியக் கதழும் அருவி யிழியும்[2]", "மால்வரைச் சிலம் பின் மகிழ்சிறந் தாலும் பீலி மஞ்ஞை[3]" "கலைதாய உயர்சிமையத்து மயில் அகவும் மலிபொங்கர்[4]" "கன் மிசை மயி லால[5]" என வருவன பலவும் இதற்கு ஏற்ற சான்றாகும்.

மலைகளிலே சிறப்ப வாழ்வனவாயினும் ஏனை முல்லை மருதம் முதலிய நிலப்பகுதிகளிலும் மயில்கள் காணப்படு கின்றன. "கானமஞ்ஞைக் கணம்[6]" "கானமஞ்ஞைக் கமஞ்சூல் மாப்பெடை, அயிரியாற் றடைகரை வயிரின் நரலும்[7]" என்று சான்றோர் குறிப்பர். மருதவயற்புறத்து நிற்கும் சோலைகளும் மயில்கட்குச் சீர்த்த இடமாகின்றன. "செந்நெல் உண்ட பைந்தோட்டு மஞ்ஞை, செறிவளை மகளிர் ஓப்பலின் பறந்தெழுந்து துறைநணி மருதத்

1. முருகு. 309-11. 2. பரி. 6 : 6-7.
3. பெரும்பாண். 330-1. 4. மதுரை. 332-3.
5. கலி. 27. 6. புறம். 127. 7. அகம். 177.

திருக்கும்[1]" "கழனி யுழவர் தண்ணுமை இசைப்பின், பழன மஞ்ஞை மழைசெத்து ஆலும்[2]" என்பன காண்க.

இங்ஙனம், குறிஞ்சி முல்லை மருதம் என்ற நிலப்பகுதிகளில் காணக் கூடிய மஞ்ஞையினம் நீண்ட தோகையும் குறுகிய சிறகுகளு முடையவை; ஆதலால் இவை நெடுந் தொலைவு பறந்து செல்லும் இயல்பினவல்ல. கோழிபோல் பெரும்பாலும் நடையில் சிறந்தன எனினும், இவை பெரு மரங்களில் எப்போதும் காட்சி தருகின்றன. குறிஞ்சி முல்லைக்காடுகளிலும் மருதப் பூம் பொழில்களிலும் இவை மரங்களில் வைத்தே குறிக்கப் படுவதைப் பார்க்கலாம். மலைகளில் பெருங்கற்களின் முகட்டில் காணப்படும் மயில்கள், வேங்கை, மராஅம், குருந்து, காஞ்சி, மருது முதலிய மரங்களிலே உள்ளன. "வேங்கையின் சினையில் வீற்றிருக்கும் மயில் அதன்கண் ஏறிப் பூக்கொய்யும் மகளிர்போலத் தோன்றுகிறது[3]" "மலைவேங்கையில் இருந்த மயில் மராமரத்தின் உச்சியில் தங்குவதும்[4]" "குருந்தமரத்தில் இருந்து குலவுவதும்[5]" மருதவயற் புறம் வந்த மயில்கள் காஞ்சியிலும் மருத மரத்திலும் இருந்து இனிய காட்சி வழங்குவது முண்டு, "முடக் காஞ்சிச் செம்மருதின் மடக்கண்ண மயில் ஆல[6]" எனச் சான்றோர் உரைப்பது காண்க.

மயில்கள் கோழிகளைப் போலவே "வைகறைப் போதிலும் அந்திமாலையிலும்[7]" கூவும்; மயிற்கூவலை **அகவுதல்** என்பது வழக்கு. அதன்குரல் அரித்த ஓசையுடைமை பற்றி, "ஆடுசீர் மஞ்ஞை அரிகுரல்[8]" எனப்படும்; இசைத் தமிழ்த்துறையில் காணப்படும் திறவகையில் இதுவும் ஒன்ருகப் **பரிபாடல்** குறிக்கின்றது; எனவே, மயில் எடுக்கும் ஓசையிலும் இசைக்குரிய இனிமைப்பண்பு கண்டுளது

1. புறம். 344. 2. பதிற். 90. 3. குறுந். 26.
4. கலி. 36. 5. அகம். 85, 242. 272, 378.
6. பொருந. 189-92. 7. மதுரை. 675; குறுந். 391.
8. பரி. 17 : 19.

பண்டைய இசைப்புலமை என்பது காண்க. எனினும், இயற்றமிழ்ச் சான்றோர் குயிலோசையிற் போல மயிலோசையிலும் அன்பின் ஐந்திணைக்குரிய நெறியில் பொருள் நலங் கண்டு, "தோகை ஆர்குரல் மணந்து தணந்தோரை, நீடன்மின் வாரும் என்பவர் சொற்போன்றனவே [1]" என்று வியந்து பாடுகின்றனர்.

இனி, மயிலின் தலையில் அழகிய சிறு கொண்டை உளது அன்றோ! அது வாகையின் பூப்போல இருப்பது நோக்கி, "குமரி வாகைக் கோலுடை நறுவீ, மடமாத் தோகைக் குடுமியின் தோன்றும் [2]", "வாகையொண்பூப் புரையும் முச்சிய தோகை [3]" என வருவன காண்க. மயிலின் கழுத்துக் காயாம்பூவின் நிறமுடையது. "புல் லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை, மென்மயில் எருத்தின் தோன்றும் [4]" என **ஔவையார்** குறிக்கின்றார். நொச்சி இலையின் கொத்துப் போல்வது மயிலின் காலடி என்பது யாவரும் நன்கறிந்த தொன்று. இதனையே சான்றோர் விதந்து, "மயிலடி இலைய மாக்குரல் நொச்சி [5]" எனப் பாடினர்.

மயிலுக்குள்ள சிறப்பெல்லாம் அதனுடைய அழகிய கண் பொருந்திய நீண்ட தோகையேயாகும். தோகை என்னும் சொல் பொதுவாக நெல்லின் தோட்டுக்கும் [6] நாய் வாலுக்கும் [7] வழங்குமாயினும் சிறப்பாக மயிலுக்கே உரியதாகும்; ஆதலால், மயிலைத் **தோகை** யென்றே பண்டையோர் பெரிதும் வழங்கினர். பண்டு தமிழகத்துக்கும் மேலை யவனநாட்டுக்கும் நடந்த வணிகப்பொருள் களுள் ஒன்றாகிய மயில் யவனர்களால் **தொகி** [8] என்றே அவர்கள் குறிப்பில் எழுதப்பட்டுள்ளது. வானமாமலையி லிருந்து மேலைக் கடற்கரைப்பகுதியில் வீழ்ந்தோடும்

1. பரி. 14 : 8-9. 2. குறுந். 347. 3. பரி. 14, 7-8.
4. குறுந். 183. 5. நற். 115, 305; குறுந். 138.
7. அகம். 13. 8. ஷை. 122. 9. Togi.

வானியாற்றின் கரைமருங்கு நின்ற சோலைகளில் மயில்கள் மிக வாழ்ந்தமைபற்றி அங்கிருந்த பேரூர் **தோகைக்கா**[1] என்று பெயர்பெற்று விளங்கிற்று. வானியாறு இப்போது சிராவதி யென்றும், தோகைக்கா ஜோக்[2] என்றும் வழங்குகின்றன.

இத்தோகையை மயில் விரிக்கவும் சுருக்கவும் கூடும். மயிலின் வனப்பு அது தன் தோகையை விரித்துக்கொண்டு ஆடும்போது தான் விளங்கித் தோன்றும். "மிசைபடு சாந்தாற்றி போல எழிலி, இசைபடு பக்கம் இருபாலும் கோலி, விடுபொறி மஞ்ஞை பெயர்புடன் ஆட, விரல் செறி தூம்பின் விடுதுளைக் கேற்ப, முரல்குரல் தும்பி அவிழ்மலர் ஊத, யாணர் வண்டினம் யாழிசை பிறக்கப் பாணி முழவிசை அருவிநீர் ததும்ப, ஒருங்கு பரந்தவை எல்லாம் ஒலிக்கும், இரங்கும் முரசினான் குன்று[3]" என்று **நல்லச்சுதனார்** பரிந்து பாடுவது காண்க.

மயில்கள் தோகையை விரித்துக்கொண்டு அங்கு மிங்கும் அசைந்து நடந்து இயலும் இக்காட்சி காண்பார்க்கு மிக்க இன்பம் தருவதொன்று. நின்றுங்கு நில்லாது நடந்து கொண்டே யிருப்பது மயில் ஆடுவது போலத் தோன்றலின், யாவரும் "மயில் ஆடுகிறது" என்றே கூறுவர். வானத்தில் மழை முகில் எழுந்து பரக்கும் போதும், மழை பொழிந்த பின்னரும் மயில்களுக்கு ஆடற்கண் விருப்பமுண்டாகிறது. ஒரோவழித் தன் காதற் பெடையின் கருத்தை ஈர்ப்பதற்கு இந்தக் களியாட்டத்தை மயிற்பேர்த்து மேற்கொள்ளுகிறது; "வான்தளி பொழிந்த காண்பின் காலை, அணிகிளர் கலாவம் ஐதுவிரித் தியலும் மணிபுரை எருத்தின் மஞ்ஞை[4]" எனச் சான்றோர் கூறுவது காண்க.

1. அகம். 15.  2. Joag of Joag Falls.
3. பரி. 20 : 30-8.  4. நற். 264.

நீண்ட தோகையைத் தாங்கிக்கொண்டு மயில் அசைந்த நடையிட்டு செல்வது நல்லியல்பு படைத்த இளமங்கையரின் இனிய நடையொத்திருக்கும். இது பற்றியே, "கலவ மஞ்ஞையிற் காணவர வியலி[1]" "மயில்கண் டன்ன மடநடை மகளிர்[2]" "மடமயி லன்ன என் நடைமெலி பேதை[3]" என அறிஞர் பலரும் அறிந் துரைக்கின்றனர்.

இம்மயில்களைக் கானவர் வலைவைத்துப் பிடிப்பர். அக்காலை அதனைக் காண்பார்க்கு மிக்க வருத்தம் உண் டாகும். "ஓரி முருங்கப் பீலி சாய, மயில் வலைப்படுவதை[4]" முன்னையோர் நன்கு கூறியுள்ளனர். மயில்கள் பாம்பு களைக் காணில் விடாது தொடர்ந்து சென்று கொல்லும்; அவற்றுள்ளும் கொடு நஞ்சு படைத்த நாகத்தைக் காணின், "அதனைப் படம்விரிக்கப் பண்ணிக் குத்திக் கொல்வதில் மயில் பெருங்கிளர்ச்சி கொள்கிறது[5]" "பாகற்கொடியில் பழுத்திருக்கும் சிவந்த கனிகளை யுண் பதில் அவற்றிற்கு விருப்பம் மிகுதியுமுண்டு[6]" என்பர். செல்வர் மனைகளில் இம்மயில்களை வளர்ப்பது பெருவழக் காக இருந்தது. இப்போது இவற்றின் தொகை குறைந்து வருவது யாவரும் அறிந்த தொன்று.

291\. மயில்க ளாலக் குடிஞை யிரட்டும்
துறுகல் லடுக்கத் ததுவே பணைத்தோள்
ஆய்தழை நுடங்கு மல்குற்
காதலி யுறையு நனிநல் லூரே.

**வரைவிடைவைத்துப் பிரிந்து மீள்கின்ற தலை மகன் சொல்லியது.**

**ப. உரை: மயில்கள் ஆலக் குடிஞை இரட்டும்** என்றது, தான் அயரும் வதுவைச் சிறப்புக் கூறியவாறு.

1\. புறம். 133. 2. முருகு. 205. 3. அகம். 63.
4\. குறுந். 244. 5. அகம். 108. 6. ஷை. 177.

**உரை:** பருத்த தோள்களையும் மெல்லிய தழை யணிந்து நுடங்கும் அல்குலையு முடைய எம் காதலி உறை யும் மிக்க நன்மை பொருந்திய ஊர், மயில்கள் ஆடக் குடிஞைப் புள்ளாகிய பேராந்தை முதலியவைகள் ஒலி செய்யும் துறுகற்கள் நிறைந்த மலைப்பக்கத்தது, காண் எ. று.

**ஆலுதல்,** ஆடுதல். **குடிஞை,** பேராந்தை; மக்கள் வழங்குதல் அரிதாகவுள்ள மலைப்பாறைகளிலும் பாலை நிலங்களிலும் வாழ்வது. இதன் குரல் குறுந்தடி கொண்டு அறையப்படும் சிறுபறை யோசை போல் இருப்பதுபற்றி, "உருள்துடி மகுளியிற் பொருள்தெரிந் திசைக்கும் கடுங் குரற் குடிஞை [1]" என்றும், "விரலூன்று படுகண் ஆகுளி கடுப்பக், குடிஞை யிரட்டும் நெடுமலை யடுக்கத்து [2]" என்றும் சான்றோர் கூறுப. இதனால், மயிலினது ஆடற் கேற்பக் குடிஞையின் குரல் சிறுபறை கொட்டுவது போல இசைக்கும் என்பதாயிற்று. நல்லூர் துறுகல் அடுக்கத் தது என இயையும்.

பிரிந்து மீள்கின்ற தலைமகற்குச் சேய்மைக்கண் தோன்றுவது துறுகல் லடுக்க மாகலின், அதனையே எடுத்து ஓதலுற்றவன், மயில்கள் ஆலுவது கண்டு பின்னர்க் குடிஞை இரட்டுவது கேட்டலின், அம்முறையே **மயில் கள் ஆலக் குடிஞை இரட்டும்** என்றான். ஒலியினும் ஒளி விரைந்து செல்வதாகலின், இது முறையாயிற் றென அறிக.

பிரிந்த காலையில் தலைமகளை இரவுக்குறிக்கண் தலைப் பெய்து கண்டமை நினைவுக்கு வருதலால், கருமுகில் பரந்த இருவிசும்பின்கண் மீனும் மதியமும் தோன்றா வகையிற் பேரிருள் நிறைந்த நள்ளிரவில், வேல் கோலாக, பேராந்தைகள் அலறக் கல்லதர் கடந்து சென்று குறி

1. அகம்.-69.　　2. மலைபடு. 140-1.

யிடத் தெதிர்ப்பட்டுக் தலைமகளைக் கூடிய செய்தியை **மயில்கள் ஆலக் குடிஞை இரட்டும் துறுகல் அடுக்கத் ததுவே** என்றும், கூடியவழித் தன்னை ஆர்வத்தோடு தழுவி வரவேற்ற அவள் தோளைச் சிறப்பித்துப் **பணைத் தோள்** என்றும் கூறினன். களவின்கண் இன்பம் மிகுமாறு ஒழுகியஞான்று, தன்மேற் கொண்ட காதலால் தன் குறிப்பின்வழி ஒழுகியவள் உறையும் ஊராகலின், **நல்லூர்** என்றும், அன்னவள் இனிக் கற்பின்வழி நின்று இல்லி லிருந்து புரியும் நல்லறத்திற்குத் துணையாகும் மிகுநலம் குறித்து, **நனிநல்லூர்** என்றும் கூறினனும். இனித் தன் காதலி யுறையும் ஊராகலின், **நல்லூர்** என்றும், அவளைத் தன் வாழ்க்கைத்துணையாக வரைந்து இன்புறும் வேட்கை மிகுதலால், **நனிநல்லூர்** என்றும் கூறினன் எனினுமாம். (க)

292. மயில்க ளாலப் பெருந்தே னிமிரத்
தண்மழை தலைஇய மாமலை நாட
நின்னினுஞ் சிறந்தன வெமக்கே நீநயந்து
நன்மனை யருங்கடி யயர
எந்நலஞ் சிறப்பயா மினிப்பெற் றோரே.

**இது, பின்முறை யாக்கிய பெரும்பொருள் வதுவை முடித்தவனை இல்லத்துக் கொண்டு புகுந்துழித் தலைமகள் உவந்து சொல்லியது.**

**ப. உரை:** மழைப்பருவம் வேண்டி யிருக்கின்ற மயில்கள் ஆலத் தேன்கள் இமிர மழை பெய்யும் நாட என்றது யாங்கள் கருதி யிருக்கின்ற பெரும்பொருளை உவப்ப முடித்தனை எ. று.

**உரை:** மயில்கள் ஆலப் பெரிய வண்டினம் ஒலி செய்யக் குளிர்ந்த மேகங்கள் மழைபெய்யப்பட்ட பெரிய மலை நாடனே, நீ விரும்பி நம் நன்மனைக்கட் கொணர்ந்து

பெறுதற்கரிய பெரும்பொருள் வதுவை செய்தலால் எமது நலமும் மிகுதலின், இப்போழ்து யாம் தங்கையாகப்பெற்ற இவள் எமக்கு நின்னினும் சிறப்புடைய ளாயினள் எ. று.

**பெருந்தேன்,** பெரிய வண்டினம். தேனென்னும் சொல் தேனுண்ணும் வண்டிற்கும் பொதுவாகிய பெயரா கலின், ஈண்டு **இமிர** என்னும் முடிக்குஞ் சொல்லால் பொதுமை நீங்கினமை அறிக. "பெருந்தேன் இழைக் கும் நாடன் [1]" என இச்சொல் தேனைக் குறிப்பது காண்க. **அருங்கடி** ஈண்டுப் பின்முறை ஆக்கிய பெரும்பொருள் வதுவை. **பெற்றோள்,** "செயப்படுபொருளைச் செய்தது போல [2]" உரைக்கும் வாய்ப்பாடு; "இல்வாழ்வான் என்பான் [3]" என்றாற்போல.

"பின்முறை யாக்கிய பெரும்பொருள் வதுவை" என்பது, முன்னர் எய்திய வதுவை மனைவிக்குப் பின்னர் உலகியல் அமைதி குறித்தும், மகப்பேறு குறித்தும் முறை யாற் செய்துகொள்ளப்படும் பெரிய பொருளாகிய வதுவையாகும்; அஃதாவது இரண்டாம் மனைவி.

உலகியலில், மக்கள், இளமையில் பெற்றோரைச் சார்ந்தும், முதுமையில் மக்களைச் சார்ந்தும் வாழும் திறத்தால் ஏனை உயிரினங்களினும் வேறுபடும் சிறப் புடையர்; ஏனை உயிரினங்கள் யாவும் இளமை கழிந்ததும் பெற்ற உயிரோடு ஒருபற்று மின்றி மீளாப்பிரிவுற்று நீங்கும். இவ்வகையில் முதுமைக்காலத்துப் பற்றுக் கோடாம் வகையில், மக்கட்பேறு பொருட்பேறு போல் இன்றியமையாதாயிற்று. **திருவள்ளுவரும்** "தம்பொருள் என்ப தம் மக்கள் [4]" என்றும், முதுமைக்கண் தம்மைப் பெற்றோர்க்குத் தாம் பற்றுக்கோடாதல் கடன் என்பது அறிந்தொழுகும் மக்கட்பேற்றின் மாண்பினை, "பெறு மவற்றுள் யாம் அறிவதில்லை அறிவறிந்த மக்கட்பேறு அல்ல பிற [5]" என்றும் உரைத்தருளுவது காண்க. தன்

3. 2. தொல். சொல். 3. குறள். 41.
குறள். 63. 5. ௸. 61.

வாழ்க்கைத்துணையாகிய தலைமகள்பால் மக்கட்பேறு இல்லையாயின், அது குறித்து வேறொருத்தியைப் பின் முறையாக வதுவை செய்து கோடல் உலகியல் அமைதி யாயிற்று. மக்கட்பேறெய்தியபின் வேறொருத்தி மனை யாட்டியாதல் தமிழ்மரபன்று; பிறர் உளராயின், அவர் அனைவரும் **இற்பரத்தையர்** எனப்படுவர். அவர் பெறும் மக்கள் முதுமைப் பற்றுக்கோடாம் கடப்பாடுடைய ரல்லர் என்பது தமிழ்நூன் முடிபு. இற்பரத்தையர் பொதுமகளி ராகாது ஒருவற்கே உரிமையானவர் என்பது பற்றிப் பிற்காலத்தார் அவர்களை **உரிமைமகளிர்** என்று குறிப்பா ராயினர்.

நல்லறம் புரியும் இல்ல மாகலின், **நன்மனை** என்றும், பெரும்பொருளாகிய மக்கட்பேறு கருதியதும், பயில நிகழாது மிக அருகியது மாகிய வதுவையாகலின், **அருங் கடி** என்றும், இப் பின்முறை வதுவை பெருங்குலக் கிழத்தியுடன் தானும் ஒருயிர்க் கீருடம்பாய் ஒன்றுபட்டு ஒழுகுதலால் எய்த லாகும் சிறப்பு நோக்கி, **எம்நலம் சிறப்ப** என்றும், பிரிதலும் கூடுதலும் பொருந்திய நின் கேண்மையினும், என்றும் பிரிதலில்லாத கேண்மை யுடையளாவாள் இவள் என்பாள், **நின்னினும் சிறந்தனள் எமக்கே** என்றும் கூறினள். இதனாற் பயன் தலைவன் இப்பெற்றியாளைக் கைவிட்டுப் பரத்தைமை செய் தொழுகுவது நினைந்து, பரத்தைமையைக் கையொழித்துப் பிரியாக் காதல னுவது. இது "பின்முறை யாக்கிய பெரும் பொருள் வதுவைத் தொன்முறை மனைவி எதிர்பாட்[1]" டின்கண் நிகழ்த்தும் கூற்று. அஃதாவது, அப் புதுமண மகளைத் தொன்முறை மனைவி விளக்கு முதலிய மங்கலங் களைக் கொண்டு எதிரேற்றுக் கொள்வாள் மகிழ்ந்து கூறுவதாம்.

1. தொல் பொ. 172.

மயில் ஆலுவதும், தேன் இமிருவதும், மழை பெய்வதும், பெரும்பொருள், வதுவைக் காலத்து மக்கள் மகிழ்ச்சி மிக்குக் குரவையாடலும் இன்னியம் பல இசைத்தலும் பெரும்பொருள் வதுவை கொண்ட மகட்கும் பிறர்க்கும் தலைமகள் அருள்செய்வதும் சுட்டி நின்றன.

**நின்னினும் சிறந்தனள் எமக்கே** என்றது, **பிரிவாற்றுமை. அருங்கடி யயர, எந்நலம் சிறப்ப** என்றது **அருண்மிக வுடைமை.** (௨)

293. *சிலம்புகமழ் காந்த ணறுங்குலை யன்ன*
*நலம்பெறு கையினென்* **கண்புதைத் தோயே**
*பாய லின்றுணை யாகிய பணைத்தோள்*
*தோகை மாட்சிய மடந்தை*
*நீயல துளரோவென் னெஞ்சமர்ந்* **தோரே.**

**இது, பகற்குறியிடம் புக்க தலைமகன் தலைவி பின்னாக மறைய வந்து கண் புதைத்துழிச் சொல்லியது.**

**ப. உரை: நீயலது உளரோ என் நெஞ்சமர்ந் தோரே** என்றது, நீ யல்லது பிறர் உளராயினன்றே நான் கூறுவது அறிதல் வேண்டிக் கண் புதைக்கற்பாலது; அஃது இல்லாதவழிப் புதைப்பது என்? என்று அவள் பேதைமை யுணர்த்தியதாம்.

**உரை:** சிலம்பின்கண் மணம் வீசுகின்ற காந்தளினது நறிய பூங்குலை போலும் அழகுபெற்ற கைகளால் என் கண்களைப் புதைத்தோய், உறக்கத்திற்கு இனிய துணைவியாகிய பருத்த தோள்களையும், மயில்போலும் மாட்சிமையுமுடைய மடந்தை யாகிய நின்னைத் தவிர என் னெஞ்சத் தமர்ந்த காதலர் வேறுளரோ? இலரன்றே எ. று.

**காந்தள்** குறிஞ்சிநிலப் பூவாகலின், **சிலம்பு கமழ் காந்தள்** எனப்பட்டது. "நறுந்தண் சிலம்பின் நாறுகுலைக்

காந்தள்[1]" என்பது காண்க. காந்தள் எனப் பொதுப் படக் கூறியவதனால், சிறப்புடைய **செங்காந்தட்பூக்** கொள்ளப்பட்டது. இதன் பூக்கள் குலைகுலையாய்த் தோன்று மென்பது, "குருதிப்பூவின் குலைக்காந் தட்டே[2]" என்றும், "மலைச் செங்காந்தள்[3]" என்றும் சான்றோர் குறிப்பது காண்க.

காதலர் இருவர் ஒருவரை யொருவர் எதிர்நோக்கி நின்று கூடுமிடத்து, அவ் வெதிர்நோக்கி நின்றாரைப் போதந்து கூடுவோர் அவரறியாமைப் போந்து கண் புதைத்துக் கூடி மகிழ்தலை, "நின்றோ ளெய்திக் கைகவி யாச் சென்று **கண்புதையாக் குறுகிப்**, பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித் தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ[4]" எனப் பிறரும் கூறுதல் காண்க.

மகளிர் கைக்குக் காந்தளை உவமை கூறல் மரபு; "கைபோற் பூத்த கமழ்குலைக் காந்தள்[5]" என்று சான்றோர் உரைப்பர். **பாயல் இன்றுணை**, உடன்கிடந்து உறங்கு தற்கு இனிய துணை; "இவள் பழனவூரன் பாயல் இன்றுணையே[6]" எனப் பிறரும் கூறுவர். காதலன் தன் கூந்தலிற் கிடந்து உறங்குதலை மகளிரும் விரும்புவர்; "பயிலிருங் கதுப்பின் பாயலும் உள்ளார்[7]" எனப் பிரிவிடை வருந்தும் ஒருத்தி கூறுதல் காண்க. **மாட்சி**, சாயல்; தோகைக்கு மாட்சி அதுவாகலின். தனக்குப் பின்னே போந்து தன் இருகைகளாலும் கண்ணைப் புதைத்தவுடன், அவற்றை மெல்ல நீக்கித் தன் கையில் பற்றிக் கொண்டு பேசுதலின், **காந்தள் நறுங்குலை யன்ன கை** என்றும், அதனால் தனக்கு மிக்க இன்ப முண்டா தலின், **நலம்பெறு கை** என்றும், ஏனை அறிவு ஆண்மை வினைகட்குத் துணையாவாரின் நீக்குதற்குப் **பாயல் இன்துணை** என்றும், கண்ணகத்தேயன்றி என் நெஞ்சகத்

1. ஐங். 226. 2. குறுந். 1. 3. நற். 173. 4. அகம். 9.
5. பரி 19 : 76. 6. ஐங். 96. 7. குறுந். 254

தும் நின்னையன்றிப் பிறர் எவரும் இலராதலை அறிந்திலை போலும் என்றற்கு **நீயலது உளரோ என் நெஞ்சமர்ந்தோர்** என்றும், களவின்கண் தலைமகளிடத்தே பரத்தமை ஒழுக்கம் நிகழ்வதின்மையின் **கண்புதைத்தோய்** என்று எடுத்து மொழிந்து, வன்புறை தோன்ற **நீயலது உளரோ** என்றும் கூறினன்.

"வேளாணெதிரும் விருப்பின்கண்[1]" நிகழும் கூற்று. குறிவழிக் கண்டு கூறுதல் என்று கூறி, அவ்வழித் தலைவிக்குக் கூறியதாக இதனைக் காட்டி, இது தலைவி கண்புதைத்தவழித் தலைவன் கூறியது என்பர் **இளம்பூரணர்.**

"கரணத்தின் அமைந்து முடிந்த காலை[2]" என்னும் சூத்திரத்து "எண்ணருஞ் சிறப்பின் கிழவோன் மேன" என்புழிச் "சிறப்பின்" என்றதனுல் இதனைக்காட்டியமைப்பர் **நச்சினார்க்கினியர்.** (௬)

*294.* *எரிமருள் வேங்கை யிருந்த தோகை*
*இழையணி மடந்தையிற் றோன்று நாட,*
*இனிதுசெய் தனையா லெந்தை வாழியர்*
*நன்மனை வதுவை யயரவிவள்*
*பின்னிருங் கூந்தன் மலரணிந் தோயே.*

**இது, வதுவை செல்லாநின்றுழித் தலைமகற்குத் தோழி சொல்லியது.**

ப. உரை: **இனிது செய்தனையால்** என்றது வதுவையில் தலைவிக்கு மலரணியக் கண்ட தோழி "இவ்வாறு ஆம்படி அன்றே சூட்டினை" எனச் சொல்லியவாறும்.

மலர்ந்த வேங்கைக்கண் இருந்த தோகை **இழையணி மடந்தையின் தோன்றும் நாட** என்றது, நீ வரையா தொழுகுகின்ற ஞான்றும் நின் தமர் பொன்னணிந்த இன்று போலச் சிறப்ப ஒழுகினுய் என்பதாம்.

1. தொல். பொ. 105. 2. ௸ 146.

**உரை:** நெருப்புப் போலும் மலர்களையுடைய வேங்கை மரத்தின்கண் இருந்த மயில் கலன்களை யணிந்த மகளிர் போலத் தோன்றும் நாடனே, நன்மனைக்கண் வதுவை நிகழும் இப்பொழுது இவளுடைய பின்ன லுற்ற கரிய கூந்தற்கண் மலரை யணிந்தனை; இதனைப் பண்டே செய்தனை யாயினும் இப்பொழுது இனிதே செய்தனை யாகலின், எந்தையே நீ நெடிது வாழ்க எ. று.

வேங்கையின்பூ நெருப்புப் போலும் நிறமுடைமை பற்றி **எரிமருள் வேங்கை** என்றார்; பிறரும் "எரியகைந் தன்ன வீததை யிணர வேங்கையம் படுசினை [1]" என்றும், "அழற்சினை வேங்கை [2]" என்றும் கூறுதல் காண்க. உயரிய மரஞ்செடிகள் அடர்ந்த பெருமலைகளில் வாழும் இயல்பின வாதலின், ஆங்கே பருத்து உயர்ந்து நிற்கும் வேங்கைமரங்களில் மயில்கள் காணப்படுவது கொண்டு, வேங்கைக்கண் இருக்கும் மயிலை விதந்து கூறினர். பிறருண்டும் "விரிந்த வேங்கைப் பெருஞ்சினைத் தோகை [3]" என்றும், பிறரும், "நன்னாள் பூத்த நாகிள வேங்கை, நறுவீ யாடிய பொறிவரி மஞ்ஞை [4]" என்றும் கூறுவர். அந்நிலையில் அம்மயில்களின் தோற்றம் வயங்கிழை அணிந்த மகளிர் போல இருக்கும் என்பார், **தோகை இழையணி மடந்தையின் தோன்றும்** என்றார். பிறிதோர் இடத்தும், "வேங்கைப் பெருஞ்சினைத் தோகை பூக்கொய் மகளிரின் தோன்றும் [5]" என்பது காண்க. நாட, அணிந் தோய், இனிது செய்தனை; நுந்தை வாழியர் என இயைக்க.

"பெற்றோற் பெட்கும் பிணையை யாகென" முது மகளிர் வாழ்த்த, "பேரிற் கிழத்தி ஆகுக எனத் தமர்தர [6]" அவரும் பிறரும் அறியத் தலைமகன் தலைமகள் கூந்தலில் மலர் சூட்டித் தன் பெண்டெனப்படுத்தல் கண்டு மகிழ் பவள், **பின்னிருங் கூந்தல் மலரணிந்தோய்** என்றும்,

1 நற். 379. 2. அகம். 398. 3. ஐங். 297.
4. அகம். 85. 5. ஐங். 297. 6. அகம். 86.

பண்டு களவின்கண் இது செய்தா யாயினும் ஆண்டு அது நினக்கும் இவட்கும் இனிது; ஈண்டு நுமக்கே யன்றித் தமர்க்கும் பிறர்க்கும் இனிதாயிற் றென்பாள், **இனிது செய்தனையால்** என்றும்,இவ்வகையால்இங்கேகால்கொள்ளும் அன்பும் அறமும் நும் வாழ்க்கையின் பண்பும் பயனுமாய் நெடிது வாழ்க என்றற்கு **எந்தை வாழியர்** என்றும் கூறினள். அன்பானும் அறத்தானும் சிறந்த தலைமகன் அருள் நிழலில் வாழ்பவ ளாதலின், வழிபாட்டு முறை பற்றி **எந்தை** என்றாள். "இனிது செய்தனையால் எந்தை வாழிய, பனிவார் கண்ணள் பலபுலந் துறையும், ஆய்தொடி யரிவை கூந்தற், போதுகுர லணிய வேய்தந் தோயே [1]" எனப் பிறண்டும் தோழி கூறுவது காண்க.

"பெறற்கரும் பெரும்பொருள் முடிந்தபின் [2]" என்ற சூத்திரத்து, "அற்றமழி வுரைப்பினும்" என்புழி நிகழும் கூற்றுக்கு இதனை உதாரணமாக்குவர் **இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும்.**

**நுந்தை வாழியர்** என்றும் பாடமுண்டு; அதற்குத் தலைமகனைத் தலைக்கூடிய ஞான்று தோன்றிய அன்பிற் குன்றாது அறத்தாற்றின்கண் ஒழுகிய தலைமகனது சான்றாண்மை கண்டு வியக்கின்றவள், அதற்கு ஏதுவாகிய அவன் தந்தையை விதந்து **நுந்தை வாழியர்** என்றாள் எனக் கொள்க. (௪)

*295.* *வருவது கொல்லோ தானே வாரா*
*தவணுறை மேவலி னமைவது* கொல்லோ
*புனவர் கொள்ளியிற் புகல்வரு மஞ்ஞை*
*இருவி யிருந்த குருவி வருந்துறப்*
*பந்தாடு மகளிரிற் படர்தரும்*
*குன்றுகெழு* நாடனொடு சென்றவென் னெஞ்சே.

1. அகம். 104. 2. தொல். பொ. 148.

**இது, தலைமகன் வரைவிடை வைத்துப் பிரிந்து நீட்டித்துழி, உடன்சென்ற நெஞ்சினைத் தலைமகள் நினைந்து கூறியது.**

**ப. உரை:** புனவர் கொள்ளிக்கு அஞ்சித் தன் புகலிலே செல்லும் மயில் புனம் கொய்த பின்பு அரிதாளிலே இருந்த குருவி எழுவது விழுவதாய் வருந்துறச் சிறகை விரித்து ஆடிச் செல்லும் நாடன் என்றது, பின்பு வரைந்து கொள்ளக் கருதாதே அலரஞ்சித் தன் மனைவயிற் சென்றவன் இக்காலத்து யானும் என் ஆயத்தாரும் வருந்துறப் பிரிந்தான் என்பதாம்.

**உரை:** புனத்தில் வாழ்வாரது நெருப்புக் கொள்ளிக்கு அஞ்சித் தனக்குரிய புகலிடம் நோக்கிச் செல்லும் மயில், புனங்கொய்த பின்பு அரிதாளிலே இருந்த குருவி வருந்தச் சிறகை விரித்துப் பந்தாடும் மகளிரைப் போல, அசைந்தாடிச் செல்லுங் குன்றுகள் பொருந்திய நாடனொடு சென்ற எனது நெஞ்சம் வருவதாகுமோ, அன்றி வாராது அவ்விடத்தே உறைதலை விரும்பி அமையுமோ? யாதோ? லன் எ. று.

**உறை,** உறைதல்; முதனிலைத் தொழிற்பெயர். **மேவல்,** விரும்புதல். வரற்பாலது வாராதாயின் அதற்கு ஏது வேண்டுதலின், **அவணுறை மேவலின்** என்பா ராயினர். **புனவர்,** தினைப்புன முடையோர்; மருதநிலத்துக் காணி யாளர் போல. **புகல்,** புகலிடம். நாடன் இன்னுயிர்க் காதல னுக்லின், ஒருவினை ஒடு உயர்பின் வழித்தாயிற்று. **புனவர் கொள்ளி** யாவது புன்புலத்தை மயக்கித் தினை முதலிய வித்திப் பயன்பெறுதற்பொருட்டுப் புலத்தில் நின்ற காட்டைக் குறவர் தீயிட்டுக் கொளுத்தும் நெருப்பு. **புகல்,** விரும்பி யுறையுமிடம். தினையரிதாளில் தழைத்த பயிரின்கண் தோன்றும் புல்லிய கதிர்களையும் புழுபூச்சிகளையும் மேய்ந்துண்ணும் சிறுபுள்ளினத்தை, **இருவி யிருந்த குருவி** என்றார். துள்ளியும் தொடர்ந்தும்

ஓடும் பந்தின்வழி அதனை யாடும் மகளிர் அசைந்தோடி ஆடுதலின், தன் புகலிடம் நோக்கி நீண்ட தோகை அசைந்து செல்லும் இயைபு நோக்கி, **பந்தாடு மகளிரின்** என்றார். **தானே** என்றது கட்டுரைச் சுவைபட வந்தது.

தலைமகளும் "ஆயமொடு கெழீஇப், பந்துவழிப் படர்குவ[1]" ளாகலின், பந்தாடு மகளிரைக் கூறினாள், தான் பந்தாடும் பான்மைய ளாயினும் அஃதொழிந்து நெஞ்சழிந்து நின்றமையின். **வருவது கொல்லோ, வாராது அவணுறை மேவலின் அமைவது கொல்லோ** என்றது, **ஆங்கு நெஞ்சழிதல். வருவது கொல்லோ** என எண்ணினவள், வாராமைக்குரிய ஏதுக்கள் யாவை யென ஆராய்ந்து, ஒருகால் தலைவர் அருளாமையால் இவண் வந்து என் வேறுபாடு நோக்கி மருண்டு அவர் பாலே சென்று சேர்ந்ததோ, அன்றி, அவர்பால் என் உயிரையும் உடன்கொண்டு சேறற் குரிய நெறி ஆராய் கின்றதோ என எண்ணி, அவற்றை மறுத்து, "குன்ற நாடன் குடிநன் குடையன் கூடுநர்ப் பிரியலன், கெடுநா மொழியலன் அன்பினன்[2]" எனத் துணிந்து அவன்பாலே இருந்து அவன் மேவனசெய்து இன்புறுகின்ற தாகல் வேண்டும் என்பாள், **அவணுறை மேவலின் வாராது அமைவது கொல்லோ** என்றாள். "தொன்னலம் இழந்த வென் பொன்னிற நோக்கி, யேதி லாட்டி யிவளெனப் போயின்று கொல்லோ[3]" என வேறுபாடு நோக்கி மருண்டமையும், "நாணினை நீக்கி உயிரோடு உடன்சென்று, காணப் புணர்ப்பதுகொல் நெஞ்சு[4]" என உயிர் கொண்டு போதலைச் சூழ்ந்தமையும் தலைவி நினைக்குமாறு காண்க. இது, "கிழவோற் சேர்தல் கிழத்திக் கில்லை" என்றமை யான், தன்னெஞ்சம் சென்று சேர்தல், "ஒருசிறை நெஞ்ச மொடு சாவுங்காலை, யுரிய தாகலும் உண்டென மொழிப[5]" என்பதனால் அமையும்.

1. அகம். 153, 2. ஷை. 352. 3. நற். 56.
4. ஐந். எழு. 32. 5. தொல். பொ. 204.

"மறைந்தவற் காண்டல்[1]" என்ற சூத்திரத்துப் "பிரிந்தவழிக் கலங்கினும்" என்றதற்கு இதனைக் காட்டுவர் **இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும்.** (௬)

296. *கொடிச்சி காக்கும் பெருங்குர லேனல்*
*அடுக்கன் மஞ்ஞை கவரு நாட*
*நடுநாட் கங்குலும் வருதி*
*கடுமா தாக்கி னறியேன் யானே.*

**இஃது, இரவுக்குறி வருகின்ற தலைமகற்குத் தோழி ஆற்றருமை கூறி மறுத்தது.**

ப. உரை: **அறியேன் யான்** என்றது இதனால் விளைவன யான் அறியேன் என்பதாம்.

குறத்தி காக்கும் தினையை மஞ்ஞை கவரும் நாட என்றது, நின் நாட்டுக்குத் தக்க களவின் நுகர்ச்சியே விரும்புகின்றாய் என்பதாம்.

**உரை;** கொடிச்சி யாகிய தலைமகள் காக்கும் பெரிய கதிர்களையுடைய தினையை மலைப்பக்கத்தே வாழும் மயில்கள் கவரும் நாடனே, கங்குல் நடுநாளாகிய நள்ளிரவில் வருகின்றனை யாகலின், வரும் நெறியின்கண் அச்சம் பொருந்திய விலங்குகள் நின்னைத் தாக்கின், யாது விளையுமோ அறிகிலேனாகலின், இனி இரவுக்குறி பிர்க எ. று.

**கடுத்தல்,** அச்சப் பொருட்டாய கடியென்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த வினை. **கடுமா,** யானை, புலி முதலியன. தினைக்கதிரை மயிலுண்டல், "புனவன் துடவைப் பொன்போற் சிறுதினைக் கடியுண் கடவுட் கிட்ட சில்குரல் அறியா துண்ட மஞ்ஞை[2]" என்பதனாலும் அறிக. உம்மை, பகற்குறிக்கண் வந்தமையும் தழுவி

1. தொல். பொ இளம். 109. நச்சி. 111. 2. குறுந். 105.

நிற்றலின் எச்சப்பொருட்டு; வரவருமை யுணர்த்தலின் சிறப்பும்மையுமாம்.

இரவுக்குறி வந்தானை அன்புடன் தழீஇக்கொண்டு இனி வாராவகை விலக்குகின்றுளாகலின், **நடுநாட் கங்குலும் வருதி** யென்றும், வரும்நெறி கடுமா வழங்கும் கொடுமை யுடையதெனத் தான் ஏதம் ஆய்ந்து வருந்துமாறு தோன்ற, **கடுமா தாக்கின்** என்றும், உடனே இறந்துபடுதலை யன்றி வேறு செய்திறம் அறியேன் என்றற்கு **அறியேன் யான்** என்றும் கூறினள். **கடுமா தாக்கின்** என்றது **ஏதமாய்தல். அறியேன் யான்** என்றது **கலக்கம்.** இனி, கடுமா தாக்கின் அதனை நீ கொன்று வேறல் ஒருதலையாயினும், அது செய்யும் முழக்கத்தால் தமர் நின் வரவறிவரேல் பெருந்தீங்கு விளையும்; "தாம் செத்து உலகாள்வார் இல்லை, அதுபோல இவ்வொழுக்கம் ஒழுகற்பாலீ ரல்லீர்" எனத் தோழி மறுத்தா ளென்றுமாம்.

கொடிச்சி காக்க விளங்கும் தினைக்குரலைப் பல இடையீடுகட் கிடையே மஞ்ஞை கவரும் என்றதனுல், தாயர் தந்தையரது காவலில் சிறக்கும் தலைமகளது கூட்டத்தை இடையீடின்றிப் பெறுதற்கு நீ விரைந்து வரைதல் வேண்டுமெனக் குறிப்பால் தோழி வரைவு கடாயினுள் எனக் கொள்க. பழைய வுரைகாரர்க்கும் இதுவே கருத்தாதல் அறிக. (௬)

297. விரிந்த வேங்கைப் பெருஞ்சினைத் தோகை
பூக்கொய் மகளிரிற் றோன்று நாட
பிரியினும் பிரிவ தன்றே
நின்னொடு மேய மடந்தை நட்பே.

ஃது, ஒருவழித் தணந்து வரைய வேண்டு மென்றந் தோழி கூஉ

**ப. உரை:** மலர்ந்த வேங்கைச் சினைக்கண் இருந்த தோகை மலர் கொய்யும் மகளிரைப் போலத் தோன்றும் நாட என்றது, நீ மனத்தால் எங்கட்கு நல்லது புரியா யெனினும் நன்மை செய்கின்றாய் போலத் தோன்றுகின்றாய் என்பதாம்.

**உரை:** பூத்து விரிந்த மலர்களையுடைய வேங்கை மரத்தின் பெரிய கிளைகளிடத்தே தங்கிய மயில் பூக்கொய் யும் மகளிர்போலத் தோன்றும் நாடனே, நீ பிரிவா யாயினும் நின்னொடு பொருந்திய மடந்தையின் நட்புப் பிரிவென்ப தொன்று உண்டென உட்கொள்ளும் இயல் புடைய தன்று என அறிக எ. று.

பூவின் விரிந்த பண்பினை வேங்கைமேல் ஏற்றி **விரிந்த வேங்கை** என்றார். "விரியிணர் வேங்கை[1]" எனவும், "வேங்கை விரியிணை ரூதி[2]" எனவும் சான்றோர் உரைப்பது காண்க. வேங்கைக்கண் இருந்த மயில் பூக்கொய் மகளிர் போலத் தோன்றுதலை, "அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை, மேக்கெழு பெருஞ்சினை யிருந்த தோகை, பூக் கொய் மகளிரின் தோன்றும் நாடன்[3]" என **வெள்ளி வீதியார்** பாட்டினும் வருதல் காண்க.

பிரிந்து சேறல் வேண்டு மென்னும் எண்ணம் நிகழ் தற்கு நின் நெஞ்சு இடம் தரினும் என்பாள், **பிரியினும்** என்றாள். இனிப் பிரிவது அன்றே என்புழி ஏகாரம் எதிர் மறையாகக் கொண்டு பிரிவதாம் எனவும், எனவே, மடந்தையது நட்பு நீ பிரியக் கருதினும் பிரிந்ததாகவே கொண்டு அவட்குப் பெருந்துயரைச் செய்யும் எனவும் உரைப்பினும் ஆம். நீ பிரிவா யாயினும் மடந்தையின் நட்புப் பிரிவை உட்கொள்ளும் இயல்புடைத்தன்று என்றதனால், அந் நட்புக் கந்தாக அவள் உயிர் வாழ் கின்றா ளென்றும், அப் பெற்றியாளைப் பிரிந்து உறைதல் நன்றன் றென்றும் கூறினளாம்.

---

1. அகம். 38. 2. ஷை. 132. 3. குறுந். 26.

வேங்கைப் பெருஞ்சினைக்கண் தோகை வாளாது இருப்பினும் பூக்கொய்யும் மகளிர் போலத் தோன்றுநிற்கும் என்றது, நீ வரைவு கருதிப் பிரிதலை நினைந்தாய் ஆயினும் அஃது எமது உயிரைக் கொல்லும் செயல்போல எமக்குத் துயர்விளையாநிற்கிறது என உள்ளுறையால் செலவழுங்குவித்தவாறு.

**பிரியா யன்றே** என்பது பாடமாயின், நீ மெய்யாற் பிரியினும் மனத்தாற் பிரியாயன்றே என்றவாறென்க. (எ)

298. *மழைவர வறியா மஞ்ஞை யாலும்*
*அடுக்க னல்லூ ரசைநடைக் கொடிச்சி*
*தானெம் மருளா ளாயினும்*
*யாந்தன் னுள்ளுபு மறந்தறி யேமே.*

**இது, தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட் குணர்த்தியவழி அவள் நாணத்தினால் மறைத்தொழுகிய வதனைக் கூறக் கேட்ட தலைமகன் சொல்லியது.**

**ப. உரை:** மழையினது வரவை அறிந்து மஞ்ஞை ஆலும் என்றது, யான் நின்னிடத்து வருகின்ற வரவினை யறிந்து இதற்கு அவள் மகிழாநிற்கும்; நீ கூறுகின்றது பொய் என்பதாம்.

**உரை;** மழைவரவினை யறிந்து மயில்கள் ஆலுகின்ற மலைப்பக்கத்ததாகிய நல்லூர்க்கண் வாழும் அசைந்த நடையினையுடைய கொடிச்சியாகிய தலைமகள் எமக்குத் தன் அருளைச் செய்யா ளாயினும், யாம் அவளையே நினைந்து ஒருபோதும் மறந்தறியேம் எ. று.

**மழை,** மழைமுகில். **அறியா,** செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். கருமுகிற் கூட்டம் எழுந்து வானத்திற் பரந்து வருவது காணின் தோகைமயில், அது போது வரும் குளிர்காற்றால் உள்ளம் கிளர்ந்து தன் தோகையை விரித்து ஆடுவது இயல்பாதலால், **மழை**

**வரவறியா மஞ்ஞை ஆல** என்றார். **அடுக்கல்,** பெருங்கற்கள் நிறைந்த குன்று.

தலைமகற்கும் தனக்கும் இயற்கைப்புணர்ச்சி வகையால் உண்டாகிய உறவினைத் தோழி அறிதற்கு நாணியாளாகவே தோழி வெளிப்படையாகத் தலைவி குறைநேராளாகவே தோழி குறைமறுத்தமை பொருது **தான் எம் அருளா ளாயினும்** என்றான். **அருளா ளாயினும்** என்றது, அருளாமைக்குரிய காரணம் யாதும் என்பால் இல்லை யென்பது பட நின்றது. அருளப்படுதற் குரிய தன் பெருங்காதலைத் தோழிக்கு உணர்த்தும் கருத்தால் **யாம் தன்னுள்ளுபு மறந்தறியேம்** என்றான். உள்ளுறையால் தலைவிக்கும் தனக்கும் முன்பே உளதாகிய உறவினைக் குறிப்பால் உரைத்தமையான், வெளிப்படையாக என்பால் உள்ளுதலும் மறத்தலும் இலவாயின என்றான். **உள்ளுதல்,** மறந்த தொன்றினை நினைவு கூர்தல். "உள்ளினே னென்றேன் மற்று என் மறந்தீர் என்று என்னைப் புல்லாள் புலத்தக்க னள்[1]" என்பதனால் அறிக.

இதன்கண் முன்னது பண்பிற் பெயர்த்துழிக் கூறுதலும், பின்னது பரிவுற்று மெலிதலுமாம்; என்னை: "பண்பிற் பெயர்ப்பினும் பரிவுற்று மெலியினும், அன்புற்று நகினும், அவட்பெற்று மலியினும் ஆற்றிடை யுறுதலும் அவ்வினைக் கியல்பே[2]" என்பவாகலின்.

மழைவரவு அறிந்து மயில்கள் ஆலுமாறு போல யான் வந்தன னென்பதை நின் தலைவி அறிந்தால் அருள் வந்த சொல்லும் செயலுமுடைய ளாவள், காண் என உள்ளுறை கூறியவாறு காண்க.

இது குறி பிழைத்தவழித் தோழிக்குச் சொல்லியது[3] என்பர். "பண்பிற் பெயர்ப்பினும்[4]" என்ற சூத்திரத்துப் பரிவுற்று மெலிதற்கு மேற்கோளாகக் காட்டுவர் **இளம்பூரணர்; நச்சினார்க்கினியர்.** (அ)

1. குறள். 1316. 2. தொல். பொ. 103.
3. இளம். தொல். பொ. 105. 4. தொல். பொ. 103.

299. குன்ற நாடன் குன்றத்துக் கவாஅன்
பைஞ்சுனைப் பூத்த பகுவாய்க் குவளையும்
அஞ்சி லோதி யசைநடைக் கொடிச்சி
கண்போன் மலர்தலு மரிதிவள்
தன்போற் சாயன் மஞ்ஞைக்கு மரிதே.

இஃது, இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீங்கிய நிலைமைக்கண் தலைமகள் ஆயவெள்ளத்தோடு கூடி நிற்கக் கண்ட தலைமகன் மகிழ்ந்த உள்ளத்தனாய்த் தன்னுள்ளே சொல்லியது.

ப. உரை: குன்றநாடன் என்றது அந்நிலத்துக்கு உரிய னாகிய முருகனை.

**உரை:** குன்றுகளையுடைய நாடன் குன்றுகளின் சாரலி லுள்ள பசிய சுனைக்கட் பூத்த அகன்ற வாயை யுடைய குவளைமலர் தானும், அழகிய சிலவாகிய கூந்தலை யும் அசைந்த நடையினையுமுடைய கொடிச்சியாகிய தலைமகளின் கண்போல மலர்தல் அரிது; இவளைப்போலும் சாயலைப் பெறுதல் மயிலுக்கும் அரிது எ. று.

குன்ற நாடன், முருகன்; **கவாஅன்**, மலைப்பக்கம். **குன்றத்துக் கவாஅன்** எனப் பெயர்த்தும் கூறியதனால், **குன்ற நாடன்** என்றது வாளா பெயராய் நின்றது. ஏனைத் தாமரையும் ஆம்பலும் போலக் குவியாது விரிய மலர்ந்து நிற்கும் அகவிதழ் உடைமையின், **பகுவாய்க் குவளை** என்றார். **சாயல்,** மென்மை. குவளை கண்போல மலர் தலும், மயில் சாயல் பெறுதலும் பொதுவியல் பாகலின், இரண்டையும் எடுத்தோதினார். இஃது ஒரீஇக் கூறிய வெளிப்படை யுவமம். தலைமகளின் கண்களையும், சாயலை யும் உயர்த்திக் கூறுவது கருத்தாகலின் பட்டாங்கு

உவமம் கூறும், "உவமத் தன்மையும் உரித்தென மொழிப, பயனிலை புரிந்த வழக்கத் தான[1]" என்புழி அடங்கா தாயிற்று.

குன்றுகள் நிறைந்த குறிஞ்சிக் கடவுளாகிய முருகன் சிறப்புற விரும்பும் குன்றம் என்றற்குக் **குன்றநாடன் குன்றம்** என்றும், அவன் தோன்றி வளர்தற்கு இடமாய்ச் சிறந்த சுனை என்றற்கு **குன்றத்துக் கவாஅன் பைஞ்சுனை** என்றும் உயர்த்துக் கூறியது, தான் வேண்டிய உயர்வு முடித்தற்கு. முருகற்குரிய சுனையாயினும், ஆண்டுப்பூத்த குவளைதானும் இவளது கண்போல மலரு மாயினும்காதற் குறிப்பை யுணர்த்தும் கவினுடையது அன்மையின் நிகரா தல் இல்லை யென்பான், **கண்போல் மலர்தலும் அரிது** என்றான். "காணிற் குவளை கவிழ்ந்து நிலன் நோக்கும் மாணிழை நோக்கொவ்வேம் என்று[2]" என்று சான்றோர் கூறுதல் காண்க. செவ்வேள் விரும்பி யுறையும் சிறப்புப் பெற்றதாகலின், அவன் குன்றத்து வாழும் மயிற்கு இவளது சாயல் பெறுவது இயலு மாயினும், புணர்ச்சிக் குரிய மென்மை சான்ற சாயல் பெறல் அரிது என்றற்கு **இவள் தன்போற் சாயல் மஞ்ஞைக்கும் அரிது** என்றான். இஃது **அவட் பெற்று மலிதல்.**

"மெய்தொட்டுப் பயிறல்[3]" என்ற விடத்து, "தோழி குறையவட் சார்த்தி மெய்யுறக் கூறலும்" என்புழி இஃது இருவரும் உள்வழி வந்த தலைவன், தலைவியின் தன்மை கூறவே, இவள்கண்ணது இவன் வேட்கை என்று தோழி குறிப்பான் உணரக் கூறியது என்பர் **நச்சினார்க்கினியர்.**

*300. கொடிச்சி கூந்தல் போலத் தோகை*
*அஞ்சிறை விரிக்கும் பெருங்கல்*
*வந்தன னெதிர்ந்தனர் கொடையே*
*அந்தீங் கிளவி பொலிகநின் சிறப்பே.*

---

1. தொல். பொ. 309. 2. குறள். 1114. 3. தொல் பொ. 102.

**இது, தலைமகன் றனே வரைவு வேண்டிவிடச் சுற்றத்தார் கொடைநேர்ந்தமை தலைமகட்குத் தோழி சொல்லியது.**

**ப. உரை;** கொடிச்சி கூந்தல் போறல் வேண்டி மஞ்ஞை சிறகை விரிக்கும் வெற்பன் என்றது நின் மகிழ்ச்சிக்குத் தக நின் தமர் மகிழ்ச்சி கூர்ந்தார் என்பதாம்.

**உரை;** கொடிச்சி யாகிய குறமகளின் கூந்தல் போலு மாறு மயில் தன் அழகிய சிறகுகளை விரித்து ஆடும் பெரிய கற்கள் நிறைந்த மலையையுடையனாகிய தலைமகன், தானே மகட்கொடை வேண்டி வந்தானாக, நமர் அது நேர்ந்தன ராகலின், அழகிய இனிய சொற்களையுடையாய், இனி நின் சிறப்பு மேம்படுமாக எ, று.

கொடிச்சியின் சாயல் தன்னொடு நிகர்த்தல் கண்டு அமையாது மயில் அவளது கூந்தல் போலுமாறு தன் தோகைக்கண் உள்ள சிறகை விரித்துத் தோன்றும் என்பாள், **தோகை அஞ்சிறை விரிக்கும்** என்றார். **கொடை எதிர்ந்தனர்** என்றது மகட்கொடை வேண்டி வந்த தலைமகனுக்குத் தலைமகளை நேர்ந்தார் என்பதாம். **சிறப்பு,** "கற்பும் காமமும் நற்பா லொழுக்கமும் பிறவு மாகிய மாண்புகள் [1]".

**எதிர்ந்தனர் கொடையே** என்றது தலைமகள் ஏக்கற் றிருந்தமை யுணர நின்றது. இனி, இல்லறம் புரிந்து மக்களொடு துவன்றிச் சிறந்தது பயிற்றல் சிறப்பாகலின், **பொலிக நின் சிறப்பே** என்றாள் என்றும், நீ அவன் பிரிவால் இழந்த நலம் பெற்று ஏனை அலர் கூறுவார் வாயடங்க வதுவை நன்மணம் பெற்று வாழ்க்கைச் சிறப்பு எய்துவா யாக என்று ளென்றுமாம். (ம)

**ஆசிரியர் கபிலர் பாடிய குறிஞ்சி முற்றும்.**

1. தொல். பொ. 152.

உ

திருச்சிற்றம்பலம்.

நான்காவது

ஆசிரியர் ஓதலாந்தையார் பாடிய

# பாலை

அகனைந்திணைக்கண் வரும் திணைகளுள் பாலை என்பது ஒன்று. பாலையாவது நீர்வளமின்றி வெயில் வெம்மை மிக்கு நிலவும் நிலப்பகுதி. இச்சொல்லைக் கேட்கும் போது வடஇந்தியாவி லுள்ள தார் பாலைவனமும், ஆப்பிரிக்காவி லுள்ள சகாரா பாலைவனமும் நினைவுக்கு வரும். அத்தகைய கொடுமை மிக்க நிலப்பகுதி நம் தமிழகத்தில் யாண்டும் இல்லை. இங்கே பாலை யெனப் படுவது ஏனை நிலங்களில் உள்ளது போல நீர்நில வளமின்றி, கல்லும் முள்ளும் முரம்பும் பரற்கற்களும் மணலும் பொருந்தியுள்ள நிலப்பகுதி யெனக் கொள்ளல் வேண்டும். இதன் இயல்பு குறிக்கப் போந்த **இளங்கோ வடிகள்,** "முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து, நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப், பாலை யென்ப தோர் படிவம் கொள்ளும்[1]" என்று உரைத்துள்ளனர். இதனையே, "வான மூர்ந்த வயங்கொளி மண்டிலம், நெருப்பெனச் சிவந்த உருப்பவி ரங்காட்டு, இலையில மலர்ந்த முகையில் இலவம்[2]" என முல்லை முறைமை திரிந்து பாலையாயின வாறும், "சீறருங் கணிச்சியோன் சினவலின் அவ்வெயில், ஏறுபெற் றுதிர்வனபோல் வரை பிளந்து இயங்குநர் ஆறுகெட விலங்கிய அழலவிர்

1. சிலப். 11 : 64-7. 2. அகம். 11.

ஆரிடை[1]" எனக் குறிஞ்சி முறைமை திரிந்து பாலையா யினவாறும் காண்க என **அடியார்க்குநல்லார்** விளக்கி யுரைப்பது பாலையின் வரலாற்றைத் தெரிவிக்கிறது.

தமிழகத்து நிலப்பகுதியைக் குறிஞ்சி முதலாக வகுத் துக் கொண்ட பண்டைநாளைத் தமிழறிஞர் பாலைக்கு நிலம் வகுக்கவில்லை. அவர்கள் காலத்தில் குறிஞ்சியும் முல்லையும் முறைமை திரிந்து பாலை நிலத்தை உண்டாக்க வில்லை; இயற்கையாகவே பிற நாடுகளில் உள்ளது போலப் பாலைப்பகுதி இருக்கவும் இல்லை. அதனல் ஆசிரியர் **தொல்காப்பியர்,** பொருளிலக்கணம் கூறும் போது "முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனா[2]" நான் குமே உரைத்தார். ஆயினும், சான்றோர், பாலைநிலம் தோன்றுதற்குரிய இயல்புகள் ஆங்காங்கு இருந்தமை கண்டு பொதுவகையில் பாலைத்திணை யென ஒன்றை உரைத்துப் போந்தனர். அதுபற்றிப் பாலை **பொதுத்திணை** என்றும் வழங்கப்படுவதாயிற்று.

**நடுவுநிலைத்திணை** யாகிய பாலைக்கு நண்பகற்போதும் இளவேனில் முதுவேனிலாகிய இருவகை வேனிலும் உரியனவாம்; ஆயினும், பின்பனிக் காலமும் பாலைக்கு உரியதாகல் உண்டு. அதனல் ஆசிரியர், "பின்பனி தானும் உரித்தென மொழிப[3]" என்றனர். இந்நிலத் திலும் எயினர் எயிற்றியர் என்னும் மக்கள் வாழ்ந்தனர். மறவர் மறத்தியர்க்கும் ஆறலைகள்வர்க்கும் பிற கொடிய வர்க்கும் இப்பகுதி வாழ்நிலம் என்பர். இப்பகுதியில் விளைபொருள் இல்லாமையால் இம்மக்கள் வழிச்செல் வோரை அலைத்துப் பெறும் பொருளும் ஏனை நிலப்பகுதி யிற் புகுந்து சூறையாடிக் கொணரும் பொருளும் ஆகிய இவற்றால் உண்டும் உடுத்தும் வாழ்வர். இங்குள்ள குறுங் காடுகளில் உழைமானும் பிறவும் வாழ்கின்றன. காட்டுக்

1. கலி. 2. 2. தொல். பொ. 5. 3. தொல். பொ. 10.

கோழிகளும், பருந்து கழுகு முதலிய புள்ளினங்களும் பாலையில் காணப்படும். மராமரங்களும், ஓமை, வேல், இலவம், ஈந்து முதலிய மரங்களும் இங்கே உள்ளன. துடி முதலியன எயினர்கட் குரிய பறை; கொலையும் புலையும் ஆறலைத்தலும் சூறையாடலுமே இங்கே நிகழும் தொழில். இப்பாலைக் குரியது செங்கோட்டியாழ் என்றும், பாடுதற்குரிய பண் காந்தாரபஞ்சமம் என்றும் **அடியார்க்கு நல்லார்** அறிவிக்கின்றார். நீர் இல்லாமையே பாலைக்கு இயல்பாகலின் ஈண்டு உள்ளதெல்லாம் வெயிலவன் வெம்மையே யன்றி வேறில்லை. "அறுநீர்ப் பைஞ்சுனை ஆம்அறப் புலர்தலின், உகுநெல் பொரியும் வெம்மை[1]" எனச் சான்றோர் உரைப்பது காணலாம். கவலைக்கிழங்கும் இங்குள்ளோர்க்கு உணவாவ துண்டு. இங்கே கிடைக்கும் பூக்களில் இலவம்பூ சிறப்புடையது. இங்கே வாழும் மக்களுக்கு ஞாயிறும் கொற்றவையும் கடவுளாகும். இப் பாலை இடமாக நிகழும் அகப்பொருள் ஒழுக்கம் பிரிவும் பிரிவுநிமித்தமு மாகும். **பிரிவு** எனப் பொதுப்படக் கூறிய தனுல் களவின்கண் தலைமகன் தலைமகளை உடன்கொண்டு செல்லும் **உடன்போக்கும்** இதனுள் அடங்கும். பரத்தையிற் பிரிவு தலைமகள் ஊடுதற்கு நிமித்தமாகலின் மருதத் திணைக்கு உரியது. மேலும், அப்பிரிவு சான்றோர் விதந்து பேசும் உடன்போக்குப் போலச் சீரிய ஒழுக்கமன்று; ஆகலான், அஃது இப்பிரிவின்கண் அடங்காது என அறிக.

பாலை பொருளாக இப்பகுதிக்கண் வரும் நூறு பாட்டுக்களையும் பாடியவர் **ஓதல் ஆந்தையா**ராவர். இவற்றின் வேருக அவர் பாடியன சில **குறுந்தொகை**யில் உள்ளன.

ஓதல் ஆந்தையார் பிசிராந்தையார் போல **ஓதல்** என்னும் ஊரினர். இவ்வூர் **ஓதலூர்** என்ற பெயருடன்

1. அகம். 1.

மேலைக் கடற்கரைப் பகுதியில் குட்டநாட்டில் உள்ளது. இந்நாளில் மலையாள மாவட்டத்துப் பொன்னனி தாலூகாவைச்சேர்ந்த பகுதிக்கண் உளது என்பமோனல் இனிது விளங்கும். பிசிர்க்குடி பிசிர் என வழங்கினற் போல ஓதலூர் ஓதல் எனக் குறுகி நின்றது. **ஆந்தையார்** என்பது இவரது இயற்பெயர். ஆந்தை என்னும் பெயர் தொடக்கத்தில் ஆதனுக்குத் தந்தை என்ற பொருள் படத் தோன்றிப் பின்னர்ப் பலர்க்கு இயற்பெயராய் நிலவுவதாயிற்று. இவரது குட்டநாடு தெற்கிலுள்ள நாஞ்சில்நாடு போல நெல்வளம் சிறந்தது. இக் குட்ட நாட்டில் தான் முடிநாகனரது முரஞ்சியூரும், கோதம னரது பாலையூரும் உள்ளன. **பதிற்றுப்பத்துப்** போல இத் தொகைநூலும் சேரமன்னருடைய தொடர்புடைய தாகலின், **ஓதலாந்தையார்** சேரர் தொடர்பு பெற்ற சான் ரேருள் ஒருவர் என்பது தெளிவாகிறது.

ஆந்தையார் பாட்டுக்களில் பெரும்பாலன பாலைப் பாட்டுக்களே யாகும். ஒன்று தான் முல்லைக் குரியது. குட்டநாட்டை அடுத்துள்ள பகுதி பாலையே; அன்றியும் அதற்குக் கிழக்கில் உள்ள பாலைக்காடும் பிறவும் பாலை நிலப் பகுதிகளாக இருத்தலின், பாலைப் பாட்டுக்களை வரைந்துகொண்டு இவர் விதந்து பாடுவது பொருத்தமே யாகும். இவர் காட்டும் பாலைநிலம் நீர்வளம் ஒன்று தான் குறைந்திருக்கிறதே யன்றி ஏனை நிலவளமும் உயிர்வள மும் குறையவில்லை. இப்பாலைப்பகுதி மலையும் மரங்களும் பொருந்தி வெயில் வெம்மை சிறந்து தோன்றுகிறது. இப்பாலைக் காட்டில் ஓதலாந்தையார் வேனிற்காலத்துக் காட்சியில் நம்மை ஈடுபடுத்துகின்றுர்.

வெள்ளோத்திரம், ஆல், அரையம், மராமரம், இலவமரம், நுணு, கோங்கு, குரா, பாதிரி, புன்கு, மா, இருப்பை, வேம்பு ஆகிய மரங்கள் பல்கியுள்ளன. களிறு வழங்கும் பகுதிகளில் இருப்பைமரங்களின் பூக்கள்

உதிர்ந்து, களிற்றியானையின் காலடி தெரியாதபடி மறைந்துவிடுகின்றன. குராமரங்களின் பூவைச் சான்றோர் **செய்யாப்பாவை** யென்று சிறப்பித்துரைக்கின்றனர். பாதிரி மரங்களில் குயில்கள் இருந்து கூவுகின்றன. மராமரத்தின் பூவிதழ்கள் வலம்புரி போல் சுரிந்துள்ளன.

இளமகளிர் காட்டாற்றின் கரையில் நிற்கும் பாதிரி மரத்தின் நிழலில் தங்கி அதன் பூக்களைக் கொண்டு மாலை தொடுக்கின்றனர்; சில மகளிர் பொன்னிறம் பூத்த கோங்கமும் வேங்கையும் கலந்து ஒருசேரத் தொடுத்து அணிகின்றனர். அதிரற் பூவை அணிபவர் ஒருசிலர். வழிச் செல்வோர் வெள்ளோத்திரத்தின் பூவைச் சூடிக்கொள்வர். வேங்கைமரத்தில் ஏறிப் பூக்கொய்வோர் பஞ்சுரப் பண்ணைப் பாடுவர்.

அரையமரத்தின் இலைகள் காற்றால் அசையும் ஒலி கேட்டு அதனுடைய பழம் உண்ண வரும் புள்ளினம் அஞ்சி நீங்குகின்றன. நெடிதுயர்ந்து நிற்கும் இலவமரத்தின் பூ காற்றிற் பறந்து உதிர்வது வானத்திலிருந்து இடித்து வீழும் மீன் போன்ற காட்சி தருகிறது. சில இலவமரங்கள் பூத்து விளங்கும் தோற்றம் மலைகள் தீப்பிடித்து எரிவதுபோல வுளது.

கோவலர்கள் தாம் மேய்க்கும் ஆனிரையின் பொருட்டுத் தோண்டிய பள்ளங்களை யானைகள் நீர் வேட்கை யுற்றுப் போந்து அவற்றை வளைத்துக் கொள்கின்றன. மூங்கில்கள் தம்மில் இழைந்து தீப்பற்றி எரிவது கண்டு புலியும் அரிமாவும் அஞ்சி ஓடுகின்றன. தன் பிணவு பசித்து வருந்துவது கண்டு ஆற்றாத செந்நாயின் ஆண், காட்டுப்பன்றிகளின் வரவு நோக்கி நிற்கிறது.

தன் பெட்டையைக் கூடி யிருந்து நீங்கும் செந்நாய் மான்பிணை யொன்று தன் மறி (கன்று) யுடன் நிற்பது

கண்டு அன்புணர்வால் ஒரு தீங்கும் நினையாது போகிறது. புலிக்குத் தப்பி யோடிய ஆண்மான் தன் பிணையொடு கூடித் தன் ஆண்குரலை எடுத்து இசைக்கின்றது.

இவ்வழியே முல்லை நிலத்துக்குச் செல்வோமாயின், அங்கே கட்டிளமை நலம் கனியும் ஒருவனும் ஒருத்தியும் இல்லிருந்து நல்லறம் புரியும் பெருமை காணப்படுகிறது. காதலன் யாதோ ஒரு கடமை குறித்து வெளியூர் சென்றுள்ளான்; கார்கால வரவில் மீண்டு வருவதாகச் சொல்லியிருக்கின்றான். கார்காலம் வந்துவிட்டது; அதன் அறிகுறியாக அருகில் நின்ற கொன்றைமரம் அழகுறப் பூத்து நிற்கிறது. காடும் தழைத்துக் கார்காலக் காட்சி தருகின்றது. குறித்த பருவம் வந்தும் காதலன் வரவில்லையே, என் செய்வது? என எண்ணமிட்டுத் தோழி ஏக்கமுறுகின்றாள். அது கண்ட அக் கற்புடை நங்கை, தோழியை நோக்கி, "கானம் கார் எனக் கூறினும் யானோ தேறேன், அவர் பொய்வழங்கலர்[1]" என்று கூறுகின்றாள். தோழி வியந்து அவளை மகிழ்ந்து நோக்குகிறாள்.

இன்னோரன்ன காட்சிகளை ...வருடைய பாட்டுக்களில் காணலாம்.

## 31. செலவழுங்குவித்த பத்து.

செலவழுங்குவித்த பத்து எனப்படும் இது செலவு மேற்கொண்ட தலைவனைச் செல்லாவாறு அழுங்குவிப்பது பொருளாக வரும் பாட்டுக்களின் தொகுதி யாகலின், இவ்வாறு பெயர் இது பெறுவதாயிற்று. **அழுங்குதல்** மனம் சோர்தல். செலவின்கண் அழுங்குவது செல்லாதொழிவதன்று; செலவின்கண் செல்லும் தலைமகனது உள்ளத்தை அதன்கண் செல்லாதவாறு தவிர்க்கும்

1. குறுந். 21.

சொற்களைச் சொல்வது. ஈண்டுச் செலவு என்பது தலைமகன் தன் மனையினின்றும் பிரிந்து செல்வது. தலைமக்கள் வாழ்வில் பிரிவு நிகழ்வது ஏன்?

களவுநெறியிற் காதலுற்றுக் கற்புநெறியில் கடிமணம் புரிந்துகொண்டு இல்லிருந்து அறம் செய்து வரும் காதலர் இருவரிடையே இன்பமே நிலவுகிறது; அவருடைய நினைவும் சொல்லும் செயலும் இன்பமாகவே இலங்குகின்றன. இவ்வின்பத்துக்குப் பொருள் அரணும் ஆக்கமுமாகும். அப்பொருளும், ஆற்றுநீர்ப் பெருக்குப்போல் வரவும் நிலைபேறும் உடையதாகல் வேண்டும். அவ்வுடைமைக்குக் காலமும் இடமும் அறிந்து செய்யும் வினை சிறந்த ஏதுவாகும். பொருளின் ஆக்கம் வினையை யின்றி அமையாது. எனவே, செல்வ வாழ்வுக்குப் பொருளும் வினையும் ஏதுவும் பயனுமாய் இயைந்துள்ளமை தெளிவாகும். இவ்விரண்டையும் செய்வது மனையறம் புரியும் மக்கட்கு நலமாம். 'நல்லவை யெல்லாம் கடன் என்ப.' கடமை யடிப்படையில் புகழ் நிலைபேறு கொள்கிறது. இவ்வாற்றால் புகழ் புரிந்த இல்வாழ்க்கைக்குப் பொருளும் வினையும் இன்றியமையாதனவாகின்றன.

பொருளும் வினையும் பயக்கும் பயனை வைத்து நுகரும் இடம் மனை; பொருளும் வினையும் உள்ள இடம் மனைக்குப் புறம்பே யாகும். புகழ்பெறுதல் வேண்டி மனைவாழ்வில் இருப்போர் பொருளும் வினையும் குறித்து மனையின் நீங்கிச் செல்லவேண்டியவராவர். **பொருள்** என்றது உணவுப்பொருள் முதல் கல்விப்பொருள் ஈறுகப் பலவேறு வகைப் பொருளைக் குறிக்கும்; வினையென்பது பொருளைச் செய்தற் குரிய தொழில் முதல் நாடுகாத்தற்குச் செய்யும் போர்த்தொழில் ஈறுக எல்லாத் தொழிலையும் உளப்படுத்தி நிற்கும். **பொருளைச் செய்தலாவது,** நாட்டில் விளையும் பொருளை மிகுமாறு வளம்

படுத்தலும், மிக்க பொருளைக் குறைந்த நாடுகட்குக் கொண்டுசேறலும், இல்பொருளை உள்ள நாடுகளினின்று கொணர்தலும் செய்தொழுகுதல். நாட்டிடையே முறை செய்து அறம் வளர்த்தலும் குறைகடிந்து நிறைவு செய்தலும் இவ்வினைவகையே யாகும்.

இவை யில்வழி மனைவாழ்வும் நாட்டின் பொதுவாழ்வும் நலமெய்தாமையின், இவை குறித்து மனையின் நீங்கிச் செலவு மேற்கோடல் இளமை முதுமை யாகிய இரு காலத்தும் ஆடவர்க்குக் கடனாகும்; மிக்க இளமையும் மிக்க முதுமையும் பொருள் வினைகளைச் செய்தற்கு ஆகாமையின், இடை நின்ற இளமை வளமுடையோர் இவை குறித்துப் பிரிந்தொழுகுவதே இங்கே **செலவு** என்று குறிக்கப்படுகிறது.

இளமைக்கண் அகவளர்ச்சியினும் புறவளர்ச்சி சிறந்து அழகும் வனப்பும் கொண்டு திகழும். செடி கொடிகட்குத் தளிரும் மலரும் தோன்றும் செவ்வி போல மக்களினத்துக்கு இளமைச் செவ்வி அமைந்துளது. மலரிடத்துத் தோன்றும் மணமும் அழகும் அதன் இனப் பெருக்கத்தைக் குறிக்கொண்டிருப்பது போல இளமைக் கண் தோன்றும் அழகும் காமமும் மக்கள் இனப் பெருக்கத்துக்கு இன்றியமையாதனவாகும். ஏனையுயிர்கள், இனப்பெருக்கம் கருதித்தோன்றும் மணம் அழகு முதலியவற்றைத் தம்வரை நிறுத்தி நெறிப்படுத்தும் வன்மையுடைய வல்ல; மக்களினம் ஒன்றுதான் அவ்வன்மை கைவரப் பெற்றது. அதனால் அழகு மணம் பரப்பிக் காதலின்பம் நல்கும் காமச்செவ்வி மக்கள்பால் வன்மை கொண்டு வயங்குகிறது. மக்களது அறிவு காமக்காதலைத் தன்வழி நிற்கச் செய்து ஒழுகுமிடத்து இன்பமும் பொருளும் அறமும் பெற்றுச் சிறக்கின்றது; மாறுபட்டவிடத்துத் துன்பமும் வறுமையும் தொலையாப் பழியும் கொண்டு துயருறுகிறது.

மக்கள் அறிவைத் தன்னடிப் படுத்திக் கொள்ளும் வன்மை காதற் காமத்துக்கு இல்லையாயின் இனப்பெருக்கம் குன்றும்; ஆயினும், காதற்காமத்தின் வன்மை வணக்க வணங்கி நெறியின் இயங்கும் நீர்மையது. அதன் அவ்வன்மை யுணர்ந்து, மக்கள் அறிவு வன்மையால் அதனை வணக்கி வாழ்வதால் வாழ்வு வளம்பெறுகின்றனர்.

மக்கள் அறிவு உயிர்வளர்ச்சியையும், காதற்காமம் உடல்வளர்ச்சியையும் சார்ந்தவை. கல்வி கேள்வி சூழ் நிலைகளால் உயிர்வளர்ச்சியும் உணவுவகையால் உடல் வளர்ச்சியும் உண்டாகின்றன. உடல்வளர்ச்சியின் உயிர் வளர்ச்சி ஒத்தும் உயர்ந்தும் இருக்குமாயின், உயிரறிவு காதற்காம வுணர்ச்சியைத் தன்வரை நிறுத்தி இன்பமும் சிறப்பும் எய்துகிறது. இந்நிலையில் வளரும் அறிவுக்கும் காதற்காமத்துக்கும் இளமையுள்ளம் போர்க்களமாகிறது. இங்கே பொருள்வினை பற்றிய கடமை யொருபாலும், காதற்காமம் தரும் உணர்ச்சி ஒருபாலும் உயிரறிவை ஈர்க்கும். கடமைவழிச் செல்லும் உயிரறிவு பெருமையும் தலைமையும் பெறுகிறது. உடல்வன்மையை நோக்க, இளமைக்கண் போதிய உலகியற் பயிற்சி யின்மையால் உயிரறிவு, கல்விகேள்விகளின் துணையின்றிக் காதற் காமத்தின் வன்மையை அடக்கி வணக்கும் திண்மை யின்றிச் சாய்ந்தொழிவது பெரும்பான்மை. அதனால், இளமையை நெறிப்படச் செலுத்திப் பெருமை பெறும் சான்றோர் உலகில் மிகச்சிலரே உள்ளனர். இக் கருத்தை யுட்கொண்டு **திருவள்ளுவர்,** "செயற்கரிய செய்வார் பெரியர்" என்று தெருட்டி யுரைப்பது நினைவுகூரத்தக்கது.

மக்களுள் தலைமைப் பண்புகளெல்லாம் ஒருங்கு படைத்த ஒருவனும் ஒருத்தியுமாகிய இருவரை *நாட்டிக் கொண்டு அவர் உள்ளத்தே காதற்காமமும் கல்விகேள்வி

---

* **Ideal man and woman.**

களின் துணையை நன்கு பெற்ற உயிரறிவும் ஆற்றும் போர்வகையினை **அகனைந்திணை யொழுக்கம்** என்ற பெயரால் பண்டைத் **தமிழாசிரியன்மார்** புலனெறி வழக்கம் செய்துள்ளனர்.

தலைமைப்பண்புடைய தலைமகன் ஒருவன் மனைவாழ்க்கையில் மேலே கூறிய பொருள்வினை குறித்து மனையின் நீங்கிப் பிரிந்து செல்லவேண்டிய கடமை யுடையனாகின்றான். அவற்றின்மேற் சென்ற உள்ளத்தைக் காதற் காமம் தாக்கி அவன் மேற்கொண்ட பிரிவைக் கையொழியுமாறு முயல்கிறது. அவ்வாறே தலைமகள் உள்ளத்தையும் தலைமகன் பிரிவுக்கு உடன்படாதவாறு செய்ய முற்படுகிறது. இருவரும் தம் தலைமைப்பண்பால் அதனை வென்று மேன்மையுறுவது பொருளாக நெஞ்சினோடும் தோழியோடும் சொல்லாடுவர். வில்வணக்கம் பகையை வீழ்த்துவது குறிப்பது போல, இருவரிடத்தும் தொடக்கத்தில் காதற்காமக் கிளர்ச்சிக்கு உயிரறிவு வணங்கியது போன்ற சொற்கள் வெளிவரும். தலைவனினும் தலைவிபால் உயிரறிவு மென்மை மிக்கது போல் நின்று ஆற்றுமை யுணர்த்தும் சொல்லும் செயலும் தோற்றுவித்துத் தலைமகன் உள்ளத்தில் எழும் காமக்கிளர்ச்சியைத் தூண்டி, செலவின் மேற்சென்ற அவனது திண்மையைச் சிதைக்க முயலும். சிதையா வுள்ளம் படைத்த அச்செம்மல், சிதைந்தான் போல் வருந்துமாறு செய்வது **செலவழுங்குவித்தல்** எனப்படும். இதுபற்றியே ஆசிரியர், "செலவிடை அழுங்கல் செல்லாமை யன்று"[1] என்றும், அவன் ஆற்றத் தகுவனவற்றை நன்கு வற்புறுத்திவிட்டுச் செல்வன் என்பார், "வன்புறை குறித்தல் தவிர்ச்சியாகும்[2]" என்றும் கூறுவாராயினர்.

---

1. தொல். பொ. 185.

301. மால்வெள் ளோத்திரத்து மையில் வாலிணர்
அருஞ்சுரஞ் செல்வோர் சென்னிக் கூட்டும்
அவ்வரை யிறக்குவை யாயின்
மைவரை நாட வருந்துவள் பெரிதே.

இது பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகற்குச் சொல்லியது.

ப. உரை: வெள்ளிலோத்திரத்துக் குளிர்ச்சியையுடைய மலரை ஆற்றின் வெம்மை தீரச் செல்வோர் அணிந்து செல்வர் என்றுழி வெம்மை கூறியவா றாயிற்று.

**உரை:** கருமுகில் தவழும் மலைநாடனே, பெரிய வெள்ளிய ஓத்திரத்தின் குற்றமில்லாத வெண்மையான பூங்கொத்தினைக் கடத்தற் கரிதாகிய பாலைநிலத்திற் செல்வோர் தம் தலையில் அணிந்துகொள்ளும் அழகிய மலையைக் கடந்து செல்குவையாயின், இவள் பெரிதும் வருந்துவள், காண் எ. று.

ஓத்திரம், வெள்ளிலவு என்றும், வெள்ளிலோத்திரம் என்றும் வழங்கும்; இஃது ஒருவகை மரம்; முரம்பு நிலக் காடுகளில் வளர்வது. ஓத்திரமரம் வழவழப்பான வெண்மையான பட்டை மூடி நெடிது உயர்ந்து வளரும் மரமாதலால் **மால் வெள்ளோத்திரம்** என்றார். இலவ மரத்தின் வகையாதல் பற்றிப் பிற்காலத்தார் இதனை வெள்ளிலோத்திரம் என வழங்குவா ராயினர். இதன் பூ வெண்ணிறமும் நறுமணமும் உடையது. இதன் உதிர்ந்த பூக்களை அரைத்துச் சாந்து செய்து அணிவதும், இவற்றால் தொடுக்கப்பட்ட மாலையைச் சிறப்புற அணிந்து கொள்வதும் பண்டை வழக்கு. “வாச முண்ட மாருதம் வண்டுபாட மாடவாய், வீச வெள்ளி லோத்திரப் பொதும்

பர் பாய்ந்து விம்முமே[1]" என்றும், "வெள்ளி லோத் திரத்தின் பூம்பொருக் கரைத்த சாந்தின், காசறு குவளைக் காம ரகவிதழ் பயில மாட்டி[2]" என்றும், "வெள்ளி லோத்திரம் விளங்கும் வெண்மலர்க், கள்செய் மாலையர்[3]" என்றும் வருவனவற்று லுணர்க.

மிகவும் வெண்மையாக இருப்பது தோன்ற **மையில் வாலிணர்** எனப்பட்டது. இதன் பூங்கொத்துக்களை வெயில் வெம்மை தாக்காமைப் பொருட்டு வழிச்செல் வோர் தலையில் சூடிக் கொள்வது கண்டு, **அருஞ்சுரம் செல்வோர் சென்னிக் கூட்டும்** என்றார்.

கற்புக்காலத்தில் மனையிலிருந்து மாண்புறும் மகன் பொருள் குறித்துப் பிரியும் கடமையுடையனுகித் தன் கருத்தைத் தலைமகட்குத் தெரிவிக்குமாற்றுல் தோழி பால் உரைத்தானுக, அவன் பிரிவைத் தலைமகள் ஆற்றுள் என்பதுபற்றி அவனைச் செலவழுங் குவிக்கலுற்று, இம் மலை நாட்டில் வாழ்பவர் ஒரு கால் ஆண்டுத் தோன்றும் மலைக்குச் செல்வராயின், இடையில் கிடக்கும் நிலம் சுரமாதலின், அதன் வெம்மைக்கு ஆற்றுது வெள்ளோத் திரத்தைத் தலையிற் சூடிக்கொள்வர் என்பாள், வெள்ளோத்திரத்து வாலிணரை **அருஞ்சுரம் செல்வோர் சென்னிக் கூட்டும் அவ்வரை** என்றும், அம்மலைக்கு நீ செல்லினும் பொருத தீலமகள், அவ்வரையை இறந்து செல்குவையாயின் ஆற்றுது மிகவும் வருந்துவளாதலால் நீ மேற்கொண்ட செலவினைத் தவிர்க என்பாள், **அவ்வரை இறக்குவை யாயின் வருந்துவள் பெரிதே** என்றும் கூறினுள். கண்ணிற் காணத் தோன்றுதலுடைமை பற்றி, **அவ்வரை** என்றுள் என அறிக.

நீ பிரியக் கருதும் காலம் பனிநாளை முற்கொண்டு நிற்றலின், நின் பிரிவின்கண் எய்தும் பனிநாட்களையும்

---

1. ... 16.   2. சீவக. 622.   3. ஷ 2635.

அதனோடு வரும் வாடையினையும் ஆற்றாது தலைமகள் மிகவும் வருந்துவாள் என்றற்கு **மைவரை நாட** என்றாள். "தண்ணென ஆடிய இளமழைப் பின்றை வாடையும் கண்டிரோ வந்துநின் றதுவே[1]" எனப் பிறாண்டும் தோழி செலவு அழுங்குவித்தமை காண்க.

*302. அரும்பொருள் செய்வினை தப்பற்கு முரித்தே*
*பெருந்தோ ளரிவை தகைத்தற்கு முரியள்*
*செல்லா யாயினோ நன்றே*
*மெல்லம் புலம்ப விவளழப் பிரிந்தே.*

**இது பொருள்வயிற் பிரியுந் தலைமகன் பிரிவுடன்படுத்த வேண்டும் என்றானாக அவற்குத் தோழி சொல்லியது.**

**உரை:** மெல்லம் புலம்ப, பெறுதற் கரிய பொருள் செய்தற்கு நீ செய்யும் வினை முற்றுதலின்றித் தவறுதலு முரித்து; பெரிய தோளினையுடைய அரிவையாவாள் நின் பிரிவுக்கு உடன்படாது தடுத்தற்கு முரியள்; ஆகலான், இவள் நின் பிரிவாற்றாது வருந்த நீ பிரிந்து செல்லா தொழியின் நன்றாகும் எ. று.

பொருளினது அருமையும் இன்றியமையாமையும் வற்புறுத்தற்கு **அரும்பொருள்** என்றும் **செய்வினை** என்றும் தலைவன் வற்புறுத்தினானாகலின், அப்பெற்றித் தாயினும், அது கருதியவாறு கைகூடாது ஒழிதற்கும் உரியதென அதனைப் பழித்து, **அரும்பொருள் செய்வினை தப்பற்கும் உரித்து** என்று கொண்டெடுத்து மொழிந்தாள். "நல் லவை யெல்லாம் தீயவாம் தீயவும் நல்லவாம் செல்வம் செயற்கு[2]" என்று சான்றோர் கூறுவது காண்க. பேரறி வும் பிரிவாற்றும் மதுகையும் உடையளாதலின் அவட்கு

1. நற். 229. 2. குறள். 375.

நீ தக்காங்கு உரைத்தல்வேண்டும் என்பான், **பெருந்தோள் அரிவை** என்றுகலின், அதனையே கொண்டெடுத்து, அப் பேரறிவும் மதுகையுமே கொண்டு பொருளின் நிலை பேறின்மை சுட்டி உடன்படாது மறுக்கவும் வல்லள் என்பாளாய்த் தோழி, **பெருந்தோள் அரிவை தகைத் தற்கும் உரியள்** என்றாள். இனி, சொல்லின் பிரிவில்லை யாம் எனக் கருதிச் சொல்லாது பிரிகுவையேல், இவள் ஆற்றுது அழுவதே பொருளாகக் கொள்வள்; இவ்வாறு இவள் அழஅழப் பிரிந்து சேறல் நினக்கு நன்றன்று என்பாள், **இவள் அழப் பிரிந்து செல்லாயாயினே நன்று** என்றாள். "யாம் தமக்கு ஒல்லேம் என்ற தப்பற்குச் சொல்லா தேகல் வல்லுவோரே[1]" என்றதனல் சொல்லாது ஏகலும் உண்டெனஅறிக.

பிரிவுரைக்கும் தலைமகனை, **மெல்லம் புலம்ப** என்று தோழி கூறியது, சொல்லாதேகும் வன்கண்மையை மேற் கொண்டு செல்லுதல் வேண்டா எனத் தான் செலவழுங்கு விக்கும் செயலை முடித்தற்கு. (உ)

**தப்பற்கும் உரியள்** என்ற பாடம் பொருட்பேறின்று.

303. புதுக்கலத் தன்ன கனிய வாலம்[2]
போகி றடுக்கும் வேனி லருஞ்சுரம்
தண்ணிய வினிய வாக
எம்மொடுஞ் சென்மோ விடலை நீயே.

**இது சுரத்தருமை கூறி உடன்சேலவு மறுக்கும் தலை மகற்குத் தோழி சோல்லியது.**

---

1. குறுந். 79.

2. ஆலம்பழம் புதுமட்கலம் போலும் என்ற இதனைத் **திருத்தக்க தேவர்,** "புதுக்கலம் போலும் பூங்கனியாலம்" (சீவக. 2108) என்று தமது நூலில் அமைத்துப் பாடியிருத்தல் காண்க.

**உரை:** தலைவ, புதிய மட்கலத்தைப் போலும் நிறம் பொருந்திய பழங்களையுடைய ஆலமரம் தன்னை யடைந்த புள்ளினம் தன்னிற் பிரிந்து செல்லாவகைத் தடுக்கும் வேனிலின் வெப்பம் மிக்க அரிய காடுகள் தண்மையும் இனிமையு முடையவாக நீ எம்மையும் உடன்கொண்டு செல்வாயாக எ. று.

தண்ணிய இனியவாக எம்மொடும் சென்மோ என்றுளாயினும், எம்மொடும் செல்லின், தண்ணியவும் இனியவுமாம் என்பது கருத்தாகக் கொள்க. **போகில்,** பறவை. "பருத்திப், பொதிவயிற் றிளங்காய் பேடை யூட்டிப், போகில் பிளந்திட்ட பொங்கர் வெண்காழ், நல்கூர் பெண்டிர் அல்குற் கூட்டும்[1]" என்பதனுலும், "வேனில் அரையத் திலையொலி வெரீஇப், போகில் புகாவுண்ணாது[2]" என் று பிறண்டும் கூறுதலாலு மறிக. வேனில் வெப்பத்தால் உழந்த தாம் கனியும் தண்ணிய உறையுளும் பெற்றமையின் ஆலமரத்தினைப் புள்ளினம் நீங்காதுறையு மாயினும், அதற்குக் காரணமாதல் நோக்கி **ஆலம் போகில் தடுக்கும்** என்றார். வேனில் வெப்பத்திற் காற்றுது உயங்கிப் போதரும் புள்ளுக்குக்கனியும் நிழலும் தந்து காத்தலின், **கனிய ஆலம் போகில் தடுக்கும்** என்று ரென்று மாம். **மோ,** முன்னிலை யசை. **விடலை,** திணைப்பெயர்.

வேனில் வெம்மையும் சுரநெறிகளின் இன்னுமையும் கூறி உடன்செல்லுதல் ஆகாதெனத் தலைமகன் உரைத்தானுக, உள்ளுறையால் அவை இலவாதல் கூறலின், **அருஞ்சுரம் தண்ணிய இனிய வாக** என்றும், ஆகவே தம்மையும் உடன்கொண்டு செல்லுதல் தீதன்று என்றற்கு **எம்மொடும் சென்மோ** என்றும் கூறினுள். எனவே; நீ இல்வழி எமக்கு இம்மனை இனிதாகாது என்றுளாயிற்று;

1. அகம். 129. 2. ஐங். 352.

பிருண்டும், “ பெருங்காடு இன்னா என்றி ராயின் இனியவோ பெரும தமியேற்கு மனையே [1] ” என வருவது காண்க.

வேனில் வெம்மைக்கு ஆற்றாது வரும் புள்ளினங்கட்கு ஆலம் தண்ணிய நிழலும் இனிய கனியும் உதவுமாறு போல எமக்கு நின் கூட்டத்தாலும் உடனுறைவாலும் சுரம் இனியவும் தண்ணியவுமாம் என உள்ளுறை கொள்க. வெஞ்சுரத்து அரிய வழிகளைச் செல்வதற்கு மகளிர் ஆற்றா ராகலின், இதனால் தலைமகன் செலவழுங்குதல் பயனாயிற்று. (௩)

*304. கல்லாக் கோவலர் கோலிற் றோண்ட*
*ஆனீர்ப் பத்தல் யானை வெளவும்*
*கல்லதர்க் கவலை செல்லின் மெல்லியற்*
*புயனெடுங் கூந்தல் புலம்பும்*
*வயமான் றோன்றல் வல்லா தீமே*

இது பொருள்வயிற் பிரியலுற்ற தலைமகற்குத் தோழி **சொல்லியது.**

ப. உரை: **வல்லாதீமே** என்றது எவ்வாம் வல்லாயாயினும் மாட்டாயாதற்கு மேற்பட்ட தலைமை யில்லை எ. று.

உரை: வலிமிக்க குதிரையினையுடைய கல்வியில்லாத கோவலர்கள் தம் கைக்கோலால் தோண்டிய ஆனீர் நிறைந்த பள்ளத்தை யானைகள் வெளவும் கற்கள் பொருந்திய கவர்த்த வழியை நீ சென்றால், மெல்லிய இயல்பினை யுடைய இவள் புலம்புற்று வருந்துவா ளாகலின் நீ செல்லுதல் வல்லையல்லையாகுக எ. று.

**கல்வி**, தொழிற் குரிய பயிற்சி மேற்று. ஏறுடை யின நிரைகட்கு நீர் பெறுதல் வேண்டிப் பள்ளங்கள் தோண்டுதல் கோவலர்க்கு மரபாகலின், **கோவலர் கோலில்**

1. குறுந். 124.

**தொட்ட ஆனீர்ப்பத்தல்** என்றார். **ஆனீர்,** ஆனிரைக் குரிய நீர். **பத்தல்,** பள்ளம். கல்லாக் கோவல ராதலின் கணிச்சி கொண்டு தோண்டற் குரிய பத்தலைக் கோல் கொண்டு தோண்டுவா ராயினர் என அறிக.

வன்னில மாதலால் எளிதில் தோண்டக் கூடாமை பற்றிக் கோவலர் நீர் வறண்ட பள்ளங்களினிடத்தே இக் குழிகளைத் தோண்டுதலின், **தொட்ட பத்தல்** என்றும், அதுவும் ஆனிரைகட்காக எடுத்த தென்றற்கு **ஆனீர்ப் பத்தல்** என்றும், வெயில் வெம்மையால் வேட்கை மிக்கு வரும் களிற்றினம் நீர் அருமை குறித்துப் பிறவினங்களை வெருட்டிவிட்டுத் தாமே சூழ்ந்திருந்து உண்டலின் **யானை வெளவும்** என்றும் கூறினார். "நெடுவிளிக் கோவலர் கூவல் தோண்டிய, கொடுவாய்ப் பத்தல்[1]" எனவும், "பயநிரைக் கெடுத்த மணிநீர்ப் பத்தல்[2]" எனவும், "ஆன்வழிப் படுநர் தோண்டிய பத்தல், யானை யினநிரை கவரும்[3]" எனவும் சான்றோர் கூறுவது காண்க.

குதிரை இவர்ந்து செல்வது பற்றி **வயமான் தோன்றல்** என்றும், அதற்கும் செலவு அரிய வழி என்றற்கு, **கல்லதர்க் கவலை** என்றும், நின் செலவைத் தலைமகட்கு யான் சொல்லப் புகின் அவள் என்னைப் பார்த்தலும் செய்யாள் என்றற்கு, **புயல் நெடுங் கூந்தல்** என்றும், பிரிந்தால் சிறிதும் ஆற்றாது வேறுபடும் திறத்தை உள்ளுறைக்கண் கூறலின், **மெல்லியல்** என்றும், மெல்லியோர் புலம்ப ஒரு செயலை வல்லுநர் செய்வது வன்மையாகாது என்பாள் **வல்லாதீமே** என்றும் கூறினாள்.

கோவலர் நிரைகளின் பொருட்டுத் தோண்டிய பத்தலை யானை வெளவும் என்றமையான், நீ நுகர்தற் குரித் தாய்ச் சிறந்த இவள் நலம் பசலை யுணப்பட்டுக் கழியும் என்றாளாம். "கன்றும் உண்ணாது கலத்தினும் படாது,

---

1. அகம். 155. 2. நற். 92. 3. ஷ 240.

நல்லான் தீம்பால் நிலத்துக் காங்கு, எனக்கும் ஆகாது என்னைக்கும் உதவாது, பசலை யுணீஇய வேண்டும், திதலை யல்குலெம் மாமைக் கவினே [1] ” என்று பிறுண்டு வெளிப் படக் கூறப்படுவது காண்க.

**கூவல் தோண்டிய** என்றும் பாடமுண்டு; கல்லாக் கோவலர் என்றது நோக்க இப்பாடம் பொருட்சிறப் பெய்தாமை உணர்க. (௪)

*305. களிறு பிடிதழீஇப் பிறபுலம் படராது*
*பசிதின வருந்தும் பைதறு குன்றத்துச்*
*சுடர்த்தொடிக் குறுமக ளிளைய*
*எனைப்பயஞ் செய்யுமோ* **விடலைநின் செலவே.**

**இஃது உடன்போக் கோ ந்துச் செல்வல் என்ற தலைமகற்குத் தோழி கூறியது.**

ப. உரை : **களிறுபிடி .... வருந்தும்** என்றது நீ அவற்றைக் கண்டால் செல்லாய் என்பதாம்.

**உரை :** தலைவ, களிற்றியானை தன் பிடியானையைத் தழுவி, வேனில் வெப்பம் தெறுதலால் உணவொன்றும் பெறலாகாமையின், அது பெறலாகும் வேறு புலங்களை முன்னிச் செல்லுதலும் செய்யாது, பசிப்பிணி வருத்த வருந்தி உயங்கும், பசுமையற்ற குன்றத்துக்கு, ஒளி விடும் வளை யணிந்த இளையவளாகிய இவள் நின் பிரிவாற்றுது அழுது புலம்ப, இவளை நீங்கிச் செல்லும் நின் செலவு யாது பயனைச்செய்யும்? கூறுக. எ.று.

களிறு வேனில் வெம்மைக்குஆற்று தாயினும், தான் தழுவி நிற்கும் பிடியானை உடன்வர மாட்டாமையின், அதனைத் தனிப்ப விடுத்துச் சேறற்கு அஞ்சிப் **பிற புலம்**

**படராது** என்றும், தோன்றி நிலவும் சிறுபொழுதை யன்றிப் பிரிவுத்துன்பம் போல் நினைவின்கண் நின்று நினைத் தொறும் துன்பம் பயவாமையின், அதனை ஆற்றி யிருக்கு மென்பாள், **பசிதின வருந்தும்** என்றும், வெம்மையால் பசுமையின்றிப் புற்கள் கரிந்தமையின், **பைதறு குன்றம்** என்றும் கூறுப. **பைது**, பசுமை.

தனக்கு உரியார் அழுது புலம்பத் தான் பிரிந்துசென்று செய்யும் பொருள் நன்றாகாது என்பாள், **எனைப் பயம் செய்யுமோ** என்றும், பிரிந்தவழித் தலைமகட் குளவாகும் மேனி வேறுபாடும் அவலமும் நோக்கி இரங்குவாள் குறிப்புமொழியால், **சுடர்த் தொடி** என்றும், அவளி டத்து நுகரப்படும் இன்பம் சிறத்தற் கேதுவாகிய இளமை நில்லாது கழியும் என்பாள், **குறுமகள்** என்றும் கூறினாள், வெளிப்பட மொழிதல் செந்நெறி யன்மையின்.

பிடி தழீஇய களிறு உணவின்றிப் பசியால் வருந்தி யாயினும் தன்கட் பிரிவு நிகழாவாறு முயலும் என்றது, அத்துணை அன்பினை யுணர்த்தும் குன்றத்துக்குச் செல் லின், நீயும் இவளை நினைந்து அன்பு நெருக்குதலால் வருந்துவை யாதலின் நீ செய்யும் வினை பயன் தாராது எனச் செலவழுங்குவித்தவாறு. (ரு)

*306. வெல்போர்க் குரிசில்நீ வியன்சுர னிறப்பின்*
*பல்கா ழல்கு லவ்வரி வாடக்*
*குழலினு மினைகுவள் பெரிதே*
*விழவொலி கூந்தன் மாஅ யோளே.*

இது பிரியும் தலைமகற்குத் தோழி தலைமகள் பிரிவாற் றாமை கூறியது.

**உரை:** வெல்லுகின்ற போரையுடைய தலைவ னாகிய நீ அகன்ற காட்டிடத்தைக் கடந்து செல்லின், பலவாகிய மணிகள் கோத்த மேகலை யணிந்த அல்குலிடத்து அழகிய

வரிகள் வாட்டம் எய்த நின் பிரிவாற்றாமையால் மணவிழா விற் போல நறுமணம் கமழும் கூந்தலையும் மாமைநிறத் தையு முடைய இவள் குழல் ஒலிப்பது போல் மிகவும் அழாநிற்பள் எ. று.

நிகழும் போர் எல்லாவற்றினும் வெற்றியே பெறு வதுபற்றி **வெல்போர்க் குரிசில்** என்ப. "வெற்றி வெல் போர்க் கொற்றவை சிறுவ[1]" என்றாற்போல. **வியன் சுரன்,** விரிந்த பாலைநிலத்து வழி. **காழ்,** மணிகள்; முத்து வடமுமாம். வளவிய மகளிருடைய வயிற்றிலும் குறங் கிலும் விளங்கும் வரிகள் ஆங்குக் கிடந்து அழகு செய் தலின் **அவ்வரி** எனப்படும். இன்பக்காலத்து எழில் செய்யும் இவை துன்பக்காலத்து மேனி வாட்டத்தால் தோல்சுருங்கும்போது மறையும். **அல்குல்**[2], இடைக்கும் முழந்தாளுக்கும் இடையிலுள்ள உடற்பகுதி. ஈண்டு அணியப்படும் மேகலை **அல்குல்** எனப்பட்டது. அல்குலிடத்து மேகலை அணிப வாகலின் **பல்கா ழல்குல்** எனப்பட்டது. "பல்காசு நிரைத்த சில்கா ழல்குல்[3]" என்றார் பிறரும். "அல்கு லவ்வரி வாடத் துறந்தோர்[4]" என்றும், "திதலை யல்குல் அவ்வரி வாடவும், அத்தம ரழுவ நத்துறந் தருளார்[5]" என்றும் சான்றோர் கூறுதலால் அல்குலிடத்து வரியுண்மையும், அது பிரிவு நிகழ்ந்துழி வாட்டமெய்தலும் அறிக. மகளிர் அழு குரற்குக் குழலை யுவமித்தல் மரபு. "குழல் இனைவது போல அழுதனள் பெரிதே[6]" என்ப; குழல் எனப் பொதுப் படக் கூறினும் அழுகையொலிக்குச் சிறந்த ஆம்பற் குழல் கொள்ளப்படும்; "இயவ ரூதும், ஆம்பலங் குழலி னேங்கிக் கலங்கஞ ருறுவோள்[7]" என்பது காண்க.

---

1. முருகு. 258.

2. பழந்தமிழ் நூல்கள் கிடைப்பது அருமையாயினமையின், இடைக் காலத்தார் இதற்குப் பிழைபொருள் கற்பித்துப் பேதுற்றனர். இது பெரும் பாலும் மகளிர்க்குரைக்கப்படுமாயினும் சிறுபான்மை ஆடவர்க்கும் வழங்கும். "கொள்வீர் அல்குல் ஓர் கோவணம்" (ஞானசம். 54 : 3.) என்பது காண்க.

3. முருகு 16. 4. குறுந். 180. 5. அகம். 183.

6. புறம். 143. 7. நற். 113.

**கூந்தல்,** விழாக்காலத்திற் போல நறுமணம் தழைத்துக் கமழும் கூந்தல். **விழா,** ஈண்டுச் சிறப்புடைய திருமணத்தின் மேற்று. "வதுவை மகளிர் கூந்தல் கமழ்கொள[1]" "வதுவை நாறும் வண்டுகமழ் ஐம்பால்[2]" என்றும், பல்வகைப் பூக்கள் மலர்ந்து மணம் கமழும் கானத்தை, "மணமனை கமழும் கானம்[3]" என்றும் உரைப்பது காண்க. **மாயோள்,** மாமைநிற முடையவள்.

நீ செல்வுழியெல்லாம் ஊறின்றி வென்றி யெய்தும் பேராண்மை யுடையை யென்பதை அறிந்துள ளாயினும், நின் பிரிவாற்றும் மதுகை யிலள் என்றற்கு, **வெல்போர்க் குரிசில்** என்றாள். உண்டியிற் குறைந்து உடம்பு நனி சுருங்கி வேறுபடுவள் என்றற்கு **அல்குல் அவ்வரி வாட** என்றும், கேட்கும் மாவும் புள்ளும் மனங்கரைந்து உருகுமாறு இசைக்கும் குழலொலியினும் இவளது அழுகை யொலி, கேட்பார்க்கு அவள்பால் இரக்கமேயன்றிப் பிரிவும் நின்பால் பழியும் தோற்றுவிக்கும் என்பாள், **குழலினும் இனைகுவள்** என்றும், நீ மீளுங்காறும் தன் கூந்தலிற் பூச்சூடாள் என்பது குறிப்பித்து **விழவொலி கூந்தல்** என்றும் எண்ணிக் கூறினாள். இஃது அறிவில் கூட்டத்து அவன் **பிரிவாற்றாமை.**

இதனுள் குழலினும் இரங்குவள் என்று பிரிந்தவள் இரங்குதற் பொருள்படத் தோழி தலைவரும் விழுமம் தலைவற்குக் கூறினாள் என்பர் **நச்சினார்க்கினியர்**[4]. (சு)

*307. ஞெலிகழை முழங்கழல் வயமா வெரூஉம்*
*குன்றுடை யருஞ்சுரஞ் செலவயர்ந் தனையே*
*நன்றில கொண்கநின் பொருளே*
*பாவை யன்னநின் றுணைப்பிரிந்து* **வருமே.**

**இது பொருள்வயிற் பிரியக் கருதிய தலைமகன் அதன் சிறப்புக் கூறியவழித் தோழி அதனை இழித்துக் கூறியது.**

1. அகம். 378. 2. மலைபடு. 30.
3. அகம். 107. 4. தொல். பொ. 39.

**உரை :** மூங்கிலாற் கடையப்பட்ட கழையிடத்து எழுந்த முழங்குகின்ற நெருப்பினை வலியினையுடைய புலிகள் அஞ்சி யோடும் அரிய காடுகள் பலவும் கடந்து பொருள் செய்வான் சேறல் மேற்கொண்டனை; கொண்கனே, பாவைபோலும் நின்னுடைய துணைவியைப் பிரிந்து செயின் அல்லது வாராதாகலான், நின் பொருள்பால் அறம் இல்லை, காண்; அவளொடு கூடிச் செய்வதே பொருளாகலின், நீ செலவொழிக, எ. று.

ஞெலிகழையும் முழங்கழலும் வினைத்தொகை. வெயில் வெம்மையால் மூங்கில்கள் தம்மில் இழையப் பிறந்த அழல் மலையெங்கும் பரந்து முழங்குதலின் **ஞெலிகழை முழங்கழல்** எனப்பட்டது; பிறரும், "கணைகதிர் தெறுதலின் கடுத்தெழுந்த காம்புத்தீ, மலைபரந்து தலைக்கொண்டு முழங்கிய முழங்கழல்[1]" என்பது காண்க. பொருள் நன்றில, துணைப்பிரிந்து வருமாகலான் என இயையும், அவளொடு கூடி என்பது முதலாயின குறிப்பெச்சம். மழை பெய்து குளம் நிறைந்தது என்றாற்போலப் **பிரிந்து** என்றது காரணப் பொருளில் வந்தது.

துணைவியொடு கூடி அறத்தாற்றிற் செய்யும் பொருள் போலாது, அவள் துன்புற்று வருந்தச் செய்யப்படுதலின், **நன்றில கொண்க நின் பொருளே** என்றும், நன்றும் தீது மாகிய இருவழியானும் செய்யப்பட்டு நிலைபேறின்றிக் கழியும் பொருள் போலாது, திருநல வுருவின் மாயா இயற் கைய ளென்பாள், **பாவை யன்ன நின் துணை** யென்றும் கூறினள். பாவை அன்ன இயல்பு, "கால்பொரு திடிப் பினும் கதழுறை கடுகினும், உருமுடன் றெறியினும் ஊறு பல தோன்றினும், பெருநிலம் கிளரினும் திருநல வுருவின், மாயா வியற்கைப் பாவை[2]" என்பதனால் அறிக.

1. கலி. 150. 2. நற். 201.

"கடம் இறந்து செயல் சூழ்ந்த பொருள் பொருளாகுமோ, வடமீன்போல் தொழுதேத்த வயங்கிய கற்பினாள், தடமென்றோள் பிரியாமை பொருளாயின் அல்லதை [1]" என்றும், "வருவிருந் தோம்பித் தன்னகர் விழையக்கூடின், இன்னுறல் வியன்மார்ப அதுமன் நும் பொருளே [2]" என்றும் வருதல் கொண்டு துணைவியொடு கூடிச் செய்தல் பொருளாதல் கொள்க.

ஞெலிகழை யிடத்துப் பிறந்த முழங்கழல் கண்டு வயமா வெரூஉம் என்றது. அன்பொடு புணர்ந்த நும் இன்பவாழ்வில் தோன்றிய இப்பொருட்பிரிவு கண்டு யாம் அஞ்சுகின்றேம் என்றவாறு. (எ)

308. *பல்லிருங் கூந்தன் மெல்லிய லோள்வயின்*
*பிரியா யாயினு நன்றே விரியிணர்க்*
*காலெறு ழொள்வீ தாஅய*
*முருகமர் மாமலைப் பிரிந்தெனப் பிரிமே.*

**இது, "பிரிவல்" என்ற தலைமகற்குத் தோழி, "பிரியா தொழியப் பெறின் நன்று; பிரிவை யாயின் இம் மாமலை இப்பருவத்து எங்களை விட்டுப் பிரிந்தாற் பிரிக" எனச் சொல்லியது.**

**உரை:** பலவாகிய கரிய கூந்தலையும் மெல்லிய இயல் பினையு முடைய தலைமகளைப் பிரியா தொழிகுவையாயின் நன்று: பிரிவதே பொருளாயின், விரிந்த கொத்துக்கள் பொருந்திய வலிய காலையுடைய எறுழமரத்தின் ஒள்ளிய பூக்கள் பரந்த முருகன் விரும்பும் இப்பெரிய மலையிடத்து இப்பருவத்தே எங்களைவிட்டுப் பிரிக எ. று.

1. கலி. 2. 2. ஷ 8.

கரிய நீண்ட மயிர்த்திரளாதல் பற்றிக் கூந்தல் **பல்லிருங் கூந்தல்** எனச் சிறப்பிக்கப்பட்டது. "பல்லிருங் கூந்தல் பசப்பு நீவிடின் [1]" எனப்பிறரும் கூறுதல் காண்க. உம்மை, எச்சப்பொருட்டு. கால் எனப் பொதுப்படக் கூறினமையின் வன்மை கொள்ளப்பட்டது. **கால்,** அடிப் பகுதி. "கருங்கால் வேங்கை [2]" "செங்காற் பலவு [3]" என்றாற்போல. **எறுழ்,** எறுழமரம்; இதன்பூ நெருப்புப் போலும் நிறமுடைமை பற்றி "எரிபுரை எறுழம் [4]" எனச் சான்றோர் சிறப்பித்துரைக்கின்றனர். ஒள்வீ தாஅய மலை, முருகமர் மலை என இயையும். பிரியின் எனற்பாலது **பிரிந் தென** எனத் திரிந்தது. "வினையெஞ்சு கிளவியும் வேறு பல் குறிய [5]" என்பது **தொல்காப்பியம். பிரிமே** என்பது "அட்டி லோலை தொட்டனை நின்மே [6]" என்றாற்போல முன்னிலைக்கண் வந்தது. **முருகமர்** மலை யென்றார், முருகன் மலையுறை கடவுளாதலின். எறுழ் வீ தாஅய முருகு அமர்மலை என இயைத்து எறழம்பூவின் மணங் கமழும் மலை யென்றுமாம்.

செலவுக் கருத்துணர்ந்து அழுங்குவிக்கும்செயலினளா தலின் தோழி **செல்லா யாயினும் நன்று** என்றாள். செல்லா வழிப் பிரிவும், அது வாயிலாகத் தலைமகட்கு வருத்தமும் இல்லையாதலின் **மெல்லியலோள் வயின் செல்லாயாயின் நன்றே** என்பா ளாயினள். பிரிதலே பொருளாயின், இம் மலையிடத்து இவ்வேனிற் பருவம் நீங்காவாறு செய்து அதன்கண்ணே எம்மை இருத்திச் செல்க என்பாள், **பிரிந்தென இம்மாமலைப் பிரிமே** என்றாள். எறுழம் பூப்பது வேனிற்பருவத்தே யாகலின், அதன் ஒள்வீ தாய மலை எனக் கூறியது, மலையிடத்து வேனிற்பருவம் நின்றமை குறித்தவா றாயிற்று. வேனிற்பருவம் நிலைபேறின்றிக் கழிவதாகலின், அதன்கண் தலைமகளை நீங்காவாறு இருத்திப் பிரிவது கூடாமையின், தோழி **பிரிமே** என்றது, செல் லற்க என்று செலவழுங்குவித்ததாம்.

---

1. ஐங். 429.　2. அகம். 345.　3. நற். 232.
4. குறிஞ். 66.　5. தொல். சொல். நச்சி. 457.　6. நற். 300.

**ஒள்வீ தாய மாமலை** யென்று ஒழியாது **முருகமர் மாமலை** என்றது, அன்பின்றிப் பிரிந்தார் மலை பூத்தல் கூடாதென்றும், பிரியேன் என்று சொல்லி மணந்து பின் பிரிவாரை முருகக்கடவுள் தெறும் என்றும் கொண்டு தலைமகள் வேறுபட்டு வருந்துவள் என்பது சுட்டி நின்றது. (அ)

309. வேனிற் றிங்கள் வெஞ்சுர மிறந்து
செலவயர்ந் தனையால் நீயே நன்றும்
நின்னயந் துறைவி கடுஞ்சூற் சிறுவன்
முறுவல் காண்டலி னினிதோ
இறுவரை நாடநீ யிறந்துசெய் பொருளே.

**இது பொருள்வயிற் பிரிவல் என்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.**

**உரை:** முறிந்த மலைப்பக்கத்தையுடைய நாடனே, நீ வேனிற்பருவத்தின்கண் வெவ்விய சுரத்தைக் கடந்து பொருள்வயிற் பிரியக் கருதினை யாயின், நீ பிரிந்துசெய்யும் அப்பொருள், நின்னைப் பெரிதும் விரும்பி யுறையும் இவளுடைய முதற்சூலில் தோன்றிப் பிறந்த சிறுவனுடைய இளநகையைக் காண்டலாற் பெறலாகும் இன்பத்தினும் இனிதாமோ, கூறுக, எ. று.

**திங்கள்,** ஈண்டுப் பருவத்தின் மேற்று; "கோடைத் திங்களும் பனிப்போள் [1]" என்புழிப் போல. வேனிற்றிங்களில் சுரம் "காலையும் மாலையும் நண்பகலன்ன கடுமை கூரச் சோலைதேம்பிக் கூவல்மாறி நீரும் நிழலும் இன்றி நிலம் பயந்துறந்து புள்ளும் மாவும்" புலம்புறக் கிடத்தலின் **வெஞ்சுரம்** என்றார். நன்று என்னும் உரிச்சொல் மிகுதிப்பொருட்டு; "நன்று பெரிதாகும். [2]" **கடுஞ்சூல்,** "கடுஞ்சூல் மகளிர் [3]" புதுமைப்பொருட்டாய

1. நற். 312. 2. மலைபடு. 367. 3. பரி. 7-40.

கடி யென்னும் உரிச்சொல் திரிந்து கடுஞ்சூல் எனவந்தது. **இறுவரை**, கற்கள் முறிந்து சரிந்து கிடக்கும் பக்கத்தையுடைய மலை. "இருங்கல் விகுப்பத்து இறுவரை[1]" என்பது காண்க. சரிவின்றி நெட்டாக உயர்ந்திருக்கும் மலையும் இறுவரை எனப்படும்; "இறுவரை புரையு மாறு இருகரை யேமத்து[2]" என்பதன் உரைகாண்க.

மகன் பிறந்த பின்னும் கணவன் பால் அன்பு பெருகி நிற்கும் கற்புக்கடனை வியந்து **நன்றும் நின் நயந்துறைவி** என்று தலைமகளை விதந்து கூறினள். தலைச்சூலிற் பிறந்த முதல்மகன்பால் பெற்றோர்க்குப் பேரன்பு நிகழ்தல் கண்டு **கடுஞ்சூற் சிறுவன்** என்றும், மக்களின் சொற்கேட்டல் செவிக்கின்பமும், மெய்தீண்டல் உடற்கின்பமும் தருதல் போல இளநகை காண்டல் கட்கின்பம் பயத்தலின் **முறுவல் காண்டலின்** என்றும், நீ இறந்துசெய்யும் பொருள், நினக்கே யாகாது, நின் பெற்றோரை நோக்கி, நின் நல்வினையாலே அவர்பாற் சேறலின், நினக்கேயாய் நின் மகன்செய்யும் பொருள்போல் நீ செய்யும் பொருள் சிறந்த தன்மையின், **பொருள் முறுவல் காண்டலின் இனிதோ** என்றும் கூறினள். "தம்பொரு ளென்ப தம் மக்கள், அவர்பொருள் தந்தம் வினையான் வரும்[3]" என்பதனால் மக்கள் சிறந்த பொருளாதல் அறிக. இருமையும் பயத்தற் சிறப்புடைய ஏனைச் செல்வம்போல, மக்கட் செல்வமும் "இம்மை யுலகத் திசையொடும் விளங்கி, மறுமை யுலகமும் மறுவின் றெய்துப, செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச், சிறுவர்ப் பயந்த செம்மலோ ரெனப் பல்லோர் கூறிய பழமொழி யெல்லாம் வாயே யாகுதல்[4]" யாவரும் அறிந்ததொன் றாகலின், இது பயவுவமம். (க)

1. தொல். சொல். 343. 2. மதுரை. 609.
3. குறள். 63. 4. அகம். 66.

310\. பொலம்பசும் பாண்டிற் காசுநிரை யல்குல்
இலங்குவளை மென்றோ ளிழைநிலை நெகிழப்
பிரிதல் வல்லுவை யாயின்
அரிதே விடலையிவ ளாய்நுதற் கவினே.

**இது பிரிகின்ற தலைமகற்குத் தோழி நீ நினைக்கின்ற கருமம் முடித்தாயாயினும், இவள் நலம் மீட்டற் கரிது எனச் சொல்லிச் செலவழுங்குவித்தது.**

**உரை:** தலைவ, பொன்னாற் செய்யப்பட்ட பசிய பாண்டிலைச் சுற்றி மணிகள் கோத்தணிந்த அல்குலையும், விளங்குகின்ற வளைகளையும் மெல்லிய தோள்களையு முடைய இவள் அவ்வணிகள் நின்ற நிலையின் நெகிழ்ந்து நீங்க, நீ பிரிந்து செய்யும் வினையை முடித்தல் வல்லையாயினும், நின் பிரிவால் இவளிடத்து நீங்கிக் கெடும் சிறு நுதலின் அழகு பெறற்கரிது, காண். எ. று.

**பாண்டில்,** பொன்னால் வட்டமாகச் செய்யப்படுவதோர் அணிவகை. இதனைச் சுற்றி மணிகள் கோத்து மேகலையோ டணிதல் பண்டை மரபாகலின், **பொலம்பசும் பாண்டிற் காசுநிரை யல்குல்** என்றார். இதனைப் "பொன் செய் பாண்டிற் பொலங்கலம்[1]" எனப் பிறண்டும் கூறுவர். "பவழக் காசொடு பன்மணி விரைஇத், திகழக் கோத்த செம்பொற் பாண்டில்[2]" என இக்கருத்தைக் **கொங்குவேளிர்** விளக்கிக் காட்டுவர். பிரிந்தவழி மேற்கொண்ட பொருள்வினைகளை முடித்தல்லது மீளாமை தலைமகற்குத் தலைமைப்பண் பாதலின், பிரிந்து வினைமுடித்தலைப் **பிரிதல்** என்றே கூறினார். **ஆயின்** என்புழிச் சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. மகளிர்க்கு நுதல் சிறுத்தல் சிறப்பாதலின், **ஆய்நுதல்** எனப்பட்டது. "நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகி[3]" என்பது காண்க.

1\. ஐங். 316. 2. பெருங். ii. 19 : 142-3. 3. கலி. 108.

பிரிந்தவழி யெய்தும் மெலிவினுல், வளையும் இழையும் நெகிழ்தல் ஒருதலையாகலின், **நிலைநெகிழ** என்றும், காத லாற் பிணிப்புண்டு ஈருடலும் ஒருயிருமாய் நிற்பார் ஒருவரி னொருவர் பிரிதல் அருமை தோன்றப் **பிரிதல் வல்லுவை யாயின்** என்றும், அரிதிற் பிரிதலும், பிரிந்து வினைமுடித் தலும் வல்லா யாயினும், இவள் நுதற்கவினை மீட்கும் வன்மை யுடையை யல்லை என்பாள், கவின்மேல் ஏற்றி **அரிது** என்றும் கூறினுள். "நின் அளிபெற னந்தும் இவள் ஆய்நுதற் கவினே [1]" எனப் பிறரும் கூறுதல் காண்க. (ம)

1. கலி. 53.

## 32. செலவுப் பத்து.

இதன்கண்வரும் பாட்டுக்கள் பத்தும் தலைமகன் தலைமகளின் நீங்கிச் சென்றவிடத்து அச்சென்றமை பொருளாக வந்தவற்றின் தொகுதி யாகலின், இஃது இப்பெயர் எய்துவதாயிற்று.

கற்புநெறி நின்றொழுகும் பொற்புடை மனைவாழ்வின்கண் கடமை பற்றிப் பொருள் வினை குறித்துத் தலைமகன் தலைமகளின் நீங்கிப் பிரிந்தேக வேண்டிய நிலை உண்டாவது இயற்கை. அக்காலை அவனது உள்ளம் கடமையும் காதலும் தம்மிற் பொருது நிற்கும் போர்க்களமாகும். போர்முடிவு கடமையின் வெற்றியாக முடியும். தலைமகன் உள்ளம் கடமைவழிச் செல்லும்.

செலவு ஒருப்பட்டவன் தன் கருத்தை முதற்கண் தோழிக்குச் சொல்லித் தலைமகட்கு உணர்த்துவிப்பன்; தானும் பள்ளியிடத்தணுகிய போதும் பிறண்டும் குறிப்பினல் தன் பிரிவுக்கருத்தைப் புலப்படுத்துவன். சிறப்புடைய வாழ்வு கடமை வழி நின்றால் இல்வாழ்வின் பயன் இனிது எய்தும் என்பதைத் தோழி நன்கு அறிவாளாயினும் தலைமகட்குத் துணையாய் நின்று அவள் எய்தும் பிரிவுத்துன்பத்தை உடனிருந்து அறிந்து ஆற்றுவிக்கும் கடமையுடைமையால் தலைவனைச் செலவழுங்குவிப்பள். அவளால் தலைவனது உள்ளம் கடமை வழி இயங்குதற்கு உறுதிபெறுவது பெரும்பான்மை. தலைவியும் ஒரோவழி அவனைச் செலவழுங்குவித்தலும் செய்வள். இவ்வாற்றால் தலைமகன் உள்ளம் செலவின்கண் உறுதியும் காதலின் மாண்பும் நன்கு உணர்ந்து கொள்ளும். உறுதியுள்ளம் படைத்த தலைவன் முடிவில் பிரிந்தே போவன்: பிரியுங்கால் தலைவியது ஆற்றாமைக் கஞ்சிச்சொல்லாதே பிரிவதும் உண்டு.

ஒன்றி யிருக்கும் உயிர்ப்பொருள் இரண்டு ஒன்றி னென்று பிரிந்தவழி, ஒவ்வொன்றும் பிரிவாற்றாது துடிப் பதும் வருந்துவதும் இயல்பு. அவ்வியற்கைநெறியே பிரிவின்கண் தலைவியது உள்ளம் பிரிவாற்றாது துடித்து வருந்தும். அவ்வருத்தத்தின்கண் அவள் தலைமகன் சென்றது பொருளாகச் சில சொல்லுவள்; அவட்குத் துணைநின்று ஆற்றுவிக்கும் தோழியும் சில சொல்லுவள்; அவற்றை இப்பகுதிக்கண் காணலாம்.

களவின்கண், தலைமகட்குத் தன்பால் உண்டாகிய காதல், தன்னை இன்றியமையாத அளவிற் பெருகி முறுகு மாறு ஒழுகிய தலைமகன், அந்நிலை எய்தியது உணர்ந்ததும், அவளை வரைந்துகொள்ளத் துணிந்து, அவள் பெற்றோர் பால் சான்றோரை மகட்கொடை வேண்டி விடுவன். இதற்கிடையே, வேறு சிலர் மகட்கொடை வேண்டுதலும் உண்டு. தான் விடுத்த சான்றோர்க்கு மகட்கொடை மறுப் பினும், அயலார்க்கு மகட்கொடை நேர்வது போல் தோன் றினும், தலைமகள் பெருங்கற்பின ளாதலின் ஆற்றாது உயிர்விடுவ ளாதலால், அவளைப் பெற்றோர் அறியாவகை யிற் கொண்டுதலைக்கழிவது முண்டு. அஃதொழிய வேறு வழியின்மை காணும் தோழியும் தலைமகளும் அதற்கு உடன்படுவர். குறித்த நாள் இரவில், தோழி கையடை செய்யத் தலைமகன் தலைமகளைத் தன்னுடன் கொண்டு போவன். இஃது **உடன் போக்கு** என்று வழங்கும். இஃது அறக்கழிவுடைய செயலாயினும், தலைமகளது கற்பறம் பேணும் நெறியில் இன்றியமையாமைபற்றிச் சான்றோர் உடன்போக்கினை ஒழுக்காறாகவே கொண்டுள்ளனர். "இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின், சிறந்தானை வழிபடீஇச் சென்றனள், அறம் தலைப்பிரியா ஆறு மற்று அதுவே[1]" எனச் சான்றோர் உரைப்பது காண்க. உடன்போக்கு, "அறம் தலைப்பிரியா ஆறு" என்பது பற்றியே **ஆசிரியர் தொல்காப்பியனாரும்**, உடன்போக்கில்

1. கலி. 9.

நிகழ்வனற்றை மேற்கொண்டு இலக்கணம் அமைப்பா ராயினர். அவரது கருத்தை அறியும் நுண்ணறிவு இன்மை யால், ஆராய்ச்சியாளர் சிலர், இவ்வுடன் போக்கு நெறியை இகழ்ந்துரைத்துத் தமது வெண்மை விளங்க நின்றதும் உண்டு. இவ்வண்ணம் உடன்போக்கு என்னும் செலவு பிறந்தவழி, அச்செலவின்கண் நிகழ்ந்தவற்றைச் சொல்லும் பாட்டுக்களும் இப்பத்தின்கண் உள்ளன.

311. *வேங்கை கொய்யுநர் பஞ்சுரம் விளிப்பினும்*
*ஆரிடைச் செல்வோ ராறுநனி வெரூஉம்*
*காடிறந் தனரே காதலர்*
*நீடுவர் கொல்லென நினையுமென் னெஞ்சே.*

இஃது, ஆற்றது அருமை நினைந்து நீ ஆற்றுயாதல் வேண்டா, அவர் அவ்வழி முடியச் சென்றார் என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

**உரை:** காட்டிடை நின்ற வேங்கைமரத்தில் ஏறிப் பூக்கொய்வோர், பஞ்சுரம் என்னும் பண்ணினைப் பாடுவா ராயினும், அரிய நெறியின்கட் செல்வோர்அது கேட்பினும், அவ்வழியிடைச் செல்லுதற்கு அஞ்சும் காட்டினை, நம் காதலர் முற்றவுங் கடந்து சென்றனராதலால், என் நெஞ்சம், அவர் விரைய வாராது நீட்டிப்பர் கொல்லோ என நினையாநின்றது எ. று.

வேங்கைப்பூவைக் குறிஞ்சிநில மகளிர் பெரிதும் விரும்பி அணிவர்; அதனால் அவர்கள் வேங்கைமரத்தில் ஏறிப் பூக்கொய்வர்; அக்காலை அவர்கள் பேராரவாரம் செய்வது மரபு; "கருங்கால் வேங்கை யிருஞ்சினைப் பொங்கர், நறும்பூக் கொய்யும் பூசல்[1]" எனவும், "கிளர்ந்த வேங்கைச் சேணெடும் பொங்கர்ப், பொன்னேர் புதுமலர் வேண்டிய குறமகள் இன்னா இசைய பூசல் பயிற்றலின்[2]"

1. மதுரை. 296-7. 2. அகம். 52.

எனவும் சான்றோர் உரைப்பது காண்க. இவ்வாறு குற மகளிர் வேங்கை கொய்யுங்கால் பஞ்சுரம் என்னும் பாலைப் பண்ணைப் பாடுவது பற்றி **வேங்கை கொய்யுநர் பஞ்சுரம் விளிப்பினும்** என்றார். பாலையில் வாழும் புருக்களும் இப்பஞ்சுரமே இசைக்கும் என்பாராய், "வெஞ்சுரம் செல்வோர் வினைவழி யஞ்சப், பஞ்சுர வோசையிற் பை யெனப் பயிரும், வெஞ்சிறைச் செங்கால் நுண்பொறிப் புறவே[1]" என்று பிறரும் கூறுதல் காண்க.

தலைமகன் செல்லுதற்குரிய சுரத்தின் வெம்மையையும் கொடுமையையும் நினைந்து வருந்திய தலைமகள் ஆற்றி யிருப்பள் எனத் தோழி, சுரத்தை இனிது கடந்து சென்று சேர்ந்தார் என்றாளாக, அது கேட்டு மகிழ்வாளாய்த் தலைவி, அவள் கூற்றையே கொண்டெடுத்து, **காடு இறந் தனரோ காதலர்** என்றாள். அதனால் உவகை கொண்ட தோழியை நோக்கி, யான் மகிழ்ந்தே னாயினும், சுரத்தின் கொடுமையைப் பொருளாக நினையாவாறு அவர் உள்ளத் தைப் பிணித்து நிற்கும் வினையின் அருமைநோக்கி, விரைய முடியாது நீட்டிப்பரோ என அஞ்சுகின்றேன் என்பாள், **நீடுவர் கொல் என நினையும் என் நெஞ்சு** என்றும் கூறினாள். (௧)

*312. அறஞ்சா லியரோ வறஞ்சா லியரோ*
*வறனுண் டாயினு மறஞ்சா லியரோ*
*வாள்வனப் புற்ற வருவிக்*
*கோள்வ லென்னையை மறைத்த குன்றே.*

**இஃது, உடன்போயின தலைமகள் மீண்டு வந்துழி, "நின் ஐயன்மார், பின் துரந்து வந்தவிடத்து நிகழ்ந்தது என்னை?" என்ற தோழிக்கு, நிகழ்ந்தது கூறித் தலைமகன் மறைதற்கு உதவி செய்த மலையை வாழ்த்தியது.**

---

1. பெருங். iii. 1:190-2.

**உரை :** ஒளியினால் வனப்பு மிகவுடைய அருவிகளை யுடைத்தாய், உடன்போக்கின்கண் எம்மைத் தொடர்ந்து போந்த தமர்அறியாவாறு வலிமிக்கஎன் தலைவனை மறைத்து உதவிய குன்றம், எங்கும் வறம் உண்டாயினும், நீர் வறங் கூராத அறம் நிறைந்து மிக ஓங்குவதாக எ. று.

**சாலியர்,** நிறைக என்னும் பொருட்டாய வியங்கோள் முற்று. **அறம்,** மாரிக்கண் மிகப்பெற்றுக் கோடைக்கண் அருவியாகப் பெருகி வீழும் நீர்வள முடைமை. **வறம்,** ஈண்டுக் கடுங்கோடை மேற்று. அருவிக் குன்று என இயையும். கருவரைக்கண் ஒளிதிகழ்ந்து வீழ்தலின் **வாள் வனப்புற்ற அருவி** என்றாள். "வரைதாழ்பு வாணிறங் கொண்ட அருவித்து[1]" என்று பிறரும் கூறுவர். **கோள்வல் என்னை** என்புழிக் **கோள்,** கடைப்பிடி ; **என்னை,** தலைவன்.

தாம் பூண்ட ஒழுக்கம் கெடாவகை மறைதற்கு இடந்தந்து உதவினமையின், அடுக்கு, காதற்சிறப்பு உணர நின்றது தமருடைய வன்கண்மையும் தலைவனது மற மாண்பும், போர்நிகழின் வரும் ஏதமும் எண்ணிப் பெருங் கலக்குற்று வருந்தின தலைவி, இடைநின்று தலைவனை மறைத்துப் போருண்டாகாதவாறு தடுத்த குன்றினது சிறப்பும் தன்ஆராமையும் தோன்ற **அறஞ்சாலியரோ அறஞ் சாலியரோ** என அடுக்கிக் கூறினாள். "மணலிடு மருங்கின் இரும்புறம் பொருந்தி, அமர்வரின் அஞ்சேன் பெயர்க்கு வென், நுமர்வரின் மறைகுவன் மாஅயோளே[2]" என்று தலைத்தாள் நெடுமொழி தன்னொடு புணர்த்துக் கூறினாகை யின், **கோள்வல் என்னை** என்றாள். இது, "வீளைப் பருந் தின் கோள்வல் சேவல்[3]" என்புழிப்போலத் தான் கருதியது கருதியாங்குத் தப்பாது கொள்ளும் வன்மை உணர்த்திற்று. தலைமகளுடைய தமரொடு பொருவதாயின், தலைமகற்கு ஏதம் நிகழுமோ எனக் கவன்று தலைமகள் இறந்துபடுமாகலின், அவள் அவ்வாறு கவலாதவாறு மறைந்தானாகலின், அஃது அவன் தலைமைக்கு இழுக்கா

1. கலி. 42. 2. நற். 362. 3. அகம். 33.

காமையான் **மறைத்த குன்று** என்றாள்; "அமரிடை யுறுதர நீக்கி நீர், எமரிடை யுறுதர ஒளித்த காடே[1]" எனப் பிறண்டும் தலைவி கூறுதல் காண்க.

"எஞ்சி யோர்க்கும் எஞ்சுதல் இலவே[2]" என்பதன் உரையில் இதனைக் காட்டி, "நின் ஐயன்மார் வந்துழி நிகழ்ந்தது என் என்ற தோழிக்குத் தலைவி தலைவனை மறைத்த மலையை வாழ்த்தியது" என்பர் **நச்சினார்க்கினியர்**; இது தமர் வந்துற்றவழிக் கூறியது என்பர் இளம்

**வாள்வயப்புற்ற** என்றும், **கோள்வரும் என்னையை** என்றும் பாடமுண்டு.

*313.* *தெறுவ தம்ம நும்மகள் விருப்பே*
*உறுதுய ரவலமொ டுயிர்செலச் சாஅய்ப்*
*பாழ்படு நெஞ்சம் படரடக் கலங்க*
*நாடிடை விலங்கிய வைப்பின்*
*காடிறந் தனணங் காத லோளே.*

**இது, தலைமகள் புணர்ந்துடன் போகியவழிச் செவிலி ஆற்றாமை கண்ட நற்றாய் அவட்குச் சொல்லியது.**

**ப. உரை:** **தெறுவது** என்றது யான் அவள்மேல் வைத்த காதல் என்னால் தெறப்படுவது எ. று.

**உரை:** மிக்க துயரம் காரணமாகத் தோன்றும் அவலத்தால் உயிர் நீங்குமாறு மெலிந்து பாழ்படும் என்னெஞ்சம், தன்னை நினைத்தலால் வருத்தம் மிக்குக் கலக்க மெய்த, நம் மாற் காதலிக்கப்பட்ட அவள், நாடுகள் பல இடையிட்ட இடத்தினையுடைய காடுகளைக் கடந்து சென்றன ளாகலின், அவள்மேற் சென்ற என் காதல் துன்புறுத்துவ தாயிற்று, காண் எ. று.

1. நற். 48. 2. தொல். பொ. 42.

**தெறுவது**, துன்பம் செய்வது; "தெறுவ தம்ம இத் திணைப்பிறத் தல்லே[1]" என்று பிறரும் கூறுவது காண்க. **விருப்பு**, ஈண்டுக் காதல் மேற்று. இன்ப ஒளியின்றித் துன்பவிருள் படிந்து நினைத்தற் றொழிற்கு இடமாகாது செயலற்று வருந்தும் நெஞ்சு, **பாழ்படு நெஞ்சம்** எனப் பட்டது. **இடை விலங்கிய வைப்பு** ஈண்டுத் தலைமக்கள் நாட்டின் இடையே இனிது சென்று சேர்தற் கியலாவாறு குறுக்கே மாறுய்க் காடு பரந்து கிடக்கும் இடம். **அவலம்,** பிறர் புலனுக்குத் தோன்றி நிற்கும் வருத்தம். இது காதல்செய்து ஓம்பிய தலைமகளை இழந்தது பொரு ளாகப் பிறந்த துயரின்வழித் தோன்றுதலின், **உறுதுயர் அவலம்** என்றார்; "இளிவே இழவே அசைவே வறுமை யென விளிவில் கொள்கை அழுகை நான்கே[2]" என்று ஆசிரியர் கூறுவது காண்க. **ஓடு**, ஆனுருபின் பொருட்டு. இதனை "அன்ன பிறவும் அதன்பால என்மனார்[3]" என்பத னல் அமைப்பர்.

தன்னால் காதலிக்கப்படும் பொருள் நெஞ்சின்கண் நின்று இன்பந்தர நுகர்ந்தவள், அது நீங்கிய வழி, வைப்புழி மறந்த வறியோன் போல வாடுகின்றா ளாகலின் **பாழ்படு நெஞ்சம்** என்றும், அவள் ஆடிடமும் பயில் பொருளும் காண்டொறும் உள்ளத்தில் துயர்மிகுதலின் **படரடக் கலங்க** என்றும், இல் இகவா இளம்பருவத்தே நம் அன்பினை நெகிழ்த்துச் சென்றவள், வேற்றுநாட் டக வயின் செல்லின் நம் அன்பினை அறவே மறந்தொழிவள் என்பாள், **நாடிடை விலங்கிய வைப்பின் காடிறந்தனள்** என்றும், அன்னவள் நம்மாட்டு அன்பில ளாயினும், நாம் அவள்மாட்டுச் செய்த அன்பு பெரிதாய் அவளது பிரிவாற்றாது நம்மை வருத்துவ தாயிற்று என்பாள், **தெறுவது அம்ம நும்மகள் விருப்பே** என்றும் கூறினாள்.

---

1. குறுந். 45. 2. தொல். பொ. 253.
3. ௸ சொல். நச். 75.

கற்பின்கண் தானும் செவிலியும் ஒத்து ஒழுகுதலின், **நம் காதலோளே** என்றும், களவின்கண் தன்னினும் செவிலி தலைமகட்குச் சிறந்தாளாய் ஒழுகுதலின், **நும்மகள் விருப்பே** என்றும் கூறினாள். "ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின் தாய் எனப்படுவோள் செவிலி யாகும்[1]" என்பது விதி. இது, "தன்னும் அவளும்[2]" என்ற சூத்திரத்து, "ஆகிய கிளவியும் அவ்வழி யுரிய" என்பதனை மொழிமாற்றி, "அவ்வழி யாகிய கிளவியு முரிய" என்று கொண்டு, நற்றாய் தலைமகளின் அன்பின்மை கூறியதாகக் கொள்க. "களவல ராயினும்[3]" என்ற சூத்திரத்துப் "பிரிவி னெச்சத்தும்" என்புழி இதனைக் காட்டி, "இது பின்செல்லாது வருந்தி யிருந்த செவிலியைக் கண்ட நற்றாய் கூறியது" என்றும், இது நற்றாய் கூற்றாய்ச் 'செவிலி மேன" ஆயிற் றென்றும் கூறுவர் **நச்சினார்க்கினியர்.** (௬)

314. *அவிர்தொடி கொட்பக் கழுதுபுக வயரக்*
*கருங்கட் காக்கையொடு கழுகுவிசும் பகவச்*
*சிறுகண் யானை யாள்வீழ்த்துத் திரிதரும்*
*நீளிடை யருஞ்சுர மென்பநம்*
*தோளிடை முனிநர் சென்ற வாறே.*

மகன் பிரிந்துழி அவனுடன் போய் மீண்டார் வழியது அருமை தங்களிற் கூறக் கேட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

**உரை :** தோழி, விளங்குகின்ற தொடியினை யணிந்த பேய்மகள், ஆறலைக்கப்பட்ட இடத்தின்கண் இறந்தோர் கருந்தலை தேடித்திரிய, அவள் ஊர்ந்து போந்த கழுது அவர்தம் நிணமாகிய உணவுதேடி யுண்ண, எஞ்சியவற்றை

1. தொல் பொ. 124. 2. ஷை. ஷை. 36. 3. ஷை. 115.

உண்ணும் கரிய கண்களையுடைய காக்கையும் கழுகும் விசும்பின்கண் கத்தித் திரிய, சிறிய, கண்களையுடைய யானை, எதிர்ப்பட்ட மறவரைக் கொன்று திரியும் நீண்ட இடத்தினையுடைய கடத்தற்கரிய காடு என்று கூறுவர் நம் தோளிடத்து விருப்பமின்றிச் சென்றோரது நெறியினை: அது கேட்டு என் நெஞ்சம் கவலாநின்றது எ. று.

அது கேட்டு என்பது முதலாயின குறிப்பெச்சம். **அவிர்தொடி,** அவிர்தொடியையுடைய பேய்மகள்; அன்மொழித்தொகை. **தொடி,** யானைத் தந்தத்தாற் செய்யப்பெற்ற பூண்; இதனை மகளிர் தாம்அணிந்த வளை நெகிழாவகை முன்கையில் அணிப. பேய்மகள் இறந்தார் தலையை யுண்பவள்; "விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ்ப், பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்பு, கணநரி யோடு கழுதுகளம் படுப்ப[1] " என்றும், "உருகெழு செலவின் அஞ்சுவரு பேய்மகள், குருதி யாடிய கூருகிர்க் கொடுவிரல், கண்தொட் டுண்ட கழிமுடைக் கருந்தலை, ஒண்டொடித் தடக்கையின் ஏந்தி[2] " என்றும் வருவனவற்றாலும், அவள் கழுதூர்ந்து வருதல், "கவைத்தலைப் பேய்மகள் கழுதூர்ந்து இயங்க[3] " என்று வருதலாலும் உணர்க. "கழுது, பேயில் ஒருசாதி யென்பர்" **நச்சினார்க்கினியர்.**

**பேய்மகளி**ரைச் சவந்தின் பெண்டிர் என்று பிற்காலத்தார் கூறுப. அவர்கள், இக்காலத்தே மலைப்புறங்களில் வாழும் தடவர், இறவுளர், முதுவர், காடர் என்பார் போல, சங்ககாலத்தில் மக்களினம் வழங்காத பாலை நிலங்களில் வாழ்ந்த மக்கள்; பிணந்தின்னும் இயல்பினராய்[4] இருந்தமையின் அவர்களைப் பேய்மகளிர், கழுது, கூளி எனப் பல திறமாகக் கூறினர். அவர் கூட்டம் காலப் போக்கில் அழிந்துபோயிற் றென அறிக. பராத ராமாயணங்களிலும்

1. புறம். 369. 2. முருகு. 51-4. 3. பதிற். 13.
4. Canibals.

ஒரு சில பழம் புராணங்களிலும் காணப்படும் அரக்கரினம் இக்கூட்டத்தினரையே யாம். இவர்கள் தென்கடல் நாட்டுக்குத் தெற்கிலும் மேற்கே ஆப்பிரிக்கா முதல் கிழக்கே ஆத்திரேலியா வரையில் இருந்த நிலப்பகுதிகளிலும் ஒருகாலத்தில் வாழ்ந்தனர். அந்நாடுகளிற் பெரும்பாலன கடற்குள் மூழ்கினமையின் அவர் கூட்டம் பெரிதும் மறைந்தொழிந்தது. எஞ்சி நின்ற ஒருசிலர் நன்மக்கள் வாழ்வில் பழகிப் பிணந்திறன்லைக் கைவிட்டனர்.

**முனிநர்** என்புழி முனிதல் வெறுத்தல். **புகவு,** "குறியதன் இறுதிச் சினைகெட வுகரம், அறிய வருதல் செய்யுளுள் உரித்தே[1]" என்பதனாற் செய்யுள், முடிபு எய்திய பெயர்ச்சொல். இதன் சொன்னிலை **புகா** என்பது; "புகாஅக் காலை[2]" என்றும், "புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கம்[3]" என்றும் சான்றோர் கூறுதல் அறிக. யானை ஆள்வீழ்த்துத் திரிதல், "நீளிடை, ஆட்கொள் யானை யதர்பார்த் தல்கும்[4]" எனப் பிறரும் கூறினர். **ஆள்,** பாகனுமாம். **கருங்கண், சிறுகண்** என்பன வாளாது இயற்கை அடையாய் நின்றன; அன்றி, ஈரமின்மையும், "அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்[5]" சிறுமையும் முறையே யுடைமை உணர நின்றன எனினுமாம்.

பேய்மகளிரும் கழுதும் காக்கையும் கழுகும் இயங்கும் சுரம் எவர்க்கும் விருப்பத்தைத் தாராதாகலின், அதனை விரும்பிச் சென்றார் நம் தலைவர் எனின், அவர்க்கு நம்மிடை இன்பம் இல்லை என்பது இனிது விளங்கும் என்றற்குச் சுரத்தின் கொடுமையை எடுத்துமொழிந்தாள்.

நம் தோளிடைப் பெறலாகும் இன்பத்தினை வெறுத்திலராயின், நீளிடை யருஞ்சுரம் செல்லார் என்னும் கருத்துத்தோன்ற, **தோளிடை முனிநர் சென்றவாறே** என்றாள். "மலையுடை யருஞ்சுரம் என்பநம், முலையிடை முனிநர் சென்ற வாறே[6]" என்றார் பிறரும். (௪)

1. தொல். எழுத்து. 234. 2. ஷை. பொ. 107. 3. நற். 90.
4. அகம். 325. 5. நாலடி. 213. 6. குறுந். 39.

315. பாயல் கொண்ட பனிமலர் நெடுங்கட்
பூசல் கேளார் சேய ரென்ப
இழைநெகிழ் செல்ல லுறீஇக்
கழைமுதிர் சோலைக் காடிறந் தோரே.

இது, தலைமகன் சொல்லாது பிரிய வேறுபட்ட தலைமகள் வேறுபாடு கண்ட தோழி இரங்கிச் சொல்லியது.

ப, உரை: 'பாயல் கோண்ட பனிமலர் நெடுங்கட் பூசல் என்றது, அவர் போகின்ற காலத்து விலக்காத வகைத் துயின்றீர் எனக் கண்ணொடு புலந்து கூறுகின்ற பூசல.

**உரை:** தன்னால் துறக்கப்பட்டோர்க்குத் தன் பிரிவால் இழைகள் நெகிழ்ந்தோட வல்ல துயரத்தை உறுவித்து மூங்கில்கள் நிறைந்த சோலைகளையுடைய காடுகளைக் கடந்து, மிக்க சேய்மையிற் சென்றுள்ளோ ராகிய காதலர் பிரிந்த பொழுது அயர்ந்து உறக்கங் கொண்டமை பொருட்டுக் குளிர்ந்த மலர்போல் நீண்ட நின்கண்களால் விளைகின்ற ஆகுலத்தைக் கேளார்; கேட்பாரெனக் கலங்குதலாற் பயன் என் எ. று.

**பாயல்,** உறக்கம், **பனிமலர்,** குளிர்ந்த தாமரை; நீலம், குவளை, நெய்தல் முதலிய நீர்ப்பூக்கட்கும் பொதுப் பெயர். நெடிய கண்கள் பசத்தலால் அலர் தோன்றி வருத்துவதும் அதனால் தலைமகள் ஆற்றாமை மிகுவதும் குறித்து **நெடுங்கட் பூசல்** என்றார். "வாடுதோட் பூசல்" எனத் திருவள்ளுவனாரும்[1], "இருந்தணை மீது பொருந் துழிக் கிடக்கை, வருந்துதோட் பூசல் களையும் மருந்தென, உள்ளுதொறும் படூஉம் பல்லி[2]" என்று பிறரும் கூறுதல் காண்க. **பூசல்** ஆகுபெயர். **என்ப** அசைநிலை. **இறந்தோர்** என்றமையான், சொல்லிப் பிரியும் அன்பு நிலையைக் கடந்து தலைமகன் சொல்லாது பிரிந்தனன் என்பது பெற்றாம்.

1. குறள். 1237. 2. அகம். 351.

தலைமகன் பிரிவன் என்ற குறிப்புணராது கண்கள் அயர்ந்து உறங்கினமை தோன்றப் **பாயல் கொண்ட** என்றும், பிரிவுணர்ந்து ஆற்ருமையால் கண்கள் பசந்து நீர்சொரிந்து வருந்தினமையின், **பனிமலர் நெடுங்கண்** என்றும், அதனல் அலர் பிறப்ப ஆற்ருது வருந்தினமை விளங்க, **நெடுங்கட் பூசல்** என்றும், கண்பசந்ததோடு, தொடியும் வளையும் நெகிழுமாறு மேனி வாடியவழிப் பிறந்த தோட்பூசலை **இறைநெகிழ் செல்லல் உறீஇ** என்றும், இவ்வண்ணம் நின் கண்ணும் தோளும் செய்யும் பூசல், காடிறந்து சென்ற காதலர் செவிப்புலம் சென்று சேரா என்பாள், **கேளார்** என்றும், எனவே, அன்பின்றிச் சொல்லாது பிரிந்தார் பொருட்டு, ஆற்ருது வருந்துதலைக் கைவிட்டு விரையத்தாம் மேற்கொண்ட வினை முற்றி மீள் வாராக என வேண்டுதலேசெயற்பாலது எனத் தோழி கூறினள் என்று உணர்க. "இறைநெகிழ் செல்லல் உறீஇ" என்றது **உடம்புநனிசுருங்கலும், அழிவில் கூட்டத்து அவன் பிரிவாற்ருமையுமாம்.** (௬)

316. பொன்செய் பாண்டிற் பொலங்கல நந்தத்
தேரக லல்கு லவ்வரி வாட
இறந்தோர் மன்ற தாமே பிறங்குமலைப்
புல்லரை யோமை நீடிய
புலிவழங் கதர் கானத் தானே.

**இது, தலைமகள் மெலிவிற்கு நொந்து தலைமகன் பிரிவின் கண் தோழி கூறியது.**

**உரை:** உயர்ந்த மலைப்பக்கத்தே புல்லென்ற அரையினை யுடைய ஓமைமரங்கள் நிறைந்த, புலிகள் இயங்காநிற்கும் கானத்தின்கண், பொன்னுற் செய்யப்பட்ட பாண்டி லாகிய பொன்னணி நெகிழ்ந்தொழிய, தேர்த் தட்டுப் போலும் அகன்ற அல்குலின்கட் கிடந்த அழகிய

வரிகள் வாட்ட மெய்த, நம்மைத் தெளிவாகப் பிரிந்து சென்ற ராகலான், நாம் ஆற்றுமாறு என்னையோ? அறியேன் எ. று.

பாண்டிலைச் சுற்றிக் கோக்கப்படும் பொற்காசுகள் ஈண்டுப் **பொலங்கலம்** எனப்பட்டன. **பொற்கலம்** பொலங்கலம் என வந்தது. அல்குற்குத் தேர்த்தட்டு, தலையகன்று அடிசுருங்கித் தோன்றுவது பற்றி வந்த மெய்யுவமம். **இறந்தார்** என்பது "ஆ வோவாகும்[1]" என்பதனால் **இறந்தோர்** என வந்தது. பாண்டிற் பொலங்கலம் என்பதனைப் **பொலம்பசும் பாண்டில்** என்புழிக் கூறினும். ஓமைமரத்தின் அடிப்பகுதி பொலிவின்றிப் பொருக்குகளையுடையதாய் நிற்றலின், **புல்லரை யோமை** யெனப்பட்டது.

மேலே செதிள்கள் பல கொண்டு பொருக்குகள் நிறைந்து இருத்தலால், "இருங்கழி முதலை மேந்தோல் அன்ன கருங்கால் ஓமை[2]" எனவும், அதன் உட்பட்டை சிவந்திருப்பதுபற்றி, "பொரியரை யோமைப் பெரும் பொளிச் சேயரை[3]" எனவும் சான்றோர் குறிப்பது காண்க. **புலிவழங் கதர கானத் தானே** என்றது, வழியருமை நினைந்து கூறுதல். பிரிவாற்றாது மெலிவாட்குப் பிரிவுக் கேதுவாகிய பொருள் மிக்குத் தோன்றுதலின், **பொலங் கலம் நந்த** என்றாள். **தேரகல் அல்குல் அவ்வரி வாட** என்றது, அவன் பிரிவாற்றாமையான் **உடம்பு நனி சுருங்கல்.**

மகன் பிரிவின்கண் ஆற்றாளாகிய தலைமகட்கு ஆற்றுந் திறமாவன கூறுதற் குரிய தோழி, நீர் செல்லும் வழிச் சாய்ந்து நீரின் செலவுக்கடுமை ஆற்றும் புல்லினம் போல, உயிர்த் துணையாகிய தலைமகள் எய்தும் துன்பத்தையே தானும் எய்தி உழந்து ஆற்றுவிப்பாளாய், **பொலங்**

1. தொல் சொல். 2. அகம். 3. 3. ௸. 397.

**கலம் நந்த, அல்குல் அவ்வரி வாட இறந்தோர் மன்ற தாமே** என்றாள். மனையின்கண் இருந்து பிரிந்தொழுகும் எல்லை கடந்து, நாடு மலை காடு முதலியவற்றை இடையிட்டு நெடிது பிரிதல் பற்றிப் பிரிந்தோர் என்னாது **இறந்தோர்** என்றாள். **இறத்தல்,** எல்லை கடத்தல். பிரிந்தவன் விரைய வாராது நீட்டித்தலின், நம்மைத் துறந்ததேயன்றி மறந்துவிட்டனர்போலும் என்பாள்குறிப்பால், **இறந்தோர் மன்றதாமே** என்றாள். காதலர்க்கு நம்மினும் பொருளே காதல் என்பாள், **பொன்செய் பாண்டிற் பொலங்கலம் நந்த** என்றாள் என்றுமாம். (௬)

317. *சூழ்கம் வம்மோ தோழி பாழ்பட்டுப்*
*பைதற வெந்த பாலை வெங்காட்*
*டருஞ்சுர மிறந்தோர் தேஎத்துச்*
*சென்ற நெஞ்சம் நீடிய பொருளே.*

**இது, தலைமகன் பிரிந்து நீட்டித்துழி, நெஞ்சினைத் தூது விட்ட தலைமகள் அது வாராது தாழ்த்துழித் தோழிக்குச் சொல்லியது.**

**உரை:** தோழி, பாழெய்திப் பசுமையில்லையாய் வெந்து கரிந்து பாழாகிய வெவ்விய காட்டிடத்ததாகிய அரிய சுரத்தைக் கடந்து சென்ற காதலர்பால், தூதுசென்ற என் நெஞ்சம், விரைய் வாராது நீட்டித்தலின் பொருள் தெரிந்திலது; ஆகலின், அதனை ஆராய்வோம், வருக எ. று.

**பைது,** பசுமை. **பாழ்பட்டுப் பைதற வெந்த பாலை** என்றது, வேனில் வெப்பத்தால் வழங்குநரும் வழங்குநவும் இன்றிப் பாழ்பட்டு, ஓரறிவுயிராகிய புல்லும் நிலைகெட்டு வெந்து கரிந்து பரல்மிக்க காடாய்த் தோன்றும் பாலை யென்பதாம். பாலை நிலத்திற் காணப்படும் மரங்களுள் பாலைமரம் சிறந்தமைபற்றி நெடுஞ்சுரம் பாலை எனப்படும் என்பதும் ஒன்று. **நீடிய பொருள்,** விரைந்து மீளாமைக் குக் காரணம்.

தலைமகன்பால் தூதுசென்ற நெஞ்சம் தன்னிடமே வந்து சேர்தற்பாலதாகவும் வாராமைக்குக் காரணமொன்று உளதாகல் வேண்டு மாகலின், **சூழ்கம் வம்மோ** எனத் தோழியை அழைத்தாள். ஆராய்ச்சி யெல்லாம் தான் தேர்ந்து கொண்ட இனத்தோடே எண்ணிச் செய்தற்கு உரியவாகலின் சூழ்ச்சித் துணையாகிய தோழியைத் **தோழி** என்றாள். தலைமகனை நினைந்த நெஞ்சத்தில் அந்நினைவு விடாது நிகழ்தலின், **சென்ற நெஞ்சம்** என்றும், **நீடிய பொருளே** யென்றும் கூறினாள். இஃது, "உறுப்புடை யதுபோல் உணர்வுடை யதுபோல், மறுத்துரைப் பதுபோல் நெஞ்சொடு புணர்த்தும்[1]" என்புழி அடங்கும். பிரிவுத் துன்பத்தாற் பேதுறும் மகளிர்க்குத் துணையாவது அவர் நெஞ்சல்ல தின்மையின், அது பற்றி இது கூறுவாளா யினள் என்றுமாம். "துன்பத்திற்கு யாரே துணையாவார் தாமுடைய நெஞ்சம் துணையல் வழி[2]" என்ப வாகலின்.

"அவனறி வாற்ற அறியு மாகலின்[3]" என்ற ரத்துப் "பல்வேறு நிலை" என்றதனால், இது தூதுவிட்டுக் கூறியது என்பர் **நச்சினார்க்கினியர்.** (எ)

138. ஆய்நலம் பசப்ப வரும்படர் நலிய
வேய்மருள் பணைத்தோள் வில்லிழை நெகிழ
நசைநனி கொன்றோர் மன்ற விசைநிமிர்ந்
தோடெரி நடந்த வைப்பிற்
கோடுயர் பிறங்கன் மலையிறந் தோரே.

**இது, நம்மைப் பிரியார் என்று கருதியிருந்த தலைமகள் அவன் பிரிந்துழி இரங்கிச் சொல்லியது.**

1. தொல். பொ. 196. 2. குறள். 1299.
3. தொல். பொ. 147.

**உரை :** ஓசை மிக்குப் பலவிடத்தும் பரவிச் செல்லும் தீ எரித்த இடத்தினை யுடைய முடிகளால் உயர்ந்து செறிந்த மலையினைக் கடந்து சென்ற தலைவர், அழகிய என் நலம் கெட்டுப் பசலை பாயவும், அவர்மேல் உளதாகிய நினைவு வருத்தலால், மூங்கில் போலும் பருத்த தோளிடத்து அணிந்தஒளி யுமிழும் மணிகள் நெகிழ்ந்து நீங்கவும் பிரிந்து, நம் மனத்தெழும் விருப்பத்தைப் பெரிதும் அழித் தொழிந்தனர், காண் எ. று.

என்றாற் போல **ஆய்நலம்** அழகின்மேல் நின்றது. **ஆய்தல்,** ஈண்டு மெலிவின் மேலதாயின் **பசப்ப** என்பது வேண்டா கூறலாம். **அரும்படர்,** மிக்க துன்பம்; மிக்கவழித் துன்பம் பொறுத்தற் கரிதாகலின், **அரும்படர்** எனப்பட்டது. **பணைத்தோள்,** பெரியதோள்; தோள் பெருத்தல் மகளிர்க்கு இலக்கணம் என அறிக; "அகல் அல்குல் தோள்கண் என மூவழிப் பெருகி[2]" எனப் பிறரும் கூறுப. **நசை கொன்றார்** என்பது, நன்றி கொன்றார் என்றாற்போல நின்றது. **இசை,** தீயின் முழக்கம்; "முழங் கழல்[3]" என்பது காண்க. **விசை நிமிர்ந்து** எனக் கொண்டு, விரைவு மிகுந்து என்று உரைப்பினும் அமையும். நின்று எரியாது காற்றின்வழிப் படர்ந்து செல்வதுபற்றி **ஓடெரி** எனவும், எதிர்ப்பட்ட எதனையும் விடாது வெதுப்பிச் சேறலின் **நடந்த** எனவும் கூறினர்; "கனையெரி நடந்த கல்காய் கானம்[4]" என்பது காண்க. வைப்பினையும் மலையினையும் இறந்தோர் என்க. **வைப்பு,** பாலைநிலம்.

பசையற வெதுப்பும் தீ நடந்த வைப்பினையும் கோடுயர் மலையினையும் கடந்து சென்றார்க்கு நம்பால் நசை யற மறந்து சேறல் அரிதன்று என்றற்கு, **ஓடெரி நடந்த வைப்பு** என்றும், தன்னாற் காதலிக்கப் பட்ட யாம் நலமிழந்து, படர் மிகுந்து, இழை நெகிழ்ந்து வருந்துதலை

1. ஐங். 392. 2. கலி. 108. 3. ஐங். 320.
4. அகம். 105.

அறிந்து வாராமையின், தலைமகன் தன் அன்பினை முற்றும் மறந்தொழிந்தான் என இரங்குவாள், **நசை நணி கொன்றோர்** என்றும், இனிப் பிரியார் எனத் தான் கருதுமாறு ஒழுகியவன், கடத்தற் கரிய கானம் கடந்து, தன்னால் ஆற்றுதற் கரிய துன்பமும் தந்தமையான், "கொன்றோர்" என்றதனோ டமையாது **மன்ற** என்றும் கூறினாள். அன்பு மறவாராயின், தன்னால் அன்பு செய்யப்பட்டவர்க்கு எய்தும் துன்பத்தைத் துடைத்தலைக் கருதாது அவர் பிரிவே கருதிச் செல்லார் என்பதாம். **ஆய்நலம் பசப்ப,** என்பது, **பசலைபாய்தல்.** **அரும்படர் மெலிய** என்றது, **துன்பத்துப் புலம்பல்.** **பணைத்தோள் வில்லிழை நெகிழ** என்றது, **உடம்பு நணி சுருங்கல்.** (அ)

319. *கண்பொர விளங்கிய கதிர்தெறு* **வைப்பின்**
*மண்புரை பெருகிய மரமுளி கானம்*
*இறந்தன ரோநங் காதலர்*
*மறந்தன ரோதில் மறவா நம்மே.*

**இது, தலைமகன் பிரிந்துழி அவன் உணர்த்தாது பிரிந்தமை கூறிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.**

**உரை:** தோழி, கண்ணொளியோடே மாறுபட விளங்குகின்ற வெயில் மிகுந்து வருத்தும் இடத்தினையுடைத்தாய், மண் மேடுகள் பெருகிய, மரங்கள் கரிந்து உலர்ந்த கானத்தை நம் காதலர் கடந்து சென்றனர் கொல்லோ? தம்மை மறவா துறையும் நம்மை மறந்தரீர் கொல்லோ? மறந்தாரே யாவர், காண் எ. று.

கண்ணளவாய் நில்லாது இறப்பவும் மிக்குத் திகழ்தல் பற்றிக் **கண்பொர விளங்கிய கதிர்** என்றார். "கண்பொர விளங்கிய விண்பொரு வியன்குடை[1]" என்று பிறரும்

1. புறம். 35.

கூறுவர். **வைப்பு,** ஊர்களாயின், மண்புரை யென்றது, மண்ணாற் கூரை வேய்ந்த வீடுகள் மேற்றும். **மண்புரை,** மண்மேடுகள் ; மட்குன்றங்களுமாம். வெப்பமிகுதியால் மரங்கள் அழிந்தமையின் மண் நிறைந்த மேடுகளும் குன்றுகளுமே நிற்றலான், **மண்புரை பெருகிய மரமுளி கானம்** என்றார். முளிதல், உலர்தல், "உருகெழு ஞாயிற்று ஒண்கதிர் மிசைந்த முளிபுற் கானம்[2]" என்பதனால் அறிக. **தில்,** அசைநிலை.

கண்ணாற் காண்டற்கும் மெய்யால் நடத்தற்கும் அரிய கானத்தைக் கடந்து தலைமகன் சென்றான் என்பது தோழி முதலாயினரால் அறிந்ததும், தலைமகள் ஆற்றாளாயினமையின், அவர் கூற்றையே கொண்டெடுத்துக் **கானம் இறந்தனரோ நம் காதலர்** என்றாள் ; என்றவள், **நம் காதலர்** என்றது நம்பால் காதலுடையர் எனவும், நமது காதலை யுடைய ரெனவும் இருபொருள்பட நிற்றலின், காதலர் நமது காதலை உடைய ராகலின், நாம் அவரை மறவேமாயினேம் என்பாள், **மறவா நம்மே** என்றும், ஆராயுமிடத்து அவர் தமது காதலை நம்பாற் செலுத்துகின்றாரில்லை என்பது அவர் நமக்குச் சொல்லாது பிரிந்தமையே நன்கு உணர்த்தாநிற்கு மாகலின், நம்மை மறவாமைக்குரிய காதல் அவர் மனத்து இன்றென்பாள், **மறந்தாரே யாவர்** என்றும் கூறினாள். "எம்மை நினையாது விட்டாரோ விட்டகல்க, அம்மென் இணர அடும்புகாள் அன்னங்காள், நம்மை மறந்தாரை நாம்மறக்க மாட்டேமால்[3]" எனத் தலைவி வருந்திக் கூறுமாறு காண்க. **மறவா நம்மே** என்றது, ஓராற்றால் தன்வயின் உரிமையும், **மறந்தனரோ** என்றது அவன்வயிற் பரத்தைமையும் சுட்டி நிற்றல் காண்க. (க)

2. புறம். 160. 3. சிலப். 7 : 32.

320. முள்ளரை யிலவத் தொள்ளிணர் வான்பூ
முழங்கழ லசைவளி யெடுப்ப வானத்
துருமுப்படு கனலி னிருநிலத் துறைக்கும்
கவலை யருஞ்சுரம் போயினர்
தவலி லருநோய் தலைத்தந் தோரே.

**இது, தலைமகன் பிரிந்துழிச் சுரத்து வெம்மை நினைந்து மகள் சொல்லியது.**

**உரை;** முட்கள் பொருந்திய அடிமரத்தினையுடைய இலவமரத்தின் ஒள்ளிய கொத்திடை மலர்ந்த வெண்மையான பூக்கள், முழங்குகின்ற நெருப்பினை அலைத்தற்கெழுந்த காற்று எடுத்து வீசுதலால், விசும்பிலே இடியின்கட் பிறக்கும் நெருப்புப்போலப் பெரிய நிலத்தின்கண் உதிரும் கவர்த்த வழிகளை யுடைய அரிய காட்டைக் கடந்து சென்றா ராயினும், நமக்குக் கெடாத பொறுத்தற் கரிய நோயினைத் தந்தனர், காண். எ, று.

அரையில் முள்ளுடைய இலவமரத்தை முள்ளிலவு என்பர். "முளிகொடி வலந்த முள்ளரை இலவம்[1]" என்று பிறரும் கூறுதல் காண்க. அழலெழும் போது சூழவுள்ள காற்று வெம்மை யுற்று மேலேசெல்வதால், புறத்தே யுள்ள காற்று ஆண்டுப் போந்து தானும் வெம்மையுற்று நீங்கும்; இவ்வாற்றால் அசைவளி தோன்றுவதும் அழல் எங்கும் பரவுவதும்பற்றி, **முழங்கழல் அசைவளி எடுப்ப** என்றும், அக்காற்றால் உதிரும் இலவம்பூ ஒளியாலும் நிறத்தாலும் தீச்சுடரை ஒத்தலின், **உருமுப்படு கனலின் உறைக்கும்** என்றும் கூறினார். "நீளரை யிலவத்து ஊழ் கழி பன்மலர், விழவுதலைக் கொண்ட பழவிறல் மூதூர், நெய்யுமிழ் சுடரின் கால்பொரச் சில்கி வைகுறு மீனின் தோன்றும்[2]" எனப் பிறரும் கூறுவது காண்க. **கவலை,** கிளைவழி, **தவல்,** கெடுதல்.

1. நற். 105. 2. அகம். 17.

தலைமகன் சென்ற சுரம் **அருஞ்சுரம்** என்றதனால், தலைமகள் உள்ளத்தில் ஆற்றுதற்கரிய நோய் உண்டாக, உண்மைநெறி ஈதெனஉணராவாறு மயக்கும் பலதலையான வழிகள் பொருந்தியது அச் சுரம் என்ற சொல் அந் நோயை மிகுவித்தமையின் **தவலில் அருநோய்** என்றாள்.

அசைவளி எடுப்ப உதிரும் இலவத்தின் ஒள்ளிணர் வான்பூ உருமுப்படு கனல் போலத் தோன்றும் என்றது, பொருள்நசை கடவுதலால் தலைமகன் செலவால் உள தாகிய பிரிவு, பொறுத்தற் கரிய பெருந்துயராய் என்னை வருத்துகின்றது எனத் தலைமகள் கருதிக் கூறுவதை உணர்த்துமாறு அறிக. (ம)

# 33. இடைச்சுரப் பத்து.

தலைமகன் செயல்வகைகளுள் இடைச்சுரத்து நிகழ்வன பொருளாக வரும் பாட்டுக்கள் பத்தின் தொகுதியாகலின் இஃது இப்பெயரினைப் பெறுவதாயிற்று.

காதல் வாழ்க்கையில் தலைமகன் தலைமகளைப் பிரிந்து செல்லுங்கால், பிரிவுக்கு ஏதுவாகிய கடமை பின்னின்று அவன் நெஞ்சினைச் செலுத்தினும், காதலின் உருவாகி நிற்கும் தலைமகளின் வடிவும் பண்பும் செயலும் மொழிகளும் அவன் நெஞ்சின்கண் இடையறுது நின்று நினைவெல்லாம் அவையேயாக நிலவுவிக்கும். ஒரோவழிக் காதல்நினைவு மீதூர்ந்து மேற்கொண்ட செலவைக் கைவிட்டு மீளுமாறு தூண்டக் கூடிய அளவு பெருகுவதும் உண்டு. ஆயினும் தலைவன் தனது தலைமைப்பண்பால் கடமைவழியே நிற்பன். சென்றவன், வினைசெய்யிடத்தை அடைந்ததும், வினையின்கண் தோய்ந்து செயற்குரிய வற்றையே நினைவிற்கொண்டு முடிப்பன். வினைமுடிவில் மனைக்கு மீளவேண்டிய செவ்வி தோன்றியதும், அவன் நினைவு முற்றும் காதலிபாற் பதிந்துவிடும்.

சுரத்திடைச் செல்லுங்கால் ஆண்டுத் தோன்றும் இயற்கைக்காட்சிகளும் அவன் உள்ளத்தில் காதலியின் குணஞ்செயல்களை நினைவுறுத்தும். அந்நினைவு வழி நின்று நெஞ்சொடு பிணங்கிச் சிலசொற்களைத் தனக்குள்ளே சொல்லிக்கொள்வதும் உண்டு. தன்னேடு உடன் வருபவர்களுள் நெருங்கிய தோழர்பால் தன் நினைவினைச் சொல்லித் தெளிவுறுவதும் தலைமகனுக்கு இயல்பு.

வாழ்வுவகை பலவற்றுள்ளும் காதல்வாழ்வு போல இளமைக்கண் கடமையொடு கடும்போர் நிகழ்த்தும் செவ்வி வேறின்மையின், தலைமகன் உள்ளம், பிரிவின் கண்ணும், பிரிந்து செல்லும் இடைச் சுரத்தின்கண்ணும் கொள்ளும் நினைவுகளை எடுத்துப் புலனெறிவழக்கம்

செய்து மக்கள் மனவுணர்வைப் பண்டைச் சான்றோர், பண்படுத்தியுள்ளனர். இப்பகுதிக்கண், தலைமகளைப் பிரிந்து செல்லும் தலைமகன் உள்ளத்தில், இயற்கைக்காட்சிகள் சில, அவனை அவளை நினைக்குமாறு தூண்டுதலால், அவன் நினைக்கும் திறங்களும், அந்நினைவால் அவன் எய்தும் பயன்களும், தன்னொடு வரும் தோழர்பால் அவன் உரைப்பனவும், வினைமுற்றி மீண்டு மனையடைந்தபின் மனையோர்பால் தான் இடைச்சுரத்துக் கொண்ட நினைவுகளைச் சொல்லி இன்புறுவனவும் பிறவும் காணப்படும்.

இவ்வண்ணம், தலைமகனது உள்ளம் காதலின் வன்மையை வென்று கடமைவழி நின்று வினைமுற்றுதற்கு அவனுக்குத் துணைசெய்யும் உணர்வுகள் பலவாகும். அவற்றை, ஆசிரியர் **தொல்காப்பியனார்**, "நாளது சின்மையும் இளமையது அருமையும், தாளாண் பக்கமும் தகுதிய தமைதியும், இன்மையது இளிவும் உடைமைய துயர்ச்சியும், அன்பினது அகலமும் அகற்சிய தருமையும், ஒன்றுப் பொருள்வயின் ஊக்கிய பகுதியும்[1]" என வகுத்து எடுத்துக் கூறியிருக்கின்றார். இவற்றைத் தூக்கித் தகுவனவற்றைத் தேர்ந்து மேற்கொள்ளும் வகையால் தலைமகன் மாண்பு சிறப்புறுகின்றது.

**இடைச்சுரம்** என்பது கடைக்கண் என்பது போலப் பின்முன்னாகத் தொக்க ஆறும்வேற்றுமைத் தொகை; இது விரியுங்கால், சுரத்திடை எனவரும்.

321\. *உலறுதலைப் பருந்தி னுளிவாய்ப் பேடை*
*அலறுதலை யோமை யங்கவட் டேறிப்*
*புலம்புகொள விளிக்கு நிலங்காய்* **கானத்து**
*மொழிபெயர் பன்மலை யிறப்பினும்*
*ஒழிதல் செல்லா தொண்டொடி* **குணனே.**

1\. தொல். பொ. 41.

**இது, பிரிந்து போகாநின்ற தலைமகன் இடைச்சுரத்துத் தலைமகள் குணம் நினைந்து இரங்கிச் சொல்லியது.**

ப. உரை: **மொழிபெயர் பன்மலை இறப்பினும்** என்றது பின்னும் செல்லும் வழியை நோக்கி எ. று.

**உரை:** காய்ந்த தலையினையுடைய பருந்தின் உளி போற் கூரியதாய வாயினையுடைய பேடை, இலையின்றி உலர்ந்து விரிந்து தோன்றும் ஓமைமரத்தின் அழகிய கவைக்கிளையின்கண் இருந்து துயருற்று இசைக்கும், வறண்ட கானத்தையும் வேற்றுமொழி பேசும் மக்கள் வாழும் மலைபல வுடைய நாடுகளையும் கடந்து செல்லினும், ஒள்ளிய தொடியையுடையாளின் காதல் கெழுமிய குணம் நினைவின்கண் தோன்றி வருத்துகிறது; இனிச் செய்யுமாறு ? எ. று.

மிக்க வெயிலால் தெறப்பட்டுக் காய்ந்தது போலத் தோன்றுதலின், **உலறுதலைப் பருந்து** என்றும், அதன் வாயலகு மிகக் கூரிதா யிருத்தலின், **உளிவாய்ப் பேடை** என்றும் குறித்தார். நுனி சிறிது வளைந்திருப்பது பற்றி "வளைவாய்ப் பருந்து[1]" என்பது வழக்கம். ஓமை மரத்தின் உயர்ந்து விரிந்த கிளைகள் வெயில் வெம்மை யால் தழையுதிர்ந்து காணப்படுவதால் **அலறுதலை ஓமை** என்றார்; **இளங்கோவடிகள்,** "அலறுதலை மராமும் உலறுதலை யோமையும்[2]" என்றாராக, அலறுதலை யென்ற தற்கு விரிந்த தலையென **அரும்பதவுரைகாரரும்,** உலறுதலை என்றதற்கு உலறுதல் தலைமுளிதல் என **அடியார்க்கு நல்லாரும்** பொருள் உரைத்தனர். **கவடு,** கிளை. தனித் திருந்து இசைக்கும் பருந்தின் குரல் துன்புற்றுப் புலம்பு வது போறலின், **புலம்புகொள இசைக்கும்** என்றார். "மொழிபெயர் தேஎம்[3]" என்றாற்போல வேற்றுமொழி

1. அகம். 79. 2. சிலப். 11:75. 3. அகம். 67.

வழங்கும் மக்கள் வாழும் நாட்டிடத்து மலைகள் **மொழி பெயர் பன்மலை** எனப்பட்டன. பருந்திற்கும் பேடைக்கும் இடைநிற்பனவற்றை, "தத்தம் எச்சமொடு சிவணும் குறிப்பின் எச்சொல் லாயினும் இடைநிலை வரையார்[1]" என்னும் சூத்திரத்து இலேசினால் அமைக்க.

பசுந்தழை போர்த்த காடும் பைந்தமிழ் வழங்கும் மலைகளும் இன்றி உலறுதலைப் பருந்தும் அலறுதலை ஓமையும் உள்ள காடுகளும் வேறுமொழி வழங்கும் மக்களுமே காணப்படுதலால், காதலியை மறந்திருந்த தலைமகனது உள்ளத்தில் தன் துணைப் பருந்தினைப் பிரிந்து தனித்து உறையும் பெடைப்பருந்தின் புலம்புகுரல், அப் பெற்றியளாய் வருந்தும் தலைமகளது ஆற்றாமை வடிவை மனக்கண்ணில் தோற்றுவித்தலின், **ஒண்டொடி குணனே** என்றும், காடும் மலையும் நாடும் பிறவும் கடந்து நெடுஞ் சேண் போந்தவழியும் காதலியின் குணமும் செயலும் நெஞ்சில் தோன்றியதுபற்றி **ஒழிதல் செல்லாது** என்றும் கூறினான். (க)

*322. நெடுங்கழை முளிய வேனி னீடிக்*
*கடுங்கதிர் ஞாயிறு கல்பகத் தெறுதலின்*
*வெய்ய வாயின முன்னே யினியே*
*ஒண்ணுத லரிவையை யுள்ளுதொறும்*
*தண்ணிய வாயின சுரத்திடை யாறே.*

**இஃது, இடைச்சுரத்துக்கண் தலைமகன் தலைமகள் குணம் நினைத்தலின் தனக்குற்ற வெம்மை நீங்கியது கண்டு சொல்லியது.**

**உரை :** ஒள்ளிய நுதலினையுடைய அரிவையாவாளைப் பிரிந்து செல்லத் துணிந்த காலத்துச் சுரத்திடையே யுள்ள

1. தொல். சொல். 237.

வழிகள், நீண்ட மூங்கில்கள் உலறுமாறு வேனில் நீடுத லால் மிக்க கதிர்களையுடைய ஞாயிறு கற்களும் பிள வெய்துமாறு காய்தலின், முன்பு வெய்யவாய்த் தோன்றின; அவளைப் பிரிந்து இச்சுரத்திடை எய்தும் இப்பொழுது அவை அவளை நினைக்குந்தோறும் குளிர்ச்சியைப் பயந்து தண்ணியவா யிராநின்றன எ. று.

வெயில் மிக்கவழி மூங்கில் பசுமை யிழந்து உலர்ந்து கெடுவது இயல்பாதலின், **நெடுங்கழை முளிய வேனில் நீடி** என்றார். **நீடி** என்னும் செய்தெனெச்சம் காரணப் பொருட்டு. ஞாயிற்றின் வெம்மை மிகுதி விளங்கக் **கடுங் கதிர் ஞாயிறு** என்றும், கடுங்கதிர் தெறுதலால் கற்பாறை களும் வலியிழந்து பிளந்து விடுமாறு தோன்றக் **கல் பகத் தெறுதலின்** என்றும் கூறினர். வேனிற்கும் ஞாயிற்றுக்கும் ஒற்றுமையுண்மையின் வேனில் **நீடி** ஞாயிறு **தெறுதலின்** என இயைத்து, முடித்தலும் ஒன்று. **முன்னே** என்றது, மனையின்கண் இருந்து பிரிவு நினைந்த காலத்தைச் சுட்டி நின்றது.

பிரிவுள்ளியவிடத்துத் தலைமகளின் காதலும் ஆற்று மையும் எழுந்து ஒருபுடை வருத்த, பொருள்வயின் எழுந்த ஊக்கம் ஒருபால் ஈர்ப்ப, நடுநின்ற தலைமகன், வேனில் நீட்டமும், வெயிலவன் வெம்மையும், ஆற்றது அருமையும் உள்ளவாறு கண்டு உணர்ந்தா னாகலின் **வெய்ய வாயின முன்னே** என்றும், பிரிந்து போந் தவன் சுரத்திடைக் காட்சிகள் அவளை நினைப்பிக்க நினைந்துழி, அந்நினைவு அவ்வெம்மை முதலாயினவற்றை மறைத்துத் தலைமகளுடைய அரும்பண்புகளைக் காட்டி இன்பத்தால் அவன் உள்ளத்தைக் குளிர்ப்பிமையின், **ஒண்ணுதல் அரிவையை உள்ளுதொறும்** என்றும் கூறினன். இவற்றுள், மெய் முதலிய கருவிகளின் உறுதல் முதலிய புலனுணர்ச்சிகள் உள்ளம் ஒன்றுவிடத்து நிகழா; சுரத் திடையே நிலவும் வேனில் வெம்மையும் ஞாயிற்றின்

கடுமையும் தலைமகன் மெய்ப்பட்ட போதும், அவன் உள்ளம் தலைமகளின் காதலன்பில் தோய்ந்து இன்புற்றமையின் அவற்குப் புலனுகா தொழியவே **தண்ணிய வாயின** என்றான். இவற்றுள் முன்னது **அகற்சியது அருமையும்,** பின்னது **அன்பினது அகலமும்** ஒன்றுப் பொருள்வயின் ஊக்கிய பகுதிகளாம்.

"கரணத்தி னமைந்து முடிந்த காலை[1]" என்ற சூத்திரத்து "மீட்டுவரவு ஆய்ந்த வகையின் கண்ணும்" என்பதற்கு இதனைக் காட்டி, "இஃது இடைச் சுரத்துத் தலைவி குணம் நினைந்து இரங்கியது[2]" என்பர் **நச்சினார்க்கினியர்; இளம்பூரணர்,** இஃது இடைச் சுரத்துக கூறியது என்று ஒழிவர். (உ)

323. *வள்ளெயிற்றுச்* **செந்நாய் வயவுறு பிணவிற்குக்**
*கள்ளியங் கடத்திடைக் கேழல்* **பார்க்கும்**
*வெஞ்சுரக் கவலை நீந்தி*
*வந்த நெஞ்சநீ நயந்தோள் பண்பே.*

**இஃது, இடைச்சுரத்துத் தலைமகள் குணம் நினைந்த தலைமகன் "அவள் பண்பு வந்தன" என உவந்து தன் நெஞ்சிற்குச் சொல்லியது.**

**உரை:** நெஞ்சே, நீ காதலிக்கும் தலைமகளுடைய பண்புகள், கூரிய பற்களையுடைய செந்நாய், வயவுநோய் கொண்டு வருந்தும் தன் பெண்ணுய் பொருட்டுக் கள்ளி நிறைந்த சுரத்திடையே பன்றியின் வரவினை நோக்கியிருக்கும் கொடிய காட்டின்கண் கவர்த்த வழிகள் பலவும் கடந்து வந்தன, காண் எ. று.

1. தொல். பொ. 146.    2. ஷை. ஷை. 48.

**வள்ளெயிறு** என்றவிடத்து வள், கூர்மை. **செந்நாய்,** காட்டில் வாழும் நாய்வகை. இது காடுகளில் கூட்டம் கூட்டமாய் வாழும் இயல்பிற்று; நாட்டில் வாழும் நாய் போலாது தன் பெண்ணையிடத்து மிக்க அன்புசெய்யும் பெற்றிமையுடையது. இதனை **அம்சதேவர்** விருகம்,கோகம், ஈபாமிருகம் என மூவகைப்படுத்து இந்நாய்வகை மூன்று முதல் நான்கு திங்களில் கருமுதிரும் என்பர். **வயவு,** வயா நோய்; "வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம்[1]" என்ப. **கடம்,** கள்ளியும் முள்ளியும் பரற்கற்களும் நிறைந்த பாலைநிலம். **கேழல்,** காட்டுப்பன்றி. செந்நாய் தன் பெண்ணையின் பொருட்டுப் பன்றியை வேட்டுண்ணும் திறத்தைப் பிற சான்றோரும், "மென்புனிற் றம்பிணவு பசித்தெனப் பைங்கண், செந்நா யேற்றை கேழல் தாக்க[2]" என்பது காண்க. **வந்த,** அன் பெறாதுநின்ற அகரவீற்றுப் பலவறி சொல். **பண்பு,** உருவும் நிறமும் குணமும் செயலும் பிறவுமாகிய மாண்புகள்.

செந்நாயேற்றை தன்பிணவின் பசிக்கு உணவு வேண்டிப் பன்றியின் வரவுநோக்கி இருத்தலைக் கண்ட விடத்துத் தலைமகன் நெஞ்சம் தலைமகளை நினைத்தலும், அவளுடைய குணம் செயல்கள் மனக்கண்ணில் தோன்றக் கண்டு மகிழ்வான், நெஞ்சமே, **நீ நயந்தோள் பண்பு ஈண்டும் வந்தன, காண்** என்றான். வெவ்விய சுரநெறியை யும் கடந்து நம்பாற் கொண்ட பெருங்காதலால் இவண் வந்தன என்றது **அன்பினது அகலம்** சுட்டி நின்றது. "சேயரென்னுது அன்புமிகக் கடைஇ, எய்த வந்தனவால் தாமே, நெய்தல் கூம்புவிடு நிகர்மல ரன்ன, ஏந்தெழில் மழைக்கண் எங்காதலி குணனே[3]" எனப் பிறரும் கூறுதல் காண்க. (௬)

1. தொல். சொல். 371. 2. அகம். 21. 3. ஷை. 83.

324. எரிகவர்ந் துண்ட வென்றூழ் நீளிடைச்
சிறிதுகண் படுப்பினுங் காண்குவென் மன்ற
நள்ளென் கங்கு னளிமனை நெடுநகர்
வேங்கை வென்ற சுணங்கின்
தேம்பாய் கூந்தன் மாஅ யோளே.

இது, பிரிந்து வந்த தலைமகன் தலைமகளை நலம்பாராட்டக் கண்ட தோழி, "இவள் குணத்தினை மறந்து அமைந்த வாறு யாது?" என வினவினட்கு அவன் சொல்லியது.

உரை: காட்டுத்தீ எழுந்து பகலே யன்றி இரவுப் போதினும் எரித்துச் செல்ல, பகற்போதில் வெயில் மிக்கு வருத்தும் நீண்டசுரத்திடையே, யான் சிறிது கண்ணயர்வேனாயினும், அச் சிறுபொழுதின்கண், நள்ளென்னும் கங்குல் யாமத்துப் பெரிய மனையகத்து நின்ற நெடிய பேரகத்தே நிறத்தால் வேங்கை மலர்போல வீறுபெற்ற சுணங்கினையும், தேன்சொரியுங் கூந்தலையும் மாமைநிறத்தினையு முடைய தலைமகளைத் தெளிவாகக் கண்டு அமைந்தேன்; ஆகலின், இவள் குணத்தினை யான் மறக்குமா றில்லை எ. று.

காட்டின்கண் நிற்கும் மூங்கில்கள் காற்றால் தம்மில் இழையப் பிறக்கும் தீ, அயலிடம் பரந்து எதிர்ப்பட்ட பொருள்களை எரித்துக் கொண்டு செல்லுதலின், **எரிகவர்ந் துண்ட** என்றார். இனி, வெயில் வெம்மையால் கரிந்து கிடக்கும் தழைகளையும் புற்களையும் விலங்கினம் மேயாமையின் கானவர் தீயிட்டுக் கொளுத்தி விடுதலும் உண்டு; அவை வெந்து சாம்பராய்க் கழியின் கோடை மழையால் புதுப்புல்லும் புதுத்தளிரும் தோன்றி ஆனிரைகட்கு மேயல் ஆகும்என்பதுகருத்து. இவ்வாறு தோன்றிய தீ, இரவும் பகலும் அவியாது எரிந்துகொண்டே செல்லுமாதலால் இரவிற் காட்டுத் தீயின் வெம்மையும் பகற்போதில் ஞாயிற்றின் வெம்மையும் சுரத்தின்கண் நிலவு

தலின், மக்கட்கு நல்லுறக்கம் எய்தாமையின், சிறிது கண்படுதலையே விதந்து கூறினர். மகளிர் சுணங்கிற்கு வேங்கைமலர் உவமையாதலை, "வேங்கை ஊழுறு நறுவீ கடுப்பக் கேழ்கொள, ஆகத் தரும்பிய மாசறு சுணங் கினள்[1]" எனப் பிறரும் கூறுதல் காண்க. **நள்ளென் கங்குல்,** நள்ளிரவு. தேன் என்றது **தேம்** என நின்றது[2].

காட்டுத்தீயால் வெந்தொழிந்ததன் மேலும் வெயில் மிக்குத் தெறும் நீளிடை எனினுமாம். வெப்ப மிகுதியால் தலைமக்கள் நெடிதுறங்கா ராகலின், அது தோன்றச் **சிறிது கண்படுப்பினும்** என்றான். அல்லதூஉம், வினைமேற் சென்றார்க்கு அது முற்றுங்காறும் நெடிய வுறக்கம் வாரா தாகலின், இவ்வாறு கூறினன் எனினு மாம். உறங்கும் பொழுது அவளைக் கனவின்கட் கண்டும் கூடியும் மகிழ்ந்தேன் என்பான், **காண்குவென் மன்ற** என்றான். இறந்தகாலத்தாற் கூறற்பாலதனை எதிர்காலத்தாற் கூறியது தெளிவுபற்றி. **வேங்கை வென்ற சுணங்கின், தேம்பாய் கூந்தல் மாஅயோளே** என்றது அவள் நலம் பாராட்டியது.

"இன்பத்தை வெறுத்தல்[3]" என்னும் "நலத்தக நாடின் கலக்கமும் அதுவே" என்புழிக் கலக் கத்தை வேறு பெயர்த்து வைத்த இலேசினல் தலைமகற் கும் இம் மெய்ப்பாடுகள் எய்த் வைத்தமையின், **சிறிது கண்படுப்பினும் காண்குவென் மன்ற** என்றது **கனவொடு மயங்கல்.** "நுண்பூண் மடந்தையைத் தந்தோய் போல, இன்றுயில் எடுப்புதி கனவே, எள்ளார் அம்ம துணைப்பிரிந் தோரே[4]" எனச் சான்றோர் கூறுவது காண்க.

"கரணத்தி னமைந்து[5]" என்ற சூத்திரத்து "எண் ணருஞ் சிறப்பின் கிழவோன் மேன" என்புழிச் 'சிறப்பின்' என்றதனல் இதனை அமைப்பர் **நச்சினார்க்கினியர்.** (௪)

1. அகம். 174. 2. தொல். எழுத்து. 341. 3. ஷை பொ. 270.
4. குறுந். 147. 5. தொல். பொ. 146.

325. வேனி லரையத் திலையொலி வெரீஇப்
போகில்புக வுண்ணாது பிறிதுபுலம் படரும்
வெம்பலை யருஞ்சுரம் நலியா
தெம்வெங் காதலி பண்புதுணைப் பெற்றே.

இது, பிரிந்து வந்த தலைமகன் "சுரத்தின் வெம்மை எங்ஙனம் ஆற்றினீர்?" என்ற தோழிக்குச் சொல்லியது.

**உரை:** வேனிற்காலத்து எழுந்த சூறைக்காற்றால் அலைப்புண்ட அரசமரத்தின் இலைகள் அசைதலால் உண்டாகிய ஓசையை அஞ்சிப் பறவைகள் தாம் இரை தேடி உண்டலைச் செய்யாது வேற்றுநிலங்களை உள்ளிச் செல்லும் வெப்பம் பொருந்திய அரிய சுரம், எம்மால் விரும்பப்பட்ட காதலியின் குணங்களைத் துணையாகப் பெற்று யாம் சென்றேமாகலின் எம்மை வருத்தாதாயிற்று எ. று.

**அரையம்,** இக்காலத்தே இஃது அரசமரம் என மருவி வழங்கும்; முன்னாளில் அரை யென்றே நின்று பின்பு புணரியல் நிலையிடைப் பெற்ற அம்முச் சாரியையை இறுதியாகக் கொண்டு வழங்குவதாயிற்று; "பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும், நினையுங்காலை அம்மொடுசிவணும்[1]" என்பது காண்க. இங்கே கூறிய ஆவிரை, ஆவிரமெனநின்று ஆவாரம் என மருவிவிட்டது. இந்த அரையம் பனிக்காலத்து இலைமுதிர்ந்து வேனில் தொடக்கத்தில் இலையுதிர்ந்து முதுவேனிற் காலத்துப் புதுத்தளிர் ஈன்று பொலிவுறும். இப்பாட்டு இளவேனிற் காலம் என்பது போதர **வேனில் அரையத்து இலையொலி** என்றார். அரையத்தின் முதிர்ந்த இலை காற்றில் அலைப்புண்டு செய்யும் ஒலி, படைவரவு போலவும் விலங்கின் கூட்டம் வருவது போலவும் இருத்தலால் புள்ளினம் அஞ்சுவன வாயின.

1. தொல். எழுத்து. இளம். 284.

**போகில்,** புள்ளினம். உயர்ந்த மரக்கிளையில் கூடமைத்து வாழ்தல் பற்றிப் புள்ளினைப் **போகில்** என்பது காரணப் பெயர். **புகா** உணவு; ஈண்டுப்புகவுஎன நின்று அரையத்தின் கனிமேலதாயிற்று. **வெங்காதலி** என்றவிடத்து வெம்மை வேண்டற்பொருட்டு. **வெம்பல்,** வெப்பம். **ஐ,** சாரியை. "வெயில் வீற்றிருந்த வெம்பலை யருஞ்சுரம்[1]" என்றார் பிறரும்.

உள்ளம் துணையாகப் பிரிந்து செல்லும் தலைமகன், தலைமகளின் உருவும் நிறனும் நலனுமாகிய பண்புகளை நினைந்து மனக்கண்ணிற் கண்டு மகிழ்ந்து சென்றான் என்பது தோன்ற, **எம் வெங்காதலி பண்பு துணைபெற்று** எனறும், அதனால் உளதாகிய இன்பத்தால் உளங் குளிர்ந்து சென்றமையால் புறத்தே கிடந்த அருஞ்சுரம் எம் நெஞ்சினை வருத்தும் வெம்மையாகிய மதுகை இழந்தது என்பான் **அருஞ்சுரம் நலியாது** என்றும் கூறினன். **வெம்பலை** யென்றது சுரத்தின் அருமையைச் சிறப்பித்த தாயினும், பிரிந்து செல்லும் தலைமகன் உள்ளத்திற் புகுந்து வருத்தமாட்டாதாயிற்று என்பது முடித்தற்கு. **வெம்பலை அருஞ்சுரம்** என்ற இஃது **அன்புதொக நிற்றல்.** (ரு)

326. *அழலவிர் நனந்தலை நிழலிடம் பெறாது*
*மடமா னம்பிணை மறியொடு திரங்க*
*நீர்மருங் கறுத்த நிரம்பா வியவின்*
*இன்னா மன்ற சுரமே*
*இனிய மன்றயா மொழிந்தோள் பண்பே*

இஃது, **இடைச்சுரத்து வெம்மை ஆற்றானாகிய மகன் தலைமகள் குணம் நினைந்து நொந்து சொல்லியது.**

1 நற். 84.

**உரை:** வெப்பம் மிக்க சுரத்தின்கண், நிழலுள்ள இடம் பெறலாகாமையினால், மடமை பொருந்திய மானின் அழகிய பிணை தன் மறியோடு கூடி வருந்த, மழைநீரால் பக்கம் அலைக்கப்பட்டு இறப்பவும் சிறிதாய வழியினை யுடைய சுரம் தெளிவாகத் துன்பம் தருவனவே; ஆயினும் யான் பிரிந்து நீங்கியவள் பண்புகள் மாத்திரம் இன்பந்தரு வனவாம் எ. று.

சுரத்தின் வெம்மைமிகுதி தோன்ற, **அழலவிர் நனந் தலை** என்றார். "அழல் திகழ் நனந்தலை [1]" எனப் பிறரும் கூறுவர். **நனந்தலை**, விரிந்த இடம்; ஈண்டுச் சுரத்தின் நடுவிடம். பசுமையுள்ள முல்லைநிலத்துட் புகாது மட மையால் தன் மறியுடன் வெவ்விய சுரத்தில் இயங்குவது பற்றி, **மடமான் அம்பிணை மறியொடு திரங்க** என்றார். **திரங்குதல்**, வெம்மையால் வாடுதல். மழைநீரால் அலைத் துச் சுருக்கப்பட்ட வழி என்றற்கு **நீர் மருங்கு அறுத்த நிரம்பா இயவு** என்றார். ஒருவர் கால்வைத்து நடத்தற் குரிய அளவுதானும அகலமில்லாத வழி **நிரம்பா இயவு** எனப்பட்டது. "அரித்தெழுந்து தோன்றி வழிநீர் அறுத்த சுரம் [2]" எனப் பிறரும் கூறுதல் காண்க.

மடமான்பிணை மறியுடன் தனித்து நிழலிடம் பெறாது வருந்துவது, காணும் தலைமகனைத் தன் பிரிவாற்றாது தனிமையுற்று வருந்தும் தலைமகளை நினைப்பித்து வருத்த, நீரால் அறுக்கப்பட்டுச் சிறிதாய வழி அவன் இனிது செல்லாவாறு இடையூறு செய்வது கண்டு வருந்துகின்ற மையின், **இன்னா மன்ற சுரமே** என்றும், அந்நிலையில் தலை மகளின் பண்பு தோன்றி அவன் உள்ளத்துக்கு உவகையும் ஊக்கமும் நல்கி இன்பம் செய்தலின், **இனிய மன்ற யான் ஒழிந்தோள் பண்பே** என்றும் கூறினான். "திறன்மாண்டு திருந்துக மாதோ நும் செலவு [3]" எனத் தலைமகள் உரைத்த சொல்லை நினைந்து ஊக்கம் கொண்டான் என அறிக. (சு)

1. அகம். 169.　　2. திணை. ஐம். 11.　　3. அகம். 299.

327. *பொறிவரித் தடக்கை வேத லஞ்சிச்*
*சிறுகண் யானை நிலந்தொடல் செல்லா*
*வெயின்முளி சோலைய வேயுயர் சுரனே*
*அன்ன வாரிடை யானும்*
*தண்மை செய்தவித் தகையோள் பண்பே*

**பிரிந்த தலைமகன் இடைச்சுரத்துத் தலைமகள் குணம் நினைந்து இரங்கிச் சொல்லியது.**

**உரை :** பொறிகளையும் வரிகளையுமுடைய பெரிய கை வேதற்கஞ்சிச் சிறியகண்களையுடைய யானைகள் நிலத்தைத் தொடவியலாத வெயிலால் உலர்ந்த சோலைகளை யுடையன மூங்கில் உயரமாக வளர்ந்த சுரங்கள்; இப்பெற்றியவாய செல்லுதற்கரிய நெறியிடத்தும் இவ் வழகுடையாளின் பண்புகள் வெப்பம் தோன்றுவாறு தட்பம் செய்தன எ.று.

நீண்ட பெரிய கையாயினும் நிலத்தின் வெம்மைக்கு ஆற்றாது என்பார், **பொறிவரித் தடக்கை** என்றும், சிறு கண்ணையுடையதாயினும், நிலத்திற் படாதவாறு ஓம்புதல் தோன்றச் **சிறுகண் யானை** என்றும் சிறப்பித்தார். ஒருபால் யானை நிலம்தொடல் செல்லாத வெம்மை நிலமும், ஒருபால் வெயிலால் உலர்ந்த சோலையும் உடைய சுர நெறிகள் என்றுமாம். **ஆரிடை,** செல்லுதற்கரிய இடம். **ஆன்,** இடப்பொருட்டு; "ஆன்வந்தியையும் வினைநிலையானும்[1]" என்றாற்போல. **தொடல்செல்லா** என்பது ஒரு சொல்லாய்ப் பெயரெச்சமாய் வெயிலொடு முடிந்தது. உம்மை, சுரத்தின் செலவருமை உணர நின்றமையின் சிறப்பு.

தலைமகளின் அழகிய உருக்கண்ணில் தோன்றுதலின், இவ்வெனச் சுட்டியும், தன்னாற் காதலிக்கப்பட்டார்க்கு வருத்தம் தோன்றிய விடத்து ஆர்வலர் தோன்றி ஆவன புரிதல், தகுதியின் பாற்படுதலின் இவள் என ஒழியாது **இத்தகையோள்** என்றும் கூறினான். (௭)

1. தொல். சொல். 234.

328\. நுண்மழை தளித்தென நறுமலர் தாஅய்த்
தண்ணிய வாயினும் வெய்ய மன்ற
மடவர லின்றுணை யொழியக்
கடமுதிர் சோலைய காடிறந் தேற்கே.

இது, "மழை வீழ்தலாற் சுரம் தண்ணென்றது; இனி வருத்தமின்றிப் போகலாம்" என்ற உழையரை நோக்கித் தலைமகன் சொல்லியது.

**உரை:** மடப்பம் பொருந்திய இனிய துணைவியைப் பிரிந்து சுரத்தையும் அதனைச் சூழ்ந்த மரச்செறிவுகளையு முடைய காட்டினைக் கடந்து போந்த எனக்கு, நுண்ணிய துளிமழை பெய்தமையால் நறிய மலர்கள் உதிர்ந்து பரந்து தண்ணியவாய்த் தோன்றினும், அவை வெய்யவாகவே இராநின்றன எ. று.

**தளி**, மழைத்துளி. தளித்தல் ஈண்டுப் பெய்தல் என நின்றது. **மடவரல்**, மடப்பம்; அழகுமாம். **கடம்**, பாலை நிலம். சோலைய காடு என்றவிடத்துச் **சோலைய** என்றது பெயரெச்சக் குறிப்பு.

**மழை தளித்தென நறுமலர் தாஅய்த்** என்றது, உழையர் கூற்றினைக் கொண்டு கூறியது. தலைமகன் உள்ளம், "ஆண்மை வாங்கக் காமம் தட்பக், கவைபடு நெஞ்சம் கட்கண் அசைய[1]" "களிறுமாறு பற்றிய தேய்புரிப் பழங்கயிறு போல[2]" வருந்துவது கண்ட உழையர், கடத்தின் வெம்மையால் ஆற்றுனையினன் போலும் எனக் கருதி **நுண்மழை தளித்தென நறுமலர் தாஅய்த் தண்ணிய** என்றாராக, இம் மழைப்பெயலைக் காணின், தலைமகள், தான் பிரியுங்கால் குறித்த பருவமெனக் கருதித் தன்னை எதிர்நோக்கி என்னுகுவளோ என நினைந்து, வருத்தம் மீதூர்ந்தமையின், தலைமகன், **வெய்ய மன்ற** என்றும், அவளுடைய இளமையும் இனிய

1\. அகம். 339. 2. நற். 284.

துணைமையும் நோக்கத் தான் பிரிந்து போதரல் கூடாது என்பான் போல **மடவரல் இன்துணை ஒழியக் கடமுதிர் சோலைய காடு இறந்தேற்கே** என்றும் கூறினன். (அ)

329\. *ஆள்வழக் கற்ற பாழ்படு நனந்தலை*
*வெம்முனை யருஞ்சுர நீந்தி நம்மொடு*
*மறுதரு வதுகொ ருனே செறிதொடி*
*கழிந்துகு நிலைய வாக*
*ஒழிந்தோள்* **கொண்டவென் னுரங்கெழு நெஞ்சே.**

**இஃது, இடைச்சுரத்தின்கண் மீளலுறும் நெஞ்சினை நொந்து தலைமகன் உழையர்க்குச் சொல்லியது.**

**உரை:** தோளிடைச் செறிந்துநின்ற வளைகள் நெகிழ்ந்து நீங்கும் நிலைமையினை எய்த, மனையில் தவிர்ந்துறையும் தலைமகளாற் கொள்ளப்பட்ட என் திண்மை பொருந்திய நெஞ்சம், மக்கள் வழங்குதலில்லாத பாழ்பட்ட இடத்தினையுடைய வெவ்விய ஆறலைப்போர் புலமாகிய அரிய காட்டினைக் கடந்து நம்மொடு வாராது மீளுதலைக் கருதுங்கொல்லோ, இஃது என் எ. று.

**ஆள்,** மக்கள். "ஆள் வழக்கற்ற சுரத்திடைக் கதிர் தெற [1]" என்றார் பிறரும். **வெம்முனை** ஆறலைப்போர் உறையும் வெவ்விய புலம்; "வெம்முனை யருஞ்சுரம் முன்னியோர்க்கே [2]" என்று பிறரும் வழங்குப. **மறுதருவது,** மீளலுறுவது. "சென்ற தேஎத்துச் செய்வினை முற்றி, மறுதரல் உள்ளத்தர் எனினும் [3]" என்பதனுல் அறிக. இது மறுத்தரல் என்றும் வருவதுண்டு. "பின்னிய தொடர்நீவிப் பிறர்நாட்டுப் படர்ந்துநீ, மன்னிய புணர்ச்சியான் மறுத்தரல் ஒல்வதோ [4]" என்பது காண்க. **மறுதருவது கொல்** என்றமையின் அதற்கேற்ப வாராது என்பது வருவிக்கப் பட்டது.

---

1. அகம். 51. 2. நற். 424. 3. அகம். 333.
4. கலி. 15.

தான் பிரிந்தவிடத்துத் தலைமகள் தன் பிரிவுள்ளி உடம்பு மெலிந்து வருந்துகின்றாள் என நினைந்து ஆற்றாகைலின், **செறிதொடி கழிந்துகு நிலைய வாக** என்றும், ஆள் வழங்குதலற்றுப் பாழ்பட்ட இடத்தினையுடைய வெம்முனை அருஞ்சுரம் நீந்தி மேற்சேறற்கு வேண்டிய திண்மையுடையது என்பான், **என் உரங்கெழு நெஞ்சு** என்றும், செய்வினை யொன்று தொடங்கின் இடையில் மடங்க லாகாமையின், மடங்கி மீளலுறுதலை **மறுதருவது** என்றும், தலைமகளின் காதல் பற்றிய நினைவு மிகுந்து வருத்துதலால் வினைமேற் சென்ற நெஞ்சு செலவு தவிர்ந்து மீளத் துணியுமோ என்று தலைமகன் ஐயுறுவது தோன்ற **மறுதருவது கொல்** என்றும் உழையர்க்குக் கூறினன். "உள்ளம் பிணிக்கொண்டோள்வயின் நெஞ்சும், செல்லல் தீர்க்கம் செல்வாம் என்னும் [1]" என வருவது காண்க.

"கரணத்தின் அமைந்து முடிந்த காலை [2]" என்ற சூத்திரத்து, "மீட்டுவரவாய்ந்த வகையின் கண்ணும்" என்புழி இதனைக் காட்டி, இது மீளலுறும் நெஞ்சினை நொந்து தலைவன் உழையர்க்குக் கூறியது என்பர் **நச்சினார்க்கினியர்.** (சு)

330\. வெந்துக ளாகிய வெயிற்கட நீந்தி
வந்தன மாயினு மொழிகினிச் செலவே
அழுத கண்ண ளாய்நலஞ் சிதையக்
கதிர்தெறு வெஞ்சுர நினைக்கும்
அவிர்கோ லாய்தொடி யுள்ளத்துப் **படரே**

**இது, பிரிந்த தலைமகன் இடைச்சுரத்தின்கண் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.**

5\. நற். 284 6. தொல். பொ. 146.

**உரை :** விளக்கமும் திரட்சியும் பொருந்திய ஆராய்ந்து கொள்ளப்படும் தொடியினையுடையாளது மனத்துளதாகிய நினைவு, கண்களின் நீர்சோரவும், ஒப்பனை செய்யப்பட்ட மேனிநலம் கெட்டொழியவும், வெயில்தெறும் கொடிய சுரத்தின்கண் நமது செலவின் மேற்றாய் அவளை வருத்து மாகலின், வெவ்விய துகள் மிக்க வெயில் காயும் காட்டினைக் கடந்து வந்துளேம் எனினும், நெஞ்சே, மேலே செல்லுதலை மிவாயாக எ. று.

**வெந்துகள்,** வெயில் வெம்மையால் கல்லும் மண்ணும் கட்டுடைந்து ஆகிய நுண்ணியபொடி; ஆதலால், அப் பொடி **வெந்துகள்** எனப்பட்டது. **வெயிற்றுகள்**[1] என்றதும் இதுவே. மிக நுண்ணிதாயினும் வெம்மை செய்தலில் நீங்காமையின் **வெந்துகள்** என்றார். **கடம்,** பாலைநிலம். கடத்திடை நிலவும் காற்றும் நீரலைபோல் அலையலையாய்ப் போந்து மோதும் இயல்பிற்றாதலின், அதனை எதிர்த்துச் செல்லும் செலவினை **நீந்தி** என உரைத்தார். கடலகமும் இவ்வாறு காற்று மோதும் சுரம் போறலின், கடற் செலவைக் குறிக்கும்போதும் சான்றோர், "திமில்மேற் கொண்டு திரைச்சுரம் நீந்தி[2]" என்பது காண்க. **ஆய்நலம்,** ஆயத்தாரால் ஆய்ந்து செய்யப்பட்ட அழகு. நன்கு கடைதலால் ஒளியும், ஆயத்தார் நன்றென ஆராய்ந்து கொள்ளப்பட்டமையால் சிறப்புமுடைய தொடி, **அவிர் கோல் ஆய்தொடி** எனப்பட்டது; "இலங்குகோல் ஆய் தொடி நெகிழ[3]" என்றார் பிறரும். **படர்,** உள்ளுதல்[4]. படர், நினைக்கும்; இனி, செலவு ஒழிக என முடிக்க.

பிரிந்த தலைமகன் இடைச்சுரத்தின்கண் நெஞ்சொடு கூறி இரங்குகின்றானாகலின், **வெயிற்கடம் நீந்தி வந்தனம்** என்றான். உம்மை, கடத்தற் கரிய சுரத்தினை நீந்திப் போந்தவன் இனிச் செயற்பாலது மேற்கொண்ட செலவே

1. பதிற். 20. 2. ந, 3. அகம். 1
4. தொல். சொல். 340

யாயினும் ஒழிதல் நன்றென்பான் போல, **ஒழிக இனிச் செலவே** என்றான். இஃது **அகற்சிய தருமை.** தான் கண்ட சுரத்தின் வெம்மையைத் தலைமகள் உள்ளியவிடத்து ஆற்றாது வருத்தமுற்றுக் கலுழ்வாள் என்பான், **அழுத கண்ணள்** என்றான்; பிரிவின்கண், தலைமகள் ஆற்றாது கண்ணீர் சொரிந்தது அவன் கருத்தில் நன்கு பதிந்து கிடத்தலின் இவ்வாறு கூறினான் என்றுமாம். அக்காலை, அவளை ஆற்றுவிப்பான் கூறியவற்றுள், "நோய் முந்து உறுத்து நொதுமல் மொழியல் நின் ஆய்நலம் மறப்பனோ மற்றே என்றது நினைவின்கண் தோன்றுதலின், **ஆய்நலம் சிதைய** என்றும், நலம் சிதைய நினைக்குமாயின், யான் மறந்தவாறு மாகலின், செலவினைத் தவிர்வதே இனிச் செயற்பாலது என்றலின், **நினைக்கும்** என்றும் கூறினான். இவ்வாறு செலவின்கண் இடைச்சுரத்து வெம்மை கண்டு இதனைத் தலைமகள் நினைக்கின் ஆய்நலம் சிதைந்து வருந்துவள் என்பது பற்றிக் **கதிர்தெறு வெஞ்சுரம் நினைக்குமாகலின், இனிச் செலவு ஒழிக** என அழுங்கினானாயினும், அழுங்கும் நெஞ்சினைத் தேற்றிக் கொண்டு சென்று வினைமுடித்தல்லது மீளான் என அறிக. "செலவிடை யழுங்கல் செல்லாமை யன்று" என **ஆசிரியர்** கூறுவது காண்க. **கதிர்தெறு வெஞ்சுரம்** என்றது, உற்றாரை வருத்துவதே யன்றிச் சேய்மைக்கண் இருந்து நினைத்தாரையும் நெஞ்சினைச் சுட்டு வருத்தும் என வெம்மை மிகுதி யுணர்த்தி நின்றது[6].

5. அகம். 39. 6. இக்கருத்தையே வாங்கி, "எரிசுடர்க் கடவுளும், கருதின் வேம் உள்ளமும் காணில்வேம் கண்களும்" (பால. தாடகை. 6.) எனக் கம்பரும் கூறுவது காண்க.

## 34. தலைவி இரங்குபத்து.

உலகில் காணப்படும் உயிர்ப்பொருள் அனைத்தும் உணவுண்டு உடல்வளர்த்தலும் இனம் பெருக்குதலும் என்ற இரண்டையுமே தொழிலாகக் கொண்டுள்ளன. உடல்வளர்ச்சி, இனம்பெருக்கும் வளம்குன்றியதும் தளர்ச்சியுற்று வீழ்ந்தொழிகிறது. எனவே, உலகில் நிலவும் உயிர்வாழ்வு முற்றும் பொதுவகையாக நோக்கு மிடத்து இனம் பெருக்குதலைக் குறிக்கொண்டு நிற்பது உணரப்படும். உலகில் தோன்றும் போது, உயிர், உடம் போடு உடன் தோன்றினும், நீங்கும் போது தான் நின்ற உடம்பை விட்டுத் தனித்து நீங்கிவிடுகிறது. "குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே, உடம்போடு உயிரிடை நட்பு[1]" எனத் **திருவள்ளுவரும்** கூறுவர். இதனால் உடம் போடு கூடி நிற்கும் போது உடல் வளர்ச்சிக்கும் இனம் பெருக்குதற்கும் துணையாயிருந்து பின்னர் நீங்குவது உயிரின் பொதுத்தொழிலாதல் தெரியும். இனம் பெருக் குதலாவது, உயிரொன்று உடம்பொடு கூடி, வேறு உயிர் கள் உலகில் தோன்றுதற்கு இடமாகிய உடம்பை உதவு வது என்பது.

மேலும், உண்ணுங்காலும் இனம் பெருக்குங்காலும் உயிர்கள் ஒருவகை அமைதிபெறுகின்றன. அந்த அமைதி **இன்பம்** என்று வழங்கும். இந்த இன்பம் அவ் விருவகைத் தொழிற்கும் கூலியன்றாயினும், ஊதியமாக இருப்பது உணரத்தக்கது. இவ்வாற்றால், உலகில் உயிர் கள், உடலோம்பல் இனம்பெருக்கல் என்ற இரண்டாலும் இன்பம் பெறுவது பயன் என்பது விளங்கும்.

---

1. குறள்.

மக்களுயிர் ஒழிய ஏனை உயிர்வகை பலவும் இந்தக் குறிக்கோளிலேயே உலகில் வாழ்கின்றன. மக்களுயிர் மாத்திரமே இந்தக் குறிக்கோளுக்கு மேலாக, இவ்வுலகில் பெறப்படும் **இன்பம்,** அறிவொடுகலந்து நிலைபேறுஉடைய தாக இருத்தல் வேண்டும் என்றும், அதற்குத் துணையாவன அறமும் பொருளும் என்றும் அறிந்து, அறிவால் அற நெறியிற் பொருள்செய்து பேரின்பம் எய்துவதே வாழ்க் கையின் குறிக்கோளாகக் கொண்டுள்ளது. அதற்கேற் பவே, மக்களுயிர்க்கு உண்மையறிவும் மொழிவன்மையும் சிறப்பாக அமைந்திருக்கின்றன.

மக்களுயிர் தான் பெறக் கருதும் பேரின்பத்துக்கு அறமும் பொருளும் துணையாவதை அறிந்து அவற்றின் வழி ஒழுகுங்கால் முடிவிலேயன்றி இடையிலும் **இன்பம்** பெறுகிறது. இடையில் பெறப்படும் இன்பம் **இவ்வுல கிலும்,** முடிவில் பெறப்படும் பேரின்பம் உடம்போடு கூடுதலற்ற **வீட்டுலகிலும்** உள்ளன. உடம்போடு கூடி யிருக்குங்கால் எய்தும் இன்பம் உடம்பளவாய் உலக வாழ்வோடே நின்று போவது; ஆயினும், இது மக்கள் உயிரை முடிவிற் பெறலாகும் பேரின்பப் பேற்றுக்கு ஊக்கு கிறது. ஏனை உயிர்கள் இந்த இன்பத்தோடே அமைந்து விடுகின்றன.

இவற்றை நோக்கின், இவ்வுலகில் உடம்பொடு வாழ் தற்கண் நிகழும் இன்பநாட்டம், எல்லா உயிரிடத்தும் பொதுவாகக் காணப்படுவது உண்மையாகப் புலனாகிறது. இது பற்றியே ஆசிரியர், "எல்லா வுயிர்க்கும் இன்பம் என்பது, தான் அமர்ந்து வரூஉம் மேவற்றாகும்[1]" என்றது பொருத்தமாதல் தெளியப்படும்.

இனி, உடலுக்கு ஆக்கமாகும் உணவு வாயிலாக வரும் இன்பத்தினும், இன்பநாட்ட முடைய உயிர்கட்கு அவ்வுடலின் சிறந்த பணியாகிய வேறு உடம்பு படைக்கும்

1. தொல். பொ. 223.

பணிவாயிலாக வரும் இன்பம் பெரிதாகும். ஆதலால் மக்களுயி ரொழிந்த ஏனை உயிர்கள் இந்த இன்பத்தோடே அமைந்தொழிகின்றன. மக்கள் உடலோம்பும் பணியிலும் உடம்பு தரும் பணியில் இன்பம் பெரிதாதல் கண்டு, அந்த அளவில் அமையாது, அதன் இயல்பினை ஆராய்ந்து உடம்புதரு பணி வாயிலாக இன்பம் எய்துமிடத்து, உடம்புக்கு உணவுதரும் பணி நல்கும் இன்பம் மிகவும் சிறிதாய்ப் புறக்கணிக்கப்படுவதைக் கண்டது. உணவுக்கே வாழ்வெல்லாம் செலவிடும் உயிர், உடம்புதரு பணியில் ஈடுபாடு குன்றி இனம் சுருங்கி முடிவில் வேரோடு மறைந்தொழிந்தமை தெரிந்தது. உணவுப்பணியை ஒழுங்கு படுத்தி உடம்புதரு பணியையும் நெறிப்படுத்திச் சென்றால் இவ்விரண்டிலும் எய்தும் இன்பத்தால் பேரின்பம் எய்துதல் கூடும் என்பது விளங்கவே மக்களுயிர், அறமும் ஒழுக்கமும் கண்டு அந்நெறியில் உணவுப்பணியும் உடம்புதரு பணியும் மேற்கொண்டு ஒழுகிவருவதாயிற்று.

இவ்வுடம்புதருபணி உடம்பொடு கூடிய ஓர் உயிரால் தன்னந்தனியே பெரும்பாலும் நடப்பதில்லை. ஒருசில உயிர்களே[1] அது செய்கின்றன. ஏனைய யாவும் வேறோர் உடம்பொடு கூடியே அதனைச் செய்கின்றன. ஓர் உடம்பு வித்துறையும் இடமாகவும், ஒருடம்பு அவ்வித்து வளரும் விளைநிலமாகவும் உள்ளன. வித்துடை யுடம்பு ஆணுடம்பு என்னும், விளைநில மாகும் உடம்பு பெண்ணுடம்பு என்றும் வழங்கும்.

இவ்வுலகில் உயிர்க்கு இடமாகும் வகையில் உடம்பு, தன்னைப் போல் பிறிதோர் உயிர்க்கு இடமாகும் உடம்பு தருபணியிற் குறிக்கொண்டிருப்பதால், அதற்குரிய உடற்கூறுகள் நிறையுங்காறும், உயிரைத் தன் வரை நிறுத்தித் தன்னைப் பேணுவதிலேயே ஒன்றுவிக்கும். வித்தும் வித்து

1. Asexual.

வளரும் கருநிலமும் வளர்ச்சி நிரம்பியதும் ஆணுடம்பு பெண்ணையும் பெண்ணுடம்பு ஆணையும் அவாவத் தொடங்கும். நிறைவு என்பது கமம் என்னும் சொல்லாற் குறிக்கப்படும்; "கமஞ்சூல்[1]" என்று சான்றோரும், "கமம் நிறைந்தியலும்[2]" எனத் **தொல்காப்பியனாரும்** கூறுவர். அவ்வியைபினுல், உடம்புக்குரியவித்து நிறைவு வழிச் சிறக்கும் அவாக் **காமம்** என வழங்கும். ஆணும் பெண்ணும் ஒன்றையொன்று வேட்டு உடம்புதரு பணியில் ஈடுபடும்போது அது **காமக்கூட்டம்** என்றும், அதற்கு முன்னணியாகத் தோன்றும் உயிர்த் தொடர்பு **காதல்** என்றும் வழங்கும். உயிரொன்றிய காமக் கூட்டத்தைத் தமிழ்ச்சான்றோர் **காதற்காமம்** என்று குறித்தனர். "காதற்காமம் காமத்துச் சிறந்தது[3]" என்பது காண்க.

நிலைத்திணை உயிர்கட்கு இக்காமக்கூட்டத்தை வண்டினமும் ஒருசில புள்ளினமும் காற்றும் விளைவிக்கின்றன; ஏனை இயங்குதிணை யுயிர்கள் வேட்கைவழி நின்று பெறுகின்றன. மக்களினமும் இவ்வகையில் ஒன்றே ஆயினும், காமக்கூட்டத்துக்குப்பின் ஏனை உயிர்கள் ஆண் பெண்பற்றின்றி நீங்கிவிடுவதும், மக்களுயிர் பிரிவின்றி வாழ்க்கையியல் முடியுங்காறும் பிணிப்புண் டிருப்பதும் வேற்றுமையாகும்.

மக்களுயிர் ஒன்று தவிர ஏனையுயிர்கட்கு ஒரோரு காலத்தே உடம்புதரு வித்துக்கள் நிறைவுபெறும்; அக்காலத்தே தான் அவற்றிற்கு வேட்கை ஓங்கி நிற்கும். பிற காலங்களில் அவை ஆணும் பெண்ணும் உடன் உறையினும் வேட்கை வயப்படுவதில்லை. மக்களுயிரின் வேட்கை உடம்புதரு குறிப்போடு உயிரொன்றிய கேண்மையால் "சிறந்தது பயிற்றும்" சிறப்புக்குறிப்பும் ஒருங்குடையது என அறிஞர் கூறுப. அதனுல் மக்களுயிரின் வேட்கை ஏனையவற்றின் வேறுபட்டு இயலுகிறது[4].

---

1. முருகு. 7. 2. தொல். சொல். 355. 3. பரி. 9:14.
4. **Eugenics and Sex Relations by Dr. M H. Frank M. D. Ph. D.—p. 44 6.**

மக்கள்வாழ்க்கையின் குறிக்கோள் பேரின்பப் பேறு கலின், காமக்கூட்டத்துக்கு முன்னர் உண்டாகும் காதற் றொடர்பு, பின்னரும் கடைபோக நின்று உணவுப்பணியும் உடம்புதருபணியும் செய்து, அவ்வுடம்பு கொண்டு பெற லாகும் பேரின்பத்துக்குத் துணையாகும். "காமம் சான்ற கடைக்கோட் காலை, ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி, அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும், **சிறந்தது** பயிற்றல் இறந்ததன் பயனே [1]" என ஆசிரியர் உரைப்பது காண்க.

இந்நிலையில், ஆணும் பெண்ணுமாய்க் கூடி உடம்பு தருபணியில் ஈடுபடும் உயிரினத்துள், பெண்ணுயிர் பிறி தோர் உடம்பைத் தனக்குள் தோற்றுவித்து வளர்த்து வருவதும் பின்பு அதனைக் கருவுயிர்த்துப் புறத்தே வளர்த்து வருவதுமாகிய பெரும்பணியை மேற்கொள்ளு கிறது; தம்பால் தோன்றிய உயிர் தன் உணவுக்குரிய பணியைத் தானே செய்யக்கூடிய வன்மை பெறும்வரை உணவுதந்து ஓம்புதலைக் கடனாகக் கொள்ளும்; அதற் கிடையே அதன் உயிரையும் உடம்பையும் தன்னுயிரும் உடம்பும் போலக் கருதும் கருத்தும் காதலும் பெண் ணுயிர்மாட்டு அமைந்துள்ளன. தற்பேணற்குரிய வன்மை வந்தபின் ஒன்றினென்று பற்றின்றி நீங்கி விடுவது அஃறிணையுயிர்களின் இயல்பு. அதுவரை அதனிடத் தமைந்திருந்த காதல் **தாய்மை** எனப்படும். படவே பெண்ணுடம்பில் காதற்காமத்துக்கு அடிப்படை தாய்மைப் பண்பாதலும் விளங்கும்.

இனி, மக்களினத்துத் தாய்மைப்பண்பு, தான் ஈன்ற மக்களின் வாழ்நாள் முழுதும் நின்று நிலவும். அவர்க ளிடத்தில் உண்மையறிவு ஓங்கிநிற்பதால், தாய்மையின் மாண்பு கண்டு உணவுக்குரிய புறப்பணியில் பெண்ணுயிரை

1. தொல். பொ. 192.

விடுவதில்லை. ஆணுயிரே அப்பணியில் முன்னிற்கும்; பெண்ணுயிர் உணவுப்பணியில் சிறிதும் உடம்புதருபணியில் பெரிதும் ஈடுபடும்.

இம் மக்களினத்தில் தலைமக்கள் என்பார், உயர்நிலை மக்கட்குரிய நன்மாண்புகள் அத்தனையும் திரண்டு உருவெடுத்தாற் போலும் ஆடவரும் பெண்டிரு மாவர். உடம்புதரு பணிக்குரிய காதற்காமத் தொடர்பும், **சிறந்தது பயிற்றற்** குரிய உயிர்த்தொடர்பும் ஒருங்குடையர். ஈண்டைத் தலைமகள் தலைமைப்பண்பும் கட்டிளமையும் கொண்டு உடம்புதரு பணிக்கு ஏதுவாகிய தாய்மையுணர்வு தலைசிறந்து அப்பணியை ஆற்றுதற்கண் பெருவிதுப்புற்றிருக்கின்றாள்; அதற்கு இன்றியமையாத காதலனாகிய தலைமகன் பிரிந்திருக்கின்றான். தாய்மைப்பணிக்கு முதலாகிய அவளது உடம்பு, உயிரைத் தன்னடிப்படுத்தித் தன் பணியை முற்றுவித்துக்கொள்வது குறித்து இடையீடின்றி நரப்புக்கால்தோறும் வேட்கைத் தீயைப் பரப்பி வெதுப்புகின்றது; தனக்கு ஆக்கமும் அரணுமாகும் ஊணுறக்கங்களையும் அவள் உடம்பு வெறுத்து ஒதுக்குகின்றது. ஆயினும், தலைமகளாதலின், அவள் அறிவு அறைபோகின்றாளில்லை. "செறிவும் நிறையும் செம்மையும் செப்பும் அறிவும் அருமையும்[1]" சிறக்க வுடையள்; தலைமகற்குரிய அறவாழ்வு பொருள்வாழ்வு இன்பவாழ்வு ஆகிய எல்லாவற்றிற்கும் துணைவியாகலின், உடலின் இயற்கை விதுப்பினை அடக்கி அமைகின்றாள்; மற்று, உடம்புவழிப்பட்ட அவளது உள்ளம் பற்றுக்கோடில்லாத பூங்கொடி போல் துவண்டு அடிக்கடி வந்து தாக்கும் காமக்காற்றால் அலைந்தவண்ணம் இருக்கிறது. அந்நிலையில் அவள் இரங்கிக் கூறுவன பொருளாக வந்த பாட்டுக்கள் பத்தின் தொகுதி யாகலான், இது **தலைவி இரங்குபத்து** என்று பெயர் பெறுவதாயிற்று.

1. தொல். பொ. 209.

331. அம்ம வாழி தோழி யவிழிணர்க்
கருங்கான் மராஅத்து வைகுசினை வான்பூ
அருஞ்சுரஞ் செல்லுந ரொழிந்தோ ருள்ள
இனிய கமழும் வெற்பின்
இன்னு தென்பவவர் சென்ற வாறே.

இது, தலைமகன் பிரிந்துழி, "செல்லும் வழியிடத்து மலையில் உளதாகிய நாற்றத்தால் நம்மை நினைந்து முடியச் செல்லார், மீள்வரோ" எனக் கேட்ட தோழிக்கு, "அவர் முடியச் சென்றார்" என்பது அறிந்து இரங்கித் தலைவி கூறியது.

ப. உரை: சென்ற சுரம் பிரிந்தார் தத்தம் துணைவியரை நினையும்படி வெறிகமழும் மலரை யுடைத்தாகலும் செலற்கருமை யால் இன்னாமை யுடைமையும் தலைவி இரங்குதற்குக் காரணமாயின எ. று.

உரை: தோழி, கேட்பாயாக: முறுக்குடைந்த பூங் கொத்துக்களையுடைய கரிய அடியினையுடைய வெண் கடம்புமரத்தின்கண் உள்ள சினைகளிற் பூத்த வெண்மலர் கள் செல்லுதற்கரிய சுரத்தைக் கடந்து செல்லுவோர் கண்டு தாம் பிரிந்து போந்த துணைவியரை நினைந்து அழுங்கு மாறு இனிய மணம் நாறும் மலையிடத்து நம் தலைவர் சென்ற நெறி துன்பந்தரும் இயல்பின தென்று பலருங் கூறுவர், காண் எ. று.

மலர்ந்த பூக்களையுடைய கொத்து, அவிழ் இணர் எனப்பட்டது. "அரும்புமுதிர் அவிழிணர்[1]" என்றது காண்க. வைகு சினை, தாழ்ந்த கிளை. வெண்கடம்பின் அடி கரிய நிறமுடைமை பற்றிக் கருங்கால் மராஅம் என்றார்; பிறரும், "கருங்கால் மராஅத்து வாஅன் மெல்லிணர்[2]" என்றும், அதன் பூவின் வெண்மையை, "வாலிய சுதை விரிந்தன்ன பல்பூ மராஅம்[3]" என்றும் கூறுவர். இதன்

1. ஐங். 146. 2. அகம். 127. 3. ஷை. 211

பூவினிடத்து எழும் மணம் மகளிர் கூந்தலிடத்து எழும் மணம் போறலின், **அருஞ்சுரம் செல்லுநர் உள்ள இனிய கமழும்** என்றார். "அவிழிணர்த் தேம்பாய் மராஅம் கமழும் கூந்தல்[1]" என்று சான்றோர் கூறுதல் காண்க.

தலைமகன் பிரிவின்கண் தலைவி எய்திய வேறுபாடு கண்டோர், மராமரத்தின் இயல்பு கூறி, "ஆங்குச் செல்லும் தலைமகன் அதுகண்டு நின்னை நினைந்து மீளுவன்" என்றும், அதற்கு அப்பாலுள்ள நெறியும் இன்னா தாகலின், அவன் மேலே செல்லான் என்றும் கூறினாராக, மராத்து வான்பூ இனிய மணம் கமழ்ந்து நம் காதலரை நம்மை மறவாவாறு நினைப்பிப்பது நன்று என்பாள், **மராஅத்து வைகுசினை வான்பூ அருஞ்சுரம் செல்வோர் ஒழிந்தோர் உள்ள இனிய கமழும் வெற்பு** என்றும், ஆயினும் அப்பால் செல்லற்குரிய வழி இன்னா தென்றலின், மேற்கொண்டு செல்லாது நம் நினைவும் வழி யின்னாமையும் காரணமாக வினைமுடியாது மீள்வராயின் வினையாண்மை இலர் என்பது பட்டு இளிவாம் என்று அஞ்சுகின்றேன் என்பாள், **இன்னாது என்ப அவர் சென்ற ஆறே** என்றும் கூறினாள். தலைமகன் வினைமேற் சென்றவிடத்து அவன் அதனை முடித்து மீளுதலையே தலைமகள் விரும்புவள் என் அறிக; பிறாண்டும், "நோய்நாம் உழக்குவ மாயினும் தாம்தம் செய்வினை முடிக்க தோழி[2]" எனத் தலைவி கூறுவது காண்க. ஆறு இன்னாமையும் தலைவி இரங்குதற் கேதுவாகலின், **இன்னாது என்ப அவர் சென்ற ஆறே** என்றார்; "அஞ்சுவரு மரபின் வெஞ்சுர மிறந்தோர் நோயிலர் பெயர்தல் அறியின், ஆழல மன்னே தோழி என் கண்ணே[3]" என்பதும் உண்டு.

வெஞ்சினை வான்பூ என்பது பாடமாயின் விரும்பப்படும் சினைகளிடத்து மலர்ந்த வெள்ளிய பூ என்றுரைக்க. **விருப்பம்,** மலர்மிகுதியால் செல்வார் மணநுகர்தற்கும், கோடற்கும் விரும்புதல். (க)

ந். 20. 2. அகம். 155. 3. ஷை. 375.

332. அம்ம வாழி தோழி யென்ன தூஉம்
அறனில மன்ற தாமே விறன்மிசைக்
குன்றுகெழு கானத்த பண்பின் மாக்கணம்
கொடிதே காதலிப் பிரிதல்
செல்ல லைய வென்னு தவ்வே.

இது, பிரிந்த தலைமகன் சுரத்திடைக் கழியச் சென்முன் என்பது கேட்ட தலைமகள் அங்குள்ள மாக்களை நோக்கு தோழிக்குச் சொல்லியது.

**உரை:** தோழி கேட்பாயாக: சிறந்த உச்சிகளை யுடைய குன்றுகள் பொருந்திய கானகத்தின் கண்ணவாகிய நற்பண்பில்லாத மாக்களின் கூட்டம் எத்துணையும் அறமில் லாதனவேயாம்; "ஐய, காதலியைப் பிரிதல் கொடிதாகலின், இனிச் செல்லற்க" என்று கூறுதொழிந்தன வாகலான் எ. று.

**விறல்,** ஈண்டு உயர்ச்சிமேல் நின்றது. **மிசை,** உச்சி. **கானத்த,** கானம் என்னும் பெயரடியாக வந்த பெயரெச் சக்குறிப்பு. கானத்த மாக்கணம், பண்பின் மாக்கணம் என இயையும். அன்பு பண்பும் அறம் பயனுமாதலின், அன்பில்லாமைபற்றி அறனிலவாகிய மாக்கணத்தை **அன்பில் மாக்கணம்** என்றார். மாக்கணம் அறனில மன்ற என்றது மேற்கோள்; செல்லல் ஐய என்னு தவ்வே என்றது ஏது, **கொடிதே காதலிப் பிரிதல் செல்லல்** என்றது மான்கணம் கூறல் வேண்டுமெனக் கருதி யுரைக்கும் கூற்று.

எஞ்ஞான்றும் தம் துணையைப் பிரியாதுறையும் மாக் கணம், அப்பண்பு குறித்துப் பிரிந்து போதரும் தலைமகற் கும் பிரிதல் கொடி தென்னுமையின், **பண்பின் மாக் கணம்** என்றும், தன்னைக் கூடினோர் வருத்த மெய்தப் பிரிந்தாரைத் தெருட்டுமாறு கூறுதல் பண்புடையார்க்கு அறமாகலின், **அறனில மன்ற** என்றும் கூறினள். (உ)

333. அம்ம வாழி தோழி யாவதும்
வல்லா கொல்லோ தாமே யவண
கல்லுடை நன்னாட்டுப் புள்ளினப் பெருந்தோ
டியாஅந் துணைபுணர்ந் துறைதும்
யாங்குப்பிரிந் துறைதி யென்னா தவ்வே.

இது, பிரிந்த தலைமகன் "சுரத்திடைச் சென்றான்" என்பது கேட்ட தலைமகள் அங்குள்ள புட்களை நோக்கித் தோழிக்குச் சொல்லியது.

**உரை:** தோழி, கேட்பாயாக: அவ்விடத்தவாகிய மலைகளையுடைய நல்ல நாட்டின்கண் பெருந்தொகையாக வுள்ள பறவைகள், நம் தலைவரை நோக்கி, "ஐய, யாம் எம் துணையிற் பிரியாது கூடியுறைகின்றேம் காண், மேலும், யாம் பிரிதல் வல்லுவேமுமல்லேம்; அற்றாக, நீ எவ்வாறு பிரிதலைச் செய்து போந்தனை கொல்லோ" என்று கூறி அவர் செலவினைத் தடுக்கா தொழிந்தன வாகலான், அவை சிறிதும் வன்மையுடைய வல்ல போலும் எ. று.

**யாவதும்,** யாதும்; "கல்லதரத்தம் கடக்க **யாவதும்** வல்லுந கொல்லோ[1]" என்றாற் போல இது "பகுதிப் பொருள் விகுதி" என்று **அடியார்க்குநல்லார்** கூறுவர். நல்லியல் பிழந்து பாலையாகிய நாட்டின் வழியாகச் சென்றமையின், அதனைக் **கல்லுடை நாடு** என்றும், மாவும் புள்ளும் வாழ்தலின் **நன்னாடு** என்றும் சிறப்பித்தார். **தோடு,** தொகுதி; கூட்டமுமாம். "வம்பப் புள்ளின் கம்பலைப் பெருந்தோடு[2]" என்று பிறரும் கூறுதல் காண்க. ஆற்றாமை மிக்கவிடத்துச் "செல்லா மரபின வற்றொடு கெழீஇச் செய்யா மரபின் தொழிற்படுத் தடக்கியும்[3]" தலைமக்கள் கூற்று நிகழ்த்துவ துண்மையின், இக்கூற்று அமையுமென அறிக.

1. சிலப். 16 : 57. 2. அகம். 18. 3. தொல். பொ. 196

பசுந்தழை போர்த்த மரமும் செடியு மின்றி வெறுங் கற்களே நிறைந்த தாயினும், புள்ளினம் துணையிற் பிரியாது இனிது உறையும் நாடாதல் பற்றி, **கல்லுடை நன்னாட்டுப் புள்ளினம்** என்றும், பிரிந்தவழி எய்தும் துன் பத்தின் கொடுமை யறிந்து, யாம் துணையிற் பிரிந்துறைதல் மாட்டேமாக, நீ பிரிந்துறைதல் மிக்க வன்மையின் பாற் படு மென்றற்கு, **யாங்குப் பிறிந்துறைதி** என்றும், பிரிதல் என்னும் இன்னாச்சொல்லை வாயாற் கூறமாட்டா வாயி னும், தாம் துணை புணர்ந்துறைதலைத் தானும் கூறுமையின் **யாவதும் வல்லா கொல்லோ** என்றும் கூறினாள்.

கல்லுடை நன்னாட்டுப் புள்ளினத்துள், "புணர்ந்தீர் புணர்மினோ என இணர்மிசைச் செங்கண் இருங்குயில் எதிர்குரல் பயிற்றும்[1]" னவும், "பூங்குயில் கவறுபெயர்த் தன்ன நில்லா வாழ்க்கையிட்டு, அகற லோம்புமின் அறி வுடையீர் எனக், கையறத் துறப்போர்க் கழறுவ[2]" எனவும், மயில்கள், "ஆர்குரல் மணந்து தணந்தோரை நீடன்மின் வாரும் என்பவர் சொற்போன்றனவே[3]" எனவும் கூறு மென்றலின், புள்ளினப் பெருந்தோடு இவ்வாறு கூவித் தடுக்க வல்லுந வாகவும், "புணர்ந்தோர் பிரிதல் சூழ்த லின் அரியது முண்டோ[4]" என்று மருண்டு ஒன்றும் சொல்ல மாட்டாவாயின போலும் என்பாள், **யாவதும் வல்லா கொல்லோ** என்றாள் என்றுமாம்.

"அவனறி வாற்ற வறியு மாகலின்[5]" என்ற சூத்தி ரத்துப் "பல்வேறு நிலை" என்றதனால் இது புள்ளை நொந்து கூறியது என்பர் **நச்சினார்க்கினியர்.**

இனி, **வல்லார் கொல்லோ** என்றும், **பிரிந்துறைதி யென்னு மாறே** என்றும் பாடமாயின், புள்ளினப் பெருந் தோடு, "**யாம்** துணைபுணர்ந் துறைதும், யாங்குப் பிரிந்

1. நற். 224. 2. ஷை. 243. 3. பரி. 14 : 8-9.
4. நற். 79. 5. தொல். பொ. 147.

என்று கூறிச் செல்லுவாரைத் தடுக்கும் நெறி யையுங் கடந்து சென்ருரர்கலின், அவர் யாதொன்றனை யும் செய்தல் வல்லுநர் போலும் என்றுரைக்க; அதுபோது, இது தலைமகன் பிரிந்துழித் தலைமகள் செல்லும் வழியிடத் துப் புள்ளினம் பிரிவருமை கூறித் தகைக்கு மாகலின் அவர் முடியச் செல்லாது மீள்வரோ என்ற தலைமகட்குத் தோழி, அவர் முடியச் சென்ருராகலின், யாதனையும் செய்ய வல்லுநரே யெனத் தலைமகன் இயற்பழித் துரைத்ததாகக் கொள்க. தன்னின் இறப்ப இழிந்த புள்ளினம், துணையிற் பிரிந்துறைய மாட்டா வாதலை உரைப்பக் கேட்டுவைத்தும் மனமிரங்காது தாம் கருதிய பிரிவே பொருளாகப் போயின மையின் அவர் அன்பிலார்க் குரிய செயல் யாவும் செய்வர் என்பாள், **யாவதும் வல்லார் கொல்லோ** என்று கூறினள் என்றுமாம். (௩)

*334. அம்ம வாழி தோழி சிறியிலை*
*நெல்லி நீடிய கல்காய் கடத்திடைப்*
*பேதை நெஞ்சம் பின்செலச் சென்ருேர்*
*கல்லினும் வலியர் மன்ற*
*பல்லித ழுண்க ணழப்பிரிந் தோரே.*

**இது, பிரிவு நீட ஆற்ருளாய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.**

**ப, உரை : பல்லிதழ் உண்கண் அழப்பிரிந்தோர்** என்றது தாம் குறித்த எல்லைக்கண் வாராது நீட்டித்தார் என்பதாம்.

**உரை : தோழி, கேட்பாயாக: சிறிய இலைகளை யுடைய நெல்லிமரங்கள் மிக்க மலையுருகக் காயும் வெயில் தெறும் காட்டிடையே அறியாமையினையுடைய என் நெஞ்சம் தன்பின் தொடர்ந்துவரப் பிரிந்து சென்றவர், பலவாகிய இதழ்களையுடைய மலர் போலும் மையுண்ட கண்கள் கலுழ்ந்து நீருகுப்பப் பிரிந்தா ராகலான், அவர் கல்லினும் வன்மையுடையா ராவர் எ. று.**

நெல்லிமரத்தின் உயர்ச்சியும் பெருமையும் நோக்க இலை மிகச் சிறிதாய் இருத்தலின் **சிறியிலை நெல்லி** என்றார்; ஏனைச் சான்றோர்களும், "சிறியிலை நெல்லித் தீங்கனி [1]" என்றும், "சிறியிலை நெல்லித் தீஞ்சுவைத் திரள்காய் [2]" என்றும் கூறுப. வெயில் வெம்மையாற் கல்லும் நெருப்புப் போற் சுடுவது பற்றிச் சுரத்தைக் **கல்காய் கடம்** என்றார்; "கல்காய் கானம் [3]" என்று பிறரும் கூறுவர். **பல்லிதழ்,** பல இதழ்களையுடைய பூ. சென்றோர் வலியர் மன்ற, அழப் பிரிந்தா ராகலான் என எடுத்தோத்தும் ஏதுவுமாய் இயைக்க.

**பேதை நெஞ்சம்** என்றாள், நாணுமையும் தலைமகனது மனப்பான்மையை நாடாமையும் உடைமையின்; "நாணுமை நாடாமை நாரின்மை யாதொன்றும், பேணுமை பேதை தொழில் [4]" என்ப வாகலின், ஒருவர் மாட்டு ஒருவர் ஒன்று வேண்டிப் பின்சென்றவழி, அவர்மாட்டு இரங்கி அதனை அருளாராயின், அவரைக் கன்னெஞ்ச ரென்னும் வழக்குப்பற்றிக், **கல்லினும் வலியர்** என்றும், நினைப்பெல்லாம் தலைவன் செலவின்மேல் நிற்றலின், **பின்செலச் சென்றோர்** என்றும் கூறினாள்.

இனி, கல்லுருகக் காயும் கடத்திடைச் சென்றும், அவர் நெஞ்சம் உருகாமை என்னோவென ஒரு நயந் தோன்றுதல் காண்க. (ச)

335. அம்ம வாழி தோழி நம்வயின்
நேய்த்தோ ரன்ன செவிய வெருவை
கற்புடை மருங்கிற் கடுமுண்ட பார்க்கும்
காடுநனி கடிய வென்ப
நீடியிவண் வருநர் சென்ற வாறே.

1. புறம். 91. 2. அகம். 291. 3. ௸. 105.
4. குறள். 833.

தலைமகன் சென்ற சுரத்தினிடத்துக் கொடுமை பிறர் கூறக் கேட்ட தலைமகள் ஆற்றாது தோழிக்குச் சொல்லியது.

**உரை :** தோழி, கேட்பாயாக: குருதி போலச் சிவந்த செவியினையுடைய கழுகுகள் கற்களின் மருங்கே கிடக்கும் மிக்க முடைநாற்றத்தையுடைய ஊன் துண்டங்களைப் பார்க்கும் காடுகள் மிக்க அச்சம் பொருந்தினவாம் என்று நம்மிடத்துக் கூறுநிற்ப ராகலின், விரைய வாராது நீட்டித்து வருதற்பாலராய் நம் காதலர் சென்ற வழிகள் அக்காடுகளிடத்தன வாதலால், யான் வருந்துவே னாயினேன் எ. று.

**நெய்த்தோர்**, குருதி. **எருவை**, கழுகு; அதன் கழுத்து வெளுத்து இருகவுளிலும் கோழிக் கொண்டைபோலச் சிவந்த தசைகள் வளர்ந்து தொங்குதலின், அவற்றைச் செவியென்று குறித்துச் **செஞ்செவி எருவை** யென்பது வழக்கு. "பொறித்த போலும் வானிற எருத்தின் அணிந்த போலும் செஞ்செவி எருவை[1]" என்பது காண்க. அது பற்றியே **நெய்த்தோரன்ன செவிய எருவை** என்றார். புலி முதலிய விலங்குகள் பிறவுயிர்களைக் கொன்று தின்று கழித்த பிணங்கள் கற்களின் இடையே கிடந்து மிக்க முடைநாற்றத்தைப் பரப்புதலின், அவற்றைக் **கடுமுடை** என்றார். "புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை[2]" என்பர். இவற்றைத் தேடி யுண்டு வாழ்வது எருவையின் செய்தியாகலின், **எருவை கடுமுடை பார்க்கும்** என்றார். "படுமுடை நசைஇய வாழ்க்கைச் செஞ்செவி, எருவைச் சேவல்[3]" எனச் சான்றோர் உரைப்பர். **கடி**, அச்சம்.

உயிர்க்கொலை வேட்டுத் திரியும் விலங்குகளும் ஆறலைகள்வரும் வாழும் இடம் என்பது தோன்ற **எருவை கடுமுடை பார்க்கும் காடு** என்றும், அதனால் அக் காட்டுவழி செல்வோர்க்குத் தீங்கு பயப்பது என்று பிறர் சொல்லக்

1. அகம். 193. 2. ௸. 97. 3. ௸. 161.

கேட்டு உள்ளத்தே அச்சமுற்றுத் தலைவி வருந்துமாறு புலப்படக் **காடு ஙனிகடிய என்ப** என்றும், தலைமகன் விரைந்து மீளுதல் வேண்டுமென விழைந்து கூறுதலால் **நீடி இவண் வருநர் சென்ற ஆறு** என்றும் கூறினாள். (௬)

336. அம்ம வாழி தோழி நம்வயின்
பிரியலர் போலப் புணர்ந்தோர் மன்ற
நின்றதில் பொருட்பிணி முற்றிய
என்றூழ் நீடிய சுரனிறந் தோரே.

**இது, பிரிவதற்கு முன்பு தங்களிடம் அவன் ஒழுகிய திறம் நினைந்து தலைமகள் தோழிக்குச் சொல்லியது.**

**உரை :** தோழி, கேட்பாயாக; நிலையுதலில்லாத பொருள்வயிற் பிரிந்து செய்யும் வினையை முடித்தற்கு வெயில் கடுகிச் சுடும் காட்டினைக் கடந்து சென்ற நங் காதலர், பண்டு நம்மைக் கூடிய போழ்து பிரியார் போலக் கூடி மகிழ்வித்தனர், காண்; அவர் செயல் இருந்தவாறு என்? எ. று,

**பிரியலர்**, என்றும் பிரியாத இயல்பினர். **புணர்ந்தார்** எனற்பாலது "ஆ ஓவாகும்[1]" என்றதனால் **புணர்ந்தோர்** என நின்றது. **நின்றது,** நிலையுதல் என்னும் தொழில்மேல் நின்ற வினைப்பெயர். "நின்றதில் பொருட்பிணிச் சென்றிவண் தருமார் செல்ப என்ப[2]" எனப் பிற சான்றோரும் கூறுதல் காண்க. பொருள்வேட்கையாற் பிணிப்புண்டு செய்யும் நினைவும் சொல்லும் செயலும் **பொருட்பிணி** என வழங்கும்; ஏனைச் சான்றோரும், "பல்லித ழுண்கண் கலிழ, நில்லாப் பொருட்பிணிப் பிரிந்திசி னோரே[3]" என்றும், "ஓதல் காவல் பகைதணி வினையே, வேந்தர்க் குற்றுழி பொருட்பிணி பரத்தையென், றங்க வாறே யவ்வயிற்

1. தொல். சொல். 2. அகம். 27. 3. நற். 241.

பிரிவே [1]" என்றும் கூறுவனவற்ருலறிக. "இனிப் பொருட்பிணி என்பது, பொருளிலனுய்ப் பிரிவதன்று; தன் முதுகுரவராற் படைக்கப்பட்ட பல்வேறு வகைப்பட்ட பொருளெல்லாம் கிடந்ததுமன், அது கொடு துய்ப்பது ஆண்மைத்தன்மை அன்றெனத் தனது தாளாற்றலாற் படைத்த பொருள் கொண்டு வழங்கி வாழ்தற்குப் பிரியு மென்பது; அல்லதூஉம், தேவர் காரியமும் பிதிரர்காரியமும் தனது தாளாற்றலாற் படைத்த பொருளாற் செய்வன, தனக்குப் பயன்படுவன; என்னை, தாயப் பொருளாற் செய்தது தேவரும் பிதிரரும் இன்புறுர் ஆதலான்; அவர்களையும் இன்புறுத்தற்குப் பிரியு மென்பது [2]" என்பர் **களவியல் உரைகாரர்.** **முற்றிய,** செய்யியவென்னும் வாய்பாடு. **என்றூழ்,** வெயில்; வேனிலுமாம். "என்றூழ் நீடிய குன்றத்துக் கவாஅன் [3]" என்ருர் பிறரும்.

முன்னர்க் கூடிய விடத்து "மெல்லியல் அரிவை நின் நல்லகம் புலம்ப, நிற்றுறந் தமைகுவ னுயின் எற்றுறந்து இரவலர் வாரா வைகல், பலவாகுக யான் செலவுறு தகவே [4]" என்று கூறினு னுகலின், **பிரியலர் போலப் புணர்ந்தோர்** என்று கூறினுள். இது "நிகழ்ந்தது நினைத்தற் கேதுவு மாகும் [5]" என்பதனுல் அமையும்.

பண்டு, நிலையுதல் இல்லாத இளமையாற் பிணிப்புண்டு பிரிவென்பது ஒன்று உண்டு என்ற நினைவே தோன்ருதவாறு கூடியவர், இன்று அதுவே இயல்பாகவுடைய பொருளாற் பிணிப்புண்டு அதனை முற்றுவிப்பது கருதிச் சென்றது எனக்கு வியப்புத்தருகிறது என்பாள், **நின்றதில் பொருட்பிணி முற்றிய சுரனை இறந்தோர்** என்றும், நீடுதல் இல்லாத பொருள் குறித்து வெயில் வெம்மை நீடிய சுரன் இறந்து போதல் நேரிதன்று எனத் தான் கருதியது முடித்தற்கு, **என்றூழ் நீடிய சுரன்** என்றும் கூறினுள். (௬)

1. இறை. அ. பொ. 35. 2. ஷை. 35. உரை.
3. நற். 43. 4. 137. 5. தொல். பொ. 43.

337. அம்ம வாழி தோழி நம்வயின்
மெய்யுற விரும்பிய கைகவர் முயக்கினும்
இனிய மன்ற தாமே
பனியிருங் குன்றஞ் சென்றோர்க்குப் பொருளே.

இது, தலைமகன் பொருள்வயிற் பிரிந்துழித் தன் முயக்கினும், அவற்குப் பிற்காலத்துப் பொருள் சிறந்ததெனத் தலைவி இரங்கித் தோழிக்குச் சொல்லியது.

**உரை :** தோழி, கேட்பாயாக; குளிர்ந்த பெரிய குன்றத்தைக் கடந்து பொருள்வயிற் பிரிந்த நம் காதலர்க்கு அப்பொருள்கள் நம்பால் மெய்யுற விரும்பிய கையாற் சேர முயங்கும் முயக்கத்தினும் இன்பம் மிகத் தருவன வாகும்; இன்றேல், அவர் பிரிவா ரல்ல ராகலான் எ. று.

**கைகவர்முயக்கு,** கைகட் கிடையே அகப்படுத்தி மார்புறத் தழுவிக் கொளல்; கவர்தல், விருப்பமிகுதி; "கவர்வு விருப்பாகும்;[1]" "மெய்புகு வன்ன கைகவர் முயக்கு[2]" என்று பிறரும் கூறுவர். பனிமுகில் தவழும் குன்றம் **பனியிருங் குன்றம்** எனப்பட்டது. **குன்றம் சென்றோர்,** குன்றத்தைக் கடந்து சென்றவர். சென்றோர்க்கு முயக்கினும் பொருள் இனிய மன்ற என இயையும். இன், உறழ்ச்சி.

கைகவர் முயக்கம் பற்றிக கூறும் போது "கழிபெருங் காமத்து, இன்புறு நுகர்ச்சியிற் சிறந்ததொன்று இல்லெனத்[3]" தலைமகன் கூறியது கேட்டுப் பயின்றுளாள் ஆகலின், இப்பொழுது தலைவனது பிரிவால் அது வாயன்மை விளங்குதலின், **இனிய மன்ற தாமே பனியிருங் குன்றம் சென்றோர்க்குப் பொருள்** எனத் தலைவி கூறினள். பிரிந்து உறைதற்கு இனிதன்மை தோன்றப் **பனியிருங்**

1. தொல். சொல். 357. 2. அகம். 379. 3. ஷை. 361.

குன்றம் எனச் சிறப்பித்தாள். "பனிமீக் கூரும் பைதற் பானுள், பல்படை நிவந்த வறுமையிற் சேக்கைப், பருகு வன்ன காதலொடு திருகி, மெய்புகு வன்ன கைகவர் முயக்கத்து, ஓருயிர் மாக்களும் புலம்புவர் மாதோ[1]" என்று பிறண்டும் தலைவி கூறுதல் காண்க. (எ)

338. அம்ம வாழி தோழி சாரல்
இலையில மலர்ந்த வோங்குநிலை யிலவம்
மலையுறு தீயிற் சுரமுதற் றோன்றும்
பிரிவருங் காலையும் பிரிதல்
அரிதுவல் லுநர்நங் காத லோரே.

**இது, தலைமகன் பிரிந்துழி, "இக்காலத்தே பிரிந்தார்" எனத் தலைமகள் இரங்கிச் சொல்லியது.**

**ப. உரை:** இலையின்றி மலர்ந்த இலவம் மலையுறு தீயின் தோன்றும் என்றது, அன்பின்றிப் பிரிந்தான் எனத் தலைவனது பிரிவைத் தான் ஆற்றுளாயினமை உரைத்தவாறு.

**உரை:** தோழி, கேட்பாயாக. நம் காதலர், மலைச் சாரற்கண் இலை யுதிர்ந்து மலர்ந்து உயர்ந்து தோன்றும் நிலையினையுடைய இலவமரம், அம்மலைக்கண் தோன்றும் தீயைப் போல் சுரத்தின்கண் தோன்றும் பிரிதற்கரிய காலத்தினும் அரிதிற் பிரிதலில் வல்லுந ராயினர், காண் எ. று.

இலவமரம் மலருங்காலத்து அதன் இலைகள்உதிர்ந்து வீழ்தல் இயல் பாகலின், **இலையில மலர்ந்த இலவம்** என்றார். "இலையில மலர்ந்த முகையில் இலவம்[2]" என்றும், "அருவி யான்ற வுயர்சிமை மருங்கில், பெருவிழா விளக்கம் போலப் பலவுடன், இலையில மலர்ந்த விலவமொடு, நிலையுயர் பிறங்கல்[3]" என்றும் வருதல் காண்க. **முதல்,** ஏழ

1. அகம், 305. 2. ஷை. 11. 3. ஷை. 185.

னுருபின் பொருட்டு. மரமும் செடியும் புதுத்தளிர் ஈன்று நறுமலர் பூத்து இனிய காட்சி வழங்கிச் சிறக்கும் வேனிற் பொழுது காதலர்க்கு அக்காதல் பெருகி முறுகிக் கூடி யின் யுறும் காலமாதலின், அதனைப் **பிரிவருங்காலை** என்றும், அக்காலத்தே பிரிதல் என்பது மிகவும் அரிய செயலாதல் தோன்ற, **அரிது பிரிதல்** என்றும், காதல் பெருகியவழிக் கல்வியும் அறிவும் வலி யிழந்து ஒழிதல் ஒருதலையாக, தலைமகன்பால் பெருகிய காதலை அடக்கித் தன் பிரிவுக்கு உடன்படுத்தும் வன்கண்மை மிகுந்துளது என்பாள், **வல்லுநர் நம் காதலோர்** என்றும் கூறினாள்.

இலை சிறிதுமின்றி உதிர்ந்த போழ்தும் இலவம் மலர்ந்து மலையிடை விளங்கும் தீப்போல் தோன்றும் என்றது, நம்பால் அன்பு சிறிது மின்றாயினும் தலைமகன் உள்ளம் பொருள் செய்யும் வேட்கை மிக்கு விளங்கு கின்றது என இரங்கியவாறு. **பழையவுரைகாரர்க்கும்** இதுவே கருத்தாதல் காண்க. (அ)

*339. அம்ம வாழி தோழி சிறியிலைக்*
*குறுஞ்சினை வேம்பி னறும்பழ முணீஇய*
*வாவ லுகக்கு மாலையும்*
*இன்றுகொல் காதலர் சென்ற நாட்டே.*

**இது, தலைமகன் குறித்த பருவ வரவின்கண் மாலைப் பொழுது கண்டு ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.**

**ப. உரை :** குறுஞ்சினை வேம்பின் ஒண்பழத்தை உண்டற்கு வாவல் உகக்கும் என்றது, அன்பின்றிப் பிரிந்த அவரது கூட்டத்தைத் யாம் விரும்பாநின்றேம் என்றவாறு.

**உரை :** தோழி, கேட்பாயாக : சிறிய குறுகிய சினைகளையு முடைய வேம்பின் இனிய பழத்தை

உண்டற்கு வாவல்கள் உயரப் படரும் மாலைக்காலம் காதலை யுடைய நம் தலைவர் சென்ற நாட்டின்கண் இல்லை போலும்; உளதாயின், இது நாம் குறித்த பருவமெனக் கொண்டு வாராதொழியா ராகலான் எ. று.

**வாவல்,** வௌவால். **உகத்தல்,** உயர்தல். "உகப்பே உயர்வே.[1]" **நாடு** என்புழி ஏழனுருபு தொக்கது. "ஐயும் கண்ணும் அல்லாப் பொருள்வயின், மெய்யுருபு தொகா இறுதியான[2]" என்பர். காதலர், நம்காதலை யுடையவர். "வேம்பி ஞெண்பழம் முணை இ யிருப்பைத் தேம்பால் செற்ற தீம்பழன் நசைஇ, வைகுபனி யுழந்த வாவல்[3]" என்று பிறரும் கூறுதலால், வாவல் வேம்பின் பழம் உண்டல் கொள்க. தான் குறித்த பருவமே யன்றி, அப் பருவத்திற் குரிய சிறுபொழுதாய் மாலையுமென நின்றமை யின் உம்மை எச்சவும்மை.

காதற்காமக்கூட்டம் தனிமையில் சிறக்கும் இயல்பிற் றுதலின், தனிமைக் குரிய மாலைப்போது வரின் வேட்கை எழுந்து வெதுப்புவது காமத்துக்கு இயற்கை; "காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலை மலரும் இந் நோய்[4]" எனச் சான்றோரும் கூறுப. மாலைப்போதில் தான் எய்தி வருந்தும் வருத்தம் பிரிந்துறையும் தலைமகற்கும் உளதாயின் நீட்டியாது மீள்வன் என்ற கருத்தால் **மாலை யும் இன்றுகொல் சென்ற நாட்டே** என்றும், தலைமகன் பால் உளதாகிய காதல் தன் உள்ளத்தில் கிடந்து வருத்துவது போல அவன் உள்ளத்துக் கிடக்கும் காதல் மாலைப்போதில் தோன்றி அவனை வருத்து மெனவும் அதனுல் அவன் விரைந்து வருவன் எனவும் கருதிக் **காத லர்** என்றும் கூறினள், "புன்கண் மாலையும் புலம்பும் இன்று கொல் தோழி யவர் சென்ற நாட்டே[5]" என்று பிறுண்டும் கூறுதல் காண்க.

1. தொல். சொல். . 2. ஷை. ஷை 3. நற். 279.
4. குறள். . 5. குறுந். 330.

வேம்பின் நறும்பழம் உண்டற்கு வாவல் உகக்கும் மாலை என்றதனால், மாலைப்போதில் தலைமகன் கூட்டத்தைத் தலைவி நினைத்தற்கு ஏதுக் கூறியவாறாயிற்று. **பழைய வுரைகாரர்,** காதலர் என்றது எதிர்மறைக் குறிப்பு மொழியாகக் கொண்டு அன்பின்றிப் பிரிந்தோர்பால் இன்பம் பெறக் கருதித் தலைவி வருந்துதற்கு உள்ளுறை கொண்டார். "எமிய மாக ஈங்குத் துறந்தோர் தமியராக இனிய கொல்லோ........ தலைவரம் பறியாது வருந்துமென் நெஞ்சே [1]" என்று பிறரும் கூறுதல் காண்க. இது பாலைத் திணைக்கண் மாலை வந்த திணைமயக்கம். (கூ)

340. *அம்ம வாழி தோழி காதலர்*
*உள்ளார் கொல்லோ மருளற் றனங்கொல்*
*விட்டுச் சென்றனர் நம்மே*
*தட்டைத் தீயி னூரல ரெழவே.*

இது, தலைமகன் பிரிந்துழிக் கடிதின் வருவரென ஆற்றியிருந்த தலைவி அவன் நீட்டித்துழி ஆற்றாது தோழிக்குச் சொல்லியது.

**உரை :** தோழி, கேட்பாயாக: காதலர் நம்மை ஆற்றியிருத்தற் குரியன கூறிப் பிரிந்து சென்றாராக, ஊர்க்கண் மூங்கிற்காட்டிற் பிறந்த தீப்போல, அலர் எழுந்தமையின் நாம் ஆற்றேம் என்பதனை நினையார்கொல்லோ? அன்றி, அவர் நினைத்தருளுதற் குரிய தகுதியினை நாம் இழந்தேமோ, கூறுக எ. று.

**தட்டை,** மூங்கில். தட்டையென்னும் கிளிகடி கருவியும் மூங்கிலாற் செய்யப்படுவது பற்றியே அப்பெயர் பெறுவதாயிற்று என அறிக. "அமையறுத் தியற்றிய வெவ்வாய்த் தட்டை [2]" எனவும், "வெதிர்புனை தட்டையேன் [3]" எனவும் சான்றோர் உரைப்பது காண்க.

1. 172. 2. அகம். 388. 3. நற். 147.

ஆற்றி யிருத்தற் குரியன, செய்பொருட் சிறப்புக் கூறுதலும் இன்ன பருவத்து வருவல் எனத் தெளிப் பனவும் பிறவுமாம். "அலரிற் றோன்றும் காமத்தின் சிறப்பே[1]" என்றும், "களவும் கற்பும் அலர்வரை வின்றே[2]" என்றும் கூறுப வாகலின், **ஊரல ரெழவே** என்பது அமைந்தது.

அலரெழுந்தவழித் தான் ஆற்றாது வருந்துதலை அறியின், தலைமகன் தன்னை விட்டுச் செல்லுதல் இல்லையா மாகலின், **உள்ளார் கொல்லோ** என்றும், ஒரு கால் அவர் நம்மையும் உடன்கொண்டு சேறற்குக் கருதினு ராயினும், அவரால் அவ்வாறு அருளப்படுதற் குரிய தகுதி நம்பால் இல்லைபோலும் என வருந்துவாள், **அருளற்றனம் கொல்** என்றும், **விட்டுச் சென்றனர் நம்மே** என்றும் கூறினாள். இஃது அழிவில் கூட்டத்து **அவன் பிரி வாற்றாமை.** காதலர் நம்மை உள்ளாதொழியா ரெனவும், நாமும் அவரது அருள் நிரம்பப் பெற்றுள்ளே மெனவும் கருதி அவர் கடிதின் வருவர் என ஆற்றியிருப்பே மாகவும், ஊரவர் எழுப்பும் அலரா லன்றோ யாம் பெரிதும் ஆற்றே மாயினேம் என்பாள், **தட்டைத் தீயின் ஊர் அலரெழவே** என்றாள். இது **புறஞ்சொல் மாணாக் கிளவி.** (மி)

---

1. தொல். பொ. 163. 2. ஷை. ஷை. 165.

## 35. இளவேனிற் பத்து.

இஃது இளவேனிற் பருவவரவினையே பொருளாகக் கொண்ட பாட்டுக்களின் தொகுதி யாகலின், இப்பெயர்த்தாயிற்று. **இளவேனில்,** பின்பனிக்குப் பின்னர்த் தாய சித்திரையும் வைகாசியும் கூடிய காலம்.

தலைமக்களது காதல்வாழ்வில் தலைமகன் பொருள் வினை குறித்துத் தலைவியினின்றும் பிரிந்து செல்லும் கட்டமையு முடையனாகலின், பிரியுங்கால் இன்ன காலத்தில் மீள்வன் எனத் தான் மீண்டுவரும் காலத்தைக் குறிப்பது இயல்பு. யாவர் எத்தொழிலைச் செய்யினும் அத்தொழிற்குக் காலமும் இடமும் இன்றியமையாத தொழிற்கூறுகளாகும். வினைக்குரிய இடத்தையும் அதனை முடித்தற்கு வேண்டும் காலத்தையும் முதற்கண் எண்ணுவது வினையாளரின் தலையாய செயல். இவற்றை நன்கு எண்ணித் துணிந்த பின்னரே வினைசெய்ய முற்படுவர் தலைமக்கள்; அப்பொழுதே தலைமகனும் தான் மேற்கொண்ட வினை பற்றிய பிரிவுக்குறிப்பைத் தலைவிக்குப் புலப்படுத்துவன்.

வினைநிகழ்ச்சிக்குரிய இடமும் காலமும், வினை இனிது முடிதற்கே யன்றித் அதனைத் தலைமகன் முடித்தற்கும் தலைமகள் ஆற்றியிருத்தற்கும் துணையும் பற்றுக்கோடுமாகும்.

தலைமகன் பிரியக் கருதுமிடத்து, அவனது அழிவில் கூட்டத்தால் இன்புற்றிருந்த தலைமகட்கு அவனது பிரிவு மிக்க துன்பத்தைச் செய்யும். அதனை ஆற்றியிருத்தல் வேண்டின் வினைமுற்றுதற் குரிய கூறுகளில் தலைமகள் பயின்றறிந்த தொன்று காணப்படுமாயின் அது நோக்கி அவள் ஆற்றியிருத்தல் இயலும். வினைசெயல் வகையில்

சிறப்பாக நிற்பன காலமும் இடமுமே. இ காலம் தலைமகள் பயின்றறிந்த தொன்று; ஆகலின், தலைமகன் தன் பிரிவின்கண் அதனையே வற்புறுத்துவன். மேலும், காதற்காம வாழ்க்கையில் நிகழும் இன்பம் காலத்தின் மேலதாகலின், தலைமகள், தலைமகனது பிரிவுக்கு வேண்டும் காலத்தையே நோக்குவள். அதனாலும், பிரியக் கருதுவோன் தன் பிரிவுக்கு வேண்டும் கால வளவை வினைமுற்றி மீளுங் காலத்தை எடுத்துரைக்கு முகத்தால் உணர்த்துகின்றான்.

பெரும்பொழுது சிறுபொழுதென இருவகையின் இயலும் காலத்துள், பொருள்வினைக்குப் பெரும் பொழுது சிறந்தமையால் அதுவே அவனால் வற்புறுத்தப் படுகிறது. பெரும்பொழுது பருவம் எனவும் வழங்கும். கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முது வேனில் எனப் பெரும்பொழுது அறுவகைப்படும். பாலைத் திணைக்கு இருவகை வேனிலும் பின்பனியும் உரிய வாகும். ஆயினும் ஈண்டு இளவேனிலே விதந்து கூறப்படுகிறது.

ஈண்டுத் தலைமகன் இளவேனிற் பருவத்து மீள்வதாக வற்புறுத்திப் பிரிந்துள்ளான். தலைவி அப்பருவவரவை நோக்கி வாழ்ந்து வருகின்றாள். வேனிற் பருவவரவும் வினைமுற்றி மீளும் தலைவன் வரவும் உடனிகழ வேண்டு மெனத் தலைவியது வேட்கையுள்ளம் விழைகின்றது. கருதியவாறு முடியாது மேற்கொண்ட வினை அப்பருவத் தின் இடையே முடிகிறது. பருவவரவுடன் தலைமகன் மீட்சி உடனிகழாமையால் தலைமகள் வருந்துகின்றாள். அவள் வருந்துவது பொருளாக வரும் பாட்டுக்கள் பத்து இங்கே தொகுக்கப்பட்டுள்ளன. தலைவன் தான் குறித்த பருவவரவில் வரத் தாழ்க்கினும் அது கழியுமுன் வந்து கூடுவன் என அறிக.

341. அவரோ வாரார் தான்வந் தன்றே
குயிற்பெடை யின்குர லகவ
அயிர்க்கேழ் நுண்ணற நுடங்கும் பொழுதே.

இது, தலைமகன் பிரிந்துழிக் குறித்த பருவம் வரக் கண்ட தலைமகள் சொல்லியது.

**உரை:** குயிலின்பெட்டை தன் இனிய குரலெடுத்துப் பாட, அயிரின் நிறமுற்ற நுண்ணிய மணல் காற்றால் அசைவுற்றுக் குவியும் பெரும் பொழுதாகிய இளவேனில் வந்ததே யன்றி அப்பருவத்தே வருவல் என்று குறித்துச் சென்ற நம் காதலர் வாராராயினர்; யான் எங்ஙனம் ஆற்றுவேன் எ. று.

**அயிர்,** நுண்மணல். குயில் கூவுதலை அகவுதல் என்றல் மரபு. "நுகர்குயில் அகவுங் குரல்கேட் போர்க்கே [1]" எனச் சான்றோர் கூறுதலான் அறிக. குயிலின் குரல் கூறவே அதனோடு இயைபுடைய "தாதும் தளிரும் மேதகத் துவன்றிப் பல்பூஞ் சோலைப் பன்மலர் நாற்றமொடு செவ்விதின் தென்றல்" வந்து அசைதலும் பெற்றாம். அதனால் அயிர் மணல் அசைவுற்று நுடங்குதலின், **அயிர்க்கேழ் நுண்மணல் நுடங்கும் பொழுது** என்றார். **கேழ்,** நிறப்பண்பு குறிக்கும் உரிச்சொற் றிரிபு.

இப்பருவத்தே வருவல் என்று குறித்த தலைமகன் வாராது, அவனாற் குறிக்கப்பெற்ற பருவம் வருதலாற் பயனின்று என்பாள், **அவரோ வாரார் தான்வந்தன்றே** என்றாள். "செவ்வி வேனில் வந்தன்று அம்ம தானே, வாரார்தோழி நம் காதலோரே [2]" என்றார் பிறரும். வேனில் வரவு கண்டதும் தலைமகன் வரவை உடன்நினைந்து நெஞ்சின் கண் அவன் திருவுருவைக் காண்டலின், **அவர்** என்று சுட்டி ஒழிந்தாள். பருவவரவோடு அவன் வரவும் உடனிகழாமையாற் புலந்து அவரென்றாள் என்று மாம்; "காதல்அவர் இலராக நீ நோவது பேதைமை [3]" என்றாற் போல. (க)

---

1. அகம். 97. 2. ஷை. 277. 3. குறள். 1242.

342. அவரோ வாரார் தான்வந் தன்றே
சுரும்புகளித் தாலு மிருஞ்சினைக்
கருங்கா னுணவங் கமழும் பொழுதே.

இதுவுமது.

**உரை :** வண்டினம் தேன் நுகர்ந்து ஒலிசெய்யும் பெரிய கிளைகளையும் கரிய அடியினையுமுடைய நுணமரத்தின் பூக்கள் மலர்ந்து மணங்கமழும் வேனிற்பருவம் வந்ததே யன்றி அப்பருவத்தே வருவல் என்று தெளித்துச் சென்ற அவர் வந்திலர், காண் எ, று.

**களித்தல்,** கள்ளுண்டு மகிழ்தல்; "களித்தானைக் காரணங் காட்டுதல் [1]" என்புழிப் போல. ஆலும் பொழுது, கமழும் பொழுது எனத் தனித்தனிக் கூட்டி யுரைக்க. **நுணவம்,** செய்யுண் முடிபெய்திச் சாரியை பெற்றது; "கருங்கான் மராஅ நுணவோ டலர [2]" என்ப வாகலின், **நுணா,** பெயராதலறிக. "கருங்கால் நுணவின் பெருஞ்சினை வான்பூ [3]" என்றார் பிறரும்.

வண்டு தேனுண்டு களித்தாடும் பொழுது வந்ததே யன்றி என் நலனுகர்ந்து மகிழ்கொள்ளும் தலைவர் வந்திலர் என்றும், சுரும்பு படிந்து தேனுண்ண நுணவம் மலர்ந்து மணம் கமழும் பொழுது வந்தெய்திற்றே யன்றி, யான் படிந்து இன்புறுமாறு மலர்ந்து விளங்கும் அவரது மார்பினைப் பெறும் பருவம் எய்திற் றன்று என இரங்கிய வாறும்.

தலைமகன் மார்பைக் கூடி மகிழ்தலைப் "பலர்படிந் துண்ணும் நின் பரத்தை மார்பு [4]" என்றும், அவனது விரிந்த மார்பை "மலர்ந்த மார்பு [5]" என்றும் உரைப்பது காண்க. "யாணர் வேனில்மன் இது, மாணலம் நுகரும் துணையுடை யோர்க்கே [6]" என்று சான்றோர் குறிப்பது காண்க. (உ)

1. குறள். 629. 2. ஐம்பது. 16. 3. அகம். 345.
4. ஐங். 84. 5. 51. 6. அகம். 341.

343. அவரோ வாரார் தான்வந் தன்றே
திணிநிலைக் கோங்கம் பயந்த
அணிமிகு கொழுமுகை யுடையும் பொழுதே.

இதுவுமது.

**ப. உரை : கோங்கின் அணிமிகு கொழுமுகை உடையும் பொழுது** என்றது, தலைவன் குறித்த பருவ வரவு கண்டு நெஞ்சு நெகிழ்ந்திருந்தவாறு உணர்த்தியது.

**உரை :** திணிந்த நிலையினையுடைய கோங்கமரம் அரும்பிய அழகு மிக்க கொழுவிய முகை முறுக்கவிழ்ந்து மலரும் வேனிற்பருவம் வந்தெய்திற்றே யன்றி அப்பருவம் குறித்துச் சென்ற காதலர் வந்திலர், காண் எ. று.

**திணி,** செறிவு. சூறைக் காற்றும் நீரின்மையும் வெயில் வெம்மையும் தாங்கி வளர்ந்து நிற்றலின், **திணிநிலைக் கோங்கம்** என்றும், தேனும் மணமும் செறிந்திருத்தலின், **கொழுமுகை** என்றும் கூறினர். "திணிநிலைக் கடம்பு [1]" எனப் பிறரும் வழங்குப. கோங்கின் கொழுவிய முகை மலர்ந்து மணம் கமழ்ந்து கழியும் பொழுது வந்தது என்றதனால், என் மேனி கெழுமிய நலம் கெட்டுப் பசலை பாய்ந்து கழியும் நிலை எய்துவ தாயிற்று என உள்ளுறுத் துரைத்தாளாம். (௩)

344. அவரோ வாரார் தான்வந் தன்றே
நறும்பூங் குரவம் பயந்த
செய்யாப் பாவை கொய்யும் பொழுதே.

இதுவுமது.

---

1. குறிஞ்சி. 176.

**உரை:** நறிய பூக்களையுடைய குராமரம் காய்த்த பாவையைக் கொய்யும் பருவமாகிய இளவேனில் வந்ததே யன்றி அப்பருவத்தின்கண் வருவல் எனக் குறித்துச் சென்ற அவர் வந்திலரே எ. று.

பாவை போறலின், குராவின்பூ, **பாவை** எனப்பட்டது; "ஈன்றாய் நீ பாவை இருங்குரவே[1]" என்றார் பிறரும். பாவை செய்துவைத்தலும் உண்மையின் **செய்யாப் பாவை** வெளிப்படை. "செய்வுறு பாவை[2]" என வருவது காண்க. **குரவம்,** நுணவம் என்புழிப் போலச் செய்யுண்முடிபெய்தி அம்முச் சாரியை பெற்றதாம். தலைவிபால் தாய்மை யுணர்வு தழைத்து வேட்கையால் முறுகி நிற்றலின், குரவம் பூத்த என்னாது **குரவம் பயந்த செய்யாப் பாவை** என்றாள் என அறிக. (௪)

*345. அவரோ வாரார் தான்வந் தன்றே*
*புதுப்பூ வதிரல் தாஅய்க்*
*கதுப்பற லணியுங் காமர் பொழுதே.*

இதுவுமது.

**உரை:** புதிய பூக்களையுடைய புனலிக்கொடி பரவிப் படர்ந்து மகளிர் கூந்தல் போலும் மணற்பரப்பினை அழகு செய்யும் அழகிய வேனிற்பருவம் வந்ததே யன்றி அப் பருவத்தின்கண் வருவல் என்ற அவர் வந்திலர் காண் எ.று.

**கதுப்பறல்,** முகமலர் என்புழிப் போல உவமத் தொகை. **அறல்,** மணல். ஈண்டு அது அம்மணல் பரந்த இடத்தின் மேற்று. அணிதல், கருமணல்மேற் பரந்து தன் வெள்ளிய மலர்களால் கண்டார்க்குக் கூந்தன் மேற் சூடியது போல் அழகுறத் தோன்றலின், **அதிரல் தாஅய்க்**

1. திணைமா. 150 : 65. 2. குறுந். 195.

**கதுப்பறல் அணியும்** என்றார். "புன்காற் பாதிரி அரிநிறத் திரள்வீ, நுண்கொடி அதிரலொடு நுணங்கறல் வரிப்ப [1]" எனப் பிறரும் கூறுவர். **தாஅய்** என்பதனைத் திரித்து, அதிரலின் புதிய பூக்களை மகளிர் தம் கூந்தலிற் சூடும் அழகிய பொழுதெனக் கூறுதலுமாம்; "மாக்கொடி யதிரற் பூவொடு பாதிரித், தூத்தகட் டெதிர்மலர் வேய்ந்த கூந்தல் [2]" என்பது காண்க. (ரு)

346. *அவரோ வாரார் தான்வந் தன்றே*
*அஞ்சினைப் பாதிரி யலர்ந்தெனச்*
*செங்க ணிருங்குயி லறையும் பொழுதே.*

இதுவுமது.

**உரை:** அழகிய கிளைகளையுடைய பாதிரிமரம் மலர்ந்ததாகச் சிவந்த கண்களையுடைய கருங்குயில் கூவும் இளவேனிற்பருவம் வந்து எய்திற்றே யன்றி அப்பருவத்தில் வருவல் எனத் தெளித்துச் சென்ற காதலர் வந்தாரிலர், என் செய்வேன் எ. று:

இளவேனிற் பருவத்துக் குயில், புணர்ந்தீர் பிரியன்மின் என்ப போலக் கூவிக் கேட்போர் மனத்து வேட்கை எழச் செய்தலின், **இருங்குயில் அறையும் பொழுது** என்றாள்; "செங்கண் இருங்குயில் நயவரக் கூஉம் இன்னிள வேனிலும் [3]" என்றார் பிறரும். (சு)

347. *அவரோ வாரார் தான்வந் தன்றே*
*எழிற்றகை யிளமுலை பொலியப்*
*பொரிப்பூம் புன்கின் முறிதிமிர் பொழுதே.*

1. அகம். 237.   2. நற். 52.   3. அகம். 229.

**உரை:** அழகும் பெருமையும் பொருந்திய இளமையான முலையகம் பொலிவெய்துமாறு பொரி போலும் பூக்களையுடைய புன்கமரத்தின் தளிர்களை யணியும் வேனிற் பருவம் வந்ததே யன்றி அப்பருவத்தின்கண் வருதும் எனத் தெளித்துச் சென்ற தலைவர் வந்திலர் எ. று.

முறி, இளந்தளிர். புன்கின் பூ பொரிபோல் இருத்தலால் **பொரிப்பூம் புன்கு** என்றார். பிறரும் "பொரியெனப் புன்கு அவிழ் அகன்துறை[1]" என்பர். புன்கின் இளந் தளிரை மார்பகம் குளிருமாறு அணிபவாகலின், **முறிதிமிர் பொழுது** என்றார்; "பொரிப்பூம் புன்கின் எழிற்றகை ஒண்முறி, சுணங்கணி வனமுலை அணங்குகொளத் திமிரி, நிழல்காண் டோறும் நெடிய வைகி[2]" எனப் பிறரும் கூறுதல் காண்க. **எழிற்றகை,** எழிலும் தகையுமென விரியும். **தகை,** அழகு. (எ)

348. அவரோ வாரார் தான்வந் தன்றே
வலஞ்சுரி மராஅம் வேய்ந்துநம்
மணங்கமழ் தண்பொழின் மலரும் பொழுதே

இதுவுமது.

**உரை:** வலமாகச் சுழித்த பூக்களையுடைய மராமரம் மலர்ந்து நறுமணம் கமழும் நம்முடைய தண்ணிய சோலையில் பூக்கள் மலரும் இளவேனிற் பருவம் வந்தெய்தியும், அப் பருவவரவில் வருவல் எனக் குறித்த அவர் வாராதொழிந்தனர், காண் எ. று.

**மராஅம்,** வெண்கடம்பு. இதன் பூ வலமாகச் சுழிந்திருத்தலின், **வலஞ்சுரி** எனப்பட்டது. "நெடுங்கான் மராஅத்துக் குறுஞ்சினை பற்றி, வலஞ்சுரி வாலிணர் கொய்தற்கு[3]" என்றும், "வலஞ்சுரி மராஅத்துச் சுரங்கமழ் புதுவீ[4]" என்றும் வருதல் காண்க. வெண்கடம்பின்

1. அகம். 116. 2. நற். 9. 3. ஐங். 383. 4. அகம். 83.

மலர்கள் சோலையிடை மலர்ந்த மரங்களிடை உயர்ந்து கிளைபரப்பிப் பூத்து விளங்குதலால் **மராஅம் வேய்ந்து** என்றார். சோலை மலர்ந்ததன் மேலும் மராஅம் மலர் வேய்ந்து பொலியும் பருவம் எனவே, பிரிவுற்ற மகளிர் தம் காதலர் வரவு கண்டு மகிழ்வதே யன்றி அவரது கூட்டம் பெற்று மகிழ்சிறக்கும் பருவம் என்றாளாம்; ஆகவே அப்பருவத்தே தலைமக்கள் பிழையாது போதரல் வேண்டும் என்பது தோன்ற **அவரோ வாரார்** என்றாள். (அ)

349. அவரோ வாரார் தான்வந் தன்றே
பொரிகாலன் மாஞ்சினை புதைய
எரிகா லிளந்தளி ரீனும் பொழுதே.

இதுவுமது.

**உரை :** பொரிந்த அடியினையுடைய மாமரம் தன் கிளைகள் மறையுமாறு எரிபோலும் இளந்தளிர்களை விட்டுத் திகழும் இளவேனில் வந்ததேயன்றி, அப்பருவத்து வருதும் என உரைத்துச் சென்ற தலைவரோ வந்திலர் எ. று.

மாமரத்தின் அடியும் பொரிந்தாற் போல் இருப்பது பற்றியே **பொரிகால் மா** என்றார்; இவ்வாறே இருப்பையும் இருத்தலின், "பொரிகால் பொதுட்டரை இருப்பை[1]" என்று கூறுகின்றனர்.

மாவின் தளிர் தீக்கொழுந்து போல நிறமும் ஒளியும் கொண்டு தோன்றுதலின், **எரிகால் இளந்தளிர்**[2] என்றும், முதலொடு கருப்பொருட்கு முதலுஞ் சினையுமாகிய ஒற்றுமை யுண்மையின், **ஈனும் பொழுது** என்றும் கூறினார்.

1. அகம். 95.

2. மாவின்தளிர் எரிபோல் கண்ட **நம்பியாரூரர்**, "சீதப் புனலுண் டெரியைக் காலும் சூதப் சோற்றுத் துறையே" என்றது காண்க.

மாமரம் இளந்தளிர் ஈன்று மாமைநிறம் கொண்டு விளங்குதல் கண்டு, தான் அஃது இன்றிப் பசலை பாய்ந்து உள்ளமை கருதி இரங்கியவாறும். மாவின் கரிய சினை தோன்றுவாறு இளந்தளிர் தோன்றி மறைக்கும் என்றதனால், தலைமகளின் மாமை தோன்றுதவாறு தலைமகன் பிரிவால் எழுந்த பசலை பாய்ந்து அழிக்கும் என்றவாறும்.

350. அவரோ வாரார் தான்வந் தன்றே
வேம்பி னொண்பூ வுறைப்பத்
தேம்படு கிளவியவர்த் தெளிக்கும் பொழுதே.

இதுவுமது.

**உரை :** வேம்பினுடைய ஒள்ளிய பூக்கள் உதிர்ந்து படிய, இனிமை யுற்ற சொற்களையுடைய தம் துணைவியரைத் தெளிவிக்கும் வேனிற்பருவம் வந்தெய்தியும், அப் பருவத்தே வருதும் எனத் தெளிவித்துச் சென்ற அவர் வந்திலர் எ. று.

வேம்பு வேனிற்காலத்து மலர்வது; "கருங்கால் வேம்பின் ஒண்பூ யாணர், என்னை யின்றியும் கழிவது கொல்லோ [1]" என்று சான்றோர் குறிப்பது காண்க. **உறைத்தல்**, மழைத்துளி போல், உதிர்தல். இயல்பாதல் பற்றித் **தெளிக்கும்** என நிகழ்காலம் வந்தது.[2] பிரிவு நயந்த தலைமகன், தன் பிரிவால் தலைமகள் மெலியாமைத் தேறியிருத்தற்பொருட்டு யாம் மீளலுறும் பருவம் இதுவெனத் தெளிய வற்புறுக்கும் பருவமாகலின், **தெளிக்கும் பொழுது** என்றார். "அந்தளிர் மாஅத்த லங்கன் மீமிசைச் செங்கணிருங்குயில் நயவரக் கூஉம் இன்னிள வேனிலும் வாரார், இன்னே வருதும் எனத் தெளித் தோரே [2]" என்றும், "முற்று வேனில் முன்னி வந்தோரே [3]" என்றும் கூறுவர்

1. தொல். பொ. 247. 2. அகம். 229. 3. நற். 86.

பிறரும். தான் கருதிய பிரிவினைத் தலைமகட்கு உணர்த்து வான், தலைவன், அவளது நலம் பாராட்டியும் நறுநுதல் நீவியும் மகிழ்விப்ப மகிழ்ந்து அவளும் சொல்லாடுதலின் **தேம்படு கிளவியவர்** என்றும் கூறினாள். "நறுநுதல் நீவி" **நலம்பாராட்டல்.** "நன்னர் நறுநுதல் நயந்தனை நீவி, நின்னிற் பிரியலெ னஞ்சலோம் பென்னும் நன்னர் மொழி யும் நீமொழிந் தனையே[1]" என்பதனால் அறிக.

**தேம்படு கிளவி யவர் தெளிக்கும் பொழுது** என்பது பாடமாயின், தேம்படு கிளவிகளால் அவர் தெளிய வற்புறுத்தும் பொழுது என உரைக்க. (ல)

---

1. கலி. 21.

## 36. வரவுரைத்த பத்து.

இது, வினை பொருள் முதலியவற்றைக் கருதிப் பிரிந்துசென்ற தலைமகன் மீண்டு வந்தமை பொருளாகத் தொடுத்த பாட்டுக்களின் தொகுதியாகலின், இப்பெயர்த் தாயிற்று.

பொருள்வினைக ளாகிய கடமை குறித்துப் பிரிந்த தலைமகன் மீண்டு வருவது உணர்ந்து தோழி கூறுவதும், வந்ததற்கு உரிய காரணம் கண்டு அத்தோழியே கூறுவதும், வந்த தலைமகன் தன் வரவுபற்றிக் கூறுவதும், இடைச்சுரத்து நிகழ்ந்தவற்றை அவன் கூறுவதும் என வரவு பொருளாகப் பல சொற்கள் கூறுதற்கு இடமுண்டு. மேற்கொண்ட வினை முடிந்த பின்னன்றித் தலைமகன் மீளுதல் இல்லை யாதலின், வினை முடியு முன்பே வந்தான் என்பது போலும் கருத்துத் தோன்றத் தோழி கூறினளாயினும், அது தலைவியை மகிழ்வித்தற்கு அவள் படைத்துக் கூறுவதாகக் கொள்ளற்பாற்றே யன்றி உண்மையாகக் கோடல் ஆகாது. "வினைக்குறை தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு [1]" என்ப வாகலின், வினை குறைபட மீளுதல் தலைமகற்கு இயல்பன்றென அறிக. அவனே, "செய்வினை முடியாது எவ்வம் செய்தல், எய்யா மையோடு இளிவு தலைத் தரும்என [2]" உறுதி கோள்வதும், முடித்தபின், தன் காதலியை நினைந்து, "உள்ளிய வினைமுடித் தன்ன இனியோள் [3]" என மகிழ்வதும் காண்க.

351. அத்தப் பலவின் வெயிறின் சிறுகாய்
அருஞ்சுரஞ் செல்வோ ரருந்தினர் கழியும்
காடுபின் னொழிய வந்தனர் தீர்கினிப்
பல்லித ழுண்கண் மடந்தைநின்
நல்லெழி லல்கல் வாடிய நிலையே.

1. குறள். 612. 2. நற். 284. 3. ஷை. 3.

இது, பிரிந்த தலைமகன் வரவுணர்ந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.

**உரை:** நெறிக்கண் நின்ற பலாவின் வெயிலால் வெதுப்பப் பெற்ற சிறிய காயைச் செல்லுதற் கரிய சுரத்தின்கட் செல்வோர் அருந்தி நீங்கும் காடுகள் பிற்படுமாறு நம் காதலர் வந்தன ராகலின், பலவாகிய இதழ்களையுடைய மலர்போலும் மையுண்ட கண்ணையுடைய மடந்தையே, நீ இப்பொழுது நின்னுடைய நல்ல அழகு நாளும் வாடி வருந்தி நின்ற நிலையினை இனி விடுவாயாக எ. று.

**வெயில் தின்னுத** லாவது, வெயிலின் வெப்பமிகுதியால் வெம்பிக் கழிதல். **தின்றல்,** இலக்கணை. பலவின்காய் வெப்பத்தாற் சுளைப்பயன் குன்றி யழிதலின், **சிறு காய்** என்றார். **தீர்தல்,** விடுதல். "தீர்தலும் தீர்த்தலும் விடற் பொருட் டாகும்[1]" என்ப வாகலின், **அல்கலும்** என்ற உம்மை விகாரத்தால் தொக்கது. "நம் உயிர்வெங்காதலி திருமுகத் தலமரும் கண் நினைந்து அல்கலும் பெருமர வள்ளியிற் பிணிக்கும்[2]" என்று பிறரும் கூறுதல் காண்க. **தீர்க இனி** என்றவிடத்து அகரம் விகாரத்தால் தொக்கது. **மடந்தை,** விளி.

தலைமகன் பிரிவின்கண் அவன் செல்லுதற் குரிய சுரத்தின் கொடுமை கூறப்பட்ட தாயினும், தோழி அதனை இப்பொழுது பெயர்த்தும் கூறியது, தலைமகன் வரவு உணர்ந்து கூறும் கூற்றுக்குத் தோற்றுவா யாயிற்று. அத்தப் பலவு, உண்டற் குரிய அளவு பெருக்காத சிறுகா யாயினும் சுரஞ்செல்வோர்க்கு உணவாய் அவரது செலவினை ஊக்கும் என்று தோழி கூறியது, பிரிந்தவிடத்து நினது நினைவு உட்னுறைவின் பயன்தாரா தாயினும் வினை முற்றி மீளுதற்கு ஊக்கினமையின், காதலர் **காடு பின்**

1. தொல். சொல். 318 2. நற். 269.

ய **வந்தனர்** என்றாள். அச் சொல்லைக் கேட்டதும் தலைமகள் உளம் மகிழ்ந்து கண் மலர்ந்து குளிர நோக்கினமையின், அதனை வியந்து **பல்லிதழ் உண்கண் மடந்தை** என்றும், தலைமகன் பிரிவின்கண் தன்னை ஒப்பனை செய்தலும் பூச்சூடலும் இன்றி அவனையே நினைந்து மேனி மெலிந்திருந்தமையின், இனி அந்நிலையின் நீங்கித் தலைமகன் கூட்டத்தால் பேரழகு திகழ இன்புறுவாய் என்பாள், **நல்லெழில் அல்கல் வாடிய நிலை இனி தீர்க** என்றும் கூறினாள். கை செய்து பிறப்பிக்கும் செயற்கை யழகன்றி இயற்கையே நல்லெழில் சிறந்து விளங்குமாறு தோன்ற **நல்லெழில்** என்றாள்.

**நல்லெழில் அல்குல்** என்பது பாடமாயின், **நல்லெழில்** உயரவேண்டுமிடம் உயர்ந்தும் தாழவேண்டுமிடம் தாழ்ந்தும் இருத்தல் எனவும், **அல்குல்,** அல்குலிடத்து அழகிய வரி எனவும் உரைக்க; "தேரக லல்குல் அவ்வரி வாட[1]" என்று பிறரும் கூறுதல் காண்க. (க)

352. விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்
எழுத்துடை நடுக லன்ன விழுப்பிணர்ப்
பெருங்கை யானை யிருஞ்சின முறைக்கும்
வெஞ்சுர மரிய வென்னார்
வந்தனர் தோழிநங் காத லோரே.

இதுவுமது.

**ப. உரை :** **வெஞ்சுரம் அரிய என்னார் வந்தனர்** என்றது, இன்று இடையிலே தங்காது வந்தனர் எ. று.

**உரை ;** விழுமிய அம்பு தொடுத்தலையுடைய வீரர் தம் வில்லிடைத் தொடுத்துவிட, எதிர்நின்று உயிர்கொடுத்து வீழ்ந்த வீரர்பொருட்டு நடப்பட்ட பெயரும் பீடுமெழுதிய நடுகல்லை யொக்கும் விழுமிய சருச்சரை பொருந்திய பெரிய

1. ஐங் 316.

கையினையுடைய யானை, பெரிய சினம் மிக்குத் திரியும் வெவ்விய காடுகள் கடத்தற் கரியன எனக் கருதித் தாழ்க் காது விரைந்து வந்தனர் நம் காதலர் எ. று.

வில்லிடைத் தொடுக்கப்படுதலின், **அம்பு, தொடை** எனவும், குறித்தார்மேற் பிழையாது சென்று தாக்குத லால், **விழுத்தொடை** யெனவும் குறிக்கப்பட்டது. **தொடை** இப்பொருட்டாதல், "தொடைமடி களைந்த சிலை யுடைய மறவர்[1]" எனவும், "கடுமா மறவர் கதழ்தொடை மறப்ப[2]" எனவும் வழங்குதல் காண்க. போரேற்று எதிர் நின்று பொருது வீழ்ந்த மறவர்க்குக் கல் நடுப வென்பது, "என்னைமுன் நில்லன்மின் தெவ்விர், பலர் என்னை முன் னின்று கல் நின்றவர்[3]" என்பதனு லுணர்க. நடுகல்லிற் பெயரும் பீடும் எழுதுதல் முறையாகலின், **எழுத்துடை நடுகல்** எனப்பட்டது; "பேரும் பீடு மெழுதி யதர்தொறும், பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்[4]" என்றும், "அணிமயிற் பீலி சூட்டிப் பெயர்பொறித்து இனிநட் டனரே கல்லும்[5]" என்றும் கூறுப. "விழுத்தொடை மறவர் வில்லிட வீழ்ந் தோர், எழுத்துடை நடுகல் இன்னிழல் வதியும், அருஞ் சுரக் கவலை[6]" என்றார் பிறரும். **பிணர்,** சருச்சரை. "இரும் பிணர்த் துறுகல்[7]" என்றது காண்க. **உறைக்கும்,** உறு என்னும் மிகுதிப்பொருட்டாய உரிச்சொல் அடியாகப் பிறந்த பெயரெச்சவினை. "உப்புறைப்ப என்றாற் போலக் கொள்க[8]" என்பர் **நச்சினார்க்கினியர். நடுகல் அன்ன பெருங்கை** என்றது, செயலற்று இருக்குமாறு தோன்ற

சுரத்தின் வெம்மையும் கடத்தற் கருமையும் தோன்ற, வெம்மை மிகுதியால் செயலற்ற யானையும் **சினம் சிறக்கும்** என்றாள். வினைமுற்றினு ராயினும் சுரத்தின் வெம்மையும்

1. பதிற். 60. 2. ஷை. 28. 3. குறள். 771.
4. அகம், 131. 5. புறம். 264. 6. அகம். 53.
7. ஐங். 239. 8. பெரும்பாண். 379. உரை.

அருமையும் நோக்கித் தாழ்த்து வருதற் குரியர் காதலர் என்பாள், **வெஞ்சுரம் அரிய** என்றும், அதனைப் பொரு ளாகக் கொள்ளாது விரைந்து வந்தனர் என்றற்கு **அரிய என்னுர் வந்தனர்** என்றும், அதற்குக் காரணம் அவர் உள்ளத்தில் நம்பால் பெருகி நிற்கும் காதல் என்பாள், **நம் காதலோர்** என்றும் கூறினுள். (உ)

353. எரிக்கொடிக் கவைஇய செவ்வரை போலச்
சுடர்ப்பூண் விளங்கு மேந்தெழி லகலம்
நீயினிது முயங்க வந்தனர்
மாயிருஞ் சோலை மலையிறந் தோரே.

இதுவுமது.

**உரை:** நெருப்புக்கொடி சூழ்ந்த சிவந்த மலையைப் போல ஒளிவிடும் பூணுரம் கிடந்து திகழும் உயர்ந்த அழகிய தன் மார்பினை நீ இனிது முயங்கும்வண்ணம் மிகப் பெரிய சோலைகளை யுடைய மலைகளைக் கடந்து சென்ற நம் காதலர் மீண்டு வந்தனர், காண் எ. று.

**எரிக்கொடி,** மலையில் கொடிபோல் தொடர்புற்று நின்றெரியும் தீயொழுங்கு. சோதிக்கொடி என்னும் ஒரு வகைக் கொடி என்றும் கூறுப். **கவைஇய,** கவவு என்னும் உரிச்சொல் லடியாக வந்த வினைத்திரிசொல். எரிக்கொடி சுடர்ப்பூணுக்கும் செவ்வரை அகலத்துக்கும் உவமை. எரிக்கொடி கவைஇய செவ்வரையை இரவுப்போதில் காண்பார், இவ்வுவமையின் அழகை இன்புறுவர். மலை இறந்தோர், அகலம் நீ முயங்க வந்தனர் என இயையும்.

காதலன் மார்பை முயங்குதலில் ஆரா வேட்கை யுடையளாய், "ஆர்கலி வெற்பன் மார்புநயந் துறையும் யானே, யன்றியும் உளர்கொல் [1]" என வருந்தின ளாத

1. நற். 104.

வின், நீ இனிது முயங்க வந்தனர் என்றாள்; "யாம் முயங்கு தோறும் முயங்குதோறும் முயங்க முகந்துகொண்டு, அடக்குவ மன்னோ தோழி ...சாரல் நாடன் சாயன் மார்பே [1]" எனவும், "வேட்டோர்க்கு அமிழ்தத் தன்ன கமழ்தார் மார்பு [2]" எனவும் மகளிர் தெரிவிப்பது காண்க.

**முயங்க வந்தனர்** என்றது இனிப் பிரிவில்லை யாமாறு வினைமுற்றி மீண்டனர் என்றவாறு. (௩)

354. *ஈர்ம்பிணவு புணர்ந்த செந்நா யேற்றை*
*மறியுடை மான்பிணை கொள்ளாது கழியும்*
*அரிய சுரன் வந்தனரே*
*தெரியிழை யரிவைநின் பண்புதர வந்தே.*

இதுவுமது.

**உரை:** நம் காதலர் குளிர்ந்த பெண்ணுயைக் கூடிய செந்நாயின் ஆண், கன்றை யுடைய பெண்மானைக் கொள் ளன்றி நீங்கும் அரிய காட்டினைக் கடந்து, ஆராய்ந் ந்த இழைகளை யுடைய அரிவையாகிய நின் குணங்கள் நினைவிடைத் தோன்றுதலால் விரைந்து போந்தனர் எ. று.

**ஈரம்,** அன்பு. நிறைந்த அன்புடைய பிணவு என்பார், **ஈர்ம்பிணவு** என்றார். காதற்காமத் தொடர்புடைய ஆணுக்குப் பெண் வெம்மைக்காலத்தில் தண்மையும், தட்பக்காலத்து வெம்மையும் தந்து இன்புறுத்துவது பற்றிப் பிணவை **ஈர்ம்பிணவு** என்றார் என்றுமாம். "வேனி லானே தண்ணியள் பனியே, ....அலங்கு வெயிற் பொதிந்த தாமரை உள்ளகத் தன்ன சிறுவெம்மையளே [3]" என்று சான்றோர் உரைப்பது காண்க. "ஆற்றலொடு புணர்ந்த ஆண்பாற் கெல்லாம் ஏற்றைக் கிளவி உரித்தென மொழிப [4]" ஆகலின், **செந்நாயேற்றை** என்றார். **மறி,**

1. அகம். 328. 2. ஷை. 332. 3. குறுந். 376.
4. தொல். பொ.

மான்கன்று. மறியுடைமை மான்பிணையைக் கொள்ளாமைக்கு ஏது என வுணர்க. நின் பண்பு தர வந்தனர் என இயையும். காதற் பிணவினைக் கூடினமையால் செந்நாயேற்றை மான்பிணையைக் கொள்ளாது கழிதலைக் கண்ட காதலர், நின் பண்புகளை அப்பிணவு காட்டக் கண்டு ஆற்றாராய்ப் போந்தனர் என்பாள், **நின் பண்புதர விரைந்தே** என்றும், கொள்ளற்பாற்றாய மான்பிணையைக் கொள்ளாது கழியும் அருள் மேவுதற்குக் காரணமா யிருந்தமையின், **ஈர்ம்பிணவு புணர்ந்த செந்நாய்** என்றும் கூறினாள்.

அவர் தாமே வருவாராயினும், நின் பண்புகள் தோன்றி அவர் உள்ளத்தை விரைந்து ஈர்த்தமையின், சுரத்தின் அருமை நோக்காது விரைந்து வந்தார் என்றற்கு, **நின் பண்புதர விரைந்து** என்றும், **அரிய சுரன்** என்றும் விதந்து கூறினாள். பிறரும் தலைமகனே. "ஒள்ளெரி மேய்ந்த சுரத்திடை, உள்ளம் வாங்கத் தந்த நின்குணனே[1]" என்பது காண்க. (௫)

355. *திருந்திழை யரிவை நின்னல முள்ளி*
*அருஞ்செயற் பொருட்பிணி பெருந்திரு வுறுகெனச்*
*சொல்லாது பெயர்தந் தேனே பல்பொறிச்*
*சிறுகண் யானை திரிதரும்*
*நெறிவிலங் கதர் கானத் தானே.*

இது, நினைந்த வெல்லையளவும் பொருண் முற்றி நில்லாது பெற்ற பொருள்கொண்டு தலைவியை நினைந்து மீண்ட தலைமகன் அவட்குச் சொல்லியது.

ப. உரை: **பொருட்பிணி பெருந்திரு உறுக** என்றது, மேல் உளதாகும் பொருட்பிணி திருவுறுவதாக எனக் குறிப்பின் வெகுண்டு உரைத்தது. **சொல்லாது பெயர்தந்தேனே** என்றது உடன்சென்றோர் விலக்குவரெனச் சொல்லாது மீண்டேன் எ. று.

---

1. ஐங். 356.

**உரை :** திருந்திய இழைகளை யணிந்த அரிவையே, பலவாகிய பொறிகளையும் சிறிய கண்களையு முடைய யானை திரியும் நெறியின்கட் குறுக்கிடும் சிறுவழிகளை யுடைய கானத்தின்கண், யான் நின்னலத்தை நினைந்து அரிய செயல் வகை யாகிய பொருட்பேறு பெருந்திரு வுறுக என விடுத்து உடன்போந்தோர் ஒருவரிடத்துங்கூறு துபெயர்ந்து மீண்டேன் எ. று.

**திருந்திழை,** அழகிய இழைகள். **அரிவை,** விளி, காதல்வாழ்வில் ஒருபால் இன்மையது இளிவும் உடைமையது உயர்ச்சியும் ஈர்ப்ப, ஒருபால் காதலியினுடைய அன்பினது அகலமும் அகற்சியது அருமையும் ஒன்று து பிணித்துத் தடுக்க, பின்னைய இரண்டின்பாற் செல்லாது பொருளே கருதிச் செல்லும் செயல் அருமை பற்றி **அருஞ்செயற்பொருள்** என்றும், பொருட்பேறு பயக்கும் அவா, இன்பம் விழையாது பொருளீட்டமே விழையுமாறு உள்ளத்தைப் பிணித்தலின், பொருளைப் **பொருட்பிணி** என்றும் கூறினர். **பெருந்திருவுறுக** என்றது வேண்டா என விலக்குதற் பொருளில் வந்த **குறிப்புமொழி.**[1] சுரத்தின்கண் நெடிது செல்லும் நெறியில் சிறுசிறு வழிகள் குறுக்கிட்டுப் போதலுண்மையின் அதனை, **நெறி விலங்கு அதர்** என்ப.

இல்லிருந்து அறஞ்செய்து பெறும் இன்பம் வேண்டி அறிவு துணையாக மிகுபொருள் நல்கும் பொருட்பற்றை வென்று வந்தா னாகலின், தலைவியது அறிவுநலத்தை இழைநலத்தால் வியந்து **திருந்திழை அரிவை** என்றும், அறிவின் வெற்றிக்குத் தலைவியின் "கற்பும் காமமும்[2]" ஆகிய மாண்பு உள்ளத்தில் தோன்றித் துணைபுரிந்தமை

---

1. இச்சொற்றொடரின் நலங்கண்டு வியந்த **திருத்தக்கதேவர்,** "எரி மாலை வேனுதியின் இறக்கிக் காமன் அடுகணையால், திருமாலை வெம்முலைமேல் திளைக்கும் தேவர் **திருவுறுக,** வருமாலை எண்வினையும் அகற்றி இன்பக்கூடாக்கித் தரும்மாலை யல்லதுயான் தலையிற் றொழ்ந்து பணிவேனே" (சீவக. 961) என்று பாடுவது ஈண்டு நோக்கத்தக்கது. 2. தொல். பொ. 152.

யின், **நின் நலம் உள்ளி** என்றும் குறித்தான். பொருள் செய்வான் பிரிந்தவிடத்து மிகுபொருள் எய்தி மேன் மேலும் உள்ளத்தைப் பிணித்துத் தன்பால் ஈர்த்தமையின் அதனைப் **பொருட்பிணி** என்றும், பெற்றது கொண்டு அமைந்து "அரிதுபெறு சிறப்பின் காமத்தியற்கையை[1]" நினைந்து பெயர்தரக் கருதியபோது, எளிதில் பெயர விடா மையின் அதனை **அருஞ்செயற் பொருட்பிணி** என்றும்; பின்னர் வேண்டப்படுவ தாகலின், இகழ்ந்து நீங்கும் குறிப்பு இன்றுமாறு **பெருந்திரு வுறுக** என்றும், உடன்வந்த பாங்கர்க்குச் சொல்லியவழி, அவர் பொருட்பிணிக்குத் துணையாய்ப் பெற்றது கொண்டு அமையும் உள்ளத்தைச் சிதைத்துப் பேதுறுவிப்பர் என்பது பற்றிச் **சொல்லாது பெயர்தந்தேன்** என்றும் கூறினன்.[2]

ஏனைப் பொருளினும் தலைமகள் நலம் சிறப்புடைத் தாதல், "உரனுடை யுள்ளத்தை செய்பொருண் முற்றிய, வளமையா னாகும் பொருளிது வென்பாய், இளமையும் காமமும் நின்பாணி நில்லா[3]" என்றும், "வருவிருந் தோம்பித், தன்னகர் விழையக் கூடின், இன்னுறல் வியன் மார்ப அதுமனும் பொருளே[4]" என்றும் சான்றோர் கூறுதலால் அறிக.

**செல்லாது பெயர்தந்தேனே** என்ற பாடத்துக்கு மேற் செல்லாது பெற்ற பொருள்கொண்டு மீண்டேன் என்று உரைக்க. (௫)

356. உள்ளுதற் கினிய மன்ற செல்வர்
யானை பிணித்த பொன்புனை கயிற்றின்
ஒள்ளெரி மேய்ந்த சுரத்திடை
உள்ளம் வாங்கத் தந்தநின் குணனே.

---

1. அகம். 353. 2. தொல். பொ. நச்சி. 45. 3. கலி. 12.
4. ஷை. 8.

இது, வினைமுற்றி மீண்டு வந்த தலைமகன் தலைவிக்கு அவள் குணம் புகழ்ந்து கூறியது.

**உரை :** செல்வமுடையோர் தம் யானைகளைப் பிணித்த பொன்னால் செய்யப்பட்ட கயிற்றைப் போல, ஒள்ளிய நெருப்புத் தொடர்ந்து சென்ற காட்டின்கண், வினைமேற் சென்ற நெஞ்சினை மடங்கி மீளும்வகைத் தந்த நின் குணங்கள் நினைத்தற்கு இனிவா யிராநின்றன, காண் எ. று.

பொன்புனை கயிறு கொண்டு பிணித்தல் பிறர்க் காகாமையின், **செல்வர்** என்றார். **ஒள்ளெரி** என்றார், உலர்ந்த மரஞ்செடி கொடிகளையே பற்றி ஒழுங்குறத் தொடர்ந்து நின்று எரிவது பற்றி. செல்வர் மனைகளில் கந்திற் பிணிப்புண்டு நிற்கும் யானையின் காலைச் சூழ்ந்து அது நிற்கும் இடத்துக்கும் கந்துக்கும் இடையே கிடந்து ஒளிசெய்யும் பொற்கயிறு போல ஓரிடத்தே சூழ்ந்தெரியும் காட்டுத்தீக் கொடிபோல் தொடர்ந்தோடிப் பிறிதோரிடத்தில் சூழ்ந்து நின்று எரிவது பற்றி யானை பிணித்த பொற்கயிறு உவமையாயிற்று. **வாங்குதல்,** மீளுதல்.

எரிமேயும் சுரத்தின்கண், அதனால் வளைப்புண்ட பொருள் புலர்ந்து அதற்கே இரையாவது போலப் பொருள் வேட்கையாற் பிணிப்புண்ட உள்ளம், "நாளது செலவும் மூப்பினது வரவும், அரிதுபெறு சிறப்பின் காமத் தியற்கையும்[1]" நினையாது அதற்கே இரையாகிக் கழியும் என அஞ்சிப் பொருள்முற்றியபின் அவ்வுள்ளத்தை மீட்க வேண்டுதலின், **ஒள்ளெரி மேய்ந்த சுரத்திடை உள்ளம் வாங்க** என்றும், அவ்வாறு வாங்கிய உள்ளத்தைப் பொருள்வேட்கை விடாது செயலறுவித்தலின், அக்காலை நெஞ்சின்கண் தோன்றிச் சுரத்தின் வெம்மையும் பொருளின் அருமையும் காட்டாது தலைமகளின் உருநலனும் செயல்மாண்பும் காட்டி இன்பம் செய்து மனைவயிற்

1. அகம். 353.

கொணர்ந்தமையின், **தந்த நின்குணன்** என்றும், "கெடுங் காலைக் கைவிடுவார் கேண்மை உள்ளினும் உள்ளம் சுடுவது[1]" போலாது, கெடுங்காலைக் கைகொடுத்து இன்பத்தில் இனிதுறையச் செய்தலின், உள்ளுதொறும் இன்பம் செய்கின்றன என்பான், **உள்ளுதற் கினிய மன்ற** என்றும் கூறினான். "மகிழுணி முறுவல் மாண்ட சேக்கை, நம்மொடு நன்மொழி நவிலும், பொம்மலோதிப் புனையிழை குணனே[2]" என்று பிறரும் கூறுதல் காண்க.

எஞ்ஞான்றும் தன் நெஞ்சிடைக் கிடந்து உள்ளுதொறும் தோன்றி இனிமை செய்தலே யன்றி, ஒள்ளெரி மேய்ந்த சுரமாயினும், அதன் வெம்மையை அவள் குணங்கள் தம் இனிமைப்பண்பினால் தோன்றுவாறு மறைத்து வினைமுற்றுதற் கேதுவாயினமையின் **உள்ளுதற் கினிய மன்ற** என்றான் என்றுமாம். (௬)

*357. குரவ மலர மரவம் பூப்பச்*
*சுரனணி கொண்ட கானங் காணூஉ*
*அழுங்குக செய்பொருட் செலவென விரும்பிநின்*
*அங்கலிழ் மாமை கவின*
*வந்தனர் தோழிநங் காத லோரே.*

இது, பொருள்வயிற் பிரிந்து ஆண்டு உறைகின்ற தலைமகன் குறித்த பருவவரவு கண்டு கடிதின் மீண்டு வந்தமை தோழி தலைமகட்குச் சொல்லியது.

**ப. உரை: அழுங்குக செய்பொருட் செலவு** என்றது மேல் உளதாகும் பொருட்பிணிச் செலவும் இனிக் கெடுவதாக எ.று.

**உரை:** தோழி, குரவமும் கடம்பும் பூத்து விளங்குதலால் அழகு திகழும் சுரமாகிய கானத்தைக் கண்டு, அது, தான் வருவலெனக் குறித்துப் போந்த பருவ மாதல்

1. குறள். 799. 2. அகம். 353.

அறிந்து மேல் உளதாகும் பொருள்வயிற் செலவும் இனி ஒழிக என உட்கொண்டு, நம் காதலர் நின்னை விரும்பி நின் அழகொழுகும் மாமைநிறம் வனப்பு மிக வந்தெய்தினர், காண் எ, று.

குரவம், மரவம் என்பன நுணவம் போலச் செய்யுண் முடிபெய்தி அம்முச்சாரியை பெற்றன. இவற்றின் சொன்னிலை குரா மரா என்பன. சுரம் குரவமும் மரவமும் பூத்து அழகுற்றுக் கானம்போல் இனிய காட்சி வழங்குதலின் **சுரன் அணிகொண்ட கானம்** என்றார். குரவம் முதலியன வேனிற் பருவ வரவில் மலருவன என அறிக. "மராஅத்து வேனில் அஞ்சினை கமழும்[1]" என்றும், "குரவு மலர்ந்து அற்சிரம் நீங்கிய அரும்பத வேனில்[2]" என்றும் சான்றோர் கூறுவது காண்க. காதலர், கானம் காணூஉ விரும்பி, மாமை கவின வந்தனர் என இயையும்.

பிரியுங்கால் குரவமும் மரவமும் மலரும் வேனிற் பருவவரவில் மீண்டு வருவதாகத் தலைமகன் வற்புறுத்தினமையின், **சுரன் அணிகொண்ட கானம் காணூஉ** என்றும், பொருள்வயிற் பிரிந்தவன் மேலும் பொருளே விரும்பி ஆண்டு உறைந்தமையின் அதனைத் தவிர்த்து மீளுவது தோன்ற, **அழுங்குக செய்பொருட் செலவு என** என்றும், நின்பால் உளதாகிய காதல் மீளுதலையே ஊக்கினமையின், **விரும்பி** என்றும் தோழி கூறினாள். பிறாண்டும், "காமர் வேனில், வெயிலவிர் புரையும் வீததை மராஅத்துக், "குயிலிடு பூசல் எம்மொடு கேட்ப, வருவேம் என்ற பருவம்[3]" என்பதனால் வேனிலில் வரவு கூறுமாறு காண்க. (எ)

1. குறுந். 22. 2. அகம். 97. 3. ஷை. 317.

358\. கோடுயர் பன்மலை யிறந்தன ராயினும்
நீட விடுமோ மற்றே நீடுநினைந்து
துடைத்தொறுந் துடைத்தொறுங் கலங்கி
உடைத்தெழு வெள்ள மாகிய கண்ணே.

இது, தலைமகள் ஆற்றுமை கண்டு பிரிந்த தலைமகன் வந்தன ளுகத் தோழி சொல்லியது.

**உரை:** காதலர், சிகரங்களால் உயர்ந்த பலவாகிய மலைகளைக் கடந்து சென்றாராயினும், நீ நீள நினைந்து வருந்துதலால் துடைக்குந்தொறும் நில்லாது, அணையை உடைத்தெழும் நீர்ப்பெருக்குப்போல் சொரியும் நின் கண்ணீர், அவரை விரைய மீள்வித்தலன்றி நீட்டித்தலைச் செய்ய விடாது, காண் எ. று.

**கோடு**, சிகரம். **மற்று**, வினைமாற்று. ஓகாரம், எதிர்மறை. **நீடு நினைதல்**, காதலர் விரைந்து வருவர் கொல்லோ, வாராது தாழ்ப்பர் கொல்லோ என ஐயுற்றுக் கலங்குதல். வினையெச்சம் காரணப்பொருட்டு. அடுக்குக் கண்ணீர் மிகுதி யுணர்த்தித் தலைவியது ஆற்றுமையைப் புலப்படுத்திற்று. நீரைத் துடைத்தவழி அது நில்லாது பெருகுமாயினும், மேன்மேலும் துடைப்பதை யன்றி ஒழுக விடுவது இல்லையாதலால் **துடைத்தொறும் துடைத்தொறும்** என்றார்; "செறுத்தோறு உடைப்பினும் தீம்புன லோடு ஊடார், மறுத்தும் சிறைசெய்வர்[1]" என்பது காண்க.

தலைமகன்பால் உளதாகிய பெருங்காதலால் அவனையே நினைந்து நெஞ்சு கலங்கித் தலைவி நெடிது வருந்தினமையின் **நீடு நினைந்து** என்றும், அதனால் அவள் அழுது சொரிந்த கண்ணீர்ப் பெருக்கை, **உடைத்தெழு வெள்ளம் ஆகிய கண்** என்றும், அதனைக் காதலர் எண்ணாது பொரு

1\. நாலடி. 222.

ளிடத்தே உறைந்தாராயினும், "அல்லற்பட்டு ஆற்றுது அழுத கண்ணீர்[1]" செல்வத்தைத் தேய்ப்பது போலப் பொருள்மேற் சென்ற அவரது உள்ளத்தை மாற்றுவ தாயிற்று என்பாள், **நீட விடுமோ** என்றும் கூறினுள். **கோடுயர் பன்மலை இறந்தன ராயினும்** என்று தலைவன் சென்ற வழியினது அருமை கூறினுள், அவ்வருமை கருதாது பொருளாற் பிணிப்புண்டு சென்ற தலைமகனது திண்மை உணர்த்தற்கு. **இறந்தன ராயினும்** என்றது, உள்ளம் கொண்ட பொருட்பிணி நின் காதற் கண்ணீர் முன் நிற்றல் ஆற்றுது என்றவாறு. பொருள்வினை பற்றிப் பிரிந்து சென்றவன் அவை முற்றியவழி யல்லது மீளுதல் இல்லை யாகலின், இது தோழியின் புனைந்துரையின் பாற் படும்; பொருள் செய்வினைமுற்றி மீண்டான் என்பதே கருத் தாகக் கொள்க. தன் காதலியின் நினைவு வினைமுடிவில் தோன்றுவது தான் தலைமகன் தலைமைக்கு இயல்பு; முற்றுது இடையில் மடங்குவது தலைமையன் றுகலின் அதனைச் சான்றோர் புலனெறி வழக்கம் செய்யார் என அறிக.

இது, தலைவன் மீண்டான் என்றது என்பர் **நச்சினார்க்கினியர்**[2]. (அ)

359. *அரும்பொருள் வேட்கைய மாகி நிற்றுறந்து*
*பெருங்க லதரிடைப் பிரிந்த காலைத்*
*தவநனி நெடிய வாயின வினியே*
*அணியிழை யுள்ளியாம் வருதலின்*
*நணிய வாயின சுரத்திடை யாறே.*

இது, மீண்டு வந்த தலைமகன் அவளைப் பிரிகின்ற காலத்துச் சுரத்துச் சேய்மையும் வருகின்ற காலத்து அதன் அணிமையும் கூறியது.

1. குறள். 555. 2. தொல். பொ. 45. உரை.

**உரை:** முன்னர் யாம் பெறுதற் கரிய பொருள்மேல் வேட்கையுடையேமாய் நின்னைப் பிரிந்து சென்ற போழ்து சுரத்திடை யுள்ள நெறிகள் மிகமிக நெடியவாய்த் தோன்றின; இப்போழ்து அழகிய இழைகளையுடைய நின்னை நினைந்து வருதலின் அவை மிக்க அணிமையுடையவாய்த் தோன்றாநின்றன, எ. று.

மனையின் நீங்கி நெடிது சென்று பெறும் இயல்பிற்றாதலின், **அரும்பொருள்** எனப்பட்டது. **வேட்கையம்,** தனித் தன்மைப்பன்மை. **பெருங்கல் அதர்,** பெரிய பெரிய கற்களின் இடையே செல்லும் வழி. **தவநனி** மீமிசை போல ஒருபொருட் பன்மொழி; "ஆவயிற் குறிப்பே ஆக்கமொடு வருமே[1]" என்றாராகலின், நெடிய **வாயின** நணிய **வாயின** என்றார். ஆறு, பிரிந்தகாலை நெடியவாயின, உள்ளி வருதலின் நணியவாயின என்க.

பொருளது அருமையும் இன்றியமையாமையும் பற்றி எழுந்த வேட்கை உள்ளத்தைக் கவர்ந்து கொண்டமையின், ஆண்டு நின்ற நின் காதல் துறக்கப்பட்டது என்பான், **அரும்பொருள் வேட்கைய மாகி நின் துறந்து** என்றான். உள்ளத்தில் நில்வாவாறு நீக்கினமையின் துறத்தலாயிற்று. **ஆகி** என்னும் செய்தெனெச்சம் காரணப் பொருட்டு. மெய்யாற் பிரிந்தமையின், **பிரிந்தகாலை** என்றான். அப்பொழுது தோன்றாத கல்லதர்ப்பெருமை மனையின்கண் இருந்து நினைத்தவழி விளங்கித் தோன்றுதலால், **பெருங்கல் அதரிடை** என்றும், முன்னர்ப் பொருள்வேட்கை ஒருபுடை நிற்ப, அகற்சியது அருமையும் சுரத்தின் வெம்மையும், நெறியின் கொடுமையும் பிறவும் நின்று நெஞ்சினை அலைத்தமையின், **தவநனி நெடிய வாயின** என்றும், இப்போழ்து அவளையன்றிப் பிறிதொன்றனையும் நினையாது வருதலின், **நணிய ஆயின** என்றும் கூறினான். **தவநனி நெடிய வாயின** என்புழி ஒருபொருட்பன்மொழி தலைமகனது பிரிவருமை உணர்த்திற்று. (௧)

---

1. தொல். சொல். 432.

360\. எரிகவர்ந் துண்ட வென்றூழ் நீளிடை
அரிய வாயினு மெளிய வன்றே
அவவுறு நெஞ்சங் கவவுநனி விரும்பிக்
கடுமான் றிண்டேர் கடைஇ
நெடுமா னோக்கிநின் னுள்ளியாம் வரவே.

இது, வினைமுற்றி மீண்டு வந்த தலைமகன் "சுரத்தருமை நோக்காது வந்தவாறு என்னை?" என வினவிய தலைமகட்குச் சொல்லியது.

**உரை:** தன்மாட் டெழுந்த வெப்பத்தால் எதிர்ப் பட்ட பொருள்களைப் பற்றி அழித்த தீயும் வெயிலும் மிக் குறும் நெடிய இடைச்சுரம் கடத்தற்கு அரிய வாயினும், மான்போலும் நீண்ட கண்களை யுடையாய், அவா மிக்க என் நெஞ்சம் நின் முயக்கத்தை மிக விரும்புதலால் விரைந்த செலவினையுடைய குதிரைகள் பூட்டப்பட்ட திண்ணிய தேரைச் செலுத்தி யான் நின்னையே நினைந்து போதருதலின் எளியவாயின எ. று.

**என்றூழ்,** வெயில். "எரிகவர்ந் துண்ட என்றூழ் நீளிடை[1]" என்றது காண்க. **என்றூழ் நீளிடை அரிய** என்றது தலைவிகூற்றைக் கொண்டெடுத்து மொழிந்தது. **அன்றே,** குறிப்புச்சொல்.[2] **அவவு,** அவாவென்பதன் செய் யுண்முடிபு; வேட்கைப்பெருக்கம் என்பது பொருள். **கவவு,** அகத்திடுதல், ஈண்டு முயங்குதல் மேற்று. "கவவு அகத்திடுமே[3]" என்பது விதி. "நம்முணங், கவவுக்கை விடப்பெறும் பொருட்டிறத்து, அவவுக்கை விடுதல் அதுமனும் பொருளே[4]" என்றார் பிறரும். **விரும்பி** என்னும் செய்தெனெச்சம் காரணப்பொருட்டு. **நெடுமான் நோக்கி** என்றவிடத்து, நெடுமை நோக்கத்தைச் சிறப் பித்து நின்றது.

1\. ஐங் 324. 2. தொல். சொல். 284. 3. ஷை. ஷை. 357.
4\. கலி. 14.

மேற்கொண்ட வினையால் ஒடுங்கி யிருந்த காதல், வினைமுற்றியதும் உள்ளத்தில் எழுந்து, தலைமகளைக் காண்டல் வேட்கையை ஊக்குதலால் அவாமிகுதலின், **அவவுறு நெஞ்சம்** என்றும், அவாவின் வெம்மை காதலியின் முயக்கத்தாலன்றித் தணியாமையின் **கவவு நனி விரும்பி** என்றும் கூறினன். "நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்ணென்னும் தீயாண்டுப் பெற்றாள் இவள்[1]" என்பது காண்க. நீளிடை யாதலின், அதனை விரைந்து கடத்தல் வேண்டிக் **கடுமான்** என்றும், நெறியின் அருமைக்கு சலியாத தேர் என்றற்குத் **திண்டேர்** என்றும், தன்னை நோக்கி வழிமேல் விழிவைத்து நிற்பதுபற்றி **நெடுமான் நோக்கி** என்றும், தன்னுள்ளம் முழுதும் தலைவியின் உருநலமும் குணநலமும் நிறைந்து கொண்டமையின் வழியருமை புலப்படா தாயிற்று என்பான், **அரிய வாயினும் எளிய வன்றே** என்றும் கூறினன். பிறண்டும், "இறப்பருங் குன்றம் இறந்த யாமே, குறுநடை பலவுள் ளலமே[2]" என்பது காண்க.

"கரணத்தின் அமைந்து முடிந்த காலை[3]" என்ற சூத்திரத்துக் "காமக்கிழத்தி மனையோள் என்றிவர், ஏமுறு கிளவி சொல்லிய எதிரும்" என்புழி, "அஃதாவது வழி வந்தவாறு என்னை எனவும் வருத்தமுற்றீர் எனவும் இந்நிகரன பல கூறுதல்" என்று கூறி, இதனை எடுத்துக்காட்டுவர் **இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும்** (ம)

1. குறள். 1104. 2. குறுந். 209. 3. தொல். பொ. 144.

## 37. முன்னிலைப்பத்து.

இது தலைமக்கள் ஒருவரையொருவர் முன்னிலைப் படுத்தும், தோழி அவர்களை முன்னிலைப்படுத்தும் கூறும் பொருளுடைப் பாட்டுக்களின் தொகுதியாகலின் இப் பெயர்த்தாயிற்று.

**முன்னிலை** யென்பது அறத்தொடுநிலைப் பகுதிக்கு இனமானது. களவின்கண் தோழி கூற்றுநிகழ்த்தும் இடம் குறித்த ஆசிரியர், "அவள் விலங்குறினும், களம்பெறக் காட்டினும், பிறன் வரைவாயினும் அவன் வரைவு மறுப்பினும், முன்னிலை அறன் "எனப்படுதல் என்று, இருவகைப் புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்[1]" என்று குறித்தாராக, அதற்கு உரைகண்ட **இளம்பூரணர்,** "முன்னிலை வகையானுதல் அறத்தொடுநிலை வகையானுதல் இவ் விருவகையானும் தலைவற்கும் தலைவிக்கும் தனக்கும் குற்றம் தீர்ந்த கிளவியைத் தாய்மாட்டுப் புகுத விடுத்தல்" என்று உரைத்து, "புகுவிடுத்தலாவது, நிரம்பச் சொல்லாது தோற்றுவாய் செய்தல்" என விளக்கம் செய்தனர். இதற்கு அவர் காட்டிய முன்னிலைக்கிளவிக்கண் கழங்கு, தலைவி, வேலன், முருகு முதலிய பொருள்களைக் காண லாம். இவரது உரையையும் எடுத்துக்காட்டுக்களையும் நோக்குமிடத்து, **முன்னிலை யென்பது** அன்பின் ஐந்திணைக் கண் ஒருவரை யொருவர் முன்னிலைப்படுத்துக் குற்ற மில்லாத கருத்துக்களை நிரம்பச் சொல்லாது குறிப்பாய் உரைக்கும் உரைவகையாதல் உணரப்படும். இவ்வியல் புடைய கூற்றுக்களைத் தம்பாற் கொண்ட பாட்டுக்களை இம்முன்னிலைப்பத்தின்கண் தொகுத்துள்ளனர் என்பது இதனல் உணர்தல் வேண்டும்.

---

1. தொல். பொ. 112.

361\. உயர்கரைக் கான்யாற் றவிர்மணை லகன்றுறை
வேனிற் பாதிரி விரிமலர் குவைஇத்
தொடலை தைஇய மடவரன் மகளே
கண்ணினுங் கதவநின் முலையே
முலையினுங் கதவநின் றடமென் ருேளே.

இது, புணர்ந்துடன் போகிய தலைமகன் இடைச்சுரத்துக் கண் விளையாட்டுவகையால் பூத்தொடுக்கின்ற தலைமகளைக் கண்டு புகழ, அவள் அதற்கு நாணிக் கண்புதைத்தவழிச் சொல்லியது.

**உரை :** உயர்ந்த கரைகளையுடைய கான்யாற்றின் விளங்குகின்ற மணல் பரந்த அகன்ற துறைக்கண் வேனிற் பருவத்து மலரும் பாதிரியின் விரிந்த மலர்களைக் குவித்து மாலை தொடுக்கும் மடப்பம் பொருந்திய பெண்ணே, நின் கண்ணினும் முலைகள் சினமுடையவாயும், அவற்றினும் நின் பெரிய மெல்லிய தோள்கள் சினமுடையவாயும் இரா நின்றன, காண் எ. று.

கடுவரவும் நீர்மிகுதியும் உடைமையான் கான்யாறு ஆழ்ந்து கிடத்தலின், **உயர்கரைக் கான்யாறு** என்றும், "மாவும் மாக்களும் வழங்கும் துறையாதல்பற்றி **அகன்றுறை** யென்றும், வேனிற் பருவத்தில் மலர்வதாகலின் **வேனிற் பாதிரி** யென்றும் கூறினர். பாதிரி, வேனிலில் மலர்வது என்பதை, "வேனிற் பாதிரிக் கூனி மாமலர்[1]" என்று சான்ருேர் குறிப்பது காண்க. பாதிரி அதிரல் மரவம் ஆகியவற்றின் பூக்களை மாலை தொடுத்து மகளிர் அணிந்து கொள்வது இயல்பாதலின் ஈண்டு அதனை எடுத்தோதினர். **குவைஇ** என்றதனல், கான்யாற்று அவிர் மணலில் பாதிரிப்பூ உதிர்ந்து கிடந்தமை பெற்ரும்.

1\. அகம். 257.

'புன்காற் பாதிரி அரிநிறத் திரள்வீ, நுண்கொடி யதிர லொடு நுணங்கறல் வரிப்ப[1]" என வருதல் காண்க. பாதிரிப்பூவால் மாலைதொடுத்து அணிவதைக் "கானப் பாதிரிக் கருந்தகட் டொள்வீ, வேனில் அதிரலொடு விரைஇக் காண்வரச், சில்லைங் கூந்தல் அழுத்தி[2]" என்று சான்றோர் குறிக்குமாற்றாலும் அறியலாம். **மடவரல்** இளமை, அழகு. **தொடலை,** மாலை. **கதம்,** சினம்; கதமுடையவற்றைக் கதவ என்ப; "ஒல்லார் கதவ முயறலும் முயல்ப[3] எனவரும்.

விளையாட்டுவகையால் பூத்தொடுக்கின்றாளைப் புனைந்துரைவகையால் புகழ்கின்றானாகலின், **தொடலை தைஇய மடவரல் மகளே** யென்றும், அது கேட்டவள் நாணிக் கண்புதைத்தவழித் தான் கூர்ந்து நோக்கின் வேல்போன்ற தன் கட்பார்வை தலைமகன் மார்பிற்பட்டு நோய் செய்யும் என அஞ்சித் தன் கைகளால் தலைவி தன் கண்களைப் புதைத்துக்கொண்டாள் என மேற்கொண்டு, நின் கண் செய்யும் இடையூற்றினும் புதையாது ஒழிந்த முலைகள் பேரிடையூறு செய்வன என்பான் **கண்ணினும் கதவ நின் முலையே** என்றும், அவற்றோடு இயைபுடையவாய்ப் புணர்ச்சிக்கண் தனதுநெஞ்சினைச் செலுத்தி வெதுப்புதலின் **முலையினும் கதவ நின் தடமென்தோளே** யென்றும் கூறினான். "கடைமணி சிவந்தநின் கண்ணே கதவவல்ல ....நின் கரும்புடைத் தோளும் உடையவால் அணங்கே[4]" என்று பிறரும் கூறுதல் காண்க.

"ஒன்றாத் தமரினும்[5]" என்ற சூத்திரத்து, "அப்பாற் பட்ட ஒருதிறத்தானும்" என்றதனானே, தலைவியிடத்துத் தலைவன் கூறுவன பலவும் கொள்க" என்று உரைத்து, இப் பாட்டைக் காட்டி, இஃது "உடன்போயவழித் தலைவன் புகழ்ச்சிக்கு நாணித் தலைவி கண்புதைத்துழி அவன்

1. அகம். 237. 2. ஷை. 261. 3. ஷை. 356.
4. நற். 39. 5. தொல். பொ. 41.

கூறியது" என்பர் **நச்சினார்க்கினியர்.** இது புணர்தற் பொருளாயினும் கருப்பொருளாற் பாலையாயிற்று என்பர் **இளம்பூரணர்.** [1]"

உடன் போக்கின்கண் உயிரினும் சிறந்த நாணும், கற்பும், தலைமகன் காதலும் துணையாக வருதலின் நாண் நீங்குதல் பொருளாகத் தலைமகன் தலைவியை இதனால் முன்னிலையாக்கிக் கூறினான் என அறிக. இனிவரும் பாட்டுக்களும் இவ்வாறு முன்னிலைக் கிளவியாதலைக் கண்டுகொள்க. (௧)

362. பதுக்கைத் தாய வொதுக்கருங் கவலைச்
சிறுகண் யானை யுறுபகை நினையாது
யாங்குவந் தனையோ பூந்தார் மார்ப
அருள்புரி நெஞ்ச முய்த்தர
இருள்பொர நின்ற விரவி னானே.

இது, சேணிடைப் பிரிந்த தலைமகன் இடைநிலத்துத் தங்காது இரவின்கண் வந்துழித் தோழி சொல்லியது.

**உரை:** பூக்களால் தொடுக்கப்பட்ட மாலை யணிந்த மார்பனே, பதுக்கைகளையுடையதான செல்லுதற்கரிய கவர்த்த வழியின்கண் திரியும் சிறிய கண்களையுடைய யானையாகிய மிக்க பகைக்கு அஞ்சாது, எமக்கு அருள்செய்யும் வண்ணம், நின் நெஞ்சு நின்னைச் செலுத்த இருள் அடர்ந்து, வழிச்செல்வாரைத் தடுக்கின்ற இரவின்கண் எவ்வாறு வந்தாய் கொல்லோ? என் உள்ளம் வருந்துகிறது எ.

**பதுக்கை,** கற்குவியல்; ஆறலைப்போரால் கொல்லப் பட்டார் மேற் குவிக்கப்படும் கற்குவியல் என்பர்; "வடி நவில் அம்பின் ஏவ லாடவர், ஆளழித் துயர்த்த அஞ்சுவரு

1. தொல். பொ. 24.

பதுக்கை[1]" என்றும், "கொடுவிற் கானவர் கணையிடத் தொலைந்தோர், படுகளத்து உயர்த்த மயிர்த்தலைப் பதுக்கை[2]"என்றும் சான்றோர்கூறுதலால் அறிக. **ஒதுங்கல்,** செல்லுதல்; "அடியஃறிந்து ஒதுங்கா ஆரிருள்[3]" என்றும் "ஒதுக்கரும் வெஞ்சுரம்[4]" என்றும் வருவன காண்க. **உய்த்தல்,** செலுத்தல். இருள்மிக்க இரவு என்றற்கு **இருள் பொர நின்ற இரவு** என்றார்.

கற்பின்கண்ணே பொருள்வினை குறித்துச் சேணிடைப் பிரிந்து மீண்டு போதரும் தலைமகனை விலக்கும் உரிமை தோழிக்கு இல்லையாயினும், இருள்கூர் இரவுப்போதின் கண் இடைநிலத்துத்தங்காது வந்தமைபற்றிஏதம்ஆய்ந்து அவற்கு முன்னிலைக் கிளவியாற் கூறுகின்ற ளாகலின், தலைமகன் வரும் வழியின் ஏதங்களைக் குறிப்பாளாய், கொலைவினையராகிய ஆறலைப்போர் மிக்க வழி என்பாள், **பதுக்கைத் தாய ஒதுக்கருங் கவலை** என்றும், இரவில் காட்டில் திரியும் யானை மக்கட்குப் பெரும்பகை யாக லான், **யானை உறுபகை நினையாது** என்றும் கூறினள்; "இரவின் வரல்வேண்டா, யானை யுடைய சுரம்[5]" என்றார் பிறரும். நினைந்தவழி எத்திறத்தோரும் ஊக்கம் குன்றுவர் என்பாள் **நினையாது** என்றும், நின்னைப் பிரிந்துறையும் தலைமகள் எய்திய மெலிவுணர்ந்து நிறைந்த காதல் செலுத்தக் கடுகி வருகின்றாய் என்பாள், **அருள்புரி நெஞ்சம் துரப்ப** என்றும், நெறியுழியாவகை மறைத்தலின் இரவுக்காலத்தை **இருள்பொர நின்ற இரவு** என்றும், நெறியின் கொடுமையும், இடையில் உளவாகும் ஏதமும் கருதி, நின் பேரருளுக்கு அஞ்சுகின்றேம் என்பாள், **யாங்கு வந்தனையோ** என்றும் கூறினள்.

கற்பின்கண் இவ்வாறு ஒரோவழித் தலைமகன்பால் மிக்க காமத்து மிடலுடைச் செயல் தோன்றின் அது, கழி காமமாய்த் தீங்குவிளையாமைக் குறிக்கொண்டு கூறலின்,

1. அகம். 215. 2. ஷை. 231. 3. நற். 156.
4. ஷை. 177. 5. திணைமொழி. 1.

தோழிக்கு இம் முன்னிலைக்கிளவி அமைவதாயிற்று. "உறுகண் ஓம்பல் தன்னியல் பாகலின், உரிய தாகும் தோழிகண் உரனே [1]" என ஆசிரியர் உரைப்பது காண்க. கழிகாமம் தீங்கு பயத்தலை, "காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன் நாமம் கெடக் கெடும் நோய் [2]" என்றும், "சினமே காமம் கழிகண் ணோட்டம், அச்சம் பொய்ச் சொல் அன்புமிக வுடைமை தெறல்கடுமையொடு பிறவும் இவ்வுலகத்து, அறந்தெரி திகிரிக்கு வழியடை யாகும் [3]" என்றும் சான்றோர் தெருட்டுமாறு காண்க.

"பெறற்கரும் பெரும்பொருள் [4]" என்ற சூத்திரத்துப் "பிரியுங்காலை எதிர்நின்று சாற்றிய மரபுடை எதிரும் உளப்படப் பிறவும் என்புழிப் **பிறவும்** என்றதனால் இதனை அமைத்து, இது சேணிடைப் பிரிந்து இரவின் வந்துழிக் கூறியது என்பர் **நச்சினார்க்கினியர்.**　　(உ)

363. *சிலைவிற் பகழிச் செந்துவ ராடைக்*
*கொலைவி லெயினர் தங்கைநின் முலைய*
*சுணங்கெனநினைதி நீயே*
*அணங்கென* நினையுமென் னணங்குறு நெஞ்சே.

புணர்ந்துடன் செல்கின்ற தலைமகன் இடைச் சுரத்துத் தலைமகளை நலம்பாராட்டியது.

**உரை :** சிலைமரத்தாற் செய்யப்பட்ட வில்லிடைத் தொடுக்கும் அம்பினையும், சிவந்த ஆடையினையும், கொலைத் தொழிற்குரிய வில்லினையு முடைய வேட்டுவர்க்குத் தங்கையே, நின் முலைக்கண்ணவாகிய தேமலை நீ சுணங் கென நினைக்கின்றனை; மற்று, நோய் மிக்க என் நெஞ்சம் அதனை வருத்தம் தரும் அணங்கு என நினையாநின்றது காண் எ. று.

1. தொல். பொ. 239.　　2. குறள். 360.　　3. பதிற். 22.
4. தொல். பொ. 150.

**சிலைவில்** சிலையென்னும் மரத்தாற் செய்யப்பட்ட வில்; "அரிமான் இடித்தன்ன அஞ்சிலை வல்வில்[1]" என்றும், "சிலைமாண் வல்வில்[2]" என்றும் சான்றோர் உரைப்பது காண்க. **சிலைத்தல்,** ஒலித்தலுமாம். **கொலை வில்** என்றவிடத்து உடையவன் தொழில் வின்மேல் ஏற்றப்பட்டது. **செந்துவராடை** யென்றது, செம்மையாகிய நிறப்பண்பின் மிகுதி யுணர நின்றது. "துவர்செய் ஆடைச் செந்தொடை மறவர்[3]" என்று பிறரும் கூறினர்.

**சுணங்கு** நினக்கு அழகு தருவதாயினும் எனக்கு வருத்தம் தருவதாயிற்று என்பதாம். அணங்கு தருவதனை **அணங்கென்றான்.** "அணங்கென உருத்த சுணங்கணி ஆகத்து ஈர்க்கிடை போகா வேரிள வனமுலை[4]" என்றார் பிறரும். முலைக்கு நலம் சுணங்கொடு திகழ்த லாகலின், **அணங்கென நினையும்** என்றது நலம் பாராட்டியவாறு.

இஃது, உடன்போகின்றான், பெருநாணத்தால் வருந்தும் தலைமகளது மெலிவு நீக்கும் கருத்தால் முன்னிலைப் படுத்தித் தன் பெருநயப்பால் தெளிவித்தவாறு எனக் கொள்க.

இஃது உடன்போகின்றான் நலம்பாராட்டிய கூற்றும் என்பர் **நச்சினார்க்கினியர்**[5]. "செந்துவராடை" என்னும் பாட்டினுள் கொலைவில் எயினர் தங்கை யெனப் புணர்தற் பொருண்மை வந்த தாயினும் பாலைக்குரிய மக்கட்பெயர் கூறுதலின் பாலையாயிற்று என்பர் **இளம்பூரணர்**[6] (௩)

364. முளமா வல்சி யெயினர் தங்கை
இளமா வெயிற்றிக்கு நின்னிலை யறியச்
சொல்லினெ னிரக்கு மளவை
வெள்வேல் விடலை விரையா தீமே.

---

1. கலி. 15. 2. அகம். 69. 3. நற். 33.
4. பொருந. 35-6. 5. தொல். பொ. 22. 6. ஷை. ஷை. 24.

இஃது உடன்போக்கு நயந்த தலைமகன் அதனைத் தோழிக்கு உணர்த்த அவள் முடிப்பாளாய்ச் சொல்லியது.

**உரை:** வெள்ளிய வேலையுடைய தலைவ, முள்ளை யுடைய மாவாகிய பன்றியினை உணவாக வுடைய வேட்டுவர்க்குத் தங்கையாகிய இளமையும் அழகு முடைய எயிற்றிக்கு நின் உடன்போக்குக் குறிப்பை விளங்க உரைத்து உடன்படுமாறு இரந்துகொண்டு யான் வரும் அளவும் விரையாது நிற்பாயாக, எ. று.

முளமா முள்ளையுடைய மாவாகிய பன்றி; இது முளவுமா எனவும் வழங்கும். "கானவ னெய்த முளவு மான் கொழுங்குறை[1]" என்று பிறரும் கூறுப. ஈண்டு **நின் நிலை** என்றது, உடன்போக்கு நயந்துள்ள நின் மன நிலையை என்றவாறு. **சொல்லினென்**, முற்றெச்சம். **இரத்தல்**, இணங்கப்பெறுதல். **விரையாதீமே** என்றது விரைந்து செய்தற்குரியது என்பது பட நின்றது.

வெளிப்படை குறிப்பு என்ற இருவகையாலும் பன் முறை வரைவு கடாயவழியும் களவே விரும்பி யொழுகி யவன், தோழியின் குறிப்பின்றியே உடன்போக்கு நயந்து அவள்பால் உணர்த்திறுகலின், அவள் தலைமகளது குறிப்பறிந்து போக்குடன்படுத்த விரைகின்றமைபற்றி, **இளமா எயிற்றிக்கு நின்னிலை அறியச்சொல்லினென் இரக்கு மளவை** என்றாள். இளையளாதலின், அவட்கு அறியச் சொல்லவேண்டும் என்பாள், **அறியச்சொல்லினென்** என்றாள். இதுகாறும் களவேவிரும்பி யொழுகிய நீ, இது துணிந்தது அவட்கு மருட்கை விளைவிக்குமாகலின், நின்னிலை அறியச் சொல்ல வேண்டுவது கடன் என்று மாம். "தந்தை தன்னையர் உடனிருப்பச் சான்றோர்சூழ நிகழும் வதுவை நன்மணம்[2]" கருதியிருந்தாள், இவ் வுடன்போக்குக்கு இசைதல் எளிதின் இயலுவதன்று

1. நற். 85. 2. கலி. 39.

என்பது தோன்ற **இரக்கும் அளவை** என்றும், நின்பாற் காணப்படும் விரைவு அவள்பால் இல்லையாகலின், யான் இரக்குமளவை அமைதல்வேண்டும் என்பாள், **விரையா தீமே** என்றும் கூறினள்.

இனி உடன்போக்கின்கண் நெறியிடை உளவாகும் ஏதமும், உடன்போகியவழி யுண்டாகும் அலரும் கூறித் தலைமகள் நாணியவழித் தகுவன கூறி உடன்படுவிக்க வேண்டுதலின், **இரக்குமளவும்** என்றும், குறிவழியும் ஒரு வழித் தணந்தும் ஒழுகுகின்ருஞகலின் **விரையாதீமே** என்றும் தோழி இரந்துநின்ருள் என்றுமாம்.

இது, தோழிபால் தோன்றவேண்டிய உடன்போக் கினைத் தலைமகன் தானே நயந்து முற்படக்கூறுதலின், தோழி முன்னிலைக்கிளவியால் போக்குடன்படுதல் கூறுவ தாயிற்று.

இது கொண்டுபோங்காலத்துக் கொண்டுடன் போக்கு ஒருப்படுத்துவல் என்றது என்பர் நச்சினுர்க்கினியர்.[1]" **இளம்பூரணர்,** **இங்கிலையறிய** என்று பாடங்கொண்டு, பிரியுங்காலத்துத் தலைமகட்கு உணர்த்துகின்றேன் எனத் தோழி தலைமகற்குரைத்தற்கு இதனைக் காட்டி, இது விலக்கிற்று என்பர்.[2]" (௪)

365. *கணமா தொலைச்சித் தன்னையர் தந்த*
*நிணவூன் வல்சிப் படுபுள் ளோப்பும்*
*நலமா ணெயிற்றி போலப் பலமிக*
*நன்னலம் நயவர வுடையை*
*என்னேற் றனையோ மாவின் றளிரே.*

**இது, வரைவிடைவைத்துப் பிரிந்து மீள்கின்ருன் இடைச்சுரத்துக் குழைத்த மாவின் தளிர் கண்டு சொல்லியது.**

1. தொல். பொ. 22. 2. ஷ ஷ 42.

**உரை:** கூட்டமாகிய மாக்களைத் தொலைத்துத் தன்னையர் கொணர்ந்த நிணமாகிய தசையுணவைக் கவர் தற்குப் போதரும் பறவைகளைக் கடியும் பெண்மை நலம் சிறந்த எயிற்றியைப் போல, மாவின் தளிரே, பலவாய் மிக்க நலம் யாவரும் விரும்புமாறு உடையை; ஆதலின் அதற்கு எத்தவம் செய்தனையோ, கூறுக எ. று.

கூட்டம் கூட்டமாக வாழும் மானினம் **கணமா** எனப் பட்டது. **தன்னையர்** தனக்கு முற்றோன்றியோர்; தலைமை யுடையோருமாம். **ஐ,** தலைமை. வல்சி, **உணவு.** நிணத் தொடு கூடிய ஊனே உணவாதற்கு ஏற்றதாகலின், **நிணவூன்வல்சி** என விதந்து கூறினர். எயிற்றிக்கு **நல** மாவது மாமைக்கவினும் கண்டாரால் விரும்பப்படும் நற்குணமுடைமையுமாம். **நன்னலம்** என்றது, நிறப் பொலிவும் மென்மையும் நோக்கி. **நயவரவு,** விருப்பம்.

எயிற்றிபோல நலம்பலவும் நயவரப் பெறுதல் அரி தென்பான், **நன்னலம் நயவர வுடையை** என்றும், உலகத் துப் பெறற்கரிய பொருள் ஒன்றனைக் கருதியவாறே பெறுதல் தவமுடையார்க்கு அல்லது இன்மையின் **என் நோற்றனையோ** என்றும் கூறினன். "வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம் ஈண்டு முயலப் படும்[1]" என்பது காண்க. மகளிர் மேனி மாந்தளிர் போறலின், இவ்வாறு கூறினன்; "நறுவடிப், பைங்கண் மாஅத்து அந்தளிரன்ன, நன்மா மேனி[2]" என்பதனாலும் அறிக. இது, "பொருளே உவமம் செய்தனர் மொழியி னும், மருளறு சிறப்பினஃ துவம மாகும்[3]" என்றதனால் அமையும்.

இது வரைவிடை வைத்துப் போகின்றான் மாவினை நோக்கிக் கூறியது என்பர் **நச்சினார்க்கினியர்.[4]** இது முன் னிலையாதற் கில்லாத மாவினை முன்னிலைப்படுத்திற்று. (௫)

1 குறள். 265. 2. குறுந். 331. 3. தொல். பொ. 284.
4. ஷை. ஷை. 22.

366. அன்னாய் வாழிவேண் டன்னையென் றோழி
பசந்தனள் பெரிதெனச் சிவந்த கண்ணை
கொன்னே கடவுதி யாயி னென்னதூஉம்
அறிய வாகுமோ மற்றே
முறியிணர்க் கோங்கம் பயந்த மாறே.

இது, தலைமகளை நோக்கி, இவ் வேறுபாடு எற்றினான் ஆயிற்று என்று வினவிய செவிலிக்குத் தோழி அறத்தோடு நின்றது.

ப. உரை: இது முன்னாள் அவன் தந்த கோங்கம்பூவால் விளைந்தது எனப் பூத்தருபுணர்ச்சி கூறியவா றாயிற்று. இது கருப் பொருளாற் பாலை.

உரை; அன்னாய், வாழ்வாயாக. யான் கூறுவதனை விரும்பிக்கேள். என் தோழி மிகவும் பசப்பெய்தி வேறு படுகின்றாளாகலின், இதற்குக் காரணம் என்னை யென நீ சினத்தால் கண்சிவந்து அச்சுறுத்தி வினவுகின்றாய்; ஆராயு மிடத்து, அது தளிரும் பூங்கொத்துக்களு முடைய கோங் கின்பூவைக் கொடுத்தமையால் ஆயினமையின், பிறரால் எத்துணையும் அறியப்படாது, காண் எ. று.

**தோழி** என்றது தலைமகளை. **கண்ணை**, முற்றெச்சம். கொன்னைச்சொல் அச்சப்பொருட்டு. ஏகாரம் எதிர்மறை. **மாறு**, ஏதுப்பொருள் படுவதோர் இடைச்சொல்; இதனை "அதனினியறல்[1]" என்னும் சூத்திரத்து "அன்ன பிறவும்" என்றதனாற் கொள்வர் **தெய்வச்சிலையார்**. **முறி**, தளிர். **கோங்கம்**, பாலைக்குரிய கருப்பொருள். முதல், கரு, உரி என்ற பொருள்வகை மூன்றனுள், திணையுணர்தற்கண் முதலிற் கருவும் கருவின் உரியும் சிறந்தன வாகலின் ஈண்டுக் கருப்பொருள்பற்றி இது பாலையிற் கோக்கப்பட் டுள்ளது. "முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே நுவலுங் காலை முறைசிறந் தனவே[2]" என்பதனுள், **நுவலுங்காலை** என்றதனால் இஃது அமையும் என அறிக.

1. தொல். சொல். 71. 2. தொல். பொ. 3.

இதன்கண், **பசந்தனள் பெரிது** என்றது செவிலி கூறிய முன்னிலைக்கிளவி. அதற்கு அறத்தொடு நிலைவகை யால் விடை கூறுகின்றாளாகலின் **அன்னாய் வாழி வேண்டு அன்னை** என முகம்புகுந்தாள். இளமை வளர்ச்சிக் கண் பிறக்கும் வளமை வேறுபாட்டினும், தலைவியது பசப்பு மிக்குத் தோன்றுதல் பற்றி, **என்தோழி பசந்தனள் பெரிது** என்ற செவிலி கூற்றைக் கொண்டெடுத்து மொழிந்தாள். பிறாண்டும்; "அன்னாய் வாழிவேண் டன்னை நின்மகள், பாலு முண்ணாள் பழங்கண் கொண்டு, நனிபசந் தனளென வினவுதி [1]" என்பது காண்க. தலைமகள் எய்திய வேறு பாட்டுக் குரிய காரணம் விளங்காமையான் சினங்கொள் கின்றனை என்பாள், **சிவந்த கண்ணை** என்றும், என்னை அச்சுறுத்திக் கேட்பதிற் பயனின்று, "அதன்திறம் யானும் தெற்றென உணரேன்" என்பாள் **கொன்னே கடவுதி** என்றும் கூறினாள்.

அஃது ஆராய்ந்தல்லது கூறலாகாது என்றற்கு ின் என்றும், அறியாப் பருவத்தே நிகழ்ந்தவதனை அறியும் பருவமாய இப்பொழுது நினைந்து வேறுபடுகின்றா ளாகலின், அது சிறிதும் எளிதில் அறியலாகாது என்பாள் **என்னதூஉம் அறிய வாகுமோ** என்றும், அந்நிகழ்ச்சி இஃது எனத் தான் அறிந்தவாற்றால் கூறுவான் தொடங்கி **முறியிணர்க் கோங்கம் பயந்த மாறே** என்றும் கூறினாள். இதுபற்றியே **பழையவுரைகாரரும்**, முன்னாள் அவன் தந்த கோங்கம்பூவால் விளைந்த பூத்தருபுணர்ச்சி[2] என்றார். (௬)

---

1 அகம். 48.

2. **பூத்தருபுணர்ச்சியாவது** இன்னது எனத் தோழி கூற்றில் வைத்துக் **களவியலுரை** (சூ. 14. உரை) கூறுமாறு; "எம்மைக் கூழைக் கற்றைக் குழவிப்பிராயத்து மாழை கலந்த ஏழை நீர்மையாரோடு நாட்கோலம் செய்து விளையாடி வம்மின் என்று போக்கினாய்; போக்கினவழி, யாம் போய் ஒரு வெண்மணல் பரந்த தண்மலர்ப் பொழிலிடை விளையாடிநின்றேமாக. ஒரு தோன்றல் ஒரு சுனைக்குவளைப் பூக்கொண்டு அவ்வழியே போதந்தான்; போதர நின்மகள் அவனை நோக்கி அப்பூவினை என் பாவைக்கு அணியத் தம்மின் என்றாள்; அவனும் பிறிது நினையாது கொடுத்து நீங்கினான்; இஃது அறிவது ரியாக் காலத்து நிகழ்ந்தது" என்பது.

367. பொரியரைக் கோங்கின் பொன்மருள் பசுவீ
விரியிணர் வேங்கையொடு வேறுபட மிலைச்சி
விரவுமல ரணிந்த வேனிற் கான்யாற்றுத்
தேரொடு குறுக வந்தோன்
பேரொடு புணர்ந்தன் றன்னையிவ ளுயிரே.

இது, நொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தோடு நின்றது.

ப. உரை: கான்யாற்றுத் தேரோடு குறுக வந்தோன் என்றது, கான்யாற்று யாங்கள் அழுந்துழிக் குறுக வந்தோன் எ.று. எனவே புனல்தரு புணர்ச்சி கூறியவாறாயிற்று.

பேரோடு புணர்ந்தன்று இவளுயிர் என்றது அன்று தோன்றிய இன்னுன் தந்த உயிர் என அவன் பேரொடு பட்டது இவள் உயிர் எ. று. இது காலத்தாற் பாலை.

**உரை:** அன்னாய், பொரித்த அடியினையுடைய கோங்கின் பொன்போலும் பூக்கள் விரிந்த கொத்துக்களையுடைய வேங்கைப் பூவோடு வேறுபட அணிந்து, பலவாய் விரவிய மலர்களாற் பொலிந்த வேனிற்பருவத்தில் கான்யாற்றின் மருங்கே தேர் ஏறிக் குறுக வந்தோனுடைய பெயரோடு இவளுடைய உயிர் ஒன்றுபடுவதாயிற்று எ. று.

என்றது, "அன்றுதொட்டு அன்னுன் தந்த உயிர்என அவன் பேரோடுபட்டது இவள் உயிர் என்பதாம்."

ஆல், ஓமை, கொன்றை, யா, வேங்கை, வேம்பு முதலிய மரங்களின் இனத்தைச் சேர்ந்த தாகலின். கோங்கினையும் **பொரியரைக் கோங்கு** என்றார்; "பொரியரை ஆலம்[1]" "யாஅத்துப் பொரியரை முழுமுதல்[2]" "பொரியரை வேம்பு[3]" "பொரியரை யோமை[4]" "பொரியரை

1. அகம். 287. 2. குறுந். 255. 3. நற். 3.
4. அகம். 397.

வேங்கை [1]'' "பொரியரை ஞெமிர்ந்த புழற்காய்க் கொன்றை [2]'' என்று சான்றோர் குறிப்பது காண்க. கோங்கின்பூ பொன்போல் இருப்பது. "புரிநிற நீள்பொன் அணிந்த கோங்கம் [3]''என்றார் பிறரும். அதனால், "பொன் செய் கன்னம் பொலிய வெள்ளி, நுண்கோல் அறை குறைந்து உதிர்வன போல, அரவ வண்டினம் ஊதுதொறும் குரவத்து, ஓங்குசினை நறுவீ கோங்கலர் உறைப்ப [4]'' என்பாராயினர். வேங்கைப்பூவும் பொன்னிறத்த தாகலின், **வேறுபட மிலேச்சி** என்றார். **விரவுமலர்,** வேறு வேறு நிறமுடைய மலர்; அவை மரவம், பாதிரி முதலியன. கான்யாறு வேனிற் காலத்துத் தெளிந்திருப்பது பற்றி **வேனிற் கான்யாறு** என விதந்து கூறினர். மக்கட்கு இடப்படும் பெயரெல்லாம் உயிர்மேலதாகலின், உயிரொடு உண்டாகிய கலப்பைப் **பேரொடு புணர்ந்தன்று** என்றார். **புணர்ந்தன்று,** இறந்தகால முற்றுவினை.

கோங்கு, வேங்கை முதலியவற்றின் பூக்களைக் கொய்து மாலை தொடுத்து விளையாடுகையில் கான்யாற்று நீர் கொணர்ந்த வேறு பூக்களை எடுத்தற்கு முயன்றபோது தலைமகள் நீரிடை வீழ்ந்து அழுந்தினளாக, அக்காலைத் தலைமகன் வந்து உயிர்தந்து உதவினன் என்பாள், **விரவு மலர் அணிந்த வேனிற் கான்யாற்றுக் குறுக வந்தோன்** என்றாள். **தேரொடு வந்தான்** என்றாள், முன்பு அறியாத ஒரு செல்வத்தோன்றல் என்றற்கு. நீரின்கண் வீழ்ந்தாளைத் தானும் நீருட் குளித்துத் தன் மார்பிடைப் புல்லிக் கொண்டு எழுந்தான் என்பது தோன்ற, **குறுக** என்று குறித்தாள். இவ்வாறு உயிர் தந்து உதவினற்குத் தன்னுயிரைத் தந்தாள் என்பாள், **வந்தோன் பேரொடு புணர்ந்தன்று இவள் உயிர்** என்றாள் என்க. பிறண்டும், "காமர் கடும் புனல் கலந்தெம்மோடு ஆடுவாள் தாமரைக் கண்புதைத் தஞ்சித் தளர்ந்து அதனோடு ஒழுகலான், நீணுக நறுந்

1. அகம். 365. 2. நற். 141. 3. திணைமா. 150 : 63.
4. அகம். 317.

தண்டார் தயங்கப் பாய்ந்து அருளினல், பூணகம் உறத்தழீஇப் போதந்தான் அகனகலம், வருமுலே புணர்ந் தன என்பதனல் என் தோழீ, அருமழை தரல்வேண்டின் தருகிற்கும் பெருமையளே [1]" என்று உரைப்பது காண்க. இக்கருத்துப் பற்றியே, **பழையவுரைகாரரும்** இது "புனல் தரு புணர்ச்சி கூறியவா றுயிற்று" என்றுர். அவன் தந்தது இவளுயிர்; அவனுடையது இவள் உயிர் என உடையானும் உடைமையுமாய் இயைந்தொழிந்தது என்றற்குப் **பேரொடு புணர்ந்தன்று இவள் உயிர்** என்றும், எனவே, பிறர்க்கு இவளது உயிர் உரித்தாதற்கு இடமில்லே என்றும் உரைத்தா ளாயிற்று. (எ)

*368. எரிப்பூ விலவத் தூழ்கழி பன்மலர்*
*பொரிப்பூம் புன்கின் புகர்நிழல் வரிக்கும்*
*தண்பத வேனி லின்ப நுகர்ச்சி*
*எம்மொடு கொண்மோ பெருமநின்*
*அம்மெலோதி யழிவில ளெனினே.*

இது, வேனிற்காலத்து நம்மொடு விளையாட்டு நுகர வருவல் என்று பருவங்குறித்துப் பிரியலுற்ற தலைமகற்குத் தோழி கூறியது.

**ப. உரை: அம்மேல் ஓதி அழிவிலள் எனின் இன்ப நுகர்ச்சி எம்மோடு கோண்மோ** என்றது, நீ வருந்துணையும் இவள் ஆற்றி யுளளாயின் எம்மொடு நுகர்ச்சி கொள்வீராமின் என மறுத்தவாறு.

**உரை:** பெரும, எரிபோலும் நிறத்தினைக் கொண்ட பூவினையுடைய இலவமரத்தினின்றும் உதிர்ந்த பலவாகிய மலர்கள் பொரிபோலும் பூக்களையுடைய புன்கமரத்தின் புள்ளிபொருந்திய நிழற்கண் கிடந்து அழகுறுத்தும்

1. கலி. 39.

குளிர்ந்த செவ்வியையுடைய வேனிற்காலத்து விளையாட்டின்கட் பெறும் இன்பநுகர்ச்சி, அழகும் மென்மையுமுற்ற கூந்தலை யுடைய இவள் நின் பிரிவாற்றி மேனி நலன் அழிவின்றி யிருப்பளாயின் எம்மொடு கொள்க எ. று.

இலவமரத்தின் செம்பூ நெருப்புப்போலத் தோன்றுவதுபற்றி **எரிப்பூ இலவம்** என்றார்; பிறரும் "இலவத்து அழல் அகைந்தன்ன அலங்குசினை யொண்பூ[1]" என்பர். புன்கமரத்தின் பூ வெள்ளிய பொரிபோறலின் "பொரிப்பூம் புன்கு" என்பர்; "பொரியெனப் புன்கவிழ் அகன்றுறை[2]" "பொரிப்பூம் புன்கின் எழிற்றகை யொண்முறி[3]" எனச் சான்றோர் குறிப்பர். இலைநெருக்கம் இன்மையின், **புகர் நிழல்** எனப்பட்டது. புன்கின் புள்ளி பொருந்திய நீழல் கருமையும் வெண்மையும் பொருந்தியிருத்தலால் இடையிடையே இலவம்பூ உதிர்ந்து கிடப்பது பன்னிறங்களால் நீழலிடம் ஒப்பனை செய்யப்பட்டது போறலின், **வரிக்கும்** என்றார். வேனிற்காலத்து இன்பநுகர்ச்சிக்குத் தண்பதம் இன்றியமையாமையின், **தண்பத வேனில் இன்பநுகர்ச்சி** என்றல் வேண்டிற்று. **வேனில் இன்பம்**, வேனிற்காலத்துத் தண்ணிய பொழிலிடத்தே சுற்றம் சூழ இருந்துண்டு மகிழும் வேனில்விழா. ஆருட்டும் வேனில்விழாவும் சேரநாட்டில் மிக்க சிறப்புடன் நிகழ்வன; அவற்றை நேரிற் கண்ட **பரணர்**, செங்குட்டுவனைப் பாடுமிடத்து, "நின்மலைப் பிறந்து நின்கடல் மண்டும், மலிபுனல் நிகழ்தரும் தீநீர் விழவு" என்று ஆருட்டையும், "பொழில்வதி வேனிற் பேரெழில் வாழ்க்கை[4]" என்று வேனில் விழாவையும் குறிக்கின்றார். இவ்வேனில் இன்பத்தைப் **பேரூர்க்கு** அணிமையில் **காஞ்சியாற்றின்** கரையில் சுற்றமொடு கூடி நுகர்ந்த சிறப்பைப் **பதிற்றுப்பத்துச்** சிறப்பிக்கின்றது. சேரநாட்டினராதலின் **ஆந்தையார்** அதனை ஈண்டுக் குறிக்கின்றார்.

1. அறம். 245. 2. ஷை. 116. 3. நற். 9. 4. பதிற். 48.

பிரியக் கருதும் தலைமகன் வேனிற் பருவத்து இன்ப நுகர்ச்சிக்கு வருவல் எனத் தான் மீண்டுவரும் பருவத்தைக் குறித்தா னாகலின், அதனைத் தோழி இலவத்தின் பன்மலர் புன்கின் புகர்நிழல் வரிக்கும் **தண்பத வேனில் இன்ப நுகர்ச்சி** என்று சிறப்பித்தாள். இன்பக்காலத்திற் காதலர் பிரியாதுறைதலை மகளிர் பெரிதும் விரும்புப. கார்த்திகை விழாவிற் காதலர் வருதல் வேண்டும் எனத் தலைமகள் விரும்புதலை, "மறுகு விளக்குறுத்து மாலை தூக்கிப், பழ விறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய, விழவுடன் அயர வருகதில் அம்ம [1]" என **நக்கீரர்** பாடுவது காண்க.

இவ்வண்ணம் வேனில் இன்பத்தைச் சிறப்பித்தவள், அதனை வற்புறுத்திப் பிரிவையாயின், தலைமகள் நின் பிரிவாற்ருது மேனிநலம் இழந்து அழிவள் என்பாள், **அம்மெல் ஓதி அழிவிலள் எனின்** என்றும், எனவே, அழிதல் ஒருதலை யென்றும், பின்பு நீ மீண்டு போந்து பெறக்கருதும் இன்பநுகர்ச்சிக்கு இடமில்லையாம் என்றும் கூறுவாள், வேறுவாய்ப்பாட்டால் **அழிவிலள் எனின் எம்மொடு கொண்மோ** என்றும் கூறினாள்.

எனவே, வேனிற்காலத்து இன்பநுகர்ச்சியினைப் பெறுதற்கு நீ மீண்டு வருந்துணையும் இவள் உயிர்வாழா ளாகலின், நீ அது பெறுதல் ஆகாது எனச் செலவு மறுத்த வாரும். (அ)

369. *வளமலர் ததைந்த வண்டுபடு நறும்பொழில்*
*முளைநிரை முறுவ லொருத்தியொடு நெருநல்*
*குறிநீ செய்தனை யென்ப வலரே*
*குரவ நீள்சினை யுறையும்*
*பருவ மாக்குயிற் கவ்வையிற் பெரிதே.*

1. அகம். 141.

இது, பரத்தை யொருத்தியுடன் பொழிலகத்துத் தங்கி வந்த தலைமகன், தலைமகள் வினவியவழி, "யாரையும் அறியேன்" என்றானாக, அவள் கூறியது.

ப. உரை: *இது பாலைக்கு உரித்தாகிய வேனிற்கண் நிகழுங் குரவும் குயிலும் கூறுதலாற் பாலையாயிற்று.*

**உரை:** வளவிய மலர்கள் நிறைந்திருத்தலின் வண்டுகள் படியும் நறிய பொழிலின்கண் முளைபோலும் நிரைபட நின்ற பற்களையுடைய ஒருத்தியோடு நீ குறிசெய் தொழுகினை யென்று கூறுப. அதன்வழி எழுந்த அலர் குரவ மரத்தின் நீண்ட கிளையின்கண் வதியும் வேனிற்பருவத்துக் கூவும் இயல்பிற்றாய குயில் செய்யும் ஓசையினும் பெரிதாயிராநின்றது எ. று.

வளர்மலர் ததைதல் கூறவே வண்டு மொய்த்தல் பெறப்படுதலின், **வண்டுபடு பொழில்** என்றார். **ததைதல்,** நெருங்குதல். **படுதல்,** ஈண்டு மொய்த்தல். **முளை நிரை முறுவல்** என்றது, முளைபோலும் முறுவல், நிரைமுறுவல் என இயையும். "முளைநிரை முறுவலார் [1]" என்று பிறரும் கூறுப. **முறுவல்,** பல். **குறி,** ஈண்டுப் பரத்தை மார்பில் தலைவனுடைய சாந்தும் பூணும் செய்யும் குறி. "நின் சாந்திநாற் குறிகொண்டாள், நின் மார்பின் பூணினாற் குறிகொண்டாள் [2]" என்பது காண்க. வேனிற்பருவத்தில் குரவமரத்தின் பூஞ்சினையி லிருந்து குயில் கூவுவது இயல்பு. "கொழுந்து முந்துறீஇக் குரவரும்பினவே, புணர்ந்தீர் புணர்மினோ வென இணர்மிசைச் செங்கண் இருங்குயில் எதிர்குரல் பயிற்றும் [3]" என்று சான்றோர் உரைப்பது காண்க.

"யாறுங் குளனும் காவு மாடிப், பதியிகந்து நுகர்தலும் உரிய என்ப [4]" என்பவாகலின், **வண்டுபடு நறும் பொழில்** கூறினாள்.

1. கலி. 15. 2. ஷை. 79. 3. நற். 224.
4. தொல். பொ. 191.

தலைமகன் **அறியேன்** என்புழி, குறிசெய்த இடம் முதலாயின யாவும் விளங்க அறிந்து அலர் கூறுவோர் பலர் என்பாள், **குறிநீ செய்தனை யென்ப** என்றும், நீ கூறுதொழியினும் யான் அவளை அறிவேன் என்பாள், **முளைநிரை முறுவல் ஒருத்தி** என்றும் கூறினாள். "கிழவோன் விளையாட் டாங்கும் அற்றே[1]" என்பதனால், தலைமகன் பொழில்விளையாட்டு அலர்க்கு ஏதுவாதலின், **அலர் ... ... மாக்குயிற் கவ்வையிற் பெரிதே** என்றாள்.

இஃது ஊடற் பொருண்மைத் தேனும் வேனிற் காலத்து நிகழும் குயிற் குரலை உவமித்தலின் பாலைத் திணையாயிற்று என்று **இளம்பூரணரும்**, இது பாலைக்கண் மருதம் நிகழ்ந்தது என **நச்சினார்க்கினியரும்**[2] கூறுவர். (௯)

*370. வண்சினைக் கோங்கின் றண்கமழ் படலை*
*இருஞ்சிறை வண்டின் பெருங்கிளை மொய்ப்ப*
*நீநயந் துறையப் பட்டோள்*
*யாவ ளோவெம் மறையா தீமே.*

இது, பரத்தை யொருத்திக்குப் பூவணிந்தான் என்பது கேட்ட தலைமகள், அஃது இல்லை என்று மறைக்கும்[3] தலைமகற்குக் கூறியது.

ப. உரை: இது பாலைக்குரிய கருப்பொருளாகிய கோங்கு கூறினமையால் பாலையாயிற்று.

**உரை:** வளவிய கிளைகளையுடைய கோங்கின் தண்ணிதாய் மணங்கமழும் மாலையினைக் கரிய சிறகுகளை யுடைய வண்டுகளின் பெரிய தொகுதிகள் மொய்த்துநிற்ப, நின்னால் அணிந்து விரும்பப்பட்டவள் யாவள் என்பதனை மறையாது எனக்கு உரைப்பாயாக எ. று.

---

1. தொல். பொ. 164.   2. தொல். பொ. நச்சி. 12. இளம். 52. மேற்கோள்.   3. **மறுக்கும்** என்றும் பாடம்.

**படலை**, மாலை. புதுப்பூக்களால் தொடுக்கப்பட்ட மாலை என்றற்குத் **தண்கமழ் மாலை** என்றார். பெருந் திரளான வண்டுகளைக் குறித்தற்குப் **பெருங்கிளை** என்ப. "தேன்செய் பெருங்கிளை[1]" என்று பிறரும் கூறுவது காண்க. **உறையப்பட்டோள்**, உறைதற்கு ஏதுவாய்க் காதலிக்கப் பட்டவள். **மறையாதீமே**, முன்னிலை முற்று வினைத்திரி சொல்.

பலர் காணப் பரத்தையொருத்திக்கு மாலை அணிந்து மகிழ்வித்தனை யாகலின், நீ என்னை மறைத்த லாகாது என்பதை உள்ளுறுத்து, **இஞ்சுசிறை வண்டின் பெருங்கிளை மொய்ப்ப** என்றும், அவள் பெருநல முடைய ளாதலின், அவளை யான் காண்டற்கு விரும்புகின்றேன் என்பாள், **யாவளோ எம் மறையாதீமே** என்றும் கூறினள். தன் வயின் உரிமை தோன்றக் கூறுதலின் தனித்தன்மைப் பன்மையால் **யாம்** என்றாள். (௰)

1. நற். 202.

## 38. மகட்போக்கியவழித் தாய் இரங்கு பத்து.

உடன்போக்கின்கண் தலைமகள் தலைமகனோடு புணர்ந்து உடனேகியவழித் தாய், மகள் பிரிவாற்றாது இரங்கிக் கூறும் பகுதியாகலின், இஃது இப்பெயர்த்தாயிற்று. இப்பத்தின்கண் முதல் இரண்டு பாட்டுக்கள் சில ஏடுகளில் இல்லை என்பர்.

அகனைந்திணைக் காதற்காம வாழ்க்கையில் தலைமைப் பண்புடைய ஒருவனும் ஒருத்தியும் சிறந்து நிற்ப ராயினும், தலைமகட்குத் தோழி போலச் செவிலியும் ஓரளவு சிறப்புடைய ளாவள். தாய் எனப் பொதுப்படக் கூறினமையின் செவிலி நற்றாய் என்ற இருவரும் உரியரே; ஆயினும், களவுக்குச் செவிலியே சிறந்து விளங்குகின்றாள். அவள் தலைவியை ஈன்ற நற்றாய்க்குத் தோழியாய்த் தலைவியைப் பிறந்த நாள்முதல் வளர்த்த பெருமையுடையவள். தலைமகள்பால் காணப்படும் கற்பும் காமமும் நற்பாலொழுக்கமும் பிறவுமாகிய மாண்புகட்குச் செவிலியும் உரியளாவள். அதனால் அவட்குத் தலைவிபாலும் தலைவிக்கு அவள்பாலும் நெருங்கிய அன்புண்டு. காமம் சிறத்தலால் தலைவி தலைமகனோடு உடன்போகியவழி அவளது பிரிவு செவிலிக்கு மிக்க வருத்தத்தை விளைத்து விடுகிறது. தலைமகளைத் தேடி ஊரெங்கும் நாடெங்கும் திரியும் செவிலியரும் உளர்.

இனி, தலைமகளது காதல் வாழ்வைக் குறித்துரைக்கும் அகப்பொருணூல் அவளது கற்புமாண்பை எடுத்துரைக்கிறது; அவளுடைய அறிவு செறிவு அருமை முதலியவற்றை அறிவிக்கிறது. அவற்றின் விளக்கத்துக்கு அடிகோலிய இளமைச் செவ்வியையும் எடுத்தோ

தும் கடமை ஆசிரியர்கட்கு வருகிறது. அவர்கள் அதனைக் காட்டற்குச் செவிலியையும் தாயையும் வாயிலாகக் கொள்வர். ஆதலால் அகப்பொருணூலில் தாயர்க்குச் சிறந்த இடம் உண்மை பெறப்படும்.

உடன்போகியவழித் தலைவியின் செவிலிக்குப் பெருந் துயரம் உண்டாகிறது; அவளது உள்ளத்தில் தலைமகளுடைய குணஞ்செயல்கள் புலனாகின்றன; நெஞ்சக் கிழியில் தலைவியது குழவிப்பருவம் முதல் தவழ்ந்து மொழி பயின்று தளர்நடைகொண்டு வளர்ந்ததும் பிறவும் தோன்றுகின்றன. தலைவியின் உணவும் உடையும் உரையும் விளையாட்டும் உருக்கொண்டு நிற்கின்றன. மனக் கண்ணிற் காணும் செவிலியின் சிறந்த அறிவு அவற்றைச் செவ்வையாக உருப்படுத்தி வெளியிடுகிறது.

தலைமகட்குச் சிறுபருவத்தே பாலுணவு தரப்படுகிறது. பாலில் தேன் கலந்து பொன்வள்ளத்திற் பெய்து தாயர் உண்பிக்கின்றனர். சிறிது உண்டதும் அஃது அவட்குத் தெவிட்டவும் அவள் உண்ண மறுத்து இங்குமங்கும் ஓடுகின்றாள்; அவள் பின்னே சென்று, "கூந்தல் உளரி மொழிமை[1]" கூறித் தாயர் ஊட்டுகின்றனர். தலைவி சிறிது வளர்ந்தபின் பாலில் பொரியை ஊறவைத்துத் தேன் கலந்து கொடுக்கின்றனர்.[2] பாலுணவை, ஒன்று தாய்க் குரியது, ஒன்று தந்தைக் குரியது, ஒன்று எனக்குரியது எனக் கூறுபாடு செய்து ஏன்பாடு உண்டனை; தந்தைபாடு உண்க எனச் சொல்லி உண்பித்தல்[3] ஒருவகை. உண்டலை மறுத்து ஓடுங்கால் அச்சுறுத்தலும் ஒரோவழி உண்டு.

இளமகளிர்க்குப் பொதுவாக உடுக்கும் உடையின் மேல் சிறப்பாக வயலைப்பிணையலும் அல்குலும் (மேகலை) புனைவர். முன்கையில் வளையும் காலில் அரிபெய்த சிலம்பும் அணியப்படுகின்றன. தலைமயிரை நெய்பெய்து வாரிப் பூவைத்துப் பின்னிவிடுவர்.

1. அகம். 207.　　2. குறுந். 356.　　3. அகம். 219.

மனைமுன்றிலில் இட்ட மணற்பந்தரிலும், படப்பையிலுள்ள நொச்சிவேலியின் நீழலிலும் விளையாடும் தலைமகட்கு மனைப்புறத்திலுள்ள தெற்றியும் மனைநடுவண் படர்ந்துள்ள வயலைப் பந்தரும் விளையாட்டிடமாம். பந்து கழங்கு பாவை முதலியன தலைவியின் விளையாட்டுப் பொருள்கள். தன்னொத்த ஆயமகளிர் புடைசூழ இருந்து விளையாடுவது தலைவியது பேரியல்பு. [1]

ஆண்டு சில கழிந்ததும் இவ்விளையாட்டுக்களோடு தாழியில் வயலை குவளை முதலியன வைத்து வளர்ப்பதும், கிள்ளை வளர்த்தலும், பாவைக்குப் பலியூட்டலும் விளையாட்டாகின்றன [2]. பொழில்களில் பூக்கொய்தலும் நீர் நிலைகளிற் படிந்தாடலும் கடற்கரையில் புணரியாடல் அலவனாட்டல் முதலியனவும் பின்னர் உண்டாகின்றன.

தலைவி தன் காதலனோடு உடன்போகியவழி இவை யாவும் செவிலியின் உள்ளத்தில் எழுகின்றன. அவள் செய்த தவறுகள் மறைந்து கெட, அவளது மென்மைப் பண்பு மேலோங்கி நிற்கிறது. அவள் சென்ற வெவ்விய சுரம் நினைவில் தோன்றுகிறது. வெஞ்சுரத்து வெயில் வெம்மையால் நீர்நிலைகள் வற்றிவிடுவதால், ஆண்டுக் கிடக்கும் கலங்கல்நீர் சுவையில் உவர்ப்பா யிருப்பதும், அதனை வழிச்செல்வோர் வேட்கைமிகுதியால் உண்பதும் நினைக்கின்றாள். தலைமகள் அதனை உண்ணற்கு எத்துணை வருத்தம் கொண்டாளோ என எண்ணி ஏங்குகிறாள்; அப்போது அவள் தன் இளமையில் பாலுண்ணாது மறுத்த சொல்லும் வெறுத்த உள்ளமும் கொண்டு ஒழுகியது [3] நெஞ்சில் தோன்றித் துயர்செய்கிறது [4]. அவள் சென்றவழி மாமலை விலங்கிய சுரம் என்பது அறிந்து, "பந்துவழி யோடினும் நனிநொந்து வெம்புபவள், வெவ்விய சுரநெறியை

1. குறுந். 396. 2. அகம். 369. 3. ஷை. 107.
4. குறுந். 356,

எவ்வாறு நடந்து சென்றாளோ என எண்ணிக் சோரிவள். முன்பெல்லாம் பாலுண்ணுமலும் பந்தாடா மலும் விளையாடாயமோடு மேவித் திரிந்தவள், இப்போது நடத்தற்கரிய வெங்கானம் அவனோடு செல்வது எளிது என உணர்ந்தாள் போலும் [1]" என வருந்துகின்றாள்.

தலைமகளது களவொழுக்கம் பற்றி ஊரில் எழுந்த அலரை நினைக்கின்றாள். இவள் களவை, அவள்தாய் உவப்பதோ வெறுத்துத் தகுவன செய்வதோ செய்க என விடாமல் அம்பற் பெண்டிர் எனக்கு வந்து உரைத்தனர்; அதனைக் கேட்கின் இவள் நாணுவள் என யானும் ஒன்றும் உரையே னாயினேன்; அவளும் அதனைக் கரந்தே உறைந்தா ளாயினும், "அன்னை அறியின் இவணுறை வாழ்க்கை எளிதாகல் இல்லை" எனக் கருதி இளையோ னாகிய அவனுடன் சென்றொழிந்தாள் [2] என அலரெழுந்த காலை அவள் ஒழுகியதிறம் நினைந்து வருந்துகின்றாள். பின்னர் ஒருவாறு தேறி, மடந்தைக்கும் காளைக்கும் உண் டாகிய நட்பு இவ்வுடன்போக்கால் உண்மையாயிற்று; [3] இது போதும், என எண்ணி அமைபவள், அவனும் அவளும் செல்லும் நெறியில் உள்ள சீறூர்க்கண் அவர் களை வரவேற்றுச் செல்விருந்தாற்றித் துச்சில் இருத்தும் மனைகெழு பெண்டாகுக யான் [4] என விழைவது அவளது மனமாண்பை வெளிப்படுத்துகின்றது.

அதுவே சார்பாக அவளது திருமணம் செவிலியின் நினைவுக்கு வருகிறது. மனைக்குப் பூவலூட்டிப் புதுமணல் பரப்பி எங்கணும் மாலை சூட்டித் [5] தமர் திருமணம் செய்ய முற்படுவதும், ஆயத்தாரும் தாயரும் ஒருபால் நின்று காணச் சான்றோர் முன்னே நிற்ப [6], அவளுடைய கையைத் தலைமகன் பற்றும் மணவினையை நினைக்கின்றாள்; நெஞ்சு கலங்குகிறது; கண்ணீர் ஆறாய்ப் பெருகுகிறது.

1. குறுந். 396. 2. அகம். 203. 3. குறுந். 157.
4. அகம். 203. 5. ஷை. 195. 6. ஷை. 385.

இனி, தலைவியை ஈன்ற நற்றாயும் இவ்வாறு வருந்து கின்றாள். தலைமகளுடைய ஆயமகளிரையும் ஏனை விளையாட்டுப் பொருள்களையும் காணுந்தோறும், அவட்கு அவை ஆருத்துயரத்தைச் செய்யும்.[1] அவள் பெரும்பாலும் மனையின் நீங்காத மாண்புடைச் செல்வியாதலின், மனையின் அகத்தும் புறத்தும் மகள் விளையாடிய நினைவு தோன்றி வருத்த வருந்திப் பிறர்க்கும் காட்டி, "ஒருமகளுடையேன்; அவளும் காளையொருவனுடன் அருஞ்சுரம் நெருநல் சென்றாள்; அவள் ஆடிய தெற்றியும் நொச்சியும் கண்டு உள்ளினும் உள்ளம் வேகும்[2] என்று வருந்துகிறாள். தலைமகள் சென்ற சுரத்தின் கொடுமையைப் பிறர் கூறக் கேட்பின், "என்மகள் எனது அன்பு இயைவதாயின், அவள் செல்லும் வழி வம்பலரைத் தாங்கும் நன்மக்கள் வாழும் ஊர்களை உடையதாகுக[3]" என்றும், "ஞாயிறு காயாது மரநிழல் பொருந்தி மணல் பரந்து மழை பெய்து குளிர்ந்திருப்பதாக[4]" என்றும் விழைகின்றாள்.

தன்மனைக்கண் உள்ள செல்வத்தை நோக்கும் நற்றாய், அதனைப் பொருளென எண்ணாது தலைமகள் சூழ்ந்தது அவட்கு மிக்க வருத்தத்தைச் செய்கிறது. சீரும் சிறப்பும் இன்றி வறுமையில் அவள் கிடந்து வருந்துவளோ என்ற வாட்டம் ஒருபால் அவள் உள்ளத்தை உருக்குகிறது.[5] அவள் வளர்த்த வயலைக்கொடியைக் கண்டு, "ஆர நீருட்டிப் புரப்பவர், யார் மற்றுப் பெறுகுவை, அளியை நீயே[6]" என ஒருபால் அவலமுறுவாள். ஒருகால் அவள் தவறு செய்தாளாக அதற்காக அவளை ஒறுத்த தன் கையை நோக்கி, "அவளை அலைத்த என்கை கடுநவைப் படுக[7]" என நொந்துகொள்வள். மகள் நீங்கியதும் தன் உயிர்

1. நற். 305. 2. ௸. 179. 3. அகம். 15.
4. குறுந். 378. 5. அகம். 369. 6. ௸. 383.
7. ௸. 145.

நீங்கவில்லை யென வருந்தி, உயிர் கொள்ளா தொழிந்த கூற்றை வெகுண்டு, "மரயிருந் தாழி கவிப்பத் தாவின்று கழிக எற் கொள்ளாக் கூற்றே [1]" என்றும் கூறுவள்.

அவள் பிரிவை நினைக்கும் போது தலைமகன் நினைவும் உடன்தோன்றுகிறது. மகள்பாற் செல்லும் அன்பு அவன் பால் சினமாகிறது. தணிந்த பருவத்திற் செல்லாது வெதிர்நெல் விளையும் வேனில் வெங்காலத்தில் கொண்டு தலைக் கழிந்தானே [2] எனக் கொதிக்கின்றாள். மகட்குத் தாயாகிய என்னைப் போலவே என்மகளைக் "கொண்டுடன் போக வலித்த வன்கட் காளையை ஈன்ற தாய் பெருவிதுப் புறுக [3]" என வெதும்புகின்றாள்.

உடன்போகிய தலைமகட்குத் தலைவன் மனையில் திருமணம் நடக்கும் செய்தி வரக் கேட்டதும் அவள் வடிவு முற்றும் ஆர்வமாய் விடுகிறது. அம்மடநல்லாளை ஈன்றமைபற்றி என்பால் அருளானாயினும், அவளைப் பன்னாள் கூந்தல் வாரி நுசுப்பிற் சுமந்து ஓம்பிய உதவி யுடையேன் எனச் சொல்லி, வேலனை வருவித்து, "வேலனே, உன் கழங்கு நோக்கிச் சொல்: எனக்கு மகளைக் காணாமையால் கண்ணுறக்கம் இல்லை; யான் இனிது உறங்க அவன் அவளை இங்கே கொணர்வானாயின், அவளை என்மனை முந்துறத் கொணர்வானா? தன்மனைக்கு உய்ப்பானா, அவன் குறிப்பு யாது? [4]" என்று கேட்கின்றாள்.

திருமணம் நினைவிலெழுதலும், திருமணத்தில் தாயாகிய தான் தலைவியின் மடமை பாராட்டி, அவன் தாய் அவனது செம்மல் கண்டு அதற்குரிய சிறப்புச் செய்ய நிகழும் மனைவினை தோன்றி வருத்துகிறது [5]. திருமணத் துக்கு முன்னணியாக நடைபெறும் சிலம்புகழி நன்மணம்

1. நற். 271. 2. அகம். 397. 3. நற். 293
4. அகம். 195. 5. ஷை. 397.

தன் மணக்கண் நிகழாமையைப் பன்முறையும் எண்ணிச்[1] "சிலம்பு கழீஇய செல்வம் பிறருணக் கழிந்தது[2]" எனக் கையற்று வருந்துவள். இனி வரும் பாட்டுக்களிலும் இன்னோரன்ன கருத்துக்களைக் காணலாம்.

*371. மள்ளர் கொட்டின் மஞ்ஞை யாலும்*
*உயர்நெடுங் குன்றம் படுமழை தலைஇச்*
*சுரநனி யினிய வாகுக தில்ல*
*அறநெறி யிதுவெனத் தெளிந்தவென்*
*பிறைநுதற் குறுமகள் போகிய கானே.*

இது, தலைமகள் புணர்ந்துடன் போகியவழி நற்றாய் "உடன்போக்கு அறநெறி" என்று மகிழ்ந்து கூறி அங்ஙனம் கூட்டிய நல்வினையைத் தன்னெஞ்சிற்கு விளக்கிப் புலம்பியது.

**உரை:** மள்ளர்கள் செய்யும் முழக்கத்துக்குத் தக மயில் ஆலும் நெடிதா யுயர்ந்த குன்றத்தில் ஒலிக்கின்ற முகில் மழை பெய்தலால் அதனைச் சார்ந்த சுரம் வெம்மையே யின்றி இனிமையுடைத்தாகுக, தலைமகனோடு உடன்போகுதலாகிய இஃது அறநெறியே எனத் தெளிந்து சென்ற என்னுடைய பிறைபோலும் நெற்றியினையுடைய இளைய மகள் போகிய கான மாதலான் எ. று.

**மள்ளர்,** சுரத்தின்கண் வாழும் மறவர். அவரது பறை முழக்கிற் கேற்ப மயில் தோகையை விரித்தாடும் என்றாராயினும், மயில் ஆடுதற் கேற்ப மள்ளர் பறைகொட்டுவரென்பது கருத்தாகக் கொள்க. **ஆலுதல்,** ஆடுதல். ஆலுதல் அகவுத லாயின், மள்ளர் கொட்டில் என்றதற்கு மள்ளரது படைக்கொட்டிலின் மேலிருந்து மயில் அகவும் என்று உரைக்க. பெயல் கருதி முழங்கும் கருமுகிலைப்

1. அகம். 315, 321, 369. 2. நற். 279.

**படுமழை** என்ப; "படுமழை உருமின் முழங்கும்[1]" என்பது காண்க. சுரம் மழைதலைஇ இனிய வாகுக என்று இயை யும். **தில்**, விழைவுப்பொருட்டு. **இது**, தலைமகனுடன் கொண்டுதலைக்கழியும் இவ்வொழுக்கம். **கான்**, கானம். "சுரன்அணி கொண்ட கானம்[2]" என்றது காண்க. தேற்றேகாரம் விகாரத்தால் தொக்கது.

காதலன் கருத்தின்வழி யொழுகும் கற்பு மேம் பட்டாள் என மகளது செயல்மாண்பினை உள்ளுறுத்து உரைத்தலின், கற்புடைப் பெண்டிர் இருந்த நாட்டில் மழை வறங்கூராது என்பது பற்றிச் **சுரம் நனி இனியவாகுக தில்ல** என்றாள். மள்ளர் கொட்டுக்குத் தக மயில் ஆலும் என்றது, தலைமகன் வேட்டதனையே தலைமகளும் வேட் டொழுகுகின்றாள் என்றவாறு; இந்நெறிமை அவள்பால் இல்லையாயின் உடன்போக்கு நிகழாது என அறிக.

தலைமகள் உடன்போதற்குக் காரணம் பல்லாற்றானும் ஆராய்ந்தாட்கு, முன்னை நல்வினை கூட்டத் தலைமகனோடு உடன்சென்று கற்புப் பூண்டு அவனோடு நிகழ்த்தும் ஒழுக்கமே இருமையும் பயத்தற் சிறப்புடைய நல்லறம் என உணர்ந்தாள் என்பது விளங்கினமையின், **அறநெறி இதுவெனத் தெளிந்த** என்றும், அங்ஙனம் உணரும் முதுக் குறைவுடைய ளாயினும் சுரத்தின் கொடுமையை ஆற்றும் மதுகையிலள் என்பாள், **பிறைநுதற் குறுமகள்** என்றும், அறநெறி யுணர்ந்து அதனைக் கடைப்பிடித்துச் செல் வார்க்கு நோய்தருவன இல்லை யெனினும், தாய்மையால் சுரத்தின் கொடுமை நோக்கி இரங்குகின்றாளாகலின், **சுரம் நனி இனிய வாகுக** என்றும் கூறினாள். "இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின், சிறந்தானை வழிபடீஇச் சென்றனள், அறந்தலைப் பிரியா ஆறுமற் றதுவே[3]" என் றும், "புணர்ந்துடன் போதல் பொருளென, உணர்ந்தேன்

1. அகம். 389. 2. ஐங் 357. 3. கலி. 9.

மன்ற அவர் உணரா வூங்கே [1]" என்றும் கூறினர் பிறரும். தேற்றேகாரம் விகாரத்தால் தொக்கது. வேனிலால் வெவ்விதாய சுரம் இனிதாதற்பொருட்டுக் குன்றம் படுமழை தலைஇச், சுரநனி இனிய வாகுக என்றது வாழ்த்துமாம்; "ஞாயிறு காயாது மரநிழற் பட்டு, மலைமுதற் சிறுநெறி மணல்மிகத் தாஅய்த் தண்மழை தலையின் றாக நந்நீத்துச், சுடர்வாய் நெடுவேற் காளையொடு, மடமா வரிவை போகிய சுரனே [2]" என்று பிறரும் கூறுவது காண்க.

இதனுள் "அறநெறி இதுவெனத் தெளிந்த என் மகள்" என்று தாய் கூறவே, உடன்போக்குத் தருமமென்று மகிழ்ந்துகூறி 'அங்ஙனம் கூட்டிய நல்வினையைத் தன் நெஞ்சிற்கு விளக்கிப் புலம்பிய வாறு காண்க என்பர் நச்சினார்க்கினியர்.[3] (க)

372. என்னு முள்ளினள் கொல்லோ தன்னை
நெஞ்சுணத் தேற்றிய வஞ்சினக் காளையோ
டழுங்கன் மூதா ரலரெழச்
செழும்பல் குன்ற மிறந்தவென் மகளே.

இது, தலைமகள் உடன்போகியவழி நற்றாய் தன் ஒழுக்கத்தால் ஊர் அலரெடுத்து உரைத்தலை நினையாது சென்றவள் என்னையும் உள்ளினள்கொல்லோ வெனக் கவன்றுரைத்தது.

**உரை:** தன்னை நெஞ்சு கொள்ளுமாறு தகுவன கூறித் தெளிவித்துக் கொண்டு தலைக்கழிந்த வஞ்சினத்தை யுடைய காளைபோல்வானுடன்; யான் அழுங்குதற் கிடனாகிய இப்பழையவூரார் அலர் கூற, அதனை நினைத்தலும் செய்யாது செழித்த பலவாகிய குன்றங்களைக் கடந்து சென்ற என் மகள் தான் போகியவழியில் என்னையும் நினைந்தாள் கொல்லோ, அறியேன் எ. று.

. 297.  2. ஷை. 378.  3. தொல். பொ. 36.

**நெஞ்சுண்டல்,** மனத்துட் கோடல். **வஞ்சினம்,** கடுஞ்சூள். "எஞ்சா வஞ்சினம் நெஞ்சுணக் கூறி[1]" என்றார் பிறரும். காளை போல்வானைக் **காளை** யென்றார்; இது திணைநிலைப்பெயர். உள்ளாமை யுணரநின்றமையின், உம்மை, எதிர்மறை. **அழுங்கன் மூதூர்** பேரொலியினை யுடைய மூதூர் எனினுமாம்; "உறைவினி தம்மவிவ் வழுங்க லூரே[2]" என்றார் பிறரும்.

மிக்க இளமையும் மடப்பமு முடையவளாய்த் தோழியர் தாயர் ஆகிய இவரைப் பிரியாதிருந்தாள், பிரிவச்ச மின்றிப் போக்குடன்பட வேண்டுதலின், **தன்னை நெஞ்சுணத் தேற்றிய** என்றும், அங்ஙனம் தேற்றத் தேறியவள் ஊரார் கூறும் அலர்க்குச் சிறிதும் உட்காது சென்றதனை நினைந்து வியப்பாளாய், **அழுங்கல் மூதூர் அலரெழ** என்றும், அவ்வலருரைக்கு நாணி யாம் ஈண்டு இருந்து வருந்தாநிற்ப, அழுங்கல் இயல்பாக வுடைய மூதூர் எடுத்த அலரைப் பொருளாகக் கொள்ளாமையின், அவ்வூரொடு அதன்கண் உறையும் எம்மையும் துறந்தொழிந்தாள் போலும் என்பாள், **செழும்பல் குன்றம் இறந்த என்மகள்** என்றும், எதனை நினையாளாயினும் ஈன்று புறந்தந்த தன்னை மறத்தற்கு ஏது ஒன்றும் காணாளாய், என்னை நினைந்தாள் கொல்லோ வென்று தன் ஆராக் காதலால் அலமருகின்றாளாகலின், **என்னும் உள்ளினள் கொல்லோ** என்றும் கூறினாள்.

அன்னை அறியின் தனக்கு இம்மனையில் உறைதல் துன்பமாம் எனக் கருதி நீங்கினாளாகலின், ஈண்டு உறையும் அன்னையாகிய தன்னை அவள் துறந்தாலன்றி உடன்போக்குக்கு உள்ளம் செல்லாதென்பது பற்றி இவ்வாறு நினைந்தாள் என்றுமாம். "அன்னை யறியின் இவணுறை வாழ்க்கை எனக்கெளி தாகல் இல்லெனக் கழற்கால்

1. நற். 214. 2. ஐங். 181.

மின்னொளிர் நெடுவேல் இளையோன் முன்னுறப் பன்மலை யருஞ்சுரம் போகிய தனக்கு[1]" என்று பிறரும் கூறுதல் காண்க.

உம்மை காதற்சிறப்புணர நின்றமையின் சிறப்புமாம். ஆகவே, நற்றாய் மாட்டு **நினைதல்** என்னும் மெய்ப்பாடு தோன்றிற்று. "இஃது என்னை நினைப்பாளோ என்றது" என்பர் **நச்சினார்க்கினியர்.**[2] இது தலைமகள் கொடுமை நினைந்து கூறிய தென்பர் **இளம்பூரணர்**[3]. (உ)

373. *நினைத்தொறுங் கலிழு மிடும்பை யெய்துக*
*புலிக்கோட் பிழைத்த கவைக்கோட்டு முதுகலை*
*மான்பிணை யணைதர வாண்குரல் விளிக்கும்*
*வெஞ்சுர மென்மக ளுய்த்த*
*வம்பமை வல்வில் விடலை தாயே.*

இது, தலைமகளைத் தலைமகன் கொண்டுகழிந்த கோடுமை நினைந்து நற்றாய் சொல்லியது.

**ப. உரை:** இவட்காக யான் பட்ட துயரம் அவன் தாயும் படவேண்டும் எ. று.

**உரை:** புலியாற் கொள்ளப்படுதலிற் பிழைத்த கவைத்த கொம்புகளையுடைய முதிய கலைமான் தன் பிணை மான் தன்னை யடையுமாறு ஆண்குரலை யெடுத்தழைக்கும் வெவ்விய சுரத்தின்கண், என்மகள் செல்லுமாறு செய்த புதிய மூங்கிலாற் செய்யப்பட்ட வலிய வில்லினையுடைய விடலைக்குத் தாயாகியவள் நினைக்குந் தோறும் என்மேல் கண்ணீர் வாரும் துன்பத்தினை எய்துவாளாக எ, று.

நினைக்குந்தோறும் நெஞ்சு கலங்கிக் கண்ணீர் சொரியப் பெருகும் துன்பம் **நினைத்தொறும் கலிழும் இடும்பை**

---

1. அகம், 203. 2. தொல். பொ. 36. 3. ஷை. ஷை. 39.

எனப்பட்டது. **கவைக்கோடு,** கிளைத்த கோம்புகள். புலி முழக்கம் கேட்டு அஞ்சிச் சிதறி யோடிய பிணைக்குத் தான் உய்ந்தமை தெரிவித்து அழைக்குமாறு தோன்ற, **மான்பிணை அணைதர ஆண்குரல் விளிக்கும்** என்றார். ஆண்மை தோற்றுவிக்கும் குரல் ஆண்குரல் எனப்பட்டது. அது கேட்டு மானினம் ஒருங்கு திரளும் என அறிக. "நெடுமான் இனநிரை தரீஇய கலையே, கதிர்மாய் மாலை ஆண்குரல் விளிக்கும் [1]" எனப் பிறரும் கூறுப. அம்புக்குக் கடுமையும் சிறப்பும் அதனைச் செலுத்தும் வில்லின் வன்மைமேல் நிற்றலின், **வம்பமை வல்வில்** என்றார். **வம்பு,** புதுமை.

தன் மகளதுபோக்கினை நினையுந்தோறும், சுரத்திடை விலங்கு புள் வெயில் வெம்மை முதலியவற்றாலும், தேடிப் பின்சென்ற தந்தை தன்னையர் என்று இவராலும் அவள் தீங்கெய்துகின்றனளோ என்னும் ஐயமும் கலக்கமும் தோன்றி மனத்தை அலைத்தலின், **நினைத்தொறும் கலிழும் இடும்பை** யென்றாள்.

தலைமகளின் தந்தை தன்னையர் பெருஞ்சினங் கொண்டு சேறலின் அவரால் தீங்கு விளையு மென அஞ்சினாள்; "அவரும் தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண் சேந்து, ஒருபக லெல்லாம் உருத்தெழுந்துஆறி இருவர்கட் குற்றமும் இல்லையால் என்று தெருமந்து சாய்த்தார் [2]" என்பது காண்க.

இது "நன்மை தீமை அச்சம் சார்தலென் றன்னவை பிறவும்" **என்புழிக்** கூறிய அச்சம். இதன்கண் நற்றாய் மாட்டுப் **பொறுமை** யென்னும் மெய்ப்பாடு தோன்றிற்று. "விழவுத்தலைக் கொண்ட பழவிறன் மூதூர்ப் பூங்க ணுயம் காண்டொறும் எம்போற், பெருவிதுப்புறுக மாதோ

1. அகம். 199.	2. கலி. 39.

எம்மிற், பொம்மலோதியைத் தன்மொழிக் கொளீஇக், கொண்டுடன் போகவலித்த, வன்கட் காளையை யீன்ற தாயே[1]" எனப் பிறளும் கூறுதல் காண்க. (௩)

*374. பல்லூழ் நினைப்பினு நல்லென் றூழ*
*மீளி முன்பிற் காளை காப்ப*
*முடியகம் புகாஅக் கூந்தலள்*
*கடுவனு மறியாக் காடிறந் தோளே.*

இது, தலைமகள் உடன்போயவழி அவள் இளமை நினைந்து இரங்கித் தாய் கூறியது.

**உரை:** பலமுறை ஆராயினும் இவ்வுடன்போக்கு நன்முறையே யென்று கருதி, மீளிபோலும் வலியினையுடைய காளைபோல்வான் காவல் செய்ய, முடியிடுதற்குரிய நீட்சி பெறாத கூந்தலையுடையவளாகிய என்மகள், குரங்குகளாலும் புகுந்தறியப்படாத காட்டினைக் கடந்து சென்றனள்; அவளது அறிவிருந்தவாறு என்? எ. று.

**பல்லூழ்,** பன்முறை; "பல்லூழ் நொடித் தெனச் சிவந்த மெல்விரல்.[2]" **நல்லென் ஊழ்,** நல்ல எனப்படும் ஊழ்; நல்லூழ் என்றவாறு; என்றென்பது எஞ்சி நின்றது. இவ்வூழ் இருவருக்கும் ஒத்தலின் பொதுப் படக் கூறினர். **மீளி முன்பின் காளை,** கூற்றை யொத்த வலியினையுடைய காளை. **மீளி,** கூற்று. பெண்மைச் செவ்வி எய்துங் காலத்து மகளிர்க்குக் கூந்தல் நன்கு முடித்தற் குரிய வளர்ச்சி பெறும் என்பது பற்றி **முடியகம் புகாஅக் கூந்தல்** என்றார்; "தலைமுடி சான்ற தண்டழை யுடையை, அலமரல் ஆயமொடு யாங்கணும் படாஅல்[3]" என இற்செறிக்கு மாற்றாலும் இஃது அறியப்படும். **கடுவனும் அறியாக் காடு** என்றது, "மந்தியு மறியா மரம்பயி லடுக்கம்[4]" என்றாற் போல; உம்மை, சிறப்பு.

---

நற். 293. 2. அகம். 176. 3. ஷ 7. 4. முருகு. 42.

எம்முறையான் ஆராயினும், மகளிர் உற்றூர்க்கே உரிய ரென்னும் நன்முறையே பெறப்படுதலின், **பல்லூழ் நினைப்பினும் நல்லென்னூழ** என்றும், கூந்தலும் நன்கு வளராத இளமையுடையவ ளென்றற்கு, **முடியகம் புகாஅக் கூந்தலள்** என்றும் கூறினுள். இது, **தன்மை** யென்னும் மெய்ப்பாடாம். இனி, காடிறந்தோள் செயல் என ஒரு சொல் வருவித்து நல்லவென்ற முறையினவாம், ஆயினும், அவள் முடியகம் புகாக் கூந்தலளென ஆக்கம் வருவித்து உரைப்பினும் அமையும். பன்மை வாய்பாட்டாற் கூறியது, அறிவறிதலும் அஞ்சாது சேறலும் நோக்கி என்க. தன் மகள் காடு இறந்தமைக் குரிய காரணத் தைப் பன்முறை நோக்கி அவளது அறிவு விளங்கக் கண்டு அமைந்தா ளாயினும், முடியகம் புகாக் கூந்தலள் என அவளது இளமைச் செவ்வி நினைவின்கண் நிலவுதல் பற்றி, "இளமை நினைந்து கூறியது" எனத் துறை கூறிற்று. பிறுண்டும், மகள் கூந்தல் முடியகம் புகாமை நினைந்து, "சந்துவளர் வணர்குரல் வாரி வகைவகுத்து, யான்போது துணைப்பத் தகரம் மண்ணுள், தன்னோ ரன்ன தகைவெங் காதலன், வெறிகமழ் பன்மலர் புனையப் பின்னு விடச், சிறுபுறம் புதைய நெறிபு தாழ்ந்தனகொல்[1]" எனத் தாய் வருந்திக் கூறுமாறு காண்க. (௪)

375. *இதுவென் பாவை பாவை யிதுவென*
*அலமரு நோக்கி னலம்வரு சுடர்நுதற்*
*பைங்கிளி யெடுத்த பைங்கிளி யென்றிவை*
*காண்டொறுங் காண்டொறுங் கலங்க*
*நீங்கின ளோவென் பூங்க ணோளே.*

இது, சேரியும் அயலும் தேடிக் காணுது வந்தாரைக் கண்டு தலைமகள் தாய் சொல்லியது.

1. அகம். 117.

**உரை:** இப்பாவை என் பாவைபோல்வாள் வைத்தாடும் பாவையாகும் என்றும், இக்கிளி சுழன்ற நோக்கத்தையுடைய அழகுமிக்க ஒளி பொருந்திய நெற்றியினையுடைய பசிய கிள்ளைபோல்வாள் வளர்த்த பசிய கிளி என்றும் கூறி, யான் இவற்றைக் காணுந்தோறும் கலங்கி வருந்த ஏன் அழகிய கண்களையுடைய மகள் பிரிந்து சென்றனள் போலும். எ. று.

முதற்கண் நின்ற பாவையும் பைங்கிளியும் தலைமகளைக் குறிப்பன. **அலமரல்**, சுழலுதல். **நலம்**, அழகு. **என்றிவை**, என்ற இவை, அகரம் விகாரத்தால் தொக்கது. காணும் கண் கலங்கி நீர்சொரிவது பற்றி, **கலங்க** எனப் பொதுப்படக் கூறினர். **பூங்கண்**. பூப்போலும் கண்; "பூவென் ஒருபெயர் ஆயியல் பின்றே, ஆவயின் வல்லெழுத்து மிகுதலும் உரித்தே [1]" என்றமையின், மெல்லெழுத்துப் பெற்று முடிந்தது; "பூங்கண் ஆயம் [2]" எனப் பிறரும் கூறுதல் காண்க.

தலைமகனேடு களவுநெறிக்கண் ஒழுகுங்கால் தன் செயல் மனையவர்க்குப் புலனகுமோ எனக் கணந்தோறும் அஞ்சி அலமந்து ஒழுகினு ளாகலின், அவளது பார்வையை, **அலமரு நோக்கு** என்றும், தலைமகன் கூட்டத்தால் தலைவியின் சுடர்நுதல் அழகுமிக்குத் திகழ்ந்தமை தோன்ற, **நலம் வரு சுடர் நுதல்** என்றும் கூறுகின்ருள்.

தன் அன்புடைய மகளைப் பிரிந்தவள் அவள் விரும்பிப் போற்றிய பாவையும் கிள்ளையும் காணுந்தோறும் அவள் நினைவெழுந்து வருத்துதலின், **காண்டொறும் காண்டொறும் கலங்க** என்றும், தேடிச் சென்ருர் அவள் நிலையறிந்து வருவரென்று எண்ணியிருந்தவள், அங்ஙனம் வாராமையால் **நீங்கினளோ** என்றும் கூறினள். பயிலிடமும், பயில்பொருளும் தனித்தனி நோக்குந்தோறும் வருத்துதலின், **காண்டொறுங் காண்டொறும்** என அடுக்கிக்கூறினள். இதனல் தாய்பால் **அரற்று** என்னும் மெய்ப்பாடு தோன்றுதல் காண்க.

1. தொல் எழுத்து. 268. 2. நற். 90.

தலைவி பலியிட்டுப் பரவியது பாவை; பாலூட்டி வளர்த்தது கிள்ளை; பாவை பலிபெறுமையும் கிள்ளை பாலுண்ணுமையும் கண்டு வருந்தியவாறு: "செந்தார்க் கிள்ளையும் தீம்பால் உண்ணு, கேழ்கொளக் காழ்புணர்ந் தியற்றிய வனப்பமை நோன்சுவர்ப், பாவையும் பலி யெனப் பெறுஅ நோய் பொர, இவைகண் டினைவதன் றலையும் நினைவிலேன் [1]" எனத் தாய் கலங்கி மொழிவது காண்க.

இது தேடிக்காணுது வந்தாரைக் கண்டு புலம்பியது என்பர் **நச்சினார்க்கினியர்** [2]. இது சேரியோரை வினயது என்பர் **இளம்பூரணர்** [3].

இனி, " இதுவென் பாவைக் கினியநன் பாவை, யிது வென் பைங்கிளி எடுத்த பைங்கிளி, யிதுவென் பூவைக் கினியசொற் பூவையென், றலம்வரு நோக்கி னலம்வருஞ் சுடர்நுதல், காண்டொறுங் காண்டொறுங் கலங்கி, நீங்கின ளோவென் பூங்க ணோளே" என்பது பாடமாயின், [4] நன் பாவை யென்றும், பைங்கிளி யென்றும், சொற்பூவை யென்றும், காண்டொறுங் காண்டொறுங் கலங்க, சுடர் நுதலையுடையளாகிய பூங்கணோள் நீங்கினளோ வென்றும் செய்தெனெச்சத்தைத் திரித்து முடித்துரைக்க. (௬)

376\. *நாடொறுங் கலிழு மென்னினு மிடைநின்று*
*காடுபடு தீயிற் கனலியர் மாதோ*
*நல்வினை நெடுநகர் கல்லெனக் கலங்கப்*
*பூப்புரை யுண்கண் மடவரற்*
*போக்கிய புணர்த்த வறனில் பாலே.*

இது, தலைமகள் போயவழி நற்றுய் விதியை வெகுண்டு சொல்லியது.

---

1\. அகம். 369. 2. தொல். பொ. 36. 3. ஷை. ஷை. 40.

4\. சீர்காழி கோவிந்தசாமிரெட்டியார் பிரதியில் இதுவே காணப்படுகிறது.

**உரை :** நல்ல செய்வினை அமைந்த நெடிய மனைக்கண் உறையும் நமர் கல்லென்று கலங்கி வருந்தப் பூப்போலும் மையுண்ட கண்களையுடைய மடப்பம் பொருந்திய மகள் போதற்கு ஊக்கிய அறப்பண்பில்லாத தீவினைப்பால், நாடோறும் யான் கலுழ்ந்து வருந்துமாறு போலக் காட்டிடையே நின்று அதன்கண் தோன்றிய தீயிடைப்பட்டு எரிந்தொழியுமாக எ. று.

**இடை**, சுரத்தின் இடைநிலம். **கனலுதல்**, ஈண்டு வெந்து கெடுதல், **நல்வினை**, நல்லவேலைப்பாடு. இனி, நல்வினைப் பயனாகிய விளையும் செல்வமும் இன்பமும் பொருந்திய நுகர்ச்சிக்கமைந்த பெருமனை என்றற்கு **நல்வினை நெடுநகர்** என்றுமாம். **நகர்**, வீடு, ஈண்டு ஆகுபெயரால் நகர்க்கண் உறையும் தமர்மேல் நின்றது. **புணர்த்தல்**, நினைக்கப் பண்ணிச் செயலிடை ஒன்றுவித்தல். **அறன்**, ஈண்டு அருளறம் குறித்து நின்றது.

தலைமகளை விடாது தொடர்ந்து சேறற்கண் தன்னெஞ்சும் பாலும் ஒத்தமையின், **என்னினும்** என்றும், சிறிதும் எஞ்சாமல் வெந்து நீறுபட்டழிதல் குறிப்பாதலின் **காடு படு தீ** என்றும்

செல்வ நெடுமனைக்கண் இனிதிருந்த தன்மகள் அதனின் நீங்கி வெஞ்சுரத்துச் சேறற்குக் காரணம் ஊழ் என ஓர்ந்து உரைப்பாள், **போக்கிய புணர்த்த** என்றும், அறமல்லவை ஒன்றும் செய்தறியார்க்கு அவற்றைச் செய்தார்க்கு எய்தற் பாலதாய துன்பத்தை எய்துவித்தல், **பால்வரை தெய்வத்திற்குப்** பாங்கன்று என்பாள், **அறனில் பாலே** என்றும், அதனால் அதனை ஆற்ற ஒறுத்தல் ஆவதே யென்னும் கருத்தால், **காடுபடு தீயிற் கனலியர் மாதோ** என்றும் கூறினாள். கூறவே, தாய்மாட்டு **உயிர்ப்**பென்னும் மெய்ப்பாடு தோன்றிற்று. நல்வினைப் பயனாகப் பெற்ற நெடுமனை வாழ்க்கையில் இராது தீவினைப் பயனாக வெஞ்சுரம்

நடந்து வருந்தச் செய்தல் பற்றி ஊழ்வினைப்பாலை, **அறனில் பால்** என்னும் நயம் காண்க.

" இது தீவினையை வெகுண்டு புலம்பியவாறு காண்க. பால், பழவினை " என்பர் **நச்சினார்க்கினியர்** [1]. (சு)

377. *நீர்நசைக் கூக்கிய வுயவல் யானை*
*இயம்புணர் தூம்பி னுயிர்க்கு மத்தம்*
*சென் றனள் மன் றவென் மகளே*
*பந்தும் பாவையுங்* கழங்குமெமக் கொழித்தே.

இது, தலைமகள் உடன்போயவழி அவள் பந்து முதலாகிய கண்ட நற்றாய் கலங்கிச் சொல்லியது.

**உரை ;** நீர்வேட்கை மீதூர்ந்து வருந்தும் யானை வங்கியம் என்னும் இசைக்கருவியின் தூம்புபோலத் துதிக்கையினை யுயர்த்திப் பிளிறும் வழியின்கண், என்மகள் பந்தும், பாவையும் கழங்கும் முதலாகப் பல விளையாட்டுப் பொருள்களையும் யான் கண்டு வருந்துமாறு விட்டு வைத்துச் சென்றனள் எ, று.

**உயவல்,** வருத்தம். ஊக்கிய யானை யென்க. " நீர் நசைக் கூக்கிய உயவல் யானை [2]" எனப் பிறரும் கூறுப. நீர்நசைக்கு ஊக்கிய யானை என்பதற்கு நீர்வேட்கையான் அது பெறுதலைமேற்கொண்ட யானை எனினுமாம். "உடலுநர் உட்க வீங்கிக் கடலென, வான்நீர்க்கு ஊக்கும் தானை [3]" என்பதனால் அறிக.

நீர்வேட்கை மிக்கு அதனைப் பெறுதலைக் கருதி உள்ளம் எழுந்த தாயினும், உடல்தளர்ந்துசெல்ல மாட்டாமையின் வருந்துமாறு தோன்ற **உயவல் யானை** என்றார். பல்வகை இயங்களின் இடையே இசைக்கப்படுவது பற்றி

1. தொல். பொ. 35. 2. நற். 171. 3. புறம். 17.

நெடுவங்கியம் ஈண்டு, இயம்புணர் தூம்பு எனப்பட்டது. "பாடின் தெண்கிணை கறங்கக்....குறுநெடுந் தூம்பொடு முழவுப்புணர்ந் திசைப்பத் ....தேரை யொலியின் மாணச் சீரமைத்துச் சில்லரி கறங்கும் சிறுபல்லியம்[1]" என்பது காண்க. தூம்பு யானையின் கைபோலும் என்பதை "ஓய்களி றெடுத்த நோயுடை நெடுங்கை, தொகுசொற் கோடியர் தூம்பின் உயிர்க்கும் அத்தம்[2]" என்று பிறரும் கூறுவர்.

விளையாட்டுப் பொருள்களை விரும்பிப் போற்றும் இளமை கழிந்து அறிவறியும் செவ்வி யெய்தித் தன் கடன் அறிந்து உடன் போக்குத் துணிந்தனளாகலின், **சென்றனள் மன்ற என் மகளே** என்றும், தன்மகள் பேணிய பொருள்களைத் தான் காண்டொறும் வருத்தம் மிகுதலின், **பந்தும் பாவையுங் கழங்கும் எமக்கு ஒழித்தே** என்றும் கூறினள். பிறரும், "உள்ளின் உள்ளம் வேமே உண்கண் மணிவாழ் பாவை நடைகற் றன்ன என், அணி மயிற் குறுமகள் ஆடிய, மணியேர் நொச்சியும் தெற்றியும் கண்டே[3]" எனவும் கூறுதல் காண்க.

"பாவையும் பந்தும் பவளவாய்ப் பைங்கிளியும், ஆயமும் ஒன்றும்'இவைநினையாள் பால்போலும், ஆய்ந்த மொழியினள் செல்லுங்கொல் காதலன்பின், காய்ந்து கதிர்தெறூஉங் காடு[4]" எனவும் கூறுதல் காண்க. (எ)

378. *செல்லிய முயலிப் பாஅய சிறகர்*
*வாவ லுகக்கு மாலையாம் புலம்பப்*
*போகிய வவட்கோ நோவேன் றேமொழித்*
*துணையிலள் கலிழு நெஞ்சின்*
*இணையே ருண்க ணிவட்குநோ வதுவே.*

1. அகம். 301. 2. III. 3. நற். 184.
4. ஐந்திணை. 33.

இது, தலைமகள் உடன்போயவழி அவள் தோழி ஆற்றாமை கண்ட நற்றாய் சொல்லியது.

**உரை:** செல்லுதற்கு முயன்று பரப்பிய சிறகுகளை யுடைய வாவல் விரும்பிச் செல்லும் மாலைக்காலத்து, யாம் புலம்பெய்துமாறு எம்மைப் பிரிந்து சென்ற மகளை நினைந்து அழுவேனல்லேன்; இனிய மொழியினையுடைய துணைவியை யின்றி வருந்தி இனையும் நெஞ்சினோடு இணையொத்த மையுண்ட கண்களையுடைய தோழியாகிய இவள் பொருட்டே புலம்பு வேறாயினேன் எ. று.

பகற்காலத்துச் சேறலாகாமையின், **செல்லிய முயலிப் பாய சிறகர்** என்றும், மாலைப்பொழுதே வாவற்கு இரை தேர்தற்குரிய காலமாகலின், **வாவல்உகக்கும் மாலை** என்றும் கூறினர். "பையுள்மாலைப் பழுமரம் படரிய, நொவ்வுப்பறை வாவல்[1]" என்ப. அவள், இவள் என நின்ற சுட்டுக்கள் முறையே தலைமகளையும் தோழியையும் குறித்தன; செய்யுளாதலின் சுட்டு முற்பட வந்தது. ஓகாரம் சிறப்பு. **நோவேன்,** குறிப்பால் நோதலின் மிகுதி யுணர்த்திற்று, "என்மகள் கழிந்ததற்கு அழிந்தன்றோ விலன்[2]" என்றாற் போல. தேமொழித்துணை, தீவிய மொழி வழங்கும் துணைவி.

பகற்போதில் பரந்த உலகின்கண் காணப்படும் நிகழ்ச்சிகளில் விரிந்து நிற்கும் மனமும் கண்ணும் மாலைப்போதில் சுருங்கிமனை யகத்தே ஒடுங்கி நிற்றலான், அக்காலத்தே பிரிந்தோரது பிரிவு பெரிதும் வருத்துமாதலின், **மாலை யாம் புலம்பப் போகிய அவள்** என்றாள். "நின்தோழி திருநகர் வரைப்பகம் புலம்ப அவனொடு பெருமலை யிறந்தது நோவேன்[3]" எனத் தாய் பிறண்டும் கூறுவது காண்க.

1. தொல். பொ. 114. நச்சி. 2. அகம். 55. 3. ஷை. 63.

உடனிருந்து உடன்வளர்ந்து உடன்விளையாடி இன்மொழி வழங்கி இன்புறுத்திய தோழியாகிய தலைவியைப் பிரிந்து யாரொடும் சொல்லாடாது தனித்திருந்து வருந்துதலின், **தேமொழித் துணையிலள் கலிழும்** என்றும், தன்னினும் தோழி எய்தும் வருத்தம் பெரிதாதல் காண்டலின், **இணையோர் உண்கண் இவட்கு நோவதுவே** என்றும் கூறினள்.

தானுறு துயரத்தினும் பிறர் துயரம் துடைத்தல் தகவுடைத் தென்னும் முறைமையால் **இவட்கு நோவதுவே** என்றாள் எனினுமாம். இஃது அருள் என்னும் மெய்ப்பாடு. இது தோழி தேஎத்துப் புலம்பல் என்பர் **நச்சினார்க்கினியர்**[1]. (அ)

379. *தன்னம ராயமொடு நன்மண* நுகர்ச்சியின்
*இனிதாங் கொல்லோ தனக்கே* பனிவரை
*இனக்களிறு வழங்குஞ் சோலை*
*வயக்குறு வெள்வே* லவற்புணர்ந்து செலவே.

இது, புணர்ந்துடன் போகியவழித் தோழி அறத்தொடு நிற்பக் கேட்ட நற்றாய், "அதனை முன்னே அறிவித்து நாம் மணம்புணர்த்த ஒழுகாது போயினள்" என நொந்து சொல்லியது.

**உரை :** குளிர்ந்த மலைக்கண்ணே கூட்டமாகிய யானைகள் இயங்கும் சோலைகளின் வழியே விளக்கம் மிக்க வென்றி தரும் வேலையுடையவனோடு புணர்ந்துடன் சேறல் தன்னால் விரும்பப்பட்ட ஆயமகளிர் சூழ நாம் புணர்க்கும் நன்மணத்திடைப் பெறலாகும் இன்பநுகர்ச்சியினும் இனிதாகுங் கொல்லோ எ. று.

---

1. தொல். பொ. 36.

செலவு, நுகர்ச்சியின் இனிதாங் கொல்லோ எனக் கூட்டுக. **அமர்தல்**, விரும்புதல். **இன்**, ஒப்புப்பொருட்டு; உறழ்ச்சியுமாம். **தனக்**கென்றது, தலைமகட்கு. **புணர்ந்தென்னும்** செய்தெனெச்சம் செலவென்னும் வினைப்பெயரிடத்து வினை கொண்டது. **கொல்**, ஐயம். ஓகாரம், அசைநிலை. வடித்துக் கூரிதாக்கி நெய் தடவப்பெற்றுண்மையின், **வெள்வேல்** எனப்பட்டது.

தலைமகட்குத் தலைமகனோடு உளதாகிய நட்பினை முன்னே தனக்கு அறிவித்துத் தான் மணம் புணர்த்த ஒழுகாது போயினுளென்னுங் கருத்தால், பெற்றோரும் உடன் பயின்ற ஆயத்தோரும் ஒருங்குகூடி நுகர்விக்கும் இன்பத்தினும், அவரல்லாத புதுவோர் புணர்க்கும் இன்பம சிறப்புடைத்தனறு என்பாள், **இனிதாங் கொல்லோ** என்றாள்.

"தன்னோ ரன்ன ஆயமும் மயிலியல், என்னோ ரன்ன தாயருங் காண ....பொன்னுடை நெடுநகர்ப் புரையோர் அயர, நன்மாண் விழவின் தகரம் மண்ணி, யாம் பல புணர்ப்பச் சொல்லாள்[1]" என்று பிறரும் கூறுதல் காண்க. மணத்திடைப் பெறும் நுகர்ச்சியே இனிதென்னும் கருத்தின ளாதலின், **நன்மணம்** என்றாள். நன்மண நுகர்ச்சி போலப் புணர்ந்துடன் போகிய செலவும் இனிதாயின் போதல் வேண்டா; போதலால் ஈண்டைய மணநுகர்ச்சியினும் ஆண்டைய இனிமை பெரிதாம் போலும் என்பது எய்துதல் கண்டு, **இனிதாம் கொல்** என்றாள் என்க. (௯)

380\. *அத்த நீளிடை யவனொடு போகிய*
*முத்தேர் வெண்பன் முகிழ்நகை மடவரல்*
*தாய ரென்னும் பெயரே வல்லா*
*றெடுத்தேன் மன்ற யானே*
*கொடுத்தோர் மன்றவவ ளாயத் தோரே.*

இது, தலைமகள் உடன்போகியவழித் தெருட்டுவார்க்குச் செவிலித்தாய் கூறியது.

1\. அகம். 385.

**உரை:** நீண்ட வழியினையுடைய சுரத்தின்கண் அவனொடு புணர்ந்துடன் போகிய, முத்துப் போன்ற வெள்ளிய பற்களையும், முகிழ்த்த நகையினையுமுடைய மடவரலாகிய தலைமகட்குத் தாயர் என்னும் பெயரை யான் என்னால் வல்ல வகையாற் பெற்றேன்; எனினும், அவளை அவற்கு உரியளாகக் கொடுக்கும் பேறு பெற்றவர் அவள் ஆயத்தோரே யாகலின், யான் அப்பெயர் பெற்றும் பெறேனே யாயினேன் எ. று.

**அத்தம்,** வழி. பிறநிலங்களிற் போலாது பாலை நிலத்து வழி பொழில்களாலும் பிறவற்றாலும் மறைப்புண்ணாது வெறிதே நெடித்துத் தோன்றுவது பற்றி, **அத்த நீளிடை** எனப்பட்டது. **வல்லாறு,** ஈண்டு இன்பப்பயன் தாராமை சுட்டி நின்றது. **மன்ற,** தேற்றப்பொருட்டு. **ஆயத்தோர்** என்றது தோழியை; இது முன்னிலைப்புறமொழி. "அதுவென் உருபுகெடக் குகரம் வருமே[1]" என்றதனால் நான்கனுருபு விரிந்தது.

"தாயெனப் படுவோள் செவிலியாகும்[2]" என்றதனால், **தாயர் என்னும் பெயரே** என்றும், தாயாவாள் தலைமகளின் அருமறை அறிந்து அறத்தொடுநிலை வகையால் மணம்புணர்த்தும் மாண்பின ளாகத் தான் அது பெறாமையால் வருந்துகின்றமையின், **வல்லாறு எடுத்தேன்** என்றும், உண்மைத் தாயர்போல் அவள் மறையுறவு அறிந்து அவனிடைப் படுத்து மேம்பாடு எய்தினோர் ஆயத்தோ ராகலின், அவரே தாயர் எனப்படற்கு உரியோரென்பாள், **கொடுத்தோர் மன்ற அவள் ஆயத்தோர்** என்றும் கூறினாள். இது **பொறாமை** யென்னும் மெய்ப்பாடு.

இது செவிலி தெருட்டுவார்க்குக் கூறியது என்பர் **நச்சினார்க்கினியர்[3].** (ம)

1. தொல். சொல். 94. 2. ஷை. ஷை. 124. 3. ஷை. ஷை. 42.

## 39. உடன்போக்கின்கண் இடைச்சுரத்து உரைத்த பத்து.

இது கொண்டுதலைக் கழிந்தவழி இடைச்சுரத்துக் கண்டோரும், தேடிச் செல்லும் தாயரும், கொண்டுதலைக் கழியும் தலைமக்களுமாகிய பலரும் நிகழ்த்தும் கூற்றுக்களின் தொகுதி யாகலின், இப்பெயர்த்தாயிற்று.

381. பைங்காய் நெல்லி பலவுடன் மிசைந்து
செங்கால் மராஅத்த வரிநிழ லிருந்தோர்
யார்கொ லளியர் தாமே வார்சிறைக்
குறுங்கால் மகன்றி லன்ன
உடன்புணர் கொள்கைக் காத லோரே.

இஃது உடன்போக்கின்கண் இடைசுரத்துக் கண்டார் சொல்லியது.

**உரை:** நெல்லியின் பசிய காய்களைப் பலவின் கனியோடு உண்டு, சிவந்த அடிமரத்தையுடைய செங்கடம்பு மரத்தின் இடையிட்ட நிழலின்கண் மேவியிருந்தோர், நீண்ட சிறகுகளையும் குறுகிய கால்களையுமுடைய மகன்றிற் பறவை போலப் பிரிவரிதாகிய கொள்கை மிக்க காதலையுடையராகலின், இவர்கள் யாவர்கொலோ, அளிக்கத்தக்கோராய் இராநின்றுர் எ. று.

பசிய காய்களையுடைய நெல்லியின் கனிகள் பலவற்றை உண்டு எனினுமாம். சுரத்திடைச் செல்வோர் நெல்லிக் கனியை உண்டல் மரபு. "சேய்நாட்டுச், சுவைக் காய் நெல்லிப் போக்கரும் பொங்கர் வீழ்கடைத் திரள் காய் ஒருங்குடன் தின்று[1]" எனப் பிறரும் கூறுதல்

1. நற் 271.

காண்க. **வரிநிழல்,** இலைச்செறிவின்றி இடையிட்டு விளங்கும் நிழல். **மகன்றில்,** ஒன்றை யொன்று பிரிந்துழி உயிர்வாழாத பேரன்புடைய நீரில் வாழும் பறவை வகை. "நீருறை மகன்றிற் புணர்ச்சி போலப், பிரிவரி தாகிய தண்டாக் காமமொடு [1]" என்றார் பிறரும்.

ஒருவரை யொருவர் இன்றியமையாச் சிறப்பினராய்ப் புணர்ந்துடன் போகிய கொள்கையினையு முடையராய்த் தோன்றுதலின், **மகன்றில் அன்ன, உடன்புணர் கொள்கைக் காதலோரே** என்றும், இவர் செல்லும் நெறி வெவ்விய சுரமும் கொடிய விலங்கு வழங்குவது மாகலின், அந்நலனின்மை கருதி, **யார்கொல் அளியர்** என்றும் கூறினர்; "பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி, வழுவி னாகிய குற்றங் காட்டலும் [2]" கண்டோர்க் கியல்பாகலின். "யார் கொல் அளியர் தாமே ........ வெய்யயில் அழுவம் முன்னி யோரே [3]" என்று பிறரும் கூறுப.

382. *புள்ளொலிக் கமர்த்த கண்ணள்* வெள்வேல்
*திருந்துகழற் காளையொ* டருஞ்சுரங் கழிவோள்
*எல்லிடை யசைந்த கல்லென் சீறூர்ப்*
*புனையிழை மகளிர்ப் பயந்த*
*மனைகெழு பெண்டிர்க்கு* நோவுமார் பெரிதே.

இது, தலைமகள் இடைச்சுரத்தினது ஊரின்கண் எல்லிடைத் தங்கியவழி அவ்வூர்ப் பெண்டிர் பார்த்து இரங்குதல் கண்டோர் சொல்லியது.

**உரை:** புள்ளினம் செய்த ஒலியான் அஞ்சி மருண்ட கண்களையுடையளாய், வெள்ளிய வேலையும் அழகிய கழலையு முடைய காளைபோல்வானோடு புணர்ந்து, செல்லுதற் கரிய சுரத்தின்கண் செல்லும் இவள், இரவின்கண்

1. குறுந். 57. 2. தொல். பொ. 40. 3. குறுந். 7.

தங்குதலால் கல்லென்னும் ஓசை மிக்க இச் சிறிய ஊர்க் கண்ணுள்ள திருந்திய இழை யணிந்த மகளிரைப் பயந்த, பெருமனைக் கிழத்தியர்க்கு இவளைக் காணப் பெரிதும் வருத்த முண்டாவ தாயிற்று எ. று.

மூன்றுவதன் பொருட்கண் நான்காவது வந்து மயங்கிற்று. **அமர்த்தல்,** மருளுதல் "சிவந்தொளி மழுங்கி அமர்த்தன கொல்லோ[1]" என்பதனுல் உணர்க. **அசைதல்,** தங்குதல். **புனையிழை மகளிர்,** பிறர் துணையின்றித் தாமே இழையணிந்து கொள்ளும் வளர்ச்சி பெருத இளம்பெண்கள். **மனைகெழு பெண்டிர்,** இல்லுறையும் நல்லியல் மகளிர். "நுனைகுழைத் தலமரும் நொச்சி, மனைகெழு பெண்டியான் ஆகுக மன்னே[2]" என்ருர் பிறரும். "அசைநிலைக் கிளவி யாகுவழி அறிதல்[3]" என்றதனுல் **ஆர்** அசைநிலை.

தான் பயிலாதவிடத்துச் சென்ற காலை, ஆண்டுப் புள்ளினம் ஒலித்தாலும் இளமகளிர்க்கு வியப்பும் அச்சமும் தோன்றி மருட்சி யுண்டாக்கு மாகலின், **புள்ளொலிக்கு அமர்த்த கண்ணள்** என்றனர்; "வரிப்புறப் புறவின் புலம்புகொள் தெள்விளி, உருப்பவிர் அமையத்து அமர்ப்பனள் நோக்கி[4]" என்று பிறரும் கூறுதல் காண்க. தலைமக்களின் உருவும் திருவும் ஒப்பும் உயர்வும் கண்ட ஊரவர்க்கு வியப்பும் மகிழ்ச்சியும் மிகுதலின் ஆரவாரம் எழுந்தமைபற்றிக் **கல்லென் சீறூர்** என்றனர்.

இவர் ஒழுக்கங் கண்ட பெற்ருேர் தாம் பயந்த மகளிர், ஒருகால் அதனை மேற்கொள்வரென்னும் அச்சமும், பெறற்கரிய தாய்தந்தையரையும், தன் ஐயர் ஆயத்தோர் முதலிய பிறரையும் பிரிந்து போக்குத் துணிந்தாளைக் கண்டு அவர் ஆற்ருராதலின், அவரைத் தேற்றுதற்கண்ணுளதாகிய முயற்சித்துன்பமும் மிக்கு வருந்துகின்றனர் என்பார், **நோவுமார் பெரிதே** என்ருர். (உ)

1. நற். 66. 2. அகம். 203. 3. தொல். சொல். 271.
4. நற். 305.

383. கோட்சுரும் பரற்றும் நாட்சுரத் தமன்ற
நெடுங்கான் மராஅத்துக் குறுஞ்சினை பற்றி
வலஞ்சுரி வாலிணர் கொய்தற்கு நின்ற
மள்ள னுள்ளம் மகிழ்கூர்ந் தன்றே
பஞ்சாய்ப் பாவைக்குந் தனக்கும்
அஞ்சாய்க் கூந்த லாய்வது கண்டே.

இஃது உடன்போகிய தலைமகன் வளைத்த கோம்பிற் பூக் கோண்டு தனக்கும் பாவைக்கும் வகுக்கக் கண்டார் கூறியது.

**உரை:** சுரத்தின்கண், நெருங்க வுள்ள நெடிய அடிப் பகுதியை யுடைய மராமரத்தின், தேன் கொள்ளும் இயல் பினையுடைய சுரும்புகள் ஒலிக்கின்ற, குறுகிய கிளையைத் தாழ்த்தி, அழகிய மெல்லிய கூந்தலையுடைய தன் காதலி, அதன்கண் நாட்காலையில் வலமாகச் சுழித்து மலர்ந்த வெள்ளிய பூக்களைக் கொய்தற்பொருட்டுச் செலவு சிறிது தவிர்ந்து நின்ற காளை, அவள் அப்பூக்களைத் தனக்கும் தன் பஞ்சாய்ப்பாவைக்கும் என வகுப்பது கண்டு மகிழ்ச்சி மிகுகின்றது, காண்மின் எ. று.

**கோள்,** கொள்ளுதல். **அமலுதல்,** நெருங்குதல். **மராஅம்,** ஈண்டு வெண்கடம்பு. இதன் பூவிதழ் வலமாகச் சுழித்திருப்பது பற்றி **வலஞ்சுரி வாலிணர்** என்றார். வெண்ணிறப்பூ என்றற்கு **வாலிணர்** எனப்பட்டது. "வலஞ்சுரி மராஅத்துச் சுரங்கமழ் புதுவீ [1]" என்றும், "வாலிய சுதை விரிந்தன்ன பல்பூ மராஅம் [2]" என்றும் சான்றோர் குறிப்பது காண்க. குறுஞ்சினை பற்றிக் கொய் தற்குச் சினையைத் தாழ்த்தி நின்ற மள்ளன் என இயைப் பினும் அமையும். **பஞ்சாய்ப்பாவை,** கோரையாற் செய்யப் பட்ட பாவை. **சாயல்,** மென்மை. **அஞ்சாய்க் கூந்தல்** எனக்

1. அகம். 83. 2. ஷை. 12.

கொண்டு, அழகிய ஐம்பாலாகிய கூந்தல் என்றுமாம். மஞ்சாய் கூந்தல் எனக் கொண்டு, பஞ்சு போல் அழகிய கூந்தல் என்றலு மொன்று. கூந்தலையுடைய காதலி சினைபற்றிக் கொய்தற்கு நின்ற மள்ளன் உள்ளம் கண்டு மகிழ்கூர்ந்தன்று என முடிக்க.

கடம்பின் நறுமணம் கமழும் பூவைக் கண்டாட்கு அதனை அணிந்துகோடற்கு விருப்பம் சேறலின் தாழ நின்ற குறுஞ்சினையைப் பற்றினளாக, அவள் வேட்கை கண்ட மள்ளன் தன் செலவுதவிர்ந்தான் என்பார், **குறுஞ்சினை பற்றிக் கொய்தற்கு நின்ற** என்றார். பிறண்டும், "நின் பொம்ம லோதி பொதுள வாரி அரும்பற மலர்ந்த ஆய்பூ மராஅத்துச் சுரும்புசூழ் அலரி வேய்ந்தநின், தேம்பாய் கூந்தல் குறும்பல மொசிக்கும் வண்டுகடிந் தோம்பல் தேற்றாய்....பணைத்தோள் விளங்க வீசி வல்லுவை மன்னால் நடையே[1]" எனத் தலைவன் உரைப்பது காண்க.

தம்மாற் காதலிக்கப் பட்டார் செயல் காணுந் தோறும் காதலர்க்கு உள்ளம் மகிழ்சிறத்தல் இயல்பாக லின் **ஆய்வது கண்டு, மள்ளன் உள்ளம் மகிழ்கூர்ந் தன்றே** என்றார்.　　(௩)

384. சேட்புல முன்னிய வசைநடை யந்தணிர்
நும்மொன் றிரந்தனென் மொழிவ லெம்மூர்
யாய்நயந் தெடுத்த வாய்நலங் கவின
ஆரிடை யிறந்தன ளென்மின்
நேரிறை முன்கையென் னையந் தோர்க்கே.

இஃது உடன்போகிய தலைமகள் ஆண்டு எதிர்வரும் அந் தணர்க்குச் சொல்லியது.

---

1. அகம். 257.

**உரை:** சேய்த்தாய நிலத்தை எண்ணி அசைந்த நடையினையுடையீராய்ச் செல்லுகின்ற அந்தணர்களே, உங்களையொன்று இரந்து கூறுகிறேன்; எம்மூர்க்குச் செல்லின், நேரிய இறை பொருந்திய முன்கையினையுடைய என் தோழியர்க்கு "நுங்கள் தோழியாவாள் தன் தாய் பேணி வளர்த்த அழகிய நலம் வனப்புமிக, செல்லுதற் கரிய சுரங்களைக் கடந்து சென்றனள்" எனக் கூறுவீர்களாக எ. று.

எஞ்ஞான்றும் புகழும் பூசையும் பெறுதற் குரிய நாடு நோக்கிச் செல்லும் இயல்பினராயும், ஊர்தி யின்றி நடந்து செல்லும் படிவத்தராயும் இருத்தலின், **சேட்புலம் முன்னிய வசைநடை யந்தணிர்** என்றார். அந்தணர் பிறபுலம் சேறும் இயல்பினராதல், "வெவ்விடைச் செலன் மாலை யொழுக்கத்தீர்[1]" என்றும், நடந்து செல்லும் படிவத்தராதல், **ஆசிரியர்** மரபியலில் ஏனை யரசர்க்கு "நடை நவில் புரவியும் களிறும் தேரும்[2]" கூறியது போல, ஊர்தி கூறாமையாலும் "குடையார் நிழல் உறிசேர் கரகத்தொடு குன்றிடத்து, நடையான் மெலிந்து வருகின்ற அந்தணிர்[3]" என்று கூறுதலாலும் அறிக.

மகளது நலம் பேணுதலிலேயே தாயின் கண்ணும் கருத்தும் ஒன்றி நிற்றலின், தன் நலத்தைத் **தாய் நயந்தெடுத்த ஆய்நலம்** என்றாள். "ஆயமும் அயலும் மருளத் தாயோம் பாய்நலம்[4]" எனப் பிறரும் கூறுதல் காண்க.

இஃது, "எஞ்சியோர்க்கும் எஞ்சுதல் இலவே[5]" என்றதனால், தலைவி கூற்றாயிற்று. அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் முதலாயினரைப் பணிந்து கூறல் வேண்டும் என்பது கற்புநெறி யாதலின், **இரந்தனென் மொழிவல்** என்றும், எஞ்ஞான்றும் தன்நலமே குறிக்கொண்டு பேணிய

---

1. கலி. 9. 2. தொல். பொ. 626. 3. இறை. சூ. 23. மேற்கோள். 4. அகம். 146. 5. தொல். பொ. 42.

சிறப்புடைமை கருதியும், தலைமகனொடு கூடாதவழி நலங் குன்றும் என அஞ்சிப் போக்குடன்பட்டுத் துணைசெய்தனர் ஆகலினாலும், **தாய் நயந்தெடுத்த வாய்நலம்** என்றும், **நேரிறை முன்கை என் ஆயத்தோர்க்கு** என்றும் கூறினாள்.

தலைமகன் தலைமகட்கு ஒழுக்கங் கற்பித்தல், "அந் தணர்திறத்துஞ் சான்றோர் தேஎத்தும் அந்தமில் சிறப்பிற் பிறர்பிறர் திறத்தினும் ஒழுக்கங் காட்டிய குறிப் பினும்[1]" என்பதனால் உணர்க. தாய் நயந்தெடுத்த நல மென்புழி **உடைமையும்**, ஆயத்தோர்க்கு என்புழி **அருளலும்**, இரந்தனென் என்புழித் **தன்மையு** மாகிய மெய்ப்பாடுகள் தோன்றின.

இஃது யான் போகின்றது ஆயத்திற்கு உரைமின் என்றது என்பர் **நச்சினார்க்கினியர்**.[2] இஃது இடைச் சுரத்துச் செல்கின்றாள் தன் பதி செல்வாரைக் கண்டு கூறியது என்பர் **இளம்பூரணர்**.[3] (௪)

385. *கடுங்கட் காளையொடு நெடுந்தே ரேறிக்*
*கோள்வல் வேங்கை மலைபிறக் கொழிய*
*வேறுபல் லருஞ்சுர மிறந்தன ளவளெனக்*
*கூறுமின் வாழியோ வாறுசென் மாக்கள்*
*நற்றோ ணயந்துபா ராட்டி*
*எற்கெடுத் திருந்த வறனில் யாய்க்கே.*

இது, வரைவு மறுத்துழி உடன்போய தலைமகள் இடைச் சுரத்துக் கண்டாரை, "யான் போகின்ற படியை யாய்க்கு நீர் கூறவேண்டும்" எனச் சொல்லியது.

1. தொல். பொ. 146. 2. ஷை. ஷை. 42. 3. ஷை. ஷை. 46.

**உரை:** நெறியிற் செல்லும் மாந்தர்களே, என்னுடைய நல்ல தோள்களை விரும்பிப் பாராட்டி வளர்த்து, யான் தலைமகனோடு கூடி என் நலத்தைக் கவினுறுவித்துக் கொள்ளா வகை இற்செறித்து வைத்த அறவியல்பில்லாத என் தாயைக் காணின் அவட்குத் தறுகண்மையுடைய காளையாகிய தன் காதலனோடு நெடிய தேர்மீதேறிக், கொலை வல்ல வேங்கைகள் மிக்க மலைகள் பிற்பட முன்னுக உள்ள பலவாய் வேறுபட்ட செல்லுதற் கரிய சுரங்களைக் கடந்து நின்மகள் சென்றனள், என உரைப்பீர்களாக எ. று.

**கடுங்கண்,** தறுகண். பகைமை கருதித் தீமை செய்வாரைக் கண்ணோடாது ஒறுத்தற் குரிய தறுகண் **கடுங்கண்** எனவும், அருள் கருதி அடிபணிவார்க்கு உதவும் தறுகண் மென்கண் எனவுமாம். இதனைச் சேர்ந்தோர் "புன்கண் அஞ்சும் பண்பின் மென்கண்[1]" என்பர் நல்வேட்டனார்; ஊராண்மை என்பர் திருவள்ளுவர்.[2] நெடுந்தொலைவு செல்லுதற் குரிய வன்மை யுடையது என்றற்கு **நெடுந்தேர்** என்றார். கால் வலிய தேர் என்பது கருத்து[3]. **கோள்,** கொலை. **மாக்கள்,** அண்மைவிளி. கெடுத்திருந்த யாய், காணாமையால் வருந்தும் தாய் என்று கூறினுமாம்; "கெடுத்துத் தொடு நன்கலம் எடுத்துக்கொண்டாங்கு[4]" என்றாற் போல.

போக்குடன்பட்டுத் தலைவனோடு செல்லும் தலைவி, செல்லும் நெறியிடைத், தனக்கு ஏதம் உளவாம் என எண்ணி வருந்தும் தாய்க்குத் தன்னோடு போதரும் காதலன் திறலை, **கடுங்கண் காளை** என்றும், நடந்து சேறலின்றி வலிய தேரூர்ந்து செல்லுமாறு விளங்க, **நெடுந்தேர் ஏறி** என்றும், தீங்கு செய்யும் விலங்குகள் உறையும் மலைநிலத்தையும் பிற நிலங்களையும் இனிது கடந்து சென்று சேர்ந்த திறம் தோன்ற, **கோள்வல் வேங்கை மலைபிறக் கொழிய** என்றும், அருஞ்சுரம் இறந்தனள் என்றும் கூறினாள்.

---

1. நற். 210. 2. குறள். 773. 3. ஷை. 496.
4. நற்.

குழவிப்பருவம் தொடங்கி அவள் நலமே பேணி வளர்த்தன ளாகலின், **நற்றேள் நயந்து பாராட்டி** என்றும், தலைமகனோடு களவின்கண் ஒழுகியவிடத்து அவள் மேனி வேறுபாடும் அலரெழுந்தமையும் கண்டு இற்செறித்தனள் எனினும், அச்செயல் தான் தலைவனோடு தலைப்பெயற்குத் தடையாயினமையின் **எற்கெடுத்து இருந்த** என்றும், பிறர்க்கு நோய் சூழ்வார் தாயராயினும் தீயரே யாகலின், **அறனில் யாய்** என்றும், தான் தலைமகனிடம் தலையளி பெறு தலினின்று தகைந்தன ளாயினும், தன் நற்றேளை நயந்து பாராட்டிய நன்றி கருதித் தன்னைக் குறித்து அவள் தேடி வருந்தாவகைக் **கூறுமின்** என்றும் கூறினன். தான் வேண்டுவ தொன்றனை வேண்டியவாறு செய்தல் பற்றி **வா யா** என்றாள்.

நற்றேள் நயந்து பாராட்டிய தாய் தன்னை இற் செறித்து ஓம்பியது ஊரவர் கூறும் அலர் அஞ்சியும் தன் நலங்கருதியுமே என்பது நினைந்து, அது தாய்மையின் அறம் என்று உணர்ந்தன ளாயினும், தலைமகற்கு வரைவு மறுத்த கொடுமையை நோக்க வேருதலால், வெறுத்த உள்ளத்த ளாதலின், தன் தாயை **அறனில் யாய்** என்றாள் எனவுமாம். "வள்ளிகீழ் வீழா வரைமிசைத் தேன்தொடா, கொல்லை குரல்வாங்கி ஈனு மலைவாழ்நர், அல்ல புரிந் தொழுகலான் [1]" எனத் தலைவி தமர் வரைவு மறுத்தமைக்கு வருந்திக் கூறுமாறு காண்க.

இன்று யான் தேரேறி வருத்தமின்றிப் போகின்றமை யாய்க்கு உரைமின் என்றது என்பர் **நச்சினார்க்கினியர்.** [2] இஃது இடைச்சுரத்து ஆயத்தார்க்குச் சொல்லிவிட்டது என்பர் **இளம்பூரணர்.** [3] உடன்போக்கில் தேரேறிப்போதல் உண்டென்பதற்கு இதனைக் காட்டுவர் **நச்சினார்க்கினியர்.** [4] **சுரத்திடையவளே** என்றும் பாடம்.

1. கலி. 39. 2. தொல். பொ. 42. 3. ஷை. ஷை. 45.
4. ஷை. ஷை. 212.

386. புன்கண் யானையொடு புலிவழங் கத்தம்
நயந்த காதலற் புணர்ந்துசென் றனளே
நெடுஞ்சுவர் நல்லின் மருண்ட
இடும்பை யுறுவிநின் கடுஞ்சூன் மகளே.

இது, புணர்ந்துடன் போகிய தலைமகளை இடைச்சுரத்துக் கண்டார் அவள் தாய்க்குச் சென்று கூறியது.

**உரை:** நெடிய சுவர் சூழ்ந்த நல்ல இல்லின்கண் மயங்கி ஒடுங்குதற் கேதுவாகிய துன்பம் உறுபவளே, நின் முதற்சூலில் தோன்றிய மகளாகிய தலைமகள், தன்னை விரும்பிய காதலனுடன் கூடிச் சிறிய கண்களையுடைய யானைகளும் புலிகளும் இயங்குகின்ற வழிகளைக் கடந்து சென்றனள்; ஆகலின், நீ வருந்துதல் ஒழிக எ. று.

**புன்கண்** என்றவிடத்துப் புன்மை, சிறுமை மேற்று; புன்கண் என்றே கொண்டு வேனில் வெம்மையால் நீரும் நிழலிடமும் பெறுதுஎய்தும் மிடிமை யென்று உரைப்பினும் அமையும்; "பொருள் வேண்டும் புன்கண்மை ஈண் டில்லை[1]" என்றாற் போல. ஒடு, எண்ணுப்பொருட்டு. பகற் போதில் யானையும் இரவில் புலியும் வழங்குதலின் இரண் டையும் சேரக் கூறினர், எப்போதும் சேறல் அருமை புலப் படுத்தற்கு. **நெடுஞ்சுவர் நல்லில்** என்றவிடத்து **நெடுஞ் சுவர்** காவலருமையும் நன்மை செல்வமுடைமையும் குறித்து நின்றன. மருளுதல், ஈண்டுக் கையற்று வருந்தல். **இடும்பை** மகட் பிரிவை ஆற்றாமையாற் பிறந்த துன்பம். **இடும்பையுறுவி,** இடும்பை யெய்தி வருந்தும் தாய். **கடுஞ் சூல்** தலைச்சூல்; "கடுஞ்சூற் சிறுவன்[2]" என்றமை காண்க.

நின் மனைப்பெருமையும் செல்வநன்மையும் நினக்கு இன்பம் தருவது போல, நின் மகட்கும் தரும் எனக் கருதி மருளுகின்றனை; தானும் நின்னைப் போல் மனைவாழ்வு

1. கலி. 61. 2. ஐங். 309.

செய்யும் மாண்புடை நெஞ்சத்தால் இவற்றை உள்ளாது கழிந்தாள் என்பதைத் தெருளாது வருந்துதல் வேண்டா, என்பார், **நெடுஞ்சுவர் நல்லில் மருண்டனை** என்றும், மருட்சி காரணமாக நீ துன்புறுகின்றனை என்றற்கு **மருண்ட இடும்பை உறுவி** என்றும், கற்புடைப் பெருமடந்தை யாயினும், தலைப்படு காதற் காமப்பயனைப் பெற்ற தலைச் சூல் மகளாதல் பற்றி நினக்கு இம்மருட்சி கைம்மிக்கு வருத்துகிறது என்பார் **நின் கடுஞ்சூல் மகள்** என்றும் கூறினார். இனி, அவள் சென்ற நெறியின் கொடுமையினை எண்ணிக் கலங்குகின்றாயாயின், யாம் அவ்வழியினின்று வருகின்றேம்; அவள் சென்றவழி எப்போதும் மக்கள் வழங்குதற் காகாத கொடுமையுடைத்தாயினும், அதனையும் அவள் கடந்து சென்றொழிந்தாள் என்றற்கு, **புன்கண் யானையொடு புலிவழங்கு அத்தம் சென்றனள்** என்றும், அவளும் அவள் காதலனும் ஒருவரை யொருவர் இன்றி அமையாக் காதலாற் பிணிப்புண் டிருக்கின்றனர் என்பார் **நயந்த காதலற் புணர்ந்து சென்றனள்** என்றும் விளக்கினார். காதலனது காதலின்பத்தில் மகள் களித்துச் செல்ல, மகட்குத் தாய் மருண்ட மனத்தொடு மனையிகண் இடும்பையுற்று இனைதல் இன்றது எனத் தெருட்டியவாறு.

இது, "தாநிலை கண்டு தடுப்பினும் விடுப்பினும்[1]" என்றதனால், தடுத்தலும், நெறியின் கொடுமை கூறிப் புணர்ந்தோர் பாங்கிற் புணர்ந்த நெஞ்சமொடு அழிந் ீர் கூறி விடுத்தலுமாம். (௬)

387. அறம்புரி யருமறை நவின்ற நாவின்
திறம்புரி கொள்கை யந்தணிர் தொழுவலென்
றொண்டொடி வினவும் பேதையம் பெண்டே
கண்டெனம் மம்ம சுரத்திடை யவளே
இன்றுணை யினிது பாராட்டக்
குன்றுயர் பிறங்கன் மலையிறந் தோளே.

1. தொல். பொ. 40.

இது, பின்சென்ற செவிலியால் வினவப்பட்ட அந்தணர் அவட்குச் சொல்லியது.

**உரை :** 'அறத்தைச் சொல்லுகின்ற அரிய மறைகளை ஓதிப் பயின்ற நாவினையும் அது விதிக்கும் செயல்வகை தெரிந்தாற்றும் ஒழுக்கத்தையு முடைய அந்தணர்களே, தொழுகின்றேன்' என்று சொல்லி, ஒள்ளிய தொடி யணிந்த என் மகள் சென்றாளைக் கண்டீரோ என வினவும் பேதைமையுடைய மனைகெழு பெண்டே, யாம் அவளைச் சுரத்திடையே கண்டேம்: இன்னும் கேட்பாயாக: இனிய துணைவனான காதலன் மகிழ்ந்து நலம்பாராட்டி வரக் குன்றுகள் செறிந்த உயர்ந்த மலைகளைக் கடந்து சென்றாள்; ஆகலான், நீ அவளைப் பின்சென்று வருந்த வேண்டா, மீள்க எ. று.

**அறமவாது** வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து உயர்ந்த அறிவுடை நன்மக்கள், வாழ்க்கைக்கு உறுதியும் நன்மையும் பயப்பன இவையென அறிந்து, **விதித்தும் விலக்கியும்** உரைக்கும் நன்மொழி. அந்நெறியில், மக்கட்கு உறுதி என அவர்கள் கண்டவை அறம் பொருள் இன்பம் வீடு என்பன. அவற்றுள் வீடு, இவ்வுலகிற் பெறப்படுவ தன்று; இவ்வுலக வாழ்கைக்கு மன்னியவை ஏனை மூன்றுமே. அம் மூன்றனுள் அரிதாகிய அறத்தை விரும்பி உரைப்பது பற்றி மறை **அறம்புரி அருமறை** எனப்பட்டது. உலகில் வாழும் உயிர்ப்பொருள் உயிரில்பொருள் எல்லாவற்றிற் கும் தோற்றமும் முடிவும் இவ்வுலகமே அன்றி இதன் மேல் வேறொன்று மில்லை என எல்லாராலும் 'எளிதில் உரைக்கப்படும் கருத்தை **மறுத்து** உயிர்ப்பொருளின் வேறாய் உயர்ந்த பேருயிராகிய இறைவன் உண்டென்றும், இவ்வுலகு உயிர் பொருட்கெல்லாம் வேறாய்த் துன்பமே இல்லாத இன்ப அருளுலகு ஒன்று உண்டென்றும் **வற்புறுத்துவது** பற்றி அந்த அறநூல் **மறை** என்று வழங்கப்பட்டது.

ஏனைப் பொருள் இன்பநுகர்ச்சிகட்கு நெறிகாட்டி வீடுபேருகிய இறையருள் இன்ப வுலகவாழ்வுக்கு உரிமை செய்யும் அருமை பற்றி அறநூலாகிய மறையைத் தமிழ்ச் சான்ருேர் **அறம்புரி அருமறை** என்று குறிக்கின்றனர். "நான்மறைக் குறித்தன்று அருளாகாமையின், அறங் குறித்தன்று பொருளாகுதலின்[1]" என்றும், "எழுதாக் கற்பின் நின் சொல்லுள்ளும், பிரிந்தோர்ப் புணர்க்கும் பண்பின் மருந்தும் உண்டோ[2]" எனறும் சான்ருேர் கூறுதலின், **அருமறைக்கண் பொருளும் இன்பமும் கூறப்படாமை தெளியப்படும்.** இஃது எழுதப்படாமல் ஒருவர்பின் ஒருவராக நாவால் நவிலப்பட்டு வந்தமையின், மறவாமைப் பொருட்டு எப்போதும் நவில்வது மறையோர் மரபு. அதுபற்றியே, **அருமறை நவின்ற நாவின் அந்தணர்** என்ருர். **திறம்,** அறத்தின்கூறு. மனையின்கண் வாழ்வாங்கு வாழ்ந்து அறம் காட்டும் வீடுபேறு குறித்துத் துறந்தோரும், இளமையிலேயே அறப்பயன் விழைந்து துறந்தோரும் என அறவோர் இருவகையராதலின், இருதிறத்தோர்க்கும் ஓரன்ன ஒழுக்கம் பொருந்தாமையான், அறத்துறையில் திறம்பல தோன்றினமையின், அவற்றைத் **திறம்** என்றும், அவற்றுள் தம் தகுதிக்கும் சால்புக்கும் ஏற்றது மேற்கொண்டு ஒழுகும் கொள்கை **திறம்புரி கொள்கையாம்** என்றும் அறிக. **கொள்கை,** ஒழுக்கம். "குலஞ்சுடும் கொள்கை பிழைப்பின்[3]" எனத் **திருவள்ளுவர்** கூறுவது காண்க. **அறவோர்** என்றது அந்தணர் என்ருர், "எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகுதலான்.[4]" அந்தணர் என்பது **அந்தணிர்** என விளியேற்றது; "அருவும் ஆரும் ஈரொடு சிவணும்[5]" என்பது **விளி மரபு. ஒண்டொடி** ஈண்டுத் தலைவியைக் குறித்தது. **அம்ம,** கேட்பாயாக என வரும் இடைச்சொல். **சொல்லி** என்பது சொல்லெச்சம். **பெண்டு,** பெண்ணென்னும் பொருள்பட வழங்கும் பொதுச்சொல். **இனிது,** நலம்.

1. புறம். 362. 2. குறுங். 156. 3. குறள்.
4. ஷை. . 5. தொல். சொல்.

பிறங்கல், ஈண்டுச் செறிதல். 'ஒண்டொடி வினவும் பெண்டே, சுரத்திடைக் கண்டனெம்; அவள், இன்றுணை பாராட்ட, மலை இறந்தாள் என இயையும். ஆகலான் என்பது முதலாயின குறிப்பெச்சம்.

" மகள் நிலையை உள்ளவாறு அறியும் விருப்பின ளாதலின், தலைமகளைத் தேடிப் பின்சென்ற செவிலி, நினை விலும் நாவிலும் அறம் நிலவும் கொள்கையின ரான அந் தணர்களை, **அறம்புரி அருமறை நவின்ற நாவின், திறம்புரி கொள்கை அந்தணிர்** என்றாள். தன் துன்பநிலை கண்டு இரங்கி வேறு அறங்களைச் சொல்லிக் கழியாது கண்டது கண்டாங்குக் கூறல் வேண்டும் என்றற்கு அவரது நாவினைச் சிறப்பித்தாள் என அறிக. விருப்பு வெறுப் பின்றி எல்லாரையும் ஒப்பக் கருதி உறுதி கூறும் ஒழுக் கத்தவ ராதலால், தன் மகளைக் கண்டிருப்பர் என்று எண்ணினு ளாதலின், **திறம்புரி கொள்கை அந்தணிர்** என்று விளம்பினாள். அந்தணரை ஓம்பல் இல்வாழ் வோர்க்குக் கடனாதல் பற்றித் தொழுதல் கொண்டுகூறப் பட்டது. **தொழுவல்** என்றது முகமன். ஒண்டொடி யாகிய தலைமகள் தன் காதலனுடன் கொண்டுதலைக்கழிந் தது கூறி அவளைக் கண்டீரோ என வினவினாட்கு விடை யிறுக்கின்றா ராகலின், அவள் கூற்றினையே கொண் டெடுத்து, **ஒண்டொடி வினவும் பெண்டே** என்றும், கொண்டுதலைக்கழிதல் கற்புக் காக்கும் பொற்புடைய அறமாதலை அறியாது ஏதம் கொண்டு வருந்துமாறு தோன்றப் **பேதையம் பெண்டே** என்றும், அஃது அவள் வினவுக்குச் செவ்வனிறை யாகாமையின், **கண்டனெம் சுரத்திடை** என்றும், அது கேட்டதும் உளம்மகிழ்ந்து அவளது நலமறிய எழுந்த வேட்கையை முகக்குறிப்பால் உணர்ந்து மேலும் கூறலுறுதலின் **அம்ம** என்றும், அவள் தனக்குரிய **உயிர்த்துணைவனோடே** செல்கின்றா ளென்பார், **இன்றுணை** என்றும், வழியினது அருமை தோன்றுமாறு காதலன் அவளது நலம்பாராட்டிச் செல்வதால்

மகிழ்ச்சி மிக்குச் செல்கின்றுள் என்றற்கு **இனிது பாராட்ட** என்றும், அதனுல் நெறியிடை நின்ற குன்றும் மலையும் அவட்கு அயர்ச்சி விளைவியாவாக, அவள் சுரத்தை இனிது கடந்துபோனுள் என்பது விளங்கக் **குன்றுயர் பிறங்கல் மலையிறந்தோளே** என்றும் கூறினர். "சிறந் தானை வழிபடீஇச் சென்றனள், அறந்தலைப் பிரியா ஆறு மற்று அதுவே[1]" எனச் சான்றோர் கொண்டுதலைக் கழிதலை அறம் என்பதும், "வான்தளி பொழிந்த காண்பின் காலை அணிகிளர் கலாவம் ஐதுவிரித் தியலும், மணிபுரை யெருத்தின் மஞ்ஞை போலநின், வீபெய் கூந்தல் வீசுவளி யுளர, எகுதி மடந்தை[2]" என இன்றுணை இனிது பாராட்டுவதும், "கண்டிசின் வாழியோ குறுமகள் நுந்தை அடுகளம் பாய்ந்த தொடிசிதை மருப்பின், பிடிமிடை களிற்றின் தோன்றும், குறுநெடுந் துணைய குன்றமும் உடைத்தே[3]" எனக் குன்றுயர் பிறங்கல் மலை காட்டித் தலைவன் அயர்ச்சி போக்குவதும் காண்க.

இது செவிலி வினையவழிக் கூறியது என்பர் **இளம் பூரணர்**[4]; வரவின்கட் கூறியது என்பர் **நச்சினார்க் கினியர்**[5]. (எ)

388. நெருப்பவிர் கனலி யுருப்புச்சினந் தணியக்
கருங்கால் யாஅத்து வரிநிழ லசைஇச்
சிறுவரை யிறப்பிற் காண்குவை செறிதொடிப்
பொன்னேர் மேனி மடந்தையொடு
வென்வேல் விடலை முன்னிய சுரனே.

இது, தேடிச் சென்ற செவிலிக்கு இடைச்சுரத்துக் கண் டார் அவளைக் கண்ட திறம் கூறியது.

1. கலி. 9. 2. நற். 264. 3. அகம். 99.
4. தொல். பொ. 43. 5. ஷை. ஷை. 40.

**உரை :** நெருங்கிய தொடியினையும் பொன்போலும் அழகிய மேனியினையுமுடைய மடந்தையுடன் வென்றி தரும் வேலேந்திய விடலையாவான் முன்னிச் சென்ற சுரத்தை, நெருப்பு விளங்கும் ஞாயிற்றின் வெப்பம் தணியுமளவும் கரிய அடியினையுடைய யாமரத்தின் செறியாத நிழலின்கண் தங்கிச் சிறுமலைகளைக் கடந்து செல்லின் காண்பாய் எ. று.

ஞாயிற்றின் மிக்க ஒளி நெருப்பாய்த் தாக்குதலின் **நெருப்பவிர் கனலி** என்றார். **கனலி**, ஞாயிறு. **உருப்பு**, வெம்மை. "நெருப்பெனச் சிவந்த உருப்பவிர் மண்டிலம்[1]" என்பர் பிறரும். வெம்மையைச் சினமென்றது இலக்கணை. யா மரத்தின் அடி கருமைநிற முடைத்தாதலின், **கருங்கால் யா** என்றார்; "கவையொண் தளிர கருங்கால் யாஅத்து வேனில் வெற்பு[2]" என்பது காண்க. **அசைதல்**, தங்குதல். "ஒல்குநிலைக் கடுக்கை யல்குநிழல் அசைஇ[3]" என்றாற் போல. **ஒடு**, ஒருவினையொடு.

தலைமகளைப் பின்தொடர்ந்து சுரத்திடை நடந்து மெலிந்து வரும் செவிலியின் துயர்நிலை கண்டு கழிவிரக்க முற்று எதிரே கிடந்த சுரத்தின் வெம்மையை ஆற்றாளென்பது பற்றி, ஆண்டுத் தோன்றிய யாமரத்தைக் காட்டி, அதன் நீழலில் வெயில்வெப்பம் தணியுமளவும் தங்குமாறு பணிக்கின்றமையின், **நெருப்பவிர் கனலி உருப்புச் சினம் தணியக் கருங்கால் யாத்து வரிநிழல் அசைஇ** என்றும், நெடிதுயர்ந்து கிளைபரப்பி நிழல்செய்து நிற்கும் நீர்மை நோக்கி, **கருங்கால் யாத்து வரிநிழல்** என்றும் கூறினர். இதனால் புணர்ந்துடன் போகிய நின் மகளும் வெயில்வெம்மை நோக்கி யாநிழல் தங்கிச் சென்றனர் எனக் குறித்தவாறாயிற்று. **சிறுவரை** என்றார், மலைவு தோன்றாமைப் பொருட்டு. அசைஇ இறப்பின் காண்

1. அகம், 31. 2. ஷை. 187. 3. ஷை. 399.

குவை என்றது, தங்காது செல்குவை யாயின், ஆற்றுது வரையை இறத்தலும் காண்டலும் இல்லையாம் என்றவாறு. தொடியின் செறிவும் மேனியின் பொலிவும் எடுத்தோதி னர், காதலன் புணர்ந்துடன் வருதலால் வழிநடைத் தளர்ச்சியின்மையும் உள்ளக்கிளர்ச்சியுடைமையும் தலைவிபால் விளங்கித் தோன்றினமையின். மடந்தையை முன்னுய்த்துத் தலைமகன் அவள்பின் சேறலின், **மடந்தையொடு** என்றார். "நின் அணிமாண் சிறுபுறம் காண்கம் சிறுநனி ஏகென ஏகல் நாணி நின்று தலையிறைஞ்சி யோளே அதுகண்டு, யாம்முந்துறுதல் செல்லேம்[1]" எனத் தலைமகன் உரைப்பதனுல், உடன்போக்கில் தலைவியை முன்னுய்த்துச் சேறல் இயல்பாதல் காண்க.

**சுரன் காண்குவை** என்றது, சுரத்திடை அவர்களைக் காணலாம் என்றற்கு; இது செவிலிக்கு இடைச்சுரத்துக் கண்டோர் நுமக்கு எய்தச் சேறலாம் என்று விடுத்தது என்பர் **நச்சினார்க்கினியர்**[2]. (அ)

389. *செய்வினைப் பொலிந்த* சேறிகழ ஞென்றாள்
*மையணற் காளையொடு பைய வியலிப்*
*பாவை யின்னவென் ஞய்தொடி* மடந்தை
*சென்றனளென்றி ரைய*
*ஒன்றின வோவவ ளஞ்சிலம் படியே.*

இது, பின்சேன்ற சேவிலித்தாய் வினவப்பட்டோர் 'கண்டோம்' என்புழிச் சொல்லியது.

**உரை:** ஐய, என் கண்ணிற் பாவைபோலும் ஆய்ந்து கொண்ட தொடியினை யணிந்த என் மகள், தொழில்வகை யாற் பொலிவுறச் செய்யப்பட்ட செறிந்த கழலினையும் வலிய தாளினையும் கரிய தாடியினையுமுடைய காளைபோல்

1. அகம். 261. 2. தொல். பொ. 40.

வாறேடு மெல்ல நடந்துசென்றனள் என்று கூறுகின்றீர்; அதுபோது அவளுடைய அழகிய சிலம்பணிந்த அடிகள் நிலத்திற் பொருந்தின கொல்லோ எ. று.

மகளிர்க்குச் சிலம்புபோல ஆடவர்க்குக் காலில் கழல் அணிதல் பண்டையோர் இயல்பு. பூத்தொழிலும் அரும்பு போலும் வேலைப்பாடும் உடைமைபற்றிக் கழலைச் **செய் வினைப் பொலிந்த செறிகழல்** என்ருர். ஆண்மக்கட்கு இளமையிற் கிண்கிணியும், காளைப்பருவத்தில் கழலும் அணிதல் வழக்கு; "கிண்கிணி களைந்த கால் ஒண்கழல் தொட்டு [1]" என்பது காண்க. மிக்க வேலைப்பாடுடைமை பற்றிப் **புனைகழல்** [2] என்ப; "கழல் பறைந்தன [3]" என்றற்கு "வீரக்கழல் அருப்புத் தொழில் பறைந்தன" என உரைக் கப்படுவது இதற்குச் சான்றுபகரும். இக்கழல் பொன்னுற் செய்யப்படுதலின் "பொலங்கழல் [4]" எனப்படும். பகை வரை வென்று அவர் முடிப்பொன்னுல் கழல் செய்து போர் மன்னர் அணிந்து கொள்ப. "முடிபுனைந்த பசும்பொன் னின், அடிபொலியக் கழல் தைஇய வல்லாளனை [5]" என் பதனுலறிக. கழல், வீரமும் வெற்றியும் புகழும் குறித்தது; "சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார் கழல்யாப்புக் காரிகை நீர்த்து [6]" என்பர் **திருவள்ளுவர். மையணல்,** கரிய தாடிமயிர். ஆண்மைக்குரிய செவ்வி எய்தினமை விளங்க மையணலைக் கூறினர். **பாவை**, கண்ணிற்பாவை. ஓகாரம், வினுப்பொருட்டு.

தலைமகளைக் கொண்டுதலைக்கழிந்த தலைவனுடைய கட்டாண்மையை வியந்து கண்டோர் செவிலிபாற் கூறின ராகலின், அவர் கூற்றைக் கொண்டெடுத்து மொழிவாள், **செய்வினைப் பொலிந்த செறிகழல் நோன்ருள் மையணற் காளை** என்றும், பரல் நிறைந்த நெறியில் நடந்து சேறல்

1. புறம். 77. 2. ஷை. 100. 3. ஷை. 4.
4. ஷை. 3. 5. ஷை. 40. 6. குறள். 777.

தலைமகட்கு இயலாதென நினைந்து வருந்துகின்றாளாக லின், **பைய இயலி** என்றும், தனது ஆராக்காதல் புலப் படக் **கண்ணின் பாவை யன்ன என் ஆய்தொடி மடந்தை** என்றும் கூறினாள். "உண்கண் மணிவாழ் பாவை நடைகற் றன்னஎன் அணியியற் குறுமகள்[1]"எனச் செவிலி கூறுதல் காண்க. கண்டோர், தலைமகன் கழலையும் தாளையும் சிறப் பித்ததுபோலத் தலைவியின் தொடியைக் கூறிச் சிலம் பணிந்த அடியைச்சிறப்பித்துக் கூறுமையின், அவள் அடி நடையால் மெலிந்து தேய்ந்தனவோ என அஞ்சி அல மருகின்றாளாகலின், **ஒன்றினவோ அவள் அஞ்சிலம்படியே** என்றாள்.

செவிலி சுரத்திடை வினவியது என்பர் இளம் **பூரணர்** (கூ)

*390. நல்லோ ராங்கட் பரந்துகை தொழுது*
*பல்லூழ் மறுகி வினவு வோயே*
*திண்டோள் வல்விற் காளையொடு*
*கண்டனெ மன்ற சுரத்திடை யாமே.*

இது, பின்சென்ற செவிலித்தாய் பலரையும் வினவக் கண்டோர் தாம் கண்டவாறு அவட்குக் கூறியது.

**உரை:** அறிவரைத் தேடித் திரிந்து அவர்பாற் கை தொழுது பலமுறையும் மருண்டு வினவுதலையுடையோய், திண்ணிய தோள்களையும் வலிய வில்லினையு முடைய காளை போல்வானோடு நின்மகள் செல்ல யாம் இடைச்சுரத்திற் **கண்டோம் எ. று.**

நற்பண்பு நற்செய்கைகளால் உயர்ந்த அறிவர்களை **நல்லோர்** என்றார்; நல்லதன் நலம் காட்டி அதனுல்

1. நற். 184. 2. தொல். பொ. 40.

உலகு இன்புறக் கண்டு அதனையே காதலித் தொழுகுவது அறிவர் தொழில்; அன்னோர் உலகில் அருகி யிருத்தலின், அவரைத் தேடித் திரிந்தல்லது காண்பது அருமையாகலின் **நல்லோர் ஆங்கண் பரந்து** என்றார். **பரத்தல்**, தேடித் திரிதல் மேற்று. "பரந்து கெடுக உலகியற்றியான்[1]" என்றாற்போல. **மறுகுதல்**, துயர்மிகுதியால் அறிவு கலங்குதல். **மன்ற**, தேற்றப் பொருட்டாய இடைச்சொல். **யாம்** என்றது, நேரிற் கண்ணுற் கண்டமை வற்புறுத்தி நின்றது.

நல்லோர்பாற் செல்வார் தொழுதுகாண்டல் முறையாகலின் **பரந்து கைதொழுது** என்றும், அருமணி யிழந்த நாகம் போன்று பெறலரும் மகளைப் பிரிந்து அலமருகின்றாளாகலின், **மறுகி** என்றும், ஒருவர் இருவரோடு அமையாது **பலரைக் கண்டு பன்முறையும்** கேட்பதுபற்றி, **பல்லூழ் வினவுவோய்** என்றும் அப்பெற்றியாளை மேலும் மறுகாவண்ணம் தெளித்தல் தெள்ளியோர் கடனாகலின், **கண்டனெம் மன்ற** என்றும், கண்ட இடம் இது என்பார் **சுரத்திடை** என்றும் கூறினார். (௰)

1. குறள். 1065.

## 40. மறுதரவுப் பத்து.

இது புணர்ந்துடன் போகிய தலைமக்கள் மீண்டு வருதல் பொருளாகத் தொடுக்கப்பட்ட பாட்டுக்களின் தொகை யாகலின், இப்பெயர்த்தாயிற்று. மறுதரவு, மீளுவது.

391\. *மறுவி றூவிச் சிறுகருங் காக்கை*
*அன்புடை மரபினின் கிளையோ டாரப்*
*பச்சூன் பெய்த பைந்நிண வல்சி*
*பொலம்புனை கலத்திற் றருகுவென் மாதோ*
*வெஞ்சின விறல்வேல் விடலையொடு*
*அஞ்சி லோதியை வரக்கரைந் தீமே.*

இஃது உடன்போகிய தலைமகள் மீடற்பொருட்டுத் தாய் காகத்திற்குப் பராய்க்கடன் உரைத்தது.

**உரை:** குற்றமில்லாத சிறகுகளையுடைய சிறிய கருங் காக்கையே, வெவ்விய சினமும் வெற்றியு முடைய வேலையேந்தும் காளைபோல்வானொடு சென்ற அழகிய சில வாகிய கூந்தலையுடைய என் மகளை வருமாறு கரைவா யாக; கரையின் அன்புடைய நின் முறைமைக் கேற்ப நின் கிளைக் காக்கைகளோடு இருந்து நீ உண்ணும் வகையில் பசிய ஊன்கலந்து ஆக்கிய பசுமையான பலியுண வினைப் பொன்னாற் செய்யப்பட்ட கலத்திலிட்டுத் தருகுவேன், காண். எ.

சிறுமை வடிவும் கருமை நிறமும் குறித்தன. இஃது இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர். அன்புடை மரபு, அன்பு காரணமாக நிலவும் முறைமை.

ளையோ டுண்டல் காக்கைக்கு மரபு; இனத்தின்பால் உள்ள அன்பால் உளதாய மரபாதலின், **அன்புடை மரபு** என்றார். "காக்கை கரவா கரைந்துண்ணும்[1]" என்பது காண்க. பசியவூன் **பச்சூன்** எனப்பட்டது. **வல்சி,** உணவு. விடலையொடு **ஒடு,** உயர்பின் வழித்தாய ஒருவினை ஒடு. **கரைந்தீமே** என்பது, "முயங்கினை சென்றீமோ[2]" என்றாற் போல முன்னிலை முற்றுவினைத் திரிசொல்.

ஏனைப் புட்களைப்போலச் சிறகரின் புறத்தே பல்வகை நிறங்கள் விரவப் பெருமையின், **மறுவில் தூவிச் சிறுகருங் காக்கை** என்றும், பெற்றது இறப்பவும் சிறிதாய காலத்தும் தன் சுற்றஞ் சூழ உண்டல் மரபாகலின், **அன்புடை மரபின் நின்கிளை** யென்றும், பலியிட்டுப் பரவுக்கடன் புரிவார் பொற்கலத்தி லிட்டுப் படைத்தல் வழக்காதல் பற்றி, **பொலம்புனை கலத்தின்** என்றும், காக்கை கரையின் சென்றார் மீளுவ ரென்பது வழக்காதலின், **வரக் கரைந்தீமே** என்றும் கூறினள். "வெண்ணெல் வெஞ்சோறு. எழுகலத் தேந்தினும் சிறிது என் தோழி, ....விருந்துவரக் கரைந்த காக்கையது பலியெ[3]" என்று சான்றோர் கூறுவது காண்க.

இது நற்றாய் உடன் போய தலைமகள் பொருட்டுக் காகத்திற்குப் பராய்க்கடன் உரைத்தது என்பர் **இளம்பூரணர்**[4]. இது நிமித்தத்தொடு படுத்துப் புலம்பியது என்டர் **நச்சினார்க்கினியர்.**[5] **காளையொடு** என்றும் பாடம். (க)

392. *வேய்வனப் பிழந்த தோளும் வெயிறெற*
*ஆய்கவின் றொலைந்த நுதலு நோக்கிப்*
*பரியல் வாழி தோழி பரியின்*
*எல்லையி லிடும்பை தரூஉம்*
*நல்வரை நாடனொடு வந்த மாறே.*

---

1. குறள். 527. 2. கலி. 64. 3. குறுந். 210.
4. தொல். பொ. 39, 5. ஷை. ஷை. 36.

இஃது உடன்போய் மீண்டு வந்த தலைமகள் வழிவரல் வருத்தம் கண்டு ஆற்றுளாகிய தோழிக்குச் சொல்லியது.

**உரை :** தோழி, நல்ல மலை சூழ்ந்த நாடனொடு புணர்ந்து உடன்போய் மீண்டு வந்தமையால், மூங்கிலினது, வனப்பை இழந்த தோளும், சுரத்தின்கண் வெப்பம் வருத்துதலால் நுண்ணிய மென்மை அமைந்த அழகு கழிந்த நுதலும் நோக்கி வருந்துதல் ஒழிவாயாக; வருந்துவையேல் அஃது முடிவில்லதோர் துன்பத்தினைத் தருமாகலான் எ.று.

தோளும் நுதலும் கவின் இழத்தற்கு ஏது **வெயில்தெற** என்பதனாற் பெற்றாம். **வேய்வனப்பு,** வேயொடு நிகர்த்தற் குரிய வனப்பு. "வேயொழுக் கன்ன சாயிறைப் பணைத் தோள் பெருங்கவின்[1]" என்பது காண்க. **ஆய்கவின்** மிக்க அழகு; ஆயமகளிர் பலராலும் சிறப்பிக்கப்பெறும் அழகு என்றுமாம்; "பாவை யன்ன பலராய் மாண்கவின்[2]" என்று சான்றோர் உரைப்பது காண்க. **பரிதல்,** வருந்துதல்; "இருந்துள்ளி என் பரிதல் நெஞ்சே[3]" என்றாற் போல. **பரியல்,** அல்லீற்று எதிர்மறை வியங்கோள். **அஃது** எனச் சுட்டுவருவிக்க. **வந்தமாறு** என்புழி **மாறு,** ஏதுப்பொருள் பட வருவதோர் இடைச்சொல்லாதலின் எழுவாய் ஆகாமை அறிந்து கொள்க.

தனக்குச் சிறந்தாளாய் உடன்பயின்று ஒழுகினாட்குத் தன்னிடை யுளதாகும் சிறுவேறுபாடும் விரைந்து அறியத் தோன்றுமாகலின், **தோளும் நுதலும் நோக்கிப் பரியல்** என்றும், பரிந்தவழி இவ் வேறுபாட்டிற்குத் தான் காரணம் எனத் தலைமகன் நினைந்து பெரியதோர் வருத்தம் உறுவன் என்றும், அது தன்போலும் மகளிரால் நீக்கப்படுவது அன்று என்றும் கூறுவாள், **எல்லையில் இடும்பை தரூஉம்** என்றும் கூறினாள். **எல்லையில் இடும்பை தரூஉம்** என்றதற்கு

1. அகம். 213. 2. ஷை. 98. 3. குறள். 1243.

தாயர் தந்தை தன்னையர் முதல் பலர்க்கும் வருத்தம் மிக விளைவிக்கும் என்றும், பின்னர் அதன் விளைவு வேறாம் என்றும் கருதி இவ்வாறு கூறினாள் என்றுமாம். வாழி என்றது, தோழியின் அன்புடைமைக்கு மகிழ்ந்தவாறு.

இது மீண்டுவந்த தலைவி வழிவரல் வருத்தம்கண்டு வருந்திய தோழிக்குக் கூறியது என்பர் நச்சினார்க்கினியர்.[1] (உ)

393. துறந்ததற் கொண்டு துயரடச் சாஅய்
அறம்புலந்து பழிக்கும் அண்கணாட்டி
எவ்வ நெஞ்சிற் கேம மாக
வந்தன ளோநின் மடமகள்
வெந்திறல் வெள்வேல் விடலைமுந் துறவே.

இது, தலைமகள் உடன்போய் மீண்டு வந்துழி அயலோர் அவள் தாய்க்குச் சொல்லியது.

**உரை:** நின்னைப் பிரிந்து சென்றது ஏதுவாகக் கொண்டு துயரம் வருத்துதலால் உண்மெலிந்து அறநூல்களை வெகுண்டு பழிக்கும் அண்கணாட்டியே, வருத்தத்தால் வருந்தும் நின் நெஞ்சிற்கு இன்பமுண்டாக, வெவ்விய வலியும் வெள்ளிதாய வேலு முடைய விடலையாவான் முன்வர அவன் பின்னே நடந்து நின் மகள் வந்தனள், காண் எ. று.

**துறந்தது,** ஈன்று புறந்தந்த தாயாகிய தன்னைத் துறந்து காதலனுடன் கொண்டுதலைக்கழிந்தது. **சாய்தல்,** உடம்பு மெலிதல். துயரம் உண்ணின்று வெதுப்புதலால் உடல் மெலிந்தமையின், **துயரடச் சாய்** என்றார். **அறம்,** அறநூல்; அறங்கூறுவோரையுமாம். **அண்கணாட்டி,** கண்காண இருப்பவள்; "அண்கணாளனை நகுகம் யாமே[2]"

1. தொல். பொ. நச். 42. 2 அகம். 32.

என்று பிறரும் கூறுதல் காண்க. துயரங்கொண்டு வருந்தும் நெஞ்சு **எவ்வ நெஞ்சு** எனப்பட்டது. **ஏமம்,** இன்பம்; காப்புமாம். **ஓ,** வியப்பு.

களவின்கண் ஒழுகுதலும் கொண்டுதலைக்கழிதலும் அறநூலார்க்கு உடன்பாடாதலின், தாய் அறத்தை வெகுண்டு தூற்றியதைக் கண்டிருந்தா ராதலின், **அறம் புலந்து பழிக்கும் அண்கணாட்டி** என்றார். அறத்தைப் பழித்தமைக்கு ஏது அவளுடைய மகள் அவளைத் துறந்தது தாகலின், **துறந்ததற் கொண்டு** என்றும், அதனால் ஆறாத் துயர் கொண்டு அவலித்தமை தோன்றத் **துயரடச் சாஅய்** என்றும் அயலோர் உரைப்பாராயினர். **எவ்வம்** எனப் பெயர்த்தும் கூறினர், இனி இல்லையாமாறு கெடுதல்பற்றி. மகள்வரவு கேட்டு மகிழ்சிறந்து துயர்நீங்குவ ளாகலின், **எவ்வ நெஞ்சிற்கு ஏமமாக வந்தனள்** என்றும், தலைமகன் மனைக்கண் வதுவை முடித்துக்கொண்டு வருகின்றாள் என்பார், **விடலை முந்துற** என்றும் கூறினர். "கொடுப்போர் இன்றியுங் கரணம் உண்டே, புணர்ந்துடன் போகிய காலை யான[1]" என்பதனால் தலைமகன் தன் மனைக்கண்ணே கொடுப்போரின்றியே வதுவையயர்தல் இலக்கணமாதல் அறிக. "மாறாது வருபனி கலுழும் கங்குலின், ஆனாது துயரும் எம் கண்ணினிது படீஇயர், எம்மனை முந்துறத் தருமோ, தன்மனை யுய்க்குமோ யாது அவன் குறிப்பே[2]" எனச் சான்றோர் கூறியவாற்றானும் அறிக.

**அளைகணாட்டி** என்றும் பாடமுண்டு. (௩)

394. *மாண்பில் கொள்கையொடு மயங்குதுயர் செய்த*
*அன்பி லறனு மருளின்று மன்ற*
*வெஞ்சுர மிறந்த வஞ்சி லோதிப்*
*பெருமட மான்பிணை யலைத்த*
*சிறுநுதற் குறுமகட் காட்டிய வம்மே.*

1. தொல். பொ. 143. 2. அகம். 194.

இஃது, உடன் போய தலைமகள் வந்துழித் தாய் சுற்றத் தார்க்குச் சொல்லியது.

**உரை:** சுற்றத்திரே, மாண்பில்லாத கொள்கையால் மயங்குதற்கு ஏதுவாகிய துயரத்தினைச் செய்த, அன்பொடு கூடாத அறனும், அவ் வன்பின்வழித் தோன்றிய அருளை யுடையதாயிற்று, வெவ்விய சுரத்தினைக் கடந்து சென்ற அழகிய சிலவாகிய கூந்தலையும் சிறிய நுதலையுமுடைய பெரிய மடப்பம் பொருந்திய மான்பிணையை ஒக்கும் இளையவள் மீண்டு வந்தாளைக் காட்டுவேன், வம்மின் எ. று.

**மாண்பாவது.** "கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தி யைக் கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள் வதுவே[1]" என்பது. ஒடு, ஆனுருபின் பொருட்டு. உடன் போக்கினை "அறந்தலைப் பிரியா ஆறு[2]" என, அறவோர் கூறுதலின் **அறன்** எனப்பட்டது. **அருளின்று**, அருள் செய்தது. அஞ்சிலோதி, சிறுநுதற் குறுமகள், மான்பிணை அலைத்த குறுமகள் என இயையும். **காட்டிய வம்மே** என்ற மையின், சுற்றத்திர் என்பது வருவிக்கப்பட்டது. **அலைத்த** என்றது உவம வாய்பாடு. **அலைத்தல்**, மருண்ட நோக்கத் தால் மான்பிணையைப் பொருவுதலின், மானினம் தன் இனம் என மருளுவித்தல். **வம்மே**, வருக என்னும் பொருண்மைக்கண் வந்த முன்னிலை வினைத்திரிசொல்.

களவின்கண் உடன்போக்கு அறமாயினும், அன்பு செய்து பேணிப் புறந்தந்தாரை மறந்து செய்யப்படுதலின், **அன்பில் அறனும்** என்றும், ஈன்றுரையும் உடன்பயின் றொருழுகிய ஆயத்தாரையும் கைவிகந்து மறையிற்புணர்ந்து சேறல் மாண்புடைமை அன்று எனக் கருதுகின்ரு ளாகலின், **மாண்பில் கொள்கை** யென்றும், அக்கொள்கை யால் பெற்றோர்க்குப் பிரிவாற்ருமை மேலும் அயலவர் கூறும் பழிப்புரை தோன்றி நீங்கரிய துயர்செய்தலின்,

1. தொல். பொ. 142. 2. கலி. 9.

**மயங்குதுயர்** என்றும் உரைத்தாள். இப்பெற்றித்தாயினும், பெற்றோர் எய்திய பெருகிய துயரத்தை மாற்றுவான் தலைமகளை மீளச் செய்தமையான், **அன்பில் அறனும் அருளின்று மன்ற** என்று இசைத்தாள்.

இது தலைவி மீண்டுவந்துழித் தாய் சுற்றத்தார்க்குக் காட்டியது என்பர் **நச்சினார்க்கினியர்.** [1] (௪)

395\. முளிவயிர்ப் பிறந்த வளிவளர் கூரெரிச்
சுடர்விடு நெடுங்கொடி விடர்முகை முழங்கும்
இன்னா வருஞ்சுரந் தீர்ந்தனம் மென்மெல
ஏகுமதி வாழியோ குறுமகள் போதுகலந்து
கறங்கிசை யருவி வீழும்
பிறங்கிருஞ் சோலைநம் பெருமலை நாட்டே.

இஃது உடன்போய் மீள்கின்ற தலைமகன் தலைமகட்குச் சொல்லியது.

**உரை :** இளையவளே, உலர்ந்த மூங்கிலின்கட் பிறந்து காற்றால் மிக்குப் பெருகிய தீயின் ஒளிவிடும் நெடிய ஒழுங்கு, கற்பிளவுகளினும் மலைமுழைஞ்சுகளினுள்ளும் முழங்கும் கொடுமையினையுடைய செல்லுதற்கரிய காட்டினை நீங்கினோ மாகலின், இனி பூக்களோடு கூடி ஒலிக்கின்ற இசையினையுடைய அருவிகள் வீழும் உயரிய சோலைகளையுடைய பெரிய மலைகள் பொருந்திய நம் நாட்டில் மெல்ல நடந்து செல்லுவாயாக எ. று.

**முளிவயிர்,** உலர்ந்த மூங்கில்; "அயிரியாற் றடைகரை வயிரின் நரலும் காடு [2]" எனப் பிறரும் கூறுதல் காண்க. மூங்கில்களை அலைத்துத் தீயைப் பிறப்பித்த தனக்கு அதனை வளர்த்தலும் கடன் எனக் கருதியது

1\. தொல். பொ. 36. 2. அகம். 117.

போல மோதி மிகுவித்தலின், **வளிவளர் கூரெரி** என்றார். கொடிபோற் படர்ந்து செல்வதுபற்றி **நெடுங்கொடி** என்றார்; "முளியரிற் பிறந்த வளிவளர் கூரெரிச் சுடர்நிமிர் நெடுங் கொடி விடர்முகை முழங்கும்[1]" எனப் பிறரும் உரைப்பது காண்க. **விடர்முகை**, உம்மைத்தொகை. இருபெயரொட் டாக்குதலு மொன்று. தீர்தல், விடுதல். "தீர்தலும் தீர்த் தலும் விடற்பொருட் டாகும்.[2]" **மதி** முன்னிலையசை. பிறங்குதல், உயர்தல். **இருஞ்சோலை**, இருண்டு கரிதாய்த் தோன்றும் சோலை என்றுமாம்.

உலர்ந்த மூங்கில்கள் ஒன்றோடொன்று காற்றால் அலைப்புண்டு உராய்ந்து தீப் பிறந்து அக்காற்றால் மிகுதியுற்றுப் பெருகுதலின் **முளிவயிர்ப் பிறந்த வளிவளர் கூரெரி** என்றும், ஏனை மரம், செடி, கொடிகளையும் நெருங்கு தொடர்ந்து சேறலின் **சுடர்விடு நெடுங்கொடி** யென்றும் கூறினாள். இதனை ஆண்டுக் காட்டி விளக்குதற்கு இடம் இன்மையின் ஈண்டுக் கூறினான். வேனிலால் விளைந்த வெம்மையுடன், தீ வேறு எழுந்து துன்பம் செய்தலின் **இன்னா அருஞ்சுரம்** என்றான். இதுகாறும் சிறிது விரைந்து வந்தமை தோன்ற, **மென்மெல ஏகுமதி** என்றும், மெல்லச் செல்லின் பெருமலை நாட்டின் மாண்பு கண்டு இன்புற லாம் என்பது கருத்து. தண்ணென்ற அருவியும் பெரிய சோலையுமுடைய நாடாகலின் இன்னாமை யின்மையாலும், இளையளாயினாள் முற்றவும் விரைந்து செல்லின், தளர் வுற்று மெலிவா ளாகலானும், **மென்மெல ஏகுமதி** என்றான் என்றுமாம். "நிழல்காண் டோறும் நெடிய வைகி, மணல்காண்டோறும் வண்டல் தைஇ, வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே, மாநனை கொழுதி மாங்குயி லாலும், நறுந்தண் பொழில கானம், குறும்பல் லூரயாம் செல்லு மாறே[3]" என்று பிறாண்டும் தலைவன் கூறுதல் காண்க. **நம் பெருமலை நாடு** எனத் தலைமகளை உளப்படுத்

1. அகம். 143. 2. தொல். சொல். . 3. நற். 9.

துரைக்கின்றான், தனது உரிமை அவட்கு இவ்வுடன் போக்கால் எய்திவிட்டமையின். "உரிமை கொடுத்த கிழவோன் பாங்கின் பெருமையில் திரியா அன்பின் கண்ணும்[1]" என ஆசிரியர் குறிப்பது காண்க. (௬)

396. புலிப்பொறி வேங்கைப் பொன்னிணர் கொய்துநின்
கதுப்பய லணியு மளவைப் பைபயச்
சுரத்திடை யயர்ச்சி யாறுக மடந்தை
கல்கெழு சிறப்பி னம்மூர்
எல்விருந் தாகிப் புகுகம் நாமே.

இதுவுமது.

**உரை :** மடந்தையே, புலிப்போறி போலும் வேங்கை மரத்தின் பொன்னிறப் பூங்கொத்துக்களைக் கொய்து நின் கூந்தலயல் யான் அணியுமளவு மெல்லச் சென்று, சுரத்தின் கண் நடந்தமையால் எய்திய அயர்ச்சியைப் போக்கிக் கொள்வாயாக; மேலும், மலைகள் பொருந்திய சிறப்பினை யுடைய நம்மூர்க்கு நாம் பகலிற் போதரும் விருந்தினராய்ச் செல்வோம் எ. று.

வேங்கையின்பூ புலிப்பொறி போல்வதனை "ஓங்கல் மிசைய வேங்கை யொள்வீ, புலிப்பொறி கடுப்பத் தோன் றலின்[2]" என்று பிறரும் கூறுவர்; இப்பூவை ஆடவரும் மகளிரும் ஒப்ப அணிவர்; "பூங்கண் வேங்கைப் பொன் னிணர் மிலைந்து, வாங்கமை நோன்சிலை எருத்தத் திரீஇ[3]" என ஆடவரும், "வேங்கைத் தண்கமழ் புதுமலர் நாறும் அஞ்சிலோதி[4]" என மகளிரும் அணிவது காண்க. **பை பய,** பைப்பைய என்பதன் மரூஉ; "பைபயத் தணந்தனை யாகி யுய்ம்மோ[5]" என்றமை காண்க. **எல்விருந்து,** பகலே பலரும் காணச் செல்லும் விருந்து. **புகுகம்,** புகுவேம்.

1. தொல். பொ. 147. 2. அகம். 228. 3. ஷை. 182.
4. ஷை. 365. 5. ஐங். 93.

பகலிற் பலர்காணத் தலைமகள் விருந்தினளாய் வருத லின், அயர்ச்சி போக்குதலும் ஒப்பனை செய்துகோடலும் இன்றியமையாமை பற்றி, **வேங்கைப் பொன்னிணர் கொய்து அணியும் அளவை** என்றும் **பையப அயர்ச்சி ஆறுக** என்றும் கூறினன். **நம்மூர்** என்பதற்கு "நம் பெருமலை நாடு[1]" என்றதற்கு உரைத்ததனை உரைத்துக் கொள்க. **எல்விருந் தாகிப் புகுகம்** என்றது, அயர்ச்சி ஆறுக என்றதற்குக் காரணம் காட்டியவாறு. தலைமகன் சுரத்தைக் கடந்து போந்துழிப் பூக்கொய்து அணியுங்கால் அவன் மெய்தீண்டுந்தோறும் உடல் குளிர்ப்பெய்துத லாலும், பூவணியுமளவும் செல்லாது நிற்றலாலும் தளர்ச்சி நீங்குதலின், **அயர்ச்சி யாறுக** என்றான்.

**மலைகெழு நாடு** என்றும் பாடம், (௬)

*397. கவிழ்மயி ரெருத்திற் செந்நா யேற்றை*
*குருளைப் பன்றி கொள்ளாது கழியும்*
*சுரனணி வாரா நின்றன ளென்பது*
*முன்னுற விரைந்தநீ ருரைமின்*
*இன்னகை முறுவலென் னாயத் தோர்க்கே.*

இஃது உடன்போய் மீள்கின்ற தலைமகள் தன்னூர்க்குச் செல்கின்றாரைக் கண்டு கூறியது.

**உரை :** கீழ்க்கவிழ்ந்துள்ள மயிர் பொருந்திய கழுத்தி னையுடைய செந்நாயினது ஆண், குட்டியையுடைய பன்றி யைக் கொள்ளாது நீங்கும் சுரத்தைக் கடந்து அணித்தே வாராநின்றனள் என இனிய நகைவிளங்கும் முறுவலை யுடைய என் ஆயத்தோர்க்கு முன்னாக விரைந்து செல்கின்ற நீவிர் உரைப்பீர்களாக எ. று.

---

1. ஐங். 395.

எருத்தின்கண் வளர்ந்து கீழே தாழ்ந்த மயிரைக் **கவிழ்மயிர்** என்றும், அடல் மிக்கது என்றற்குச் **செங்கா யேற்றை** என்றும் கூறினர், **குருளைப்பன்றி**, குருளையொடு செல்லும் பன்றி. சுரத்திற்குப் புறத்தே ஊர்க்கு அணித்தாயுள்ள நிலப்பகுதி **சுரன்நணி** எனப்பட்டது; "ஊர் நணித் தந்தனை[1]" என்றாற் போல. **ஆயத்தோர்**, ஆய மகளிர். "இன்னகை ஆயத்தாரோடு இன்னும் அற்றோ[2]" என்பர் பிறரும்.

தலைவி புணர்ந்துடன் போகியகாலை அவளுடைய தமர் போந்து வளைத்தனராகத் தலைமகன் தன் காதலியின் தந்தை தன்னையர் எனக்கருதி அருளுள்ளத்தால் வாளாது தம்மொடு கொண்டுசெல்ல விடுத்த திறத்தை உள்ளுறையால் உரைத்தலின், **சுரனணி வாராநின்றனள் என்பது** என்றாள். தமர் போதரக் கண்ட தலைமகன், தலைவியை நோக்கி, "நீ விளையாடுக சிறிதே யானே, மழகளி றுரிஞிய பராரை வேங்கை மணலிடு மருங்கின் இரும்புறம் பொருந்தி, அமர்வரின் அஞ்சேன் பெயர்க்குவென், நுமர் வரின் மறைகுவென் மாஅயோளே[3]" என்பதும், தலைவி, "வாள்வனப் புற்ற அருவிக் கோள்வல் என்னையை மறைத்த குன்றே அறஞ்சாலியரோ[4]" என்பதும் காண்க. தலைவி மீளுறும் செய்தியைத் தன்னையர் முன்னுறச் சென்று அறிவிக்குமாறு, விடுத்த அவர் துணைவர்பால் இதனை மொழிகின்றா ளாகலின், **முன்னுற விரைந்த நீர் உரைமின்** என்றும், தன் வரவு கேட்டு உவகை மிகுந்து தன்னை எதிர்நோக்குவர் என்பதுபற்றி **இன்னகை முறுவல் என் ஆயத்தோர்** என்றும் கூறினாள். **சுரன்நணி வாரா நின்றனள்** என்பது, தமர் துணைவர்பால் சொல்லி விடுத்த கூற்று; "கூற்றவண் இன்மையின்[5]" தலைவி அதனைக் கொண்டெடுத்து மொழிந்தாள்.

1. அகம். 254. 2. குறுந். 351. 3. நற். 362.
4. ஐங். 312. 5. தொல். பொ. 501.

செந்நாயின் ஏற்றை குருளை யீன்ற பன்றி யெனக் கருதிக் கொள்ளாது கழியும் என்றது, தன் காதலியை ஈன்ற தந்தையும் தன்னையரும் என்று கருதி இவரொடு என்னைச் செல்லவிடுத்தான் என்றவாறு.

இது மீண்டு வருவாள் ஆயத்தார்க்குக் கூறிவிட்டது என்பர் **இளம்பூரணர்.**[1] இது மீள்கின்றுளென்று என்வரவு ஆயத்தார்க்குக் கூறுமின் என்றது என்பர் **நச்சினார்க்கினியர்.**[2] (எ)

398. *புள்ளு மறியாப் பல்பழம் பழுனி*
*மடமா னறியாத் தடநீர் நிலைஇச்*
*சுரநனி யினிய வாகுக வென்று*
*நினைத்தொறுங் கலிழு மென்னினும்*
*மிகப்பெரிது புலம்பின்று தோழிநம் மூரே.*

இது, தலைமகள் மீண்டுவந்துழி அவட்குத் தோழி கூறியது.

**உரை:** தோழி நின்னை நினைக்குந்தோறும் நீ செல்லும் சுரம் புள்ளினமும் தேர்ந்தறியாத பலவாகிய பழங்கள் நிரம்பி மடப்பம் பொருந்திய மான்கூட்டமும் கண்டறியாத பெரிய நீர்நிலைகள் நிலைபெறப்பெற்றுச் சேறற்கு இனியவாய் விளங்குமாக என்று வாழ்த்திக் கண்ணீர்விட்டுக் கலங்கும் என்னினும் நம் மூரிலுள்ளார் கழிவிரக்கங் கொண்டு புலம்பி நின்றனர், காண் எ.று.

பழுமரந்தோறும் சென்று பழமுண்டு வாழ்தல் புள்ளினங்கட்கு இயல்பாதலின், **புள்ளும்** என்றவிடத்து உம்மை சிறப்பு. "பழந்தேர் வாழ்க்கைப் பறவைபோல[3]" என்று பிறரும் கூறுப. **பழுனி,** நிறைந்து; "பெட்டாங் கீயும் பெருவளம் பழுனி[4]" என்பது காண்க. பழுத்து

1. தொல். பொ. 45. 2. ஷை. ஷை. 42. 3. மதுரை. 576.
4. புறம். 113.

என்றுமாம். மானினம் நீர்நிலை இல்வழி அஃது உள்வழி நாடிச் சென்று அதன் அருகே வாழுமாதலின், **மடமான் அறியாத் தடநீர்** என்றார். **தடநீர்**, பெரிய நீர்நிலை.

செல்வார்க்கு வழியிடை வேண்டுவன உணவும் நீரும் நிழலும் அன்றிப் பிறவன்மையின், **பல் பழம் பழுனி, தட் நீர் நிலைஇ** என்று கூறினாள். வெந்திறல் வெள்வேல் விடலையொடு சென்றாட்கு ஊறுசெய்வன வின்மையின், அவற்றை நினையா ளாயினள் என்க. தலைமகளின் நினைவெழுதற் குரிய செயலும் பொருளும் தோன்றியவிடத்து நினைத்துக் கண்கலுழும் தோழியினும், ஊரவர், அவளுடைய தாயாரையும் ஆயத்தாரையும் காண்டொறும் இரங்கிக் கலுழ்ந்தன ராகலின் **என்னினும் மிகப் பெரிது புலம்பின்று நம்மூர்** என்றாள்.

தலைமகள் உடன்போகிய நிலையில், ஊரவர் பலரும் போந்து அவளுடைய மாண்புகளையும் பிற நலங்களையும் பாராட்டிக் கூறி வருந்தினமையின், அது கண்டு "மனை மருண்டிருந்த என்னினும் நனைமகிழ், நன்ன ராளர் கூடுகொள் இன்னியம், தேரூர் தெருவில் ததும்பும், ஊரிழந் தன்று தன் வீழ்வுறு பொருளே[1]" என்று தாயும் கூறுமாறு காண்க.

இது தலைவி மீண்டு வந்துழித் தோழி ஊரதுநிலைமை கூறியது என்பர் நச்சினார்க்கினியர்.[2] (அ)

399\. *நும்மனைச் சிலம்பு கழீஇ யயரினும்*
*எம்மனை வதுவை நன்மணம் கழிகெனச்*
*சொல்லின் எவனோ மற்றே வென்வேல்*
*மையற விளங்கிய கழலடிப்*
*பொய்வல் காளையை யீன்ற தாய்க்கே.*

1\. அகம். 189. 2. தொல். பொ. 39.

இஃது உடன்கொண்டு போன தலைமகன் தலைவியைத் தன் இல்லத்துக்குக் கொண்டுபுக்குழி அவன்றாய் அவட்குச் சிலம்புகழீஇக் கடன் செய்கின்றாள் எனக் கேட்ட நற்றாய் ஆண்டு நின்றும் வந்தார்க்குச் சொற்றது.

**உரை :** வெற்றிமிகும் வேலையும் குற்றமற விளங்கிய கழலணிந்த காலையுமுடைய பொய்ம்மொழிதலில் வல்ல காளையாகிய தலைமகனை ஈன்ற தாய்க்கு, "நும்முடைய மனையின்கண் சிலம்புகழீஇத் திருமணமாகிய கடனை ஆற்றுவையாயினும் எம்மனைக்கண் வதுவையாகிய நன்மணத்தைச் செய்வாயாக" என நீவிர் அவட்கு உரைத்தால் வரக்கடவ இழுக்கென்னை? கூறுக எ. று.

**சிலம்புகழி** என்பது **சிலம்பு கழீஇ** என நீண்டது; செவியறிவுறூஉ என்றாற்போல. கழி, முதனிலைத்தொழிற் பெயர்; இஃது ஆகுபெயராற் கழித்தலாகிய திருமணத்தின் மேல் நின்றது. "சிலம்புகழீஇய செல்வம்[1]" என்றார் பிறரும். மகளிர்க்கு மணமாகாமுன் பெற்றோர் அணிந்த சிலம்பு கன்னிமைச்சிலம்பு என்றும், மணநிகழ்ச்சிக்கண் கொழுநன் அணியும் சிலம்பு கற்புச்சிலம்பென்றும் கணவன் தரும் சிலம்பையணியும் திருமணம் சிலம்புகழீஇய மணம் என்றும் அறிக. திருமணமும் பெற்றோர் மகட்குச் செய்து கழித்தற்குரிய கடனாதலின், **நன்மணம் கழிக** என்று கழித்தல் வாய்ப்பாட்டாற் கூறினர். சிலம்புகழீஇய திருமணம் நிகழினும், வதுவை நிகழ்ந்த பின்னல்லது சிறப்புடைய உடனுறைவாழ்வு தலைமகட்கு எய்தாமையின், அதனைப் பயப்பிக்கும் வதுவைமணத்தை **வதுவை நன்மணம்** என்றார். திருமணத்துக்குச் சென்றிருந்து வந்தாரொடு உரையாடுதலின், இழுக்கு என ஒருசொல் வருவிக்கப்பட்டது. **மை**, குற்றம். **பொய்வல்காளை,** பொய் உரைத்துக் கேட்போரை மருட்ட வல்ல காளை.

1. நற். 279.

சங்ககாலத் தமிழ்வாழ்வில் சிலம்புகழீஇயும் வதுவையும் எனத் திருமணம் இருகூருகி முன்னது முதற்கண்ணும், பின்னது அதன்பின்னரும் நிகழ்ந்துள்ளன. வதுவை நன் மணத்துக்குச் சிலம்புகழீஇ இன்றியமையா முன்னணிக் கூருதலின் அதனை மகட்பெற்ருேர் தம்மனைக்கண் நிகழ்த்துவதையே பெரிதும் விரும்புவர்; அவருள்ளும் நற்ருய் அதனைத் தன் மனைக்கண் நிகழ்த்துதற்கே சிறப்பாக வேட்கையுறுவள். "தன்னோ ரன்ன ஆயமும் மயிலியல், என்னோ ரன்ன தாயரும் காண ....பொன்னுடை நெடுநகர்ப் புரையோர் அயர, நன்மாண் விழவில் தகரம் மண்ணி, யாம்பல புணர்ப்பச் செல்லாள், ....தான்அமர் துணைவன் ஊக்க லூங்கி, உள்ளாது கழிந்த சிறுவன்கண்ணி சிலம்பு கழீஇ, அறியாத் தேஎத்த தாகுதல் கொடிதே [1]" என்றும், "சீரும் சிறப்பு மின்றிச் சீறூர் ஏதில் வறுமனைச் சிலம்பு கழீஇ, மேயினள் கொல்லென நோவல் யானே [2]" என்றும், "சிலம்புகழீஇய செல்வம் பிறருணக் கழிந்த என் னுயிழை [3]" என்றும் சான்ருேர் உரைப்பது காண்க. இச் சிலம்புகழீஇச் சிறப்பைத் தொல்காப்பியர் **கரணம்** என்ருர். இதனைச் செய்தற்கு மகட்கொடைக் குரிய தலைமகள் பெற்ருேர் உரியராதலின் புணர்ந்துடன் போகிய காலையில் அவர் இருத்தற்கு இன்மை பற்றி, இதற்கு இடமுண்டோ என நிகழும் ஐயம் அறுத்தற்குக் "கொடுப்போ ரின்றியும் கரண முண்டே, புணர்ந்துடன் போகிய காலை யான [4]" எனத் தெளிவித்தார். இதனுல், சிலம்புகழீஇச் சிறப்புத் தலைமகன் மனைக்கண் நிகழ்ந்தமையின், **நும்மனைச் சிலம்புகழீஇ அயரினும்** என்ருள். இச்சிலம்பு கழீஇக் கரணத்தை இக்காலத்தும் கன்னி கழித்தல்என வழங்குவர்.

1. அகம். 385. 2. ஷை. 369. 3. நற். 279.
4. தொல். பொ. 143.

400. மள்ள ரன்ன மரவந் தழீஇ
மகளி ரன்ன வாடுகொடி நுடங்கும்
அரும்பதங் கொண்ட பெரும்பத வேனில்
காதல் புணர்ந்தன ளாகி யாய்கழல்
வெஞ்சின விறல்வேற் காளையொ
டின்றுவருகுதருமென வந்தன்று தூதே.

இஃது உடன்போய் வதுவை அயரப்பட்ட தலைவி, தலைவ ளேடு இன்று வரும் எனக் கேட்ட செவிலித்தாய் நற்றாய்க்குச் சொல்லியது.

**உரை:** தாயே, வீரரை யொத்த மரவ மரங்களை மகளிர் போலும் அசைகின்ற கொடிகள் தழுவி நுடங்கும் அரிய உண்பொருள்களைக் கொண்ட பெருஞ் செவ்வித்தாகிய வேனிற்பருவத்தின்கண் வதுவை புணர்ந்தனளாய் நம் மகள் ஆய்ந்தணியப்பட்ட கழலும், வெவ்விய சினமும், விறல்மிக்க வேலு முடைய காளைபோல்வானுடன் இன்று வருவாள் எனத் தூதர் புகலா நின்றனர், காண் எ. று.

மள்ளரைத் தழீஇய மகளிர் போலக் கொடி மரவம் தழீஇ நுடங்கும் என இயைக்க. மரவம், வெண்கடம்பு. அது தொழிலுவமம். **அரும்பதம்**, பெறுதற்கரிய உண் பொருள். அவை வேனிலிற் பழுக்கும் மா பலா முதலிய இனிய கனிவகைகள். அழகிய தளிரும் நறிய மலரும் இனிய கனிகளும் பெறப்படும் இன்பக்கால மாகலின், **அரும்பதம் கொண்ட பெரும்பத வேனில்** என்றார். **காதல்**, ஈண்டு அதன்பயனாகிய வதுவைமேற்று. வெற்றி குறித்தும் வீரம் குறித்தும் கழல் வேறுபடுதலின் **ஆய்கழல்** என்றார். **தூது**, உயர்திணைப் பொருண்மைக் கண்வந்த அஃறிணைச் சொல்.

உள்ளுறையால் நற்றாய் எய்தவிருக்கும் இன்பத்தைக் கூறுதலின், தலைவனை மணம் புரிந்துகொண்டு வரும் [illegible] மகளைக் **காதல் புணர்ந்தன ளாகி** என்றும், அது கேட்டு அவளைக் காண்டல் விருப்பால் ஆர்வத்தோடு [illegible] தன்னை நோக்குதலின், **காளையொடு இன்று புகுதரும்** என்றும், அதனைத் தான் அறிந்த திறம்கூறுவாள் **வந்தன்று தூது** என்றும் கூறினள்.

மரவம் தழீஇ ஆடும் கொடி நுடங்கும் [illegible] கொண்டாற் போல மனையிடத்திருந்து [illegible] அசைந்து வருந்தும் நீ இன்பமுற்று [illegible] என உள்ளுறை கொள்க. ([illegible])

ஆசிரியர் ஓதலாந்தையார் பாடிய பாலை முற்றும்.

---